| | | |
|---|---|---|
| **लोभात्**<br>**லோபா⁴த்** | = | பேராசையால், |
| **विवेकः**<br>**விவேகः** | = | பகுத்தறிவு, |
| **लुप्यते**<br>**லுப்யதே** | = | போய்விடுகிறது, |
| **तस्मिन् लुप्ते**<br>**தஸ்மின் லுப்தே** | = | அதுபோய்விட்டால், |
| **विनश्यति**<br>**வினஶ்யதி** | = | அழிந்துவிடுகிறுன். |

நற்குணங்கள் உள்ளவர்களுக்குக்கூட பணம் கிடைத்தால் இவை நீங்கி பேராசை அதாவது இந்த பணம் முழுவதும் என்னிடமே இருக்கவேண்டும் என்ஊன விட்டு நீங்கக்கூடாது என்ற பேராசை வந்துவிடுகிறது. மேலும் நிறைய பணத்தை சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் வந்துவிடுகிறது. இதஞல் இது நல்லது இது கெட்டது என்ற விவேகம் நீங்கி நற்கதியடையாமல் அதோகதியை அடைகிறுன். (73)

**दहत्यलाभे निःस्वत्वं लाभे लोभो दहत्यमुम् ।**
**तस्मात् संतापकं वित्तं कस्य सौख्यं प्रयच्छति ॥ ७४ ॥**

**த³ஹத்யலாபே⁴ நிஃஸ்வத்வம் லாபே⁴ லோபோ⁴ த³ஹத்யமும் ।**
**தஸ்மாத் ஸந்தாபகம் வித்தம் கஸ்ய ஸௌக்²யம் ப்ரயச்ச²தி ॥ 74 ॥**

| | | |
|---|---|---|
| **अलाभे**<br>**அலாபே⁴** | = | (பணம்) கிடைக்காதவரை, |
| **निस्स्वत्वं**<br>**நிஃஸ்வத்வம்** | = | பணமில்லாத்தன்மை, |
| **दहति**<br>**த³ஹதி** | = | தாபத்தை உண்டுபண்ணுகிறது, |
| **लाभे**<br>**லோபோ⁴** | = | கிடைத்துவிட்டால், |
| **लोभः**<br>**லோப⁴ः** | = | பேராசை, |
| **अमुं**<br>**அமும்** | = | இவஊன, |
| **दहति**<br>**த³ஹதி** | = | வாட்டுகிறது, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |

**संतापकं** = தாபத்தை உண்டுபண்ணுகிற,
**ஸந்தாபகம்**
**वित्तं** = பணம்,
**வித்தம்**
**कस्य** = யாருக்கு,
**கஸ்ய**
**सौख्यं** = ஸுகத்தை,
**ஸௌக்²யம்**
**प्रयच्छति** = கொடுக்கிறது.?
**ப்ரயச்ச²தி**

கிடைக்காமலிருந்தால் தாரித்திரியம் இவனை வாட்டும். கிடைத்துவிட்டால் லோபம் இவனை எரிக்கும் ஆகையால் நன்கு தாபத்தையுண்டுபண்ணுகிற தனம் யாருக்குத்தான் ஸுகத்தைக் கொடுக்கும்? பணம் கிடைப்பதற்கு முன்னும் தாபம்தான். கிடைத்த பின்னும் தாபம்தான். **(74)**

**भोगेन मत्तता जन्तोः दानेन पुनरुद्भवः ।**
**वृथैवोभयथा वित्तं नास्त्येव गतिरन्यथा ॥ ७५ ॥**

**போ⁴கே³ன மத்ததா ஜந்தோ: தா³னேன புனருத்³ப⁴வ: ।**
**வ்ருதை²வோப⁴யதா² வித்தம் நாஸ்த்யேவ க³திரன்யதா² ॥ 75 ॥**

**भोगेन** = அநுபவிப்பதால்,
**போ⁴கே³ன**
**जन्तोः** = மனிதனுக்கு,
**ஜந்தோ:**
**मत्तता** = கர்வம் உண்டாகிறது,
**மத்ததா**
**दानेन** = தானம் செய்வதால்,
**தா³னேன**
**पुनरुद्भवः** = மேலும் மேலும் கிடைக்கிறது,
**புனருத்³ப⁴வ:**
**उभयथा** = இரண்டு விதத்திலும்,
**உப⁴யதா²**
**वित्तं** = பணம்,
**வித்தம்**
**वृथैव** = வீண் தான்,
**வ்ருதை²வ**

**वन्यथा** = வேறுவிதமாக,

**வன்யதா²**

**गतिः** = கதி,

**க³தி:**

**नास्त्येव** = இல்லவே இல்லை.

**நாஸ்த்யேவ**

பணத்தை இரண்டுவிதமாக விநியோகிக்கலாம். தான் நன்றாக அனுபவிக்க லாம். அல்லது பிறருக்கு தானம் செய்யலாம். போகத்தால் மனதில் செருக்கு ஏற்பட்டு பிறரை அலக்ஷ்யமாகப் பார்ப்பான். தானம் செய்வதால் மேலும் மேலும் இவனுக்கு பணம் பெருகும். இந்த இரண்டு விதங்களாலும் இவன் முக்தி வழியில் செல்லமுடியாதவனாய் விடுவான். ஆகவே பணம் இவன் பிறப்பை வீணாக்கிவிடும். **(75)**

**धनेन मदवृद्धिः स्यात् मदेन स्मृतिनाशनम् ।**
**स्मृतिनाशात् बुद्धिनाशो बुद्धिनाशात् प्रणश्यति ॥ ७६ ॥**

**த⁴னேன மத³வ்ருத்³தி⁴: ஸ்யாத் மதே³ன ஸ்ம்ருதிநாஶனம் ।**
**ஸ்ம்ருதிநாஶாத் பு³த்³தி⁴நாஶோ பு³த்³தி⁴நாஶாத் ப்ரணஶ்யதி ॥ 76 ॥**

**धनेन** = பணத்தால்,

**த⁴னேன**

**मदवृद्धिः स्यात्** = கர்வத்தின் விருத்தி உண்டாகும்,

**மத³வ்ருத்³தி⁴: ஸ்யாத்**

**मदेन** = கர்வத்தால்,

**மதே³ன**

**स्मृतिनाशनम्** = நல்நினைவுகளின் அழிவு ஏற்படும்,

**ஸ்ம்ருதிநாஶனம்**

**स्मृतिनाशात्** = நல்நினைவுகளின் அழிவால்,

**ஸ்ம்ருதிநாஶாத்**

**बुद्धिनाशो** = புத்தி கெட்டுப்போகும்,

**பு³த்³தி⁴நாஶோ**

**बुद्धिनाशात्** = புத்திகெட்டுப்போவதால்,

**பு³த்³தி⁴நாஶாத்**

**प्रणश्यति** = அழிந்து விடுகிறான்.

**ப்ரணஶ்யதி**

பணத்தால் கர்வம் தலைக்கேறி நல்ல எண்ணங்களெல்லாம் நீங்கி புத்தி கெட்டு மேல்நிலையையடைய முடியாமல் அழிந்து போகிறான். **(76)**

सुखयति धनमेवेत्यन्तराशापिशाच्या
दृढतरमुपगूढो मूढलोको जडात्मा।
निवसति तदुपान्ते संततं प्रेक्षमाणो
व्रजति तदपि पश्चात् प्राणमेतस्य हृत्वा ॥ ७७ ॥

ஸுக²யதி த⁴னமேவேத்யந்தராஶாபிஶாச்யா
த்³ருட⁴தரமுபகூ³டோ⁴ மூட⁴லோகோ ஜடா³த்மா ।
நிவஸதி தது³பாந்தே ஸந்ததம் ப்ரேக்ஷமாணோ
வ்ரஜதி தத³பி பஶ்சாத் ப்ராணமேதஸ்ய ஹ்ருத்வா ॥ 77 ॥

धनमेव = பணம்தான்,
த⁴னமேவ
सुखयति = ஸுகத்தைக்கொடுக்கிறது,
ஸுக²யதி
इति = என்ற,
இதி
अन्तराशापिशाच्या = உள்ளே மனதிலிருக்கும ஆசைஎன்னும் பிசாசத்தால்,
அந்தராஶாபிஶாச்யா
दृढतरं = கெட்டியாக,
த்³ருட⁴தரம்
उपगूढः = கட்டிக்கொள்ளப்பட்டு,
உபகூ³ட⁴:
जडात्मा = விவேகமற்றமனமுள்ள,
ஜடா³த்மா
मूढलोकः = முட்டாள் மனிதன்,
மூட⁴லோக:
संततं = எப்பொழுதும்,
ஸந்ததம்
प्रेक्षमाणः = பார்த்துக்கொண்டு,
ப்ரேக்ஷமாண:
तदुपान्ते = அதன் அருகில்,
தது³பாந்தே
निवसति = வஸிக்கிறன்,
நிவஸதி
पश्चात् = பின்னுல்,
பஶ்சாத்

**तदपि** = அந்தப்பணமும்,

**தத³பி**

**एतस्य** = இவனுடைய,

**ஏதஸ்ய**

**प्राणं** = பிராணனை,

**ப்ராணம்**

**हृत्वा** = அபஹரித்து விட்டு,

**ஹ்ருத்வா**

**व्रजति** = போய்விடுகிறது.

**வ்ரஜதி**

செல்வமே ஸுகத்தைக் கொடுக்கிறதென்ற உள்ளிருக்கும் ஆசையாகிற பிசாசினால் வெகு இறுகத் தழுவப்பட்டு விவேகமற்ற மனஸுடன் மோஹத்தை யடைந்தவன் அந்த செல்வத்தையே இடைவிடாமல் பார்த்துக்கொண்டே அதன் ஸமீபத்தில் இருந்து வருகிறான். அப்படியிருந்தும் அந்த பிசாசு இவனுடைய பிராணனை எடுத்துக்கொண்டு விட்டுதான் பிறகு போகிறது. **(77)**

**संपन्नोऽन्धवदेव किंचिदपरं नो वीक्षते चक्षुषा**
**सद्भिर्वर्जितमार्ग एव चरति प्रोत्साहितो बालिशैः ।**
**तस्मिन्नेव मुहुः स्खलन् प्रतिपदं गत्वाऽन्धकूपे पत-**
**त्यस्यान्धत्वनिवर्तकौषधमिदं दारिद्रयमेवाञ्जनम् ॥ ७८ ॥**

**ஸம்பன்னோ(அ)ந்த⁴வதே³வ கிஞ்சித³பரம் நோ வீக்ஷதே சக்ஷுஷா**
**ஸத்³பி⁴ர்வர்ஜிதமார்க³ ஏவ சரதி ப்ரோத்ஸாஹிதோ பா³லிஶை꞉ ।**
**தஸ்மின்னேவ முஹு꞉ ஸ்க²லன் ப்ரதிபத³ம் க³த்வா(அ)ந்த⁴கூபே பத-**
**த்யஸ்யாந்த⁴த்வநிவர்தகௌஷத⁴மித³ம் தா³ரித்³ரயமேவாஞ்ஜனம் ॥ 78 ॥**

**संपन्नः** = பணமுள்ளவன்,

**ஸம்பன்ன꞉**

**अन्धवदेव** = குருடன் போலவே,

**அந்த⁴வதே³வ**

**किंचित्** = வேறு ஒன்றையும்,

**கிஞ்சித்**

**चक्षुषा** = கண்ணால்,

**சக்ஷுஷா**

**नो वीक्षते** = பார்க்க மாட்டான்,

**நோ வீக்ஷதே**

| | | |
|---|---|---|
| **बालिशैः**<br>**பா3லிஶை:** | = | சிறுபிள்ளைத்தனமுள்ள மூடர்களால், |
| **प्रोत्साहितः**<br>**ப்ரோத்ஸாஹித:** | = | உத்ஸாஹப்படுத்தப்பட்டு, |
| **सद्भिः**<br>**ஸத்3பி4:** | = | நல்லோர்களால், |
| **वर्जितमार्ग एव**<br>**வர்ஜிதமார்க3 ஏவ** | = | தடுக்கப்பட்டவழியிலேயே, |
| **चरति**<br>**சரதி** | = | செல்கிறன், |
| **तस्मिन्नेव**<br>**தஸ்மின்னேவ** | = | அவ்வழியிலேயே, |
| **मुहुः**<br>**முஹு:** | = | அடிக்கடி, |
| **प्रतिपदं**<br>**ப்ரதிபத3ம்** | = | ஒவ்வொரு அடியிலும், |
| **स्खलन्**<br>**ஸ்க2லன்** | = | தடுக்கி விழுந்துகொண்டு, |
| **गत्वा**<br>**க3த்வா** | = | சென்று, |
| **अन्धकूपे**<br>**அந்த4கூபே** | = | பாழுங்கிணற்றில், |
| **पतति**<br>**பததி** | = | விழுகிறன், |
| **अस्य**<br>**அஸ்ய** | = | இவனுடைய, |
| **अन्धत्वनिवर्तकौषधं**<br>**அந்த4த்வநிவர்தகௌஷத4ம்** | = | குருட்டுத்தனத்தைப்போக்கும் மருந்து, |
| **इदं**<br>**இத3ம்** | = | இந்த, |
| **दारिद्रयमेवाञ्जनम्**<br>**தா3ரித்3ரயமேவாஞ்ஜனம்** | = | ஏழ்மை என்னும் மைதான். |

குருடன் கண்ணால் ஒன்றையும் பார்க்க முடியாமல் வஞ்சகர்களால் ஏமாற்றப் பட்டு வழிதவறிப்போய் தடுக்கித்தடுக்கி விழுந்தும் அவ்வழியிலேயே சென்று முடிவில் பாழுங்கிணற்றில் விழுந்து விடுகிறன். இதுபோல பணம் அகக்கண்ணை மறைத்துவிடுமாதலால் தனிகனும் கர்வத்தால் ஒன்றையும் நல்லதா கெட்டதா என்று கவனித்துப் பார்க்கமாட்டான் சிறுபிள்ளைத்தனமுள்ள துஷ்டர்கள் தோழர்க

ளாக வந்து இவனை உத்ஸாகப்படுத்துவார்கள். இதனால் ஸாதுக்கள் செல்லும் நல்வழியில் செல்லாமல் அவர்கள் போகாத தீயவழியிலேயே போவான். அதில் அடிக்கடி பல தடவை இடைஞ்சல்கள் ஏற்படும். ஆனாலும் பணச்செருக்கால் அதைப் பொருட்படுத்தாமல் தீயவழியிலே மேலும் மேலும் சென்று நரகத்தில் விழுவான், இவன் பணமெல்லாம் தொலைந்து ஏழ்மை வந்தால்தான் பணகர்வத்தால் வந்த அவிவேகமென்னும் அகக்கண்ணின் குருட்டுத்தனம் நீங்கும். **(78)**

## लोभः क्रोधश्च डम्भश्च मदो मत्सर एव च ।
## वर्धते वित्तसंप्राप्त्या कथं तच्चित्तशोधनम् ॥ ७९ ॥

**லோப⁴: க்ரோத⁴ஶ்ச ட³ம்ப⁴ஶ்ச மதோ³ மத்ஸர ஏவ ச ।**
**வர்த⁴தே வித்தஸம்ப்ராப்த்யா கத²ம் தச்சித்தஶோத⁴னம் ॥ 79 ॥**

| | | |
|---|---|---|
| **लोभः** <br> **லோப⁴:** | = | பேராசையும், |
| **क्रोधश्च** <br> **க்ரோத⁴ஶ்ச** | = | கோபமும், |
| **डम्भश्च** <br> **ட³ம்ப⁴ஶ்ச** | = | டம்பமும், |
| **मदः** <br> **மத³:** | = | கர்வமும், |
| **मत्सर एव च** <br> **மத்ஸர ஏவ ச** | = | அஸூயையும், |
| **वित्तसंप्राप्त्या** <br> **வித்தஸம்ப்ராப்த்யா** | = | பணத்தை அடைவதால், |
| **वर्धते** <br> **வர்த⁴தே** | = | வளருகிறது, |
| **तत्** <br> **தத்** | = | அது, |
| **कथं** <br> **கத²ம்** | = | எப்படி, |
| **चित्तशोधनम्** <br> **சித்தஶோத⁴னம்** | = | அந்தககரணத்திற்கு பரிசுத்தியைக கொடுப்பதாக ஆகும்.? |

செல்வத்தை அடைவதினால் லோபம், கோபம், டம்பம், மதம், பொறாமை எல்லாம் விருத்தியையே அடைகிறது. பணம் கிடைத்த மாத்திரத்தில் இவைகளும் கூடவே வந்துவிடும். ஆகையால் அந்தப் பணம் எப்படி மனதிற்கு சுத்தியைக் கொடுக்கும்? **(79)**

**अलाभात् द्विगुणं दुःखं वित्तस्य व्ययसंभवे ।**
**ततोऽपि त्रिगुणं दुःखं दुर्व्यये विदुषामपि ॥ ८० ॥**

**அலாபா⁴த் த்³விகு³ணம் து³:க²ம் வித்தஸ்ய வ்யயஸம்ப⁴வே ।**
**ததோ(அ)பி த்ரிகு³ணம் து³:க²ம் து³ர்வ்யயே விது³ஷாமபி ॥ 80 ॥**

**वित्तस्य** = பணம்,
**வித்தஸ்ய**
**अलाभात्** = கிடைக்காமலிருப்பதைக் காட்டிலும்,
**அலாபா⁴த்**
**व्ययसंभवे** = சிலவு ஏற்பட்டால்,
**வ்யயஸம்ப⁴வே**
**द्विगुणं दुःखं** = இரு மடங்கு துக்கம்,
**விகு³ணம் து³:க²ம்**
**दुर्व्यये** = கெட்ட சிலவு ஏற்பட்டால்,
**து³ர்வ்யயே**
**विदुषामपि** = அறிவுள்ளவர்களுக்கும்,
**விது³ஷாமபி**
**ततोऽपि** = அதைக்காட்டிலும்,
**ததோ(அ)பி**
**त्रिगुणं दुःखं** = மூன்று மடங்கு துக்கம் ஏற்படுகிறது.
**த்ரிகு³ணம் து³:க²ம்**

செல்வம் கிடைக்காமலிருப்பதைவிட, அது கிடைத்து அதற்கு செலவு ஏற்படும் போது இரண்டு பங்கு துக்கம் ஏற்படும். அந்த செலவும் கெட்டவழியிலிருந்து விட்டால் அறிவாளிகளுக்குக்கூட அதையும்விட மூன்று பங்கு துக்கம் ஏற்படும். **(80)**

**नित्या हितेन वित्तेन भयचिन्तानपायिना ।**
**चित्तस्वास्थ्यं कुतो जन्तोः गृहस्थेनाहिना यथा ॥ ८१ ॥**

**நித்யா ஹிதேன வித்தேன ப⁴யசிந்தானபாயிஞ ।**
**சித்தஸ்வாஸ்த்²யம் குதோ ஜந்தோ: க்³ருஹஸ்தே²னாஹிஞ யதா² ॥ 81 ॥**

**नित्या हितेन** = எப்பொழுதும் தீமை தருவதும்,
**நித்யா ஹிதேன**
**भयचिन्तानपायिना** = பீதி, கவஜல விலகாததும்,
**ப⁴யசிந்தானபாயிஞ**

**गृहस्थेनाहिना यथा** = வீட்டிற்குள்ளிருக்கும் பாம்பு போன்றதுமான,

**க்³ருஹஸ்தே²னாஹினா யதா²**

**वित्तेन** = பணத்தால்,

**வித்தேன**

**जन्तोः** = மனிதனுக்கு,

**ஜந்தோ:**

**चित्तस्वास्थ्यं** = மனதிற்கு தன் நிலையில இருப்பது,

**சித்தஸ்வாஸ்த்²யம்**

**कुतः** = எவ்வாறு ஏற்படும்.

**குத:**

பணம் எப்பொழுதும் தீமைபயப்பது. பயமும் கவலையும் அதன் கூடவே விட்டுப்பிரியாமலிருக்கும். பணம் வந்து விட்டால் அதைக்காப்பாற்றுவதில் பலவிதக் கவலைகளும், நம்மைவிட்டுப் போய்விடுமோ என்ற பயமும் கூடவே ஏற்பட்டுவிடும் இந்தப் பணத்தால் மனதிற்கு எப்படி நிம்மதி ஏற்படும்? வீட்டிற்குள் பாம்பு புகுந்து விட்டால் அங்கு நிம்மதியுடன் வஸிக்க முடியுமா? அதைததுரத்தினால்தான் அங்கு வஸிக்கமுடியும். இதுபோல் பணம் நீங்கினால்தான் மனதிற்கு நிம்மதி. **(81)**

**कान्तारे विजने वने जनपदे सेतौ निरीतौ च वा**
**चोरैर्वापि तथेतरैर्नरवरैः युक्तो वियुक्तोऽपि वा ।**
**निःस्वः स्वस्थतया सुखेन वसति ह्याद्रीयमाणो जनैः**
**क्लिश्नात्येव धनी सदाः कुलमतिः भीतश्च पुत्रादपि ॥ ८२ ॥**

**காந்தாரே விஜனே வனே ஜனபதே³ ஸேதௌ நிரீதௌ ச வா**
**சோரைர்வாபி ததே²தரைர்னரவரைः யுக்தோ வியுக்தோ(அ)பி வா ।**
**நிःஸ்வः ஸ்வஸ்த²தயா ஸுகே²ன வஸதி ஹ்யாத்³ரீயமாணோ ஜனைः**
**க்லிஶ்னாத்யேவ த⁴னீ ஸதா³ः குலமதிः பீ⁴தஶ்ச புத்ராத³பி ॥ 82 ॥**

**विजने** = ஜனங்களில்லாத,

**விஜனே**

**कान्तारे** = கடுங்கானகத்திலேயோ,

**காந்தாரே**

**वने** = காட்டிலோ,

**வனே**

**जनपदे** = பட்டணத்திலோ,

**ஜனபதே³**

**सेतौ** = "ஈதிபாதையுடன் கூடிய இடத்திலோ",

**ஸேதௌ**

| | | |
|---|---|---|
| निरीतौ च वा<br>நிரீதௌ ச வா | = | தொந்தரவு இல்லாத இடத்திலோ, |
| चोरैर्वापि<br>சோரைர்வாபி | = | திருடர்களுடனோ, |
| तथा<br>தத²ா | = | அப்படியே, |
| इतरै<br>இதரை | = | மற்ற, |
| नरवरैः<br>நரவரைः | = | சிறந்த மனிதர்களுடனோ, |
| युक्तः<br>யுக்தः | = | சேர்ந்திருந்தாலும், |
| वियुक्तोऽपि वा<br>வியுக்தோ(அ)பி வா | = | பிரிந்திருந்தாலும், |
| निःस्वः<br>நிःஸ்வः | = | பணமில்லாதவன், |
| जनैः<br>ஜனைः | = | ஜனங்களால், |
| आद्रीयमाणः<br>ஆத்³ரீயமாணः | = | ஆதரிக்கப்படுகிறவனாக, |
| स्वस्थतया<br>ஸ்வஸ்த²தயா | = | ஸ்வஸ்த்சனாக, |
| सुखेन<br>ஸுகே²ன | = | ஸுகமாக, |
| वसति<br>வஸதி | = | வஸிக்கிறான், |
| धनी<br>த⁴னீ | = | பணமுள்ளவன், |
| पुत्रादपि<br>புத்ராத³பி | = | பிள்ளையிடமிருந்துகூட, |
| मतिः<br>மதிः | = | பயந்தவனாகவும், |
| सदाः<br>ஸதா³ः | = | எப்பொழுதும், |
| कुलभीतश्च<br>குலபீ⁴தஶ்ச | = | மனம் கலங்கியவனாகவும், |

**क्लिश्नात्येव** = துன்பத்தையே அடைகிறன்.

**க்லிஶ்னாத்யேவ**

எவ்வித சொத்துமில்லாதவன் ஜனங்களே இல்லாத கடும் கானகத்திலோ (ஜனஸஞ்சாரமுள்ள) வனத்திலோ ஜனங்களிருக்கும் நகரத்திலோ அணையிலோ, எவ்வித தொந்தரவு மில்லாத இடத்திலோ எந்த இடத்திலிருந்தாலும் கூட திருடர்கள் இருந்தாலும் நல்ல மனிதர்கள் தன்னை விட்டுப்பிரிந்து போய் விட்டாலும் எல்லா ஜனங்களாலும் ஆதரிக்கப்பட்டவனுக ஸுகமாகக்கவலையில்லாதவனுக வாழ்வான். பணக்காரனே வென்றல் எப்பொழுதும் கலங்கினமனதுடன், தன் புத்திரனிடமிருந்து கூட பயத்தையடைந்தவனுக, கிலேசத்தையே அனுபவிக்கிறன் பணம் காரணமாக பிள்ளையும் சத்துருவாகி விடுகிறன். **(82)**

**"पुत्रादपि घनभाजां भीतिः" "புத்த்ராத³பி க⁴னபா⁴ஜாம் பீ⁴தி:"**

## तस्मादनर्थस्य निदानमर्थः पुमर्थसिद्धिर्न भवत्यनेन ।
## ततो वनान्ते निवसन्ति सन्तः संन्यस्य सर्वं प्रतिकूलमर्थम् ॥ ८३ ॥

**தஸ்மாத³னர்த²ஸ்ய நிதா³னமர்த²:**
**புமர்த²ஸித்³தி⁴ர்ன ப⁴வத்யனேன ।**
**ததோ வனந்தே நிவஸந்தி ஸந்த:**
**ஸம்ந்யஸ்ய ஸர்வம் ப்ரதிகூலமர்த²ம் ॥ 83 ॥**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**अर्थः** = செல்வம்,

**அர்த²:**

**अनर्थस्य** = துன்பத்திற்கு,

**அனர்த²ஸ்ய**

**निदानं** = மூலகாரணம்,

**நிதா³னம்**

**अनेन** = இந்தச் செல்வத்தால்,

**அனேன**

**पुमर्थसिद्धिर्न भवति** = தர்மம் முதலான புருஷார்ததங்கள்

**புமர்த²ஸித்³தி⁴ர்ன ப⁴வதி** ஸித்திப்பதில்லை,

**ततः** = ஆகையால்,

**தத:**

**सन्तः** = ஸாதுக்கள்,

**ஸந்த:**

**प्रतिकूलं** = தீமையைத்தரும்,

**ப்ரதிகூலம்**

**सर्वं अर्थं** = எல்லாச் செல்வத்தையும்,
**ஸர்வம் அர்த2ம்**
**संन्यस्य** = துறந்துவிட்டு,
**ஸம்ந்யஸ்ய**
**वनान्ते** = காட்டின் நடுவில்,
**வனாந்தே**
**निवसन्ति** = வஸிக்கிறார்கள்.
**நிவஸந்தி**

ஆகையினால் தனம் அனர்த்தத்திற்கே காரணம். அதினால் ஒரு புருஷார்த்த மும் ஸித்திக்காது. அதினால்தான், ஸாதுக்கள் பிரதிகூலமாயிருக்கும் தனத்தையெல் லாம் துறந்து காடுகளின் மத்தியில் போய் வஸிக்கிறார்கள். **(83)**

**(அவதாரிகை)** இவ்விதமாக அர்த்தமென்று நினைப்பதெல்லாம் வாஸ்தவத் தில் கெடுதலையே உண்டுபண்ணுவதினால் அதிலுள்ள ஆசையை விட்டு வைராக்ய நிஷ்டனாயிருக்கவேண்டுமென்று 10 சுலோகங்களில் வற்புறுத்தி அந்த வைராக்யம் என்ற விஷயத்தை முடிக்கிறார்: -

**श्रद्धाभक्तिमतीं सतीं गुणवतीं पुत्रान् श्रुतान् संमतान्**
**अक्षय्यं वसुधानुभोगविभवैः श्रीसुन्दरं मन्दिरम् ।**
**सर्वं नश्वरमित्यवेत्य कवयः श्रुत्युक्तिमिर्युक्तिभिः**
**संन्यस्यन्त्यपरे तु तत्सुखमिति भ्राम्यन्ति दुःखार्णवे ॥ ८४ ॥**

**ஶ்ரத்3தா4ப4க்திமதீம் ஸதீம் கு3ணவதீம் புத்ரான் ஶ்ருதான் ஸம்மதான்**
**அக்ஷய்யம் வஸுதா4னுபோ4க3விப4வை: ஶ்ரீஸுந்த3ரம் மந்தி3ரம் ।**
**ஸர்வம் நஶ்வரமித்யவேத்ய கவய: ஶ்ருத்யுக்திமிர்யுக்திபி4:**
**ஸம்ந்யஸ்யந்த்யபரே து தத்ஸுக2மிதி ப்4ராம்யந்தி து3:கா2ர்ணவே ॥ 84 ॥**

**श्रद्धाभक्तिमतीं** = சிரத்தை, பக்தி இவற்றுடன்கூடிய,
**ஶ்ரத்3தா4ப4க்திமதீம்**
**गुणवतीं** = நல்ல குணங்களுள்ள,
**கு3ணவதீம்**
**सतीं** = பதிவிரதையான மனைவியையும்,
**ஸதீம்**
**श्रुतान्** = கல்வியறிவுள்ள,
**ஶ்ருதான்**
**संमतान्** = மனதிற்குப் பிரியமான,
**ஸம்மதான்**

पुत्रान् = பிள்ளைகளையும்,
புத்ரான்

वसुधानुभोगविभवै: = பணம், தான்யம் இவற்றின் போகம்,
வஸுதா4னுபோ4க3விப4வை:

अक्षय्यं = குறைவில்லாத,
அக்ஷய்யம்

श्रीसुन्दरं = ஸம்பத்துக்களுடன் அழகிய,
ஶ்ரீஸுந்த3ரம்

मन्दिरं = கிருஹத்தையும்,
மந்தி3ரம்

सर्वं = எல்லாம்,
ஸர்வம்

नश्वरं = அழியும் ஸ்வபாவமுள்ளது,
நஶ்வரம்

इति = என்று,
இதி

श्रुत्युक्तिमि = வேதவாக்யங்களாலும்,
ஶ்ருத்யுக்திமி

युक्तिभि: = யுக்திகளாலும்,
யுக்திபி4:

अवेत्य = நன்கு அறிந்துகொண்டு,
அவேத்ய

कवय: = அறிவாளிகள்,
கவய:

संन्यस्यन्ति = தியாகம் செய்கின்றனர்,
ஸம்ந்யஸ்யந்தி

अपरे तु = மற்றவர்களோவெனில்,
அபரே து

तत् = அதை,
தத்

सुखमिति = ஸுகமென்று (எண்ணி),
ஸுக2மிதி

दु:खार्णवे = துன்பக்கடலில்,
து3:கா2ர்ணவே

भ्राम्यन्ति = உழலுகிறார்கள்.
ப்4ராம்யந்தி

சிரத்தை பக்தியுள்ளவளாயும் நல்ல குணமுள்ளவளாயும் ஸாத்வீயுமான பார்யையையும், நல்ல படிப்புள்ளவர்களாயும் மனதிற்கு மிகவும் பிடித்தவர்களாயுமுள்ள புத்திரர்களையும், பூமியில் அனுபவிப்பதற்கு வேண்டிய எல்லா விபங்களும் குறை வன்னியில் இருப்பதும் ஸம்பத்தினுல் மிக அழகாகவிருப்பதுமான மாளிகையையும், எல்லாம் நாசமடையக் கூடியதுதான் என்று வேத வாக்கியங்களினுலும் யுக்திகளினுலும் நன்கு அறிந்து கொண்டு அறிவாளிகள் தியாகம் செய்து விடுகிருர்கள் மற்றவர்களோ அதுவே ஸுகமென்று நினைத்து துக்க ஸமுத்திரத்தில் உழலுகிருர்கள்.

பூவுலகில் ஸுகமாக வாழ்வதற்கு வேண்டிய குறைவற்ற எல்லாச் செல்வங்களையும், பதிவிரதையான மனைவியையும், ஸத்புத்திரனையும் அடைந்தும் கூட வைராக்யத்தால் தியாகம் செய்கிருர்களென்ருல் மேலேகண்ட பூர்ண விபவமில்லாதவர்கள் தியாகம் செய்யவேண்டுமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? உபநிஷத் வாக்யங்களையும் தக்க யுக்திகளையும் நம் அனுபவத்தையும் ஆராய்ந்து பார்த்தால் உலகபோகங்களில் யாருக்கும் ஆசை உண்டாகாது. ஸுகமில்லாததை ஸுகமென்று எண்ணுவதன் மூலம் துன்பத்தையே அடைகின்றனர். **(84)**

**सुखमिति मलराशौ ये रमन्तेऽत्र गेहे**
**क्रिमय इव कलत्रक्षेत्र पुत्रानुषक्त्या ।**
**सुरपद इव तेषां नैव मोक्षप्रसङ्ग-**
**स्त्वपि तु निरयगर्भावासदुःखप्रवाहः ॥ ८५ ॥**

**ஸுக²மிதி மலராஶௌ யே ரமந்தே(அ)த்ர கே³ஹே**
**க்ரிமய இவ கலத்ரக்ஷேத்ர புத்ரானுஷக்யா ।**
**ஸுரபத³ இவ தேஷாம் நைவ மோக்ஷப்ரஸங்க³-**
**ஸ்த்வபி து நிரயக³ர்பா⁴வாஸது³:க²ப்ரவாஹ: ॥ 85 ॥**

**मलराशौ** = மலக்குவியலில்,
**மலராஶௌ**
**क्रिमय इव** = புழுக்கள்போல,
**க்ரிமய இவ**
**कलत्र** = மனைவி,
**கலத்ர**
**क्षेत्र** = வயல்,
**க்ஷேத்ர**
**पुत्रानुषक्त्या** = பிள்ளைகள் இவர்களிடம் ஆசையால்,
**புத்ரானுஷக்யா**

| | | |
|---|---|---|
| अत्र गेहे<br>அத்ர கே³ஹே | = | இந்த வீட்டில், |
| सुरपद इव<br>ஸுரபத³ இவ | = | தேவலோகத்தில்போல, |
| सुखमिति<br>ஸுக²மிதி | = | ஸுகமென்று, |
| ये<br>யே | = | எவர்கள், |
| रमन्ते<br>ரமந்தே | = | இன்புறுகிறுர்களோ, |
| तेषां<br>தேஷாம் | = | அவர்களுக்கு, |
| नैव मोक्षप्रसङ्ग<br>நைவ மோக்ஷப்ரஸங்க³ | = | மோக்ஷப்பேச்சே கிடையாது, |
| अपि तु<br>அபி து | = | ஆனால், |
| निरय<br>நிரய | = | நரகம், |
| गर्भावास<br>க³ர்பா⁴வாஸ | = | கர்ப்பவாஸம், |
| दुःखप्रवाहः<br>து³:க²ப்ரவாஹ: | = | இவைகளின் துக்கப்பெருக்கு ஏற்படும். |

மலக்குவியலில் புழுக்கள் இன்புறுவது போல, பார்யை, வயல், புத்திரன் இவர்களிடம் பற்றுதல்கொண்டு இந்த வீட்டையே தேவலோகம் போல் நிஜனத்து ரமிக்கிறவர்களுக்கு மோக்ஷ விஷயமான பேச்சுக்கேயிடமில்ஜல. அவர்கள் நரகத்திலும் கர்ப்பத்திலும் திரும்பத்திரும்ப வாஸம் செய்வதால் ப்ரவாஹம் போல் மேன்மேலும் துடர்ந்து துன்பங்கள் பெருகிக்கொண்டே இருக்கும். **(85)**

## येषामाशा निराशा स्यात् दारापत्यधनादिषु ।
## तेषां सिध्यति नान्येषां मोक्षाशाभिमुखी गतिः ॥ ८६ ॥

**யேஷாமாஶா நிராஶா ஸ்யாத் தா³ராபத்யத⁴நாதி³ஷு ।**
**தேஷாம் ஸித்⁴யதி நான்யேஷாம் மோக்ஷாஶாபி⁴முகீ² க³தி: ॥ 86 ॥**

| | | |
|---|---|---|
| येषां<br>யேஷாம் | = | எவர்களுக்கு, |

**दारापत्यधनादिषु** = மனைவி, பிள்ளை, பண முதலானவற்றில்,

**தா³ராபத்யத⁴நாதி³ஷு**

**निराशा** = ஆசையற்றிருப்பதே,

**நிராஶா**

**आशा स्यात्** = விருப்பமாக இருக்குமோ,

**ஆஶா ஸ்யாத்**

**तेषां** = அவர்களுக்கு,

**தேஷாம்**

**मोक्षाशाभिमुखी गतिः** = மோக்ஷமிருக்கும் திசையை நோக்கிய போக்கு,

**மோக்ஷாஶாபி⁴முகீ² க³தி:**

**सिध्यति** = ஸித்திக்கும்,

**ஸித்⁴யதி**

**अन्येषां** = மற்றவர்களுக்கு,

**அன்யேஷாம்**

**न** = இல்லை.

**ந**

மனைவி, பிள்ளை, பணம் முதலியவற்றில் கொஞ்சமும் ஆசை யற்று இருப்பதையே தனது விருப்பமாகக்கொண்டவர்கள் தான் மோக்ஷமிருக்கும் திசையை நோக்கிச்செல்ல முடியும். உலக ஆசையை விட்டவர்தான் மோக்ஷம் செல்லத் தகுதியுள்ளவர். மற்றவர் மோக்ஷமிருக்கும் திசையை எட்டிப்பார்க்கவே முடியாது.

**(86)**

**सत्कर्मक्षतपाप्मनां श्रुतिमतां शुद्धात्मनां धीमतां**
**नित्यानित्यपदार्थशोधनमिमं युक्त्या मुहुः कुर्वताम् ।**
**तस्मादुत्थमहाविरक्तयसिमतां मोक्षैककाङ्क्षावतां**
**धन्यानां सुलभं प्रियादिविषयेष्वा शालताच्छेदनम् ॥ ८७ ॥**

**ஸத்கர்மக்ஷதபாப்மனாம் ஶ்ருதிமதாம் ஶுத்³தா⁴த்மனாம் தீ⁴மதாம்**
**நித்யாநித்யபதா³ர்த²ஶோத⁴னமிமம் யுக்த்யா முஹு: குர்வதாம் ।**
**தஸ்மாது³த்த²மஹாவிரக்தயஸிமதாம் மோக்ஷைககாங்க்ஷாவதாம்**
**த⁴ன்யாநாம் ஸுலப⁴ம் ப்ரியாதி³விஷயேஷ்வாஶாலதாச்சே²த³னம் ॥ 87 ॥**

**सत्कर्म** = புண்ய கர்மாக்களால்,

**ஸத்கர்ம**

**क्षत** = அழிந்த,

**க்ஷத**

**पाप्मनां** = பாபமுள்ளவர்களும்,

**பாப்மனும்**

| | | |
|---|---|---|
| **श्रुतिमतां** | = | கல்வியறிவுள்ளவர்களும், |
| **ஶ்ருதிமதாம்** | | |
| **शुद्धात्मनां** | = | பரிசுத்தமான மனமுள்ளவர்களும், |
| **ஶுத்³தா⁴த்மனும்** | | |
| **धीमतां** | = | புத்தியுள்ளவர்களும், |
| **தீ⁴மதாம்** | | |
| **मुहुः** | = | அடிக்கடி, |
| **முஹு:** | | |
| **युक्त्या** | = | யுக்தியினுல், |
| **யுக்த்யா** | | |
| **इमं** | = | இந்த, |
| **இமம்** | | |
| **नित्यानित्यपदार्थशोधनं** | = | பதார்த்தங்களில இது நித்யம், இது அநித்யம் |
| **நித்யாநித்யபதா³ர்த²ஶோத⁴னம்** | | என்று பரிசோதிப்பதை, |
| **कुर्वतां** | = | செய்கிறவர்களும், |
| **குர்வதாம்** | | |
| **तस्मात्** | = | அதிலிருந்து, |
| **தஸ்மாத்** | | |
| **उत्थ** | = | உண்டான, |
| **உத்த²** | | |
| **महाविरक्तयसिमतां** | = | தீவ்ர வைராக்யமென்னும் கத்தியுடன் |
| **மஹாவிரக்தயஸிமதாம்** | | கூடியவர்களும், |
| **मोक्षैककाङ्क्षावतां** | = | மோக்ஷம் ஒன்றிலேயே ஆவலுடன் |
| **மோக்ஷைககாங்க்ஷாவதாம்** | | கூடியவர்களுமான, |
| **धन्यानां** | = | பாக்யசாலிகளுக்குத்தான், |
| **த⁴ன்யானும்** | | |
| **प्रियादिविषयेषु** | = | அன்பிற்குரிய மனைவி முதலான விஷயங்களில், |
| **ப்ரியாதி³விஷயேஷு** | | |
| **आशालताच्छेदनं** | = | ஆசை என்னும் கொடியை அறுப்பது, |
| **ஆஶாலதாச்சே²த³னம்** | | |
| **सुलभं** | = | ஸுலபம். |
| **ஸுலப⁴ம்** | | |

நித்ய நைமித்திக கர்மாக்களை பலனை இச்சிக்காமல் ஈசுவர அர்பணமாகச் செய்தால் பாபம் விலகும். மனம் பரிசுத்தமாகும். புத்தித்திறமையுடன் பெரியோர்களிடம் சாஸ்திர விஷயங்களைக் கேட்டுத்தெரிந்து சாஸ்திர பலத்தாலும் யுக்தியாலும் உலகிலுள்ள பதார்த்தங்களில் இது நித்யம் இது அநித்யம் என்பதைப் பிரித்துத்

தெரிந்துகொள்வதுடன் இதை எப்போதும் சிந்திக்க வேண்டும் இதன் மூலம் தீவர வைராக்யம் உண்டாகும் மோக்ஷ மொன்றிலேயே ஆசைகொண்ட இவர்களே பாக்ய சாலிகள். இவர்கள் எந்த எந்தப்பொருளில் இதற்கு முன் மிகுந்த ஆசை கொண்டிருந் தார்களோ, அந்த ஆசை ஸுலபமாக இவர்களுக்கு அடியோடு நீங்கிவிடும். **(87)**

**संसारमृत्योर्बलिनः प्रवेष्टुं द्वाराणि तु त्रीणि महान्ति लोके ।**
**कान्ता च जिह्वा कनकं च तानि रुणद्धि यस्तस्य भयं न मृत्योः ॥ ८८ ॥**

**ஸம்ஸாரம்ருத்யோர்ப³லின꞉ ப்ரவேஷ்டும்**
**த்³வாராணி து த்ரீணி மஹாந்தி லோகே ।**
**காந்தா ச ஜிஹ்வா கனகம் ச தானி**
**ருணத்³தி⁴ யஸ்தஸ்ய ப⁴யம் ந ம்ருத்யோ꞉ ॥ 88 ॥**

**बलिनः** = வலிமையுள்ள,
**ப³லின꞉**

**संसारमृत्यो** = ஸம்ஸாரமென்னும் மிருத்யு,
**ஸம்ஸாரம்ருத்யோ**

**प्रवेष्टुं** = நுழைவதற்கு,
**ப்ரவேஷ்டும்**

**लोके** = உலகில்,
**லோகே**

**कान्ता च** = மங்கையரும்,
**காந்தா ச**

**जिह्वा** = நாக்கும்,
**ஜிஹ்வா**

**कनकं च** = தங்கமும் (என்ற இந்த),
**கனகம் ச**

**त्रीणि** = மூன்று,
**த்ரீணி**

**महान्ति** = பெரிய,
**மஹாந்தி**

**द्वाराणि** = வாசல்கள் (உள்ளன),
**த்³வாராணி**

**यः** = எவன்,
**ய꞉**

**तानि** = அவைகளை,
**தானி**

**रुणद्धि** = அடைக்கிறானோ,

ருணத்³தி⁴

| | | |
|---|---|---|
| **तस्य** | = | அவனுக்கு, |
| **தஸ்ய** | | |
| **मृत्योः** | = | மிருத்யுவிடமிருந்து, |
| **ம்ருத்யோ:** | | |
| **न भयं** | = | பயமில்லை. |
| **ந ப⁴யம்** | | |

மிகவும் பலசாலியாயிருக்கிற ஸம்ஸாரம் என்ற மிருத்யு உள்ளே நுழைவதற்கு உலகத்தில் மூன்று பெரிய துவாரங்கள் (வாசல்கள்) இருக்கின்றன, அதாவது, ஸ்திரீ, நாக்கு, தங்கம், என்பவை. இம்மூன்றின் வழியாகத்தான் மிருத்யு மனிதனிடம் உட்புகுகிறன். எவன் இம்மூன்று வாசல்களையும் அடைத்துவிடுகிறனே அவனுக்குத்தான் மிருத்யுவினிடமிருந்து பயம் கிடையாது. பெண்ணிடமும் பொருளிலும் ஆசை கொண்டவர், நாக்குக்குக் கட்டுப்பட்டவர் இவர்கள் தம் ஆசையை நிறைவேற்ற பல கெட்ட செயல்களைப் புரிவதன் மூலம் பிறவி மரணம் என்னும் ஸம்ஸாரத்திலிருந்து மீள முடியாமல் இதிலேயே உழன்று கொண்டிருக்கின்றனர். இந்த ஆசையை யொழித்தவர் பிறவிக் கடலைத்தாண்டி அழிவற்ற நிலையை அடைகின்றனர். **(88)**

**मुक्तिश्रीनगरस्य दुर्जयतरं द्वारं यदस्त्यादिमं**
**तस्य द्वे अररे धनं च युवती ताभ्यां पिनद्धं दृढम् ।**
**कामाख्यार्गलदारुणा बलवता द्वारं तदेतत्त्रयं**
**धीरो यस्तु भिनत्ति सोऽर्हति सुखं भोक्तुं विमुक्तिश्रियः ॥ ८९ ॥**

**முக்திஸ்ரீநக³ரஸ்ய து³ர்ஜயதரம் த்³வாரம் யத³ஸ்த்யாதி³மம்**
**தஸ்ய த்³வே அரரே த⁴னம் ச யுவதீ தாப்⁴யாம் பினத்³த⁴ம் த்³ருட⁴ம் ।**
**காமாக்²யார்க³லதா³ருணா ப³லவதா த்³வாரம் ததே³தத்த்ரயம்**
**தீ⁴ரோ யஸ்து பி⁴னத்தி ஸோ(அ)ர்ஹதி ஸுக²ம் போ⁴க்தும் விமுக்திஸ்ரிய: ॥89॥**

| | | |
|---|---|---|
| **मुक्तिश्रीनगरस्य** | = | மோக்ஷலக்ஷ்மியின நகரத்திற்கு, |
| **முக்திஸ்ரீநக³ரஸ்ய** | | |
| **दुर्जयतरं** | = | ஜயிக்கமுடியாததான, |
| **து³ர்ஜயதரம்** | | |
| **यत्** | = | எந்த, |
| **யத்** | | |
| **आदिमं** | = | முதலாவது, |
| **ஆதி³மம்** | | |
| **द्वारं** | = | வாசல், |
| **த்³வாரம்** | | |

| | | |
|---|---|---|
| अस्ति | = | இருக்கிறதோ, |
| அஸ்தி | | |
| तस्य | = | அதற்கு, |
| தஸ்ய | | |
| धनं | = | செல்வமும், |
| த⁴னம் | | |
| युवती च | = | பெண்ணும் (என்ற), |
| யுவதீ ச | | |
| द्वे अररे | = | இரண்டு கதவுகள், |
| த்³வே அரரே | | |
| ताभ्यां | = | அவைகளால், |
| தாப்⁴யாம் | | |
| पिनद्धं | = | மூடப்பட்ட, |
| பினத்³த⁴ம் | | |
| द्वारं | = | வாசல், |
| த்³வாரம் | | |
| बलवता | = | பலமுள்ள, |
| ப³லவதா | | |
| कामाख्यार्गलदारुणा | = | காமம் என்ற பெயருள்ள தாப்பாள் |
| காமாக்²யார்க³லதா³ருணா | | கட்டையால், |
| दृढं | = | உறுதியானது, |
| த்³ருட⁴ம் | | |
| तत् एतत् त्रयं | = | அந்த இந்த மூன்றையும், |
| தத் ஏதத் த்ரயம் | | |
| यस्तु धीरः | = | தைரியசாலி, |
| யஸ்து தீ⁴ர: | | |
| भिनत्ति | = | பிளக்கிறானோ, |
| பி⁴னத்தி | | |
| सः | = | அவன், |
| ஸ: | | |
| विमुक्तिश्रियः | = | மோக்ஷலக்ஷ்மியின், |
| விமுக்திஶ்ரிய: | | |
| सुखं | = | ஸுகத்தை, |
| ஸுக²ம் | | |
| भोक्तुं | = | அநுபவிப்பதற்கு, |
| போ⁴க்தும் | | |

| | | |
|---|---|---|
| **बर्हति** <br> **ப³ர்ஹதி** | = | தகுதியுள்ளவனுகிறன். |

மோக்ஷலக்ஷ்மியின் நகரத்திற்கு மிகவும் சிரமப்பட்டு ஜயிக்க வேண்டியதாய் முதலில் எந்த வாசல் இருக்கிறதோ, அதற்கு செல்வம், ஸ்திரீ, என்று இரண்டு கதவுகள். அவைகளால் மூடப்பட்ட வாசல் காமம் என்கிற பலமான தாப்பாள் கட்டையால் திடமாக உள்ளது ஆகையால் இந்த மூன்றையும் எந்த தீரபுருஷன் உடைக்கிறுனே, அவன் தான் மோக்ஷலக்ஷ்மியின் ஸுகத்தை அனுபவிக்கமுடியும். தாரேஷஊண, வித்தேஷஊண என்ற பெண்ணுசை பணத்தாசை இரண்டையும் முற்றிலும் துறந்தவன் தான் மோக்ஷானந்தத்தை அடையமுடியும். **(89)**

## आरूढस्य विवेकाच्वं तीव्र वैराग्यखड्गिनः ।
## तितिक्षावर्मयुक्तस्य प्रतियोगी न दृश्यते ॥ ९० ॥

**ஆரூட⁴ஸ்ய விவேகாச்வம் தீவ்ர வைராக்³யக²ட்³கி³னஃ ।**
**திதிக்ஷாவர்மயுக்தஸ்ய ப்ரதியோகீ³ ந த்³ருஶ்யதே ॥ 90 ॥**

| | | |
|---|---|---|
| **विवेकाच्वं** <br> **விவேகாச்வம்** | = | விவேகம் என்னும் குதிரையில், |
| **आरूढस्य** <br> **ஆரூட⁴ஸ்ய** | = | ஏறியவனும், |
| **तीव्र वैराग्यखड्गिनः** <br> **தீவ்ர வைராக்³யக²ட்³கி³னஃ** | = | பலமான வைராக்யமென்னும் <br> கத்தியுடையவனும், |
| **तितिक्षावर्मयुक्तस्य** <br> **திதிக்ஷாவர்மயுக்தஸ்ய** | = | பொறுமை எனனும் கவசத்தோடு <br> கூடினவனுமான புருஷனுக்கு, |
| **प्रतियोगी** <br> **ப்ரதியோகீ³** | = | எதிரி, |
| **न दृश्यते** <br> **ந த்³ருஶ்யதே** | = | காணப்படுவதில்ஊல. |

விவேகமாகிற குதிரையில் ஏறிக்கொண்டு, தீவிர வைராக்ய மாகிற வாள் உள்ளவனுய், பொறுமை என்ற கவசத்தையுடையவனுக, இருப்பவனுக்கு எதிராளி காணமுடியாது. விவேகம், வைராக்யம், பொறுமை இம்மூன்றும் மனதில் உறுதியாயிருந்தால் உலகவிஷயங்களால் அவன் சலிக்கமாட்டான். **(90)**

## विवेकजां तीव्रविरक्तिमेव मुक्तेर्निदानं निगदन्ति सन्तः ।
## तस्माद्विवेकी विरतिं मुमुक्षुः संपादयेत्तां प्रथमं प्रयत्नात् ॥ ९१ ॥

**விவேகஜாம் தீவ்ரவிரக்திமேவ**
**முக்தேர்நிதா³னம் நிக³த³ந்தி ஸந்த: ।**
**தஸ்மாத்³விவேகீ விரதிம் முமுக்ஷு:**
**ஸம்பாத³யேத்தாம் ப்ரத²மம் ப்ரயத்னாத் ॥ 91 ॥**

| | | |
|---|---|---|
| **विवेकजां** விவேகஜாம் | = | விவேகத்தினுல் உண்டாகிற, |
| **तीव्रविरक्तिमेव** தீவ்ரவிரக்திமேவ | = | தீவ்ரமான வைராக்யத்தைத்தான், |
| **मुक्तेः** முக்தே: | = | முக்திக்கு, |
| **निदानं** நிதா³னம் | = | காரணமாக, |
| **सन्तः** ஸந்த: | = | பெரியோர்கள், |
| **निगदन्ति** நிக³த³ந்தி | = | சொல்கிறுர்கள், |
| **तस्मात्** தஸ்மாத் | = | ஆகையால், |
| **मुमुक्षुः** முமுக்ஷு: | = | மோக்ஷமடைவதில் விருப்பமுள்ளவன், |
| **प्रथमं** ப்ரத²மம் | = | முதலில், |
| **विवेकी** விவேகீ | = | விவேகத்துடன்கூடியவனுகி, |
| **प्रयत्नात्** ப்ரயத்னாத் | = | முயற்சியால், |
| **तां** தாம் | = | அந்த, |
| **विरतिं** விரதிம் | = | வைராக்யத்தை, |
| **संपादयेत्** ஸம்பாத³யேத் | = | ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும். |

முதலில் சுருதிகளாலும் யுக்திகளாலும் பதார்த்தங்களை நன்கு ஆராய்ந்து ப்ரஹ்மம் ஒன்றே நித்யமானது ஸத்யப்பொருள், மற்றவையெல்லாம் அநித்யம், தீமைபயப்பது என்று நன்கு பிரித்துத் தெரிந்துகொள்வது என்ற விவேகம் ஏற்பட்டு அதன் மூலம் உண்டாகும் தீவ்ர வைராக்யம் தான் முக்திக்கு ஸாதனமாகும் விவேக

மில்லாமல் வேறுகாரணங்களால் ஏற்படும் வைராக்யம் நிலைத்திருக்காது. மற்றோர் சமயம் வைராக்யம் மறைந்து ஆசை ஏற்பட்டுவிடக்கூடும். ஆதலால் மோக்ஷத்தை அடையவிரும்புபவன் முதலில் விவேகத்தையடைந்து பிறகு அதன் மூலம் முயற்சி யுடன் வைராக்யத்தை ஸம்பாதிக்க வேண்டும். **(91)**

**पुमानजात निर्वेदो देहबन्धं जिहासितुम् ।**
**न हि शक्नोति निर्वेदो बन्धभेदो महानसौ ॥ ९२ ॥**

**புமானஜாத நிர்வேதோ³ தே³ஹப³ந்த⁴ம் ஜிஹாஸிதும் ।**
**ந ஹி ஶக்னோதி நிர்வேதோ³ ப³ந்த⁴பே⁴தோ³ மஹானஸௌ ॥ 92 ॥**

**अजात निर्वेदो** = வைராக்யம் ஏற்படாத,
**அஜாத நிர்வேதோ³**
**पुमान्** = மனிதன்,
**புமான்**
**देहबन्धं** = சரீரமாகிற கட்டை,
**தே³ஹப³ந்த⁴ம்**
**जिहासितुं** = விடுவதற்கு,
**ஜிஹாஸிதும்**
**न हि शक्नोति** = சக்தியுள்ளவவனுகமாட்டான்,
**ந ஹி ஶக்னோதி**
**असौ** = இந்த,
**அஸௌ**
**निर्वेदः** = வைராக்யம்,
**நிர்வேத³:**
**महान्** = பெரிய,
**மஹான்**
**बन्धभेदः** = நிர்வேதம் பந்தத்தை பிளப்பதில்.
**ப³ந்த⁴பே⁴த³:**

சரீரத்துடன் ஆத்மா கட்டுப்பட்டு எல்லாத்துன்பங்களையும் அனுபவிக்கிறது வைராக்ய மில்லாதவனுக்கு சரீரபந்தம் விலகாது ஆகவே சரீரபந்தம் விலக வைராக்யம் தான் முக்யமான ஸாதனம். **(92)**

**वैराग्यरहिता एव यमालय इवालये ।**
**क्लिश्नन्ति त्रिविधैस्तापैर्मोहिता अपि पण्डिताः ॥ ९३ ॥**

**வைராக்³யரஹிதா ஏவ யமாலய இவாலயே ।**
**க்லிஶ்னந்தி த்ரிவிதை⁴ஸ்தாபைர்மோஹிதா அபி பண்டி³தா: ॥ 93 ॥**

| | | |
|---|---|---|
| **पण्डिताः अपि** | = | படித்தவர்களாயிருந்தும், |
| **பண்டி³தா꞉ அபி** | | |
| **वैराग्यरहिता एव** | = | வைராக்யமில்லாதவர்கள்தான், |
| **வைராக்³யரஹிதா ஏவ** | | |
| **मोहिताः** | = | மோஹமடைந்தவர்களாகி, |
| **மோஹிதா꞉** | | |
| **यमालये एव** | = | யம லோகத்தில்போல, |
| **யமாலயே ஏவ** | | |
| **आलये** | = | (தனது) வீட்டில், |
| **ஆலயே** | | |
| **त्रिविधैः** | = | மூன்றுவிதமான, |
| **த்ரிவிதை⁴꞉** | | |
| **तापैः** | = | தாபங்களால், |
| **தாபை꞉** | | |
| **क्लिश्नन्ति** | = | துன்புறுகிறுர்கள். |
| **க்லிஶ்னந்தி** | | |

படித்த போதிலும் வைராக்யம் ஏற்படாவிட்டால் அவர்கள் தான் உலக விஷயங்களில் மயங்கி வீட்டில் பற்றுக்கொண்டு அதன் மூலம் நரகத்தில் போல ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் மூவித தாபங்களால் வருந்துகிறுர்கள். **(93)**

(**அவதாரிகை**) நான்கு ஸாதனங்களில் விவேகம் வைராக்யம் என்ற இரண்டின் லக்ஷணத்தையும் அவசியத்தன்மையையும் விவரித்து விட்டு இனி மூன்ருவது ஸாதனமான சமாகிஷட்கஸம்பத்தி என்பதில் அடங்கியிருக்கும் ஆறு அம்சங்கள் எவை என்று முதலில் சொல்லிவிட்டு அவைகள் ஒவ்வொன்றையும் விஸ்தாரமாக எடுத்துச் சொல்கிறுர்: -

**शमो दमस्तितिक्षोपरतिः श्रद्धा ततः परम् ।**
**समाधानमिति प्रोक्तं षडेवैते शमादयः ॥ ९४ ॥**

**ஶமோ த³மஸ்திதிக்ஷோபரதி꞉ ஶ்ரத்³தா⁴ தத꞉ பரம் ।**
**ஸமாதா⁴னமிதி ப்ரோக்தம் ஷடே³வைதே ஶமாத³ய꞉ ॥ 94 ॥**

| | | |
|---|---|---|
| **शमः** | = | சாந்தி, |
| **ஶம꞉** | | |
| **दमः** | = | தமம், |
| **த³ம꞉** | | |

**तितिक्षा** = பொறுமை,

**திதிக்ஷா**

**उपरतिः** = உபரதி,

**உபரதிः**

**श्रद्धा** = சிரத்தை,

**ஶ்ரத்³தா⁴**

**ततः परं** = அதன்பின்,

**ததः பரம்**

**समाधानं** = ஸமாதானம்,

**ஸமாதா⁴னம்**

**इति** = என்று சொல்லப்பட்டுள்ளது,

**இதி**

**एते** = இந்த,

**ஏதே**

**षडेव** = ஆறுதான்,

**ஷடே³வ**

**शमादयः** = சமம் முதலியவை.

**ஶமாத³யः**

1. சமம், 2. தமம், 3. திதிக்ஷா, 4. உபரதி, 5. சிரத்தை, 6. ஸமாதானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஆறு தான் சமம் முதலியவை. **(94)**

**एकवृत्यैव मनसः स्वलक्ष्ये नियतस्थितिः ।**
**शम इत्युच्यते सद्भिः शमलक्षणवेदिभिः ॥ ९५ ॥**

**ஏகவ்ருத்யைவ மனஸः ஸ்வலக்ஷ்யே நியதஸ்தி²திः ।**
**ஶம இத்யுச்யதே ஸத்³பி⁴ः ஶமலக்ஷணவேதி³பி⁴ः ॥ 95 ॥**

**एकवृत्यैव** = ஒரே விருத்தியுடனேயே,

**ஏகவ்ருத்யைவ**

**स्वलक्ष्ये** = தனது லக்ஷ்யத்தில்,

**ஸ்வலக்ஷ்யே**

**मनसः** = மனதின்,

**மனஸः**

**नियतस्थितिः** = கட்டுப்பட்ட ஸ்திதி,

**நியதஸ்தி²திः**

**शम इति** = சமம் என்று,

**ஶம இதி**

**शमलक्षणवेदिभिः** = சமத்தின் லக்ஷணமறிந்த,
**ஶமலக்ஷணவேதி³பி⁴ः**
**सद्भिः** = மஹான்களால்,
**ஸத்³பி⁴ः**
**उच्यते** = சொல்லப்படுகிறது.
**உச்யதே**

ஒரே விருத்தியுடன் தனது லக்ஷ்யத்தில் மனம் அடங்கியிருப்பது சமம் என்று சமத்தின் லக்ஷணத்தையறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. **(95)**

## उत्तमो मध्यमश्चैव जघन्य इति च त्रिधा ।
## निरूपितो विपश्चिद्भिः तत्तल्लक्षणवेदिभिः ॥ ९६ ॥

**உத்தமோ மத்⁴யமஶ்சைவ ஜக⁴ன்ய இதி ச த்ரிதா⁴ ।**
**நிரூபிதோ விபஶ்வித்³பி⁴ः தத்தல்லக்ஷணவேதி³பி⁴ः ॥ 96 ॥**

**उत्तमः** = உத்தமம்,
**உத்தமः**
**मध्यमश्चैव** = மத்யமம்,
**மத்⁴யமஶ்சைவ**
**जघन्यः** = அதமம்,
**ஜக⁴ன்ய:**
**इति च** = என்றும்,
**இதி ச**
**त्रिधा** = மூன்று விதமாக,
**த்ரிதா⁴**
**तत्तल्लक्षणवेदिभिः** = அததன் லக்ஷணங்களை அறிந்த,
**தத்தல்லக்ஷணவேதி³பி⁴ः**
**विपश्चिद्भिः** = அறிவாளிகளால் (சமமானது),
**விபஶ்வித்³பி⁴ः**
**निरूपितः** = விளக்கப்பட்டிருக்கிறது.
**நிரூபிதः**

இது உத்தமம், மத்யமம், அதமம் என்று மூன்றுவிதமாக அததன் லக்ஷணத்தையறிந்த பண்டிதர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. **(96)**

## स्वविकारं परित्यज्य वस्तुमात्रतया स्थितिः ।
## मनसः सोत्तमा शान्तिर्ब्रह्मनिर्वाणलक्षणा ॥ ९७ ॥

**ஸ்வவிகாரம் பரித்யஜ்ய வஸ்துமாத்ரதயா ஸ்தி²தி꞉ ।**
**மனஸ꞉ ஸோத்தமா ஶாந்திர்ப்³ரஹ்மநிர்வாணலக்ஷணா ॥ 97 ॥**

**मनसः** = மனது,
**மனஸ꞉**

**स्वविकारं** = தனது விகாரத்தை (விருத்தியாக பரிணமிப்பதை),
**ஸ்வவிகாரம்**

**परित्यज्य** = விட்டு விட்டு,
**பரித்யஜ்ய**

**वस्तुमात्रतया** = ப்ரஹ்ம வஸ்துவாகமட்டுமே,
**வஸ்துமாத்ரதயா**

**स्थितिः** = இருப்பது (யாதோ),
**ஸ்தி²தி꞉**

**सा** = அது,
**ஸா**

**ब्रह्मनिर्वाणलक्षणा** = ப்ரஹ்ம நிர்வாணத்தைக் குறிக்கும்,
**ப்³ரஹ்மநிர்வாணலக்ஷணா**

**उत्तमा शान्तिः** = உத்தமமான சாந்தியாகும்.
**உத்தமா ஶாந்தி꞉**

மனஸ் தான் மாறுதல் அடைவதை விட்டு விட்டு அறியப்படும் வஸ்துவான பிரஹ்மமாகவே இருந்து விடுவது என்பது பிரஹ்மானந்தத்தைக் குறிக்கும் உத்தம மான சாந்தி. **(97)**

**प्रत्यक्प्रत्ययसंतानप्रवाहकरणं धियः ।**
**यदेषा मध्यमा शान्तिः शुद्धसत्त्वैकलक्षणा ॥ ९८ ॥**

**ப்ரத்யக்ப்ரத்யயஸந்தானப்ரவாஹகரணம் தி⁴ய꞉ ।**
**யதே³ஷா மத்⁴யமா ஶாந்தி꞉ ஶுத்³த⁴ஸத்த்வைகலக்ஷணா ॥ 98 ॥**

**धियः** = மனதிற்கு,
**தி⁴ய꞉**

**प्रत्यक्प्रत्यय** = ஆத்ம விஷயமான ஞானத்தை,
**ப்ரத்யக்ப்ரத்யய**

**संतानप्रवाहकरणं** = பிரவாஹம்போல் துடர்ச்சியாகச் செய்வது,
**ஸந்தானப்ரவாஹகரணம்**

**यत्** = யாதொன்று உண்டோ,
**யத்**

**एषा** = இது,

**ஏஷா**

**शुद्धसत्त्वै कलक्षणा** = கலப்பில்லாத ஸத்வகுணம மட்டும்

**ஶுத்³த⁴ஸத்த்வை கலக்ஷணு** உள்ளதைக்குறிக்கும்,

**मध्यमा शान्तिः** = மத்யமமான சாந்தி.

**மத்⁴யமா ஶாந்திः**

அந்தராத்ம விஷயமான ஞானத்துடர்ச்சியை இடைவிடாமல் பிரவாஹம் போல் மனஸில் செய்வது மத்யமமான சாந்தி இது சுத்தமான ஸத்வகுணத்தைக் குறிக்கும். **(98)**

**विषयव्यापृतिं त्यक्त्वा श्रवणैकमनस्थितिः।**
**मनसश्चेतरा शान्तिर्मिश्रसत्त्वैकलक्षणा ॥ ९९ ॥**

**விஷயவ்யாப்ருதிம் த்யக்த்வா ஶ்ரவணைகமனஸ்தி²திः।**
**மனஸஶ்சேதரா ஶாந்திர்மிஶ்ரஸத்த்வைகலக்ஷணு ॥ 99 ॥**

**विषयव्यापृतिं** = விஷயங்களில் செல்வதை,

**விஷயவ்யாப்ருதிம்**

**त्यक्त्वा** = விட்டுவிட்டு,

**த்யக்த்வா**

**श्रवणैकमनस्थितिः** = ச்ரவணம் ஒன்றிலேயே மனஸ் இருப்பது,

**ஶ்ரவணைகமனஸ்தி²திः**

**मिश्रसत्त्वैकलक्षणा** = கலப்புள்ள ஸத்வகுணத்தைக் குறிக்கின்ற,

**மிஶ்ரஸத்த்வைகலக்ஷணு**

**मनसः** = மனதின்,

**மனஸः**

**इतरा शान्तिः** = மற்ெருரு (அதமமான) சாந்தி.

**இதரா ஶாந்திः**

விஷயங்களில் செல்வதை விட்டு விட்டு, தத்வத்தைக் கேட்டறிவது ஒன்றில் மாத்திரம் மனஸ் இருப்பது அதமமான சாந்தி இது மற்ற குணங்கள் சலந்த ஸத்வ குணத்தைக் குறிக்கும்.

[தனது லக்ஷ்யத்திலேயே மனம் அடங்கியிருப்பது சாந்தி என்று பொதுவாகக் கூறப்பட்டது ஆனுலும் அப்யாஸததை யனுஸரித்து இதை மூன்று விதமாகப் பிரிக்கிருர். மனதில் விருத்தியே ஏற்படாமல் பிரஹ்மவஸ்துவாகவே மனம் ஆகி விடுவதுதான் உத்தமமான சாந்தி நிர்விகல்ப ஸமாதியில் இந்நிஜல ஏற்படும் இது ப்ரஹ்மநிர்வாணமென்ற முக்தி நிஜலயைக் குறிக்கும் மனதில் ரஜஸ்தமோ குணக் கலப்பில்லாமல் சுத்த ஸத்வ குணமே நிறைந்திருந்தால் அப்பொழுது மனதில்

அநாத்ம விருத்திகள் ஒன்றும் ஏற்படாமல் ஆத்மவ்ருத்தி ஒன்றே பிரவாஹம் போல் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் ஸவிகல்ப ஸமாதியில் இந்நிஜல ஏற்படும். இது மத்யமமான சாந்தி உலக விஷயங்களில் மனதைச் செலுத்தாமல் எப்பொழுதும் வேதாந்த சிரவணத்திலேயே மனம் ஈடுபட்டிருப்பது அதமமான சாந்தியாகும் இந்நிஜலயில் மற்ற குணங்கள் கலந்திருந்த போதிலும் ஸத்வகுணம் மேலோங்கி யிருக்கும் சிரவணத்தில் ஈடுபடாமல் உலகவிஷயங்களில் மனதைச் செலுத்துபவர் களுக்கு சாந்தியே கிடையாது.] **(99)**

## प्राच्योदीच्याङ्गसद्भावे शमः सिध्यति नान्यथा ।
## तीव्रा विरक्तिः प्राच्याङ्गमुदीच्याङ्गं दमादयः॥ १०० ॥

**ப்ராச்யோதீ³ச்யாங்க³ஸத்³பா⁴வே ஶமঃ ஸித்⁴யதி நான்யதா² ।**
**தீவ்ரா விரக்திঃ ப்ராச்யாங்க³முதீ³ச்யாங்க³ம் த³மாத³யঃ ॥ 100 ॥**

**प्राच्योदीच्याङ्गसद्भावे** = பூர்வாங்கமும் உத்தராங்கமும் இருந்தால்,
**ப்ராச்யோதீ³ச்யாங்க³ஸத்³பா⁴வே**

**शमः** = சாந்தி,
**ஶமঃ**

**सिध्यति** = ஸித்திக்கும்,
**ஸித்⁴யதி**

**अन्यथा** = இல்லாவிடில்,
**அன்யதா²**

**न** = ஸித்திக்காது,
**ந**

**तीव्रा विरक्तिः** = தீவிரமான வைராக்யம்,
**தீவ்ரா விரக்திঃ**

**प्राच्याङ्गं** = பூர்வாங்கம்,
**ப்ராச்யாங்க³ம்**

**दमादयः** = தமம் முதலியவை,
**த³மாத³யঃ**

**उदीच्याङ्गं** = உத்தராங்கம்.
**உதீ³ச்யாங்க³ம்**

முன் அங்கம் பின் அங்கம் இவை இருந்தால் தான் சமம் ஸித்திக்கும் அவையில்ஜலயாஞல் ஸித்திக்காது. தீவிரமான வைராக்யம் சமத்திற்கு பூர்வாங்கம் தமம் முதலானதுகள் உத்தராங்கம். **(100)**

**(அவதாரிகை)** சாந்தி ஏற்படுவதற்குள்ள ஸாதனங்கஜள விவரிப்பதற்கு முன்னதாக யாருக்கு சாந்தி ஏற்படாது என்பதை சொல்கிறுர். இந்த குறைகஜள

நிவிருத்தி செய்து கொண்டால்தான், அந்த ஸாதனங்கள் பிரயோஜனப்படுமென்று கருத்து: -

**काम: क्रोधश्च लोभश्च मदो मोहश्च मत्सर:।**
**न जिता: षडिमे येन तस्य शान्तिर्न सिध्यति ॥ १०१ ॥**

**காம: க்ரோத⁴ஶ்ச லோப⁴ஶ்ச மதோ³ மோஹஶ்ச மத்ஸர: ।**
**ந ஜிதா: ஷடி³மே யேன தஸ்ய ஶாந்திர்ன ஸித்⁴யதி ॥ 101 ॥**

**काम:** = காமமும்,
**காம:**
**क्रोधश्च** = கோபமும்,
**க்ரோத⁴ஶ்ச**
**लोभश्च** = பேராசையும்,
**லோப⁴ஶ்ச**
**मद:** = கர்வமும்,
**மத³:**
**मोहश्च** = மோஹமும்,
**மோஹஶ்ச**
**मत्सर:** = அஸூயையும்,
**மத்ஸர:**
**इमे षद्** = இந்த ஆறும்,
**இமே ஷத்³**
**येन** = எவனால்,
**யேன**
**न जिता:** = ஜயிக்கப்படவில்லையோ,
**ந ஜிதா:**
**तस्य** = அவனுக்கு,
**தஸ்ய**
**शान्ति:** = சாந்தி,
**ஶாந்தி:**
**न सिध्यति** = ஸித்திக்காது.
ந ஸித்⁴யதி

காமம், கோபம், பேராசை, கர்வம், மோஹம், அஸூயை ஆகிய இந்த ஆறும் எவனால் ஜயிக்கப்படவில்லையோ அவனுக்கு சாந்தி ஸித்திக்காது. **(101)**

**शब्दादिविषयेभ्यो यो विषवत्न निवर्तते ।**
**तीव्रमोक्षेच्छया भिक्षोस्तस्य शान्तिर्न सिध्यति ॥ १०२ ॥**

**ஶப்³தா³தி³விஷயேப்⁴யோ யோ விஷவத்ன நிவர்ததே ।**
**தீவ்ரமோக்ஷேச்ச²யா பி⁴க்ஷோஸ்தஸ்ய ஶாந்திர்ன ஸித்⁴யதி ॥ 102 ॥**

**तीव्रमोक्षेच्छया** = முக்தியில் தீவரமான விருப்பத்தால்,
**தீவ்ரமோக்ஷேச்ச²யா**
**विषवत्** = விஷத்திலிருந்துபோல,
**விஷவத்**
**शब्दादिविषयेभ्य:** = சப்தம் முதலான விஷயங்களிலிருந்து,
**ஶப்³தா³தி³விஷயேப்⁴ய:**
**य:** = எவன்,
**ய:**
**न निवर्तते** = விலகிச்செல்லவில்லையோ,
**ந நிவர்ததே**
**तस्य भिक्षो:** = அந்த ஸந்யாஸிக்கு,
**தஸ்ய பி⁴க்ஷோ:**
**शान्ति:** = சாந்தி,
**ஶாந்தி:**
**न सिध्यति** = ஸித்திக்காது.
**ந ஸித்⁴யதி**

மோக்ஷம் அடைவது ஒன்றிலேயே தீவ்ரமான விருப்பம் கொண்டு வேறு ஒன்றிலும் ஆசைகொள்ளாமல் விஷத்தைக் கண்டு பயந்து தூரத்தில் விலகிச் செல்வதுபோல் சப்தாதி விஷயங்களை விட்டு விலகிச்செல்வதுபோல் சப்தாதி விஷயங்களை விட்டு விலகிச்செல்பவனுக்குத்தான் சாந்தி கிடைக்கும் சப்தாதி விஷயங்களை நோக்கிச் செல்பவன் ஸந்யாஸி யாயிருந்தாலும் சாந்தி பெற மாட் டான். **(102)**

**येन नाराधितो देवो यस्य नो गुर्वनुग्रहः ।**
**न वश्यं हृदयं यस्य तस्य शान्तिर्न सिध्यति ॥ १०३ ॥**

**யேன நாராதி⁴தோ தே³வோ யஸ்ய நோ கு³ர்வனுக்³ரஹ: ।**
**ந வஶ்யம் ஹ்ருத³யம் யஸ்ய தஸ்ய ஶாந்திர்ன ஸித்⁴யதி ॥ 103 ॥**

**येन** = எவனால்,
**யேன**

| | | |
|---|---|---|
| देवः | = | ஈசுவரன், |
| தே³வः | | |
| न आराधितः | = | பூஜிக்கப்பட வில்லையோ, |
| ந ஆராதி⁴தः | | |
| यस्य | = | எவனுக்கு, |
| யஸ்ய | | |
| नो गुर्वनुग्रहः | = | குருவின் அருள் இல்லையோ, |
| நோ கு³ர்வனுக்³ரஹः | | |
| यस्य | = | எவனுடைய, |
| யஸ்ய | | |
| हृदयं | = | மனது, |
| ஹ்ருத³யம் | | |
| न वश्यं | = | ஸ்வாதீனமாக இல்லையோ, |
| ந வஶ்யம் | | |
| तस्य | = | அவனுக்கு, |
| தஸ்ய | | |
| शान्तिः | = | சாந்தி, |
| ஶாந்திः | | |
| न सिध्यति | = | ஸித்திக்காது. |
| ந ஸித்⁴யதி | | |

எவனால் ஈசுவரன் ஆராதிக்கப்படவில்லையோ, எவனுக்கு குருவின் அனுக்கிரஹம் இல்லையோ, எவனுடைய மனஸ் வசமாக வில்லையோ, அவனுக்கு சாந்தி ஸித்திக்காது குரு கிருபையும் ஈசுவர கிருபையும பெற்று அதன்மூலம் மனம் வசனமாவர்களுக்குத்தான் சாந்தி ஏற்படும். **(103)**

**मनःप्रसादसिद्ध्यर्थं साधनं श्रूयतां बुधैः।**
**मनःप्रसादो यत्सत्त्वे यदभावे न सिध्यति ॥ १०४ ॥**

**மனःப்ரஸாத³ஸித்³த்⁴யர்த²ம் ஸாத⁴னம் ஶ்ரூயதாம் பு³தை⁴ः।**
**மனःப்ரஸாதோ³ யத்ஸத்த்வே யத³பா⁴வே ந ஸித்⁴யதி ॥ 104 ॥**

| | | |
|---|---|---|
| यत्सत्त्वे | = | எது இருந்தால், |
| யத்ஸத்த்வே | | |
| मनःप्रसादः | = | மனதின் தெளிவு ஏற்படுமோ, |
| மனःப்ரஸாத³ः | | |
| यदभावे | = | எது இல்லாவிட்டால், |
| யத³பா⁴வே | | |

**न सिध्यति** = ஏற்படாதோ, அவ்விதமான)

**ந ஸித்⁴யதி**

**साधनं** = ஸாதனமானது,

**ஸாத⁴னம்**

**मनःप्रसादसिद्ध्यर्थं** = மனதின் தெளிவு ஏற்படுவதற்காக,

**மனःப்ரஸாத³ஸித்³த்⁴யர்த²ம்**

**बुधैः** = அறிவாளிகளால்,

**பு³தை⁴ः**

**श्रूयतां** = கேட்கப்படட்டும்.

**ஶ்ரூயதாம்**

எது இருந்தால் மனதிற்குத் தெளிவு ஏற்படுமோ, எது இல்லையானல் ஏற்படாதோ, அந்த, மனத்தெளிவு ஏற்படுவதற்காக உள்ள ஸாதனத்தை அறிவாளிகள் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும். **(104)**

(**அவதாரிகை**) அந்த ஸாதனம் 18 விதமாயிருக்கிறதென்று சொல்லி விட்டு, ஒவ்வொன்றின் லக்ஷணத்தையும் தனித்தனியே விளக்குகிறுர்: -

**ब्रह्मचर्यं अहिंसा च दया भूतेष्ववक्रता ।**
**विषयेष्वतिवैतृष्ण्यं शौचं दम्भविवर्जनम् ॥ १०५ ॥**

**ப்³ரஹ்மசர்யம் அஹிம்ஸா ச த³யா பூ⁴தேஷ்வவக்ரதா ।**
**விஷயேஷ்வதிவைத்ருஷ்ண்யம் ஶௌசம் த³ம்ப⁴விவர்ஜனம் ॥ 105 ॥**

**सत्यं निर्ममता स्थैर्य अभिमानविवर्जनम् ।**
**ईश्वर ध्यानपरता ब्रह्मविद्भिः सह स्थितिः ॥ १०६ ॥**

**ஸத்யம் நிர்மமதா ஸ்தை²ர்ய அபி⁴மானவிவர்ஜனம் ।**
**ஈஶ்வர த்⁴யானபரதா ப்³ரஹ்மவித்³பி⁴ः ஸஹ ஸ்தி²திः ॥ 106 ॥**

**ज्ञानशास्त्रैकपरता समता सुखदुःखयोः ।**
**मानानासक्तिः एकान्तशीलता च मुमुक्षुता ॥ १०७ ॥**

**ஜ்ஞானஶாஸ்த்ரைகபரதா ஸமதா ஸுக²து³ःக²யோः ।**
**மாஞனஸக்திः ஏகாந்தஶீலதா ச முமுக்ஷுதா ॥ 107 ॥**

**यस्यैतद्विद्यते सर्वं तस्य चित्तं प्रसीदति ।**
**न त्वेतद्धर्मशून्यस्य प्रकारान्तरकोटिभिः ॥ १०८ ॥**

**யஸ்யைதத்³வித்³யதே ஸர்வம் தஸ்ய சித்தம் ப்ரஸீத³தி ।**
**ந த்வேதத்³த⁴ர்மஶூன்யஸ்ய ப்ரகாராந்தரகோடிபி⁴ः ॥ 108 ॥**

**ब्रह्मचर्यं** = ப்ரஹமசர்யம்,

**ப்3ரஹ்மசர்யம்**

**अहिंसा च** = அஹிம்ஸை,

**அஹிம்ஸா ச**

**भूतेषु** = பிராணிகளிடம்,

**பூ4தேஷு**

**दया** = தயை,

**த3யா**

**अवक्रता** = நேர்மை,

**அவக்ரதா**

**विषयेषु** = போகவிஷயங்களில்,

**விஷயேஷு**

**अतिवैतृष्ण्यं** = மேலான வைராக்யம்,

**அதிவைத்ருஷ்ண்யம்**

**शौचं** = சுத்தி,

**ஶௌசம்**

**दम्भविवर्जनम्** = டம்பத்தை விட்டுவிடுதல்,

**த3ம்ப4விவர்ஜனம்**

**सत्यं** = உண்மை,

**ஸத்யம்**

**निर्ममता** = கர்வமற்றிருத்தல்,

**நிர்மமதா**

**स्थैर्य** = ஸ்திரத்தன்மை,

**ஸ்தை2ர்ய**

**अभिमानविवर्जनम्** = அபிமானத்தை விடுதல்,

**அபி4மானவிவர்ஜனம்**

**ईश्वर ध्यानपरता** = ஈசுவர த்யானத்தில் ஈடுபடுவது,

**ஈஶ்வர த்4யானபரதா**

**ब्रह्मविद्भिः सह** = ப்ரஹ்ம ஞானிகளுடன்கூட,

**ப்3ரஹ்மவித்3பி4: ஸஹ**

**स्थितिः** = இருத்தல்,

**ஸ்தி2தி:**

**ज्ञानशास्त्रैकपरता** = ஞான சாஸ்திரம் ஒன்றிலேயே ஈடுபடுவது,

**ஜ்ஞானஶாஸ்த்ரைகபரதா**

**सुखदुःखयोः** = இன்பம் துன்பம் இரண்டிலும்,

**ஸுக2து3:க2யோ:**

| | | |
|---|---|---|
| **समता** | = | ஸமமாயிருத்தல், |
| **ஸமதா** | | |
| **मानानासक्तिः** | = | தன்னை கௌரவிப்பதில் ஈடுபடாதிருத்தல், |
| **மாநாநாஸக்திঃ** | | |
| **एकान्तशीलता** | = | தனிமையில் இருக்கப் பழகுதல், |
| **ஏகாந்தஶீலதா** | | |
| **मुमुक्षुता च** | = | மோக்ஷமடைவதில் விருப்பம், |
| **முமுக்ஷுதா ச** | | |
| **एतत् सर्वं** | = | இது எல்லாம், |
| **ஏதத் ஸர்வம்** | | |
| **यस्य** | = | எவனுக்கு, |
| **யஸ்ய** | | |
| **विद्यते** | = | இருக்கிறதோ, |
| **வித்³யதே** | | |
| **तस्य** | = | அவனுடைய, |
| **தஸ்ய** | | |
| **चित्तं** | = | மனம், |
| **சித்தம்** | | |
| **प्रसीदति** | = | தெளிவடைகிறது, |
| **ப்ரஸீத³தி** | | |
| **एतद्धर्मशून्यस्य** | = | இந்த தர்மங்களில்லாதவனுக்கு, |
| **ஏதத்³த⁴ர்மஶூன்யஸ்ய** | | |
| **प्रकारान्तरकोटिभिः** | = | இவைகளைத் தவிர வேறு கோடிக்கணக்கான |
| **ப்ரகாராந்தரகோடிபி⁴ঃ** | | முறைகளாலும், |
| **न** | = | (மனத்தெளிவு) ஏற்படாது. |
| **ந** | | |

(2) பிரஹ்மசர்யம், (2) அஹிம்ஸை, (3) ஸகலபிராணிகளிடத்திலும் தயை, (4) அவக்ரதா (கோணலில்லாமை) (5) விஷயங்களில் நன்கு ஆசையற்றிருத்தல், (6) சௌசம், (7) தம்பத்தை தவிர்ப்பது, (8) ஸத்யம், (9) மமதையற்றிருத்தல், (10) ஸ்திர மாயிருத்தல், (11) அபிமானத்தைத் தவிர்ப்பது, (12) ஈசுவரஜ்ன தியானம் செய்வதி லேயே ஈடுபடுவது, (13) பிரஹ்மவித்துக்களுடன் கூடவே இருப்பது, (14) ஞான சாஸ்திரமொன்றிலேயே ஈடுபடுவது, (15) ஸுக துக்கங்களில் ஸமமாயிருப்பது. (16) பகுமானத்தில் ஆஸக்தியில்லாமலிருப்பது, (17) தனித்திருந்து பழக்கம், (18) மோக்ஷததில் ஆவலுடன் இருத்தல். எவருக்கு இது எல்லாம் இருக்கிறதோ, அவருடைய சித்தம் தெளிவடையும். இந்த அம்சங்கள் இல்லாதவருக்கு, கோடிக் கணக்காக வேறு எந்த பிரகாரமாய்ச் செய்து பார்ததாலும், சித்தம் தெளிவடையாது. **(105-108)**

**स्मरणं दर्शनं स्त्रीणां गुणकर्मानुकीर्तनम् ।**
**समीचीनत्वधीस्तासु प्रीतिः संभाषणं मिथः ॥ १०९ ॥**

**ஸ்மரணம் த³ர்ஶனம் ஸ்த்ரீணும் கு³ணகர்மானுகீர்தனம் ।**
**ஸமீசீனத்வதீ⁴ஸ்தாஸு ப்ரீதிঃ ஸம்பா⁴ஷணம் மித²ঃ ॥ 109 ॥**

**सहवासश्च संसर्गोऽष्टधा मैथुनं विदुः ।**
**एतद्विलक्षणं ब्रह्मचर्यं चित्तप्रसादकम् ॥ ११० ॥**

**ஸஹவாஸஶ்ச ஸம்ஸர்கோ³(அ)ஷ்டதா⁴ மைது²னம் விது³ঃ ।**
**ஏதத்³விலக்ஷணம் ப்³ரஹ்மசர்யம் சித்தப்ரஸாத³கம் ॥ 110 ॥**

| | | |
|---|---|---|
| **स्त्रीणां** ஸ்த்ரீணும் | = | பெண்களை, |
| **स्मरणं** ஸ்மரணம் | = | மனதில் நினைப்பது, |
| **दर्शनं** த³ர்ஶனம் | = | கண்களால் பார்ப்பது, |
| **गुणकर्मानुकीर्तनम्** கு³ணகர்மானுகீர்தனம் | = | குணங்களையும் செய்கைகளையும் வாயால் சொல்வது, |
| **तासु** தாஸு | = | அவர்களைப்பற்றி, |
| **समीचीनत्वधीः** ஸமீசீனத்வதீ⁴ | = | சிறந்தவர் என்ற மனப்பான்மை, |
| **प्रीतिः** ப்ரீதிঃ | = | அவர்களிடம் அன்பு, |
| **मिथः संभाषणं** மித²ঃ ஸம்பா⁴ஷணம் | = | தனிமையில் அவர்களுடன் பேசுவது, |
| **सहवासः** ஸஹவாஸ | = | சேர்ந்து வஸிப்பது, |
| **संसर्गोः** ஸம்ஸர்கோ³ঃ | = | சேர்க்கை (இவ்வாறு), |
| **अष्टधा** அஷ்டதா⁴ | = | எட்டுவிதமாக, |
| **मैथुनं** மைது²னம் | = | மைதுனத்தை, |
| **विदुः** விது³ঃ | = | அறிந்துள்ளார்கள், |

**एतद्विलक्षणं** = இந்த எட்டிற்கும் எதிரிடையான,

**ஏதத்³விலக்ஷணம்**

**ब्रह्मचर्यं** = ப்ரஹ்மசர்யம்,

**ப்³ரஹ்மசர்யம்**

**चित्तप्रसादकम्** = மனதிற்குத் தெளிவை உண்டுபண்ணும்.

**சித்தப்ரஸாத³கம்**

ஸ்திரீகளைப்பற்றி நினைப்பது 1, அவர்களைப்பார்ப்பது 2, அவர்களுடைய குணங்களையோ செய்கைகளையோ எடுத்துச் சொல்வது 3, அவர்களைப்பற்றி நன்றுயிருக்கிறுர்களென்ற எண்ணம் 4, அவர்களிடத்தில் பிரீதிவைப்பது 5, அவர்களுடன் தனிமையில் ஸம்பாஷிப்பது 6, அவர்களுடன் கூடவே இருப்பது, 7, சேர்க்கை, 8, ஆக இவ்வெட்டுவிதமாக மைதுனம் (ஸ்திரீ புமான்களின் ஸம்பந்தம்) இருப்பதை அறிந்திருக்கிறுர்கள். இவ்வெட்டுக்கும் நேர் எதிரிடையாக இருப்பதே சித்தத்தை தெளிவு படுத்தக்கூடிய பிரஹ்மசர்யம் என்பது. **(109-110)**

## अहिंसा वाङ्मनः कायैः प्राणिमात्राप्रपीडनम् ॥ १११ ॥

**அஹிம்ஸா வாங்மனঃ காயைঃ ப்ராணிமாத்ராப்ரபீட³னம் ॥ 111 ॥**

**वाङ्मनः कायैः** = வாக்கு, மனம், உடல் இந்த மூன்று

**வாங்மனঃ காயைঃ** கரணங்களாலும்,

**प्राणिमात्राप्रपीडनम्** = ஒரு பிராணியையும் துன்புறுத்தாமல் இருப்பது,

**ப்ராணிமாத்ராப்ரபீட³னம்**

**अहिंसा** = அஹிம்சையாகும்.

**அஹிம்ஸா**

வாக்கு, மனஸ், சரீரம், இவைகளைக்கொண்டு எந்த பிராணிக்கும் துன்பமுண்டாக்காமலிருப்பது அஹிம்ஸையாகும். **(111)**

## स्वात्मवत् सर्वभूतेषु कायेन मनसा गिरा ।
## अनुकम्पा दया सैव प्रोक्ता वेदान्तवेदिभिः ॥ ११२ ॥

**ஸ்வாத்மவத் ஸர்வபூ⁴தேஷு காயேன மனஸா கி³ரா ।**
**அனுகம்பா த³யா ஸைவ ப்ரோக்தா வேதா³ந்தவேதி³பி⁴ঃ ॥ 112 ॥**

**स्वात्मवत्** = தன்னிடத்தில்போல்,

**ஸ்வாத்மவத்**

**सर्वभूतेषु** = எல்லா பிராணிகளிடமும்,

**ஸர்வபூ⁴தேஷு**

| | | |
|---|---|---|
| **कायेन**<br>**காயேன** | = | உடலினுலும், |
| **मनसा**<br>**மனஸா** | = | மனதாலும், |
| **गिरा**<br>**கி³ரா** | = | வாக்காலும், |
| **अनुकम्पा**<br>**அனுகம்பா** | = | இரக்கம்கொள்வது (எதுவோ), |
| **सैव**<br>**ஸைவ** | = | அதுவே, |
| **दया**<br>**த³யா** | = | தயையாக, |
| **वेदान्तवेदिभिः**<br>**வேதா³ந்தவேதி³பி⁴:** | = | உபநிஷத்தை அறிந்தவர்களால், |
| **प्रोक्ता**<br>**ப்ரோக்தா** | = | சொல்லப்பட்டிருக்கிறது. |

தன்னைப்போலவே எல்லா பிராணிகளிடத்திலும் சரீரத்தினுலும் மனஸினுலும் வாக்கினுலும் இரக்கம்கொள்வதுதான் தயை என்று வேதாந்தம் அறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. **(112)**

## करणत्रितयेष्वेकरूपताऽवक्रता मता ॥ ११३ ॥

**கரணத்ரிதயேஷ்வேகரூபதா(அ)வக்ரதா மதா ॥ 113 ॥**

| | | |
|---|---|---|
| **करणत्रितयेषु**<br>**கரணத்ரிதயேஷு** | = | சரீரம், வாக்கு, மனம் என்ற முக்கரணங்களிலும், |
| **एकरूपता**<br>**ஏகரூபதா** | = | ஒரேமாதிரியாயிருப்பது, |
| **अवक्रता**<br>**அவக்ரதா** | = | கோணலில்லாமை (நேர்மை) என்று, |
| **मता**<br>**மதா** | = | எண்ணப்பட்டுள்ளது. |

மனோவாக்காயமாகிற மூன்று கரணங்களிலும் ஒரே தன்மையுடனிருப்பது அவக்ரதை (கோணல் இன்மை, ஆர்ஜவம்) என்று கருதப்படுகிறது. **(113)**

**ब्रह्मादिस्थावगन्तेषु वैराग्यं विषयेष्वनु ।**
**यथैव का विष्ठायां वैराग्यं तद्धि निर्मलम् ॥ ११४ ॥**

**ப்³ரஹ்மாதி³ஸ்தா²வக³ந்தேஷு வைராக்³யம் விஷயேஷ்வனு ।**
**யதை²வ கா விஷ்டா²யாம் வைராக்³யம் தத்³தி⁴ நிர்மலம் ॥ 114 ॥**

**यथैव का विष्ठायां** = காக்கைகளின மலத்தில்போலவே,
**யதை²வ கா விஷ்டா²யாம்**
**ब्रह्मादिस्थावगन्तेषु** = ப்ரஹ்மா முதல் ஸ்தாவரம வரையுள்ள,
**ப்³ரஹ்மாதி³ஸ்தா²வக³ந்தேஷு**
**विषयेषु** = விஷயங்களில்,
**விஷயேஷு**
**अनु वैराग्यं** = வெறுப்புத் தொடர்நதிருப்பது (எதுவோ),
**அனு வைராக்³யம்**
**तद्धि** = அதுதான்,
**தத்³தி⁴**
**निर्मलं** = சுத்தமான,
**நிர்மலம்**
**वैराग्यं** = வைராக்யமாகும்.
**வைராக்³யம்**

பிரஹ்மா முதல் ஸ்தாவரம் ஈறுக எல்லா விஷயங்களிலும், காக்கையின் விஷ்டையில் போலவே, வெறுப்புக்கொள்வது எதுவோ, அது தான் தோஷமற்ற வைராக்யம். **(114)**

**बाह्यं आभ्यन्तरं चेति द्विविधं शौचं उच्यते ।**
**मृज्जलाभ्यां कृतं शौचं बाह्यं शारीरकं स्मृतम् ॥ ११५ ॥**

**பா³ஹ்யம் ஆப்⁴யந்தரம் சேதி த்³விவித⁴ம் ஶௌசம் உச்யதே ।**
**ம்ருஜ்ஜலாப்⁴யாம் க்ருதம் ஶௌசம் பா³ஹ்யம் ஶாரீரகம் ஸ்ம்ருதம் ॥ 115 ॥**

**अज्ञानदूरीकरणं मानसं शौचं आन्तरम् ।**
**अन्तःशौचे स्थिते सम्यक् बाह्यं नावश्यकं नृणाम् ॥ ११६ ॥**

**அஜ்ஞானதூ³ரீகரணம் மானஸம் ஶௌசம் ஆந்தரம் ।**
**அந்தஃஶௌசே ஸ்தி²தே ஸம்யக் பா³ஹ்யம் நாவஶ்யகம் ந்ருணாம் ॥ 116 ॥**

**शौचं** = சௌசமானது,
**ஶௌசம்**

बाह्यं = வெளிப்பட்டது,
பா³ஹ்யம்

आभ्यन्तरं चेति = உள்பட்டது என்று,
ஆப்⁴யந்தரம் சேதி

द्विविधं = இரண்டுவிதமாக,
த்³விவித⁴ம்

उच्यते = சொல்லப்படுகிறது,
உச்யதே

मृज्जलाभ्यां = மண்ணுலும் தீர்த்தத்தாலும்,
ம்ருஜ்ஜலாப்⁴யாம்

कृतं = செய்யப்பட்ட,
க்ருதம்

शारीरकं = சரீரத்தை ஒட்டியதான,
ஶாரீரகம்

शौचं = சௌசமானது,
ஶௌசம்

बाह्यं = பாஹ்யம (வெளிப்படையானது) என்று,
பா³ஹ்யம்

स्मृतं = எண்ணப்பட்டுள்ளது.
ஸ்ம்ருதம்

अज्ञानदूरीकरणं = அக்ஞானத்தை விலக்குவது,
அஜ்ஞானதூ³ரீகரணம்

मानसं = மனதை யொட்டியதான,
மானஸம்

आन्तरं शौचं = உள்சௌசமாகும்,
ஆந்தரம் ஶௌசம்

सम्यक् = நன்ருக,
ஸம்யக்

अन्तःशौचे = உள்சௌசம்,
அந்தஃஶௌசே

स्थिते = இருந்தால்,
ஸ்தி²தே

नृणां = மனிதர்களுக்கு,
ந்ருணும்

| | | |
|---|---|---|
| **बाह्यं**<br>**பா³ஹ்யம்** | = | வெளிசுத்தம், |
| **न आवश्यकं**<br>**ந ஆவஶ்யகம்** | = | கட்டாயமில்லை. |

சௌசம் (சுத்தி) என்பது வெளிப்படையானது, உள்ளிருப்பது, என்று இருவிதமாகச சொல்லப்பட்டிருக்கிறது. மண்ணினுலும் ஜலத்தினுலும் சரீர ஸம்பந்தமாகச் செய்யப்படுவது வெளிப்படை சௌசம் என்று எண்ணப்படுகிறது. அறிவின்மையையே தூரவிலக்கி விடுவது மனஸ் ஸம்பந்தமான உள்சௌசம். உள்சௌசம் நன்கு இருந்து விட்டால் மனிதர்களுக்கு வெளிப்படை சௌசம் அவசியமில்லை.

**(115-116)**

**ध्यानपूजादिकं लोके द्रष्टर्येव करोति यः ।**
**पारमार्थिकधीहीनः स दम्भाचार उच्यते ।**
**पुंसः तथाऽनाचरणं अदम्भित्वं विदुर्बुधाः ॥ ११७ ॥**

**த்⁴யானபூஜாதி³கம் லோகே த்³ரஷ்டர்யேவ கரோதி யஃ ।**
**பாரமார்தி²கதீ⁴ஹீனஃ ஸ த³ம்பா⁴சார உச்யதே ।**
**பும்ஸஃ ததா²(அ)னாசரணம் அத³ம்பி⁴த்வம் விது³ர்பு³தா⁴ஃ ॥ 117 ॥**

| | | |
|---|---|---|
| **लोके**<br>**லோகே** | = | உலகில், |
| **यः**<br>**யஃ** | = | எவன், |
| **पारमार्थिकधीहीनः**<br>**பாரமார்தி²கதீ⁴ஹீனஃ** | = | உண்மைக் கருத்து இல்லாமல், |
| **द्रष्टरि एव**<br>**த்³ரஷ்டரி ஏவ** | = | பார்ககிறவர் இருக்கும்பொழுது மட்டுமே, |
| **ध्यानपूजादिकं**<br>**த்⁴யானபூஜாதி³கம்** | = | தியான பூஜை முதலியவற்றை, |
| **करोति**<br>**கரோதி** | = | செய்கிறுனே, |
| **सः**<br>**ஸ:** | = | அவன், |
| **दम्भाचारः**<br>**த³ம்பா⁴சார** | = | டம்பாசாரி என்று, |
| **उच्यते**<br>**உச்யதே** | = | சொல்லப்படுகிறன். |

**यत्न** = எதனல்,

**யத்ன**

**क्वचित्** = ஒரு இடத்திலும்,

**க்வசித்**

**स्वबन्धः** = தனக்கு பந்த மேற்படுவது,

**ஸ்வப³ந்த⁴:**

**मूढस्यापि** = முட்டாளுக்கும்,

**மூட⁴ஸ்யாபி**

**न अभिमतः** = இஷ்டமில்லாததோ,

**ந அபி⁴மத:**

**ततः** = அதனல்,

**தத:**

**मोक्षकाङ्क्षिभिः** = முக்தியை விரும்புபவர்களால்,

**மோக்ஷகாங்க்ஷிபி⁴:**

**निवृत्तिः** = நிவ்ருத்தியாகிற,

**நிவ்ருத்தி:**

**कर्मसंन्यासः** = கர்ம பரித்யாகம்,

**கர்மஸம்ந்யாஸ:**

**कर्तव्यः** = செய்யததக்கது.

**கர்தவ்ய:**

மூடனுக்குக்கூட எக்காலத்திலும் (எவ்விடத்திலும்) தனக்கு பந்தமேற்படுவது இஷ்டமாயிருக்காது ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் நிவிருத்தியாகிற கர்மஸன்யாஸமே செய்ய வேண்டியது. **(203)**

**न ज्ञानकर्मणोर्यस्मात् सहयोगस्तु युज्यते ।**
**तस्मात् त्याज्यं प्रयत्नेन कर्म ज्ञानेच्छुना ध्रुवम् ॥ २०४ ॥**

**ந ஜ்ஞானகர்மணேர்யஸ்மாத் ஸஹயோக³ஸ்து யுஜ்யதே ।**
**தஸ்மாத் த்யாஜ்யம் ப்ரயத்னேன கர்ம ஜ்ஞானேச்சு²ஞ த்⁴ருவம் ॥ 204 ॥**

**यस्मात्** = ஏதனல்,

**யஸ்மாத்**

**ज्ञानकर्मणोः** = ஞானத்திற்கும் கர்மாவிற்கும்,

**ஜ்ஞானகர்மணே:**

**सहयोगस्तु** = கூடசேர்க்கை,

**ஸஹயோக³ஸ்து**

| | | |
|---|---|---|
| **न युज्यते** | = | பொருந்தாதோ, |
| **ந யுஜ்யதே** | | |
| **तस्मात्** | = | அதனுல், |
| **தஸ்மாத்** | | |
| **ज्ञानेच्छुना** | = | ஞானத்தை விரும்புபவனுல், |
| **ஜ்ஞானேச்சு²ன** | | |
| **ध्रुवं** | = | நிச்சயமாக, |
| **த்⁴ருவம்** | | |
| **प्रयत्नेन** | = | முயற்சியுடன், |
| **ப்ரயத்னேன** | | |
| **कर्म** | = | கர்மா, |
| **கர்ம** | | |
| **त्याज्यं** | = | த்யாகம் செய்யத்தக்கது. |
| **த்யாஜ்யம்** | | |

ஞானமும் கர்மாவும் சேர்ந்திருக்காது என்பது பல காரணங்களால் விளக்கிக் காட்டப்பட்டது. அதினுல் ஞானத்தை இச்சிப்பவன் பிரயத்தினம் செய்து அவசியம் கர்மாவை தியாகம் செய்ய வேண்டும். **(204)**

**इष्टसाधनता बुद्ध्या गृहीतस्यापि वस्तुनः ।**
**विज्ञाय फल्गुतां पश्चात् कः पुनस्तत् प्रतीक्षते ॥ २०५ ॥**

**இஷ்டஸாத⁴னதா பு³த்³த்⁴யா க்³ருஹீதஸ்யாபி வஸ்துனः ।**
**விஜ்ஞாய ப²ல்கு³தாம் பஶ்சாத் கः புனஸ்தத் ப்ரதீக்ஷதே ॥ 205 ॥**

| | | |
|---|---|---|
| **इष्टसाधनता बुद्ध्या** | = | தனது விருப்பத்திற்கு ஸாதனம் என் |
| **இஷ்டஸாத⁴னதா பு³த்³த்⁴யா** | | எண்ணத்தால், |
| **गृहीतस्यापि** | = | ஸ்வீகரிக்கப்பட்டபோதிலும், |
| **க்³ருஹீதஸ்யாபி** | | |
| **पश्चात्** | = | பின்னுல், |
| **பஶ்சாத்** | | |
| **वस्तुनः** | = | அந்த வஸ்துவின், |
| **வஸ்துனः** | | |
| **फल्गुतां** | = | பிரயோஜனமற்ற தன்மையை, |
| **ப²ல்கு³தாம்** | | |
| **विज्ञाय** | = | அறிந்து (பின்), |
| **விஜ்ஞாய** | | |

**तत्** = அதை,

**தத்**

**कः पुनः** = எவன் தான்,

**க: புன:**

**प्रतीक्षते** = விரும்புவான்?

**ப்ரதீக்ஷதே**

நாம் விரும்பும் பலன் இந்த வஸ்துவால் கிடைக்கும் என்று தன்புத்தியால் எண்ணி அந்த வஸ்துவை ஸம்பாதித்த போதிலும் பின்னல் நன்கு ஆலோசித்துப் பார்த்ததில் அது ஸாரமற்றது, நிஷ்ப்ரயோஜனம், அதனல் கிடைக்கும் பலனும் அல்பமானது என்று ஒருவனுக்குத்தெரிந்து விட்டால் பிறகும் அதில் ஆசை கொள் வானு? ஸுகம் கிடைக்குமென்ற எண்ணத்துடன் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் செல்கி றுன். இந்த ஸுகம் மறைந்து விடுகிறது, துக்கம் கலந்தது என்பதை அநுபவத்தாலும் சாஸ்திரங்களாலும் தெரிந்து கொள்கிறுன். பின்னர் அவன் ப்ரவ்ருத்திமார்க்கத்தில் செல்வானு? **(205)**

(**அவதாரிகை**) இது வரை உபரதி என்ற வார்த்தைக்கு ஸன்யாஸம் என்றே அர்ததம் வைத்துககொண்டு சொன்னபோதிலும் இதை விட மேலாக முக்கியமான உபரதி ஒன்றிருக்கிறது என்பதைக் குறிப்பிடுகிறுர். அந்த உபரதிக்கு ஸன்யாஸம் அங்கமானதினல் தான் இதுவும் உபரதி என்று கௌணமாக கூறப்படுகிறது என்கிறுர்:

**उपरतिशब्दार्थो ह्युपरमणं पूर्वदृष्टवृत्तिभ्यः ।**
**सोऽयं मुख्यो गौणश्यति च वृच्या द्विरूपतां धत्ते ॥ २०६ ॥**

**உபரதிஶப்³தா³ர்தோ² ஹ்யுபரமணம் பூர்வத்³ருஷ்டவ்ருத்திப்⁴ய: ।**
**ஸோ(அ)யம் முக்²யோ கௌ³ணஶ்யதி ச வ்ருச்யா த்³விரூபதாம் த⁴த்தே ॥ 206 ॥**

**पूर्वदृष्टवृत्तिभ्यः** = முன்காணப்பட்ட விருத்திகளிலிருந்து,

**பூர்வத்³ருஷ்டவ்ருத்திப்⁴ய:**

**उपरमणं** = ஓய்வு பெறுதல்,

**உபரமணம்**

**उपरतिशब्दाथोः** = உபரதி எனனும் பதத்தின் பொருளாகும்,

**உபரதிஶப்³தா³தோ²:**

**सोऽयं** = அந்த இது (உபரதி),

**ஸோ(அ)யம்**

**मुख्यः** = முக்யமென்றும்,

**முக்²ய:**

**गौणश्यति** = கௌணமென்றும்,

**கௌ³ணஶ்யதி**

| | | |
|---|---|---|
| **वृच्या**<br>**வ்ருச்யா** | = | காரியத்தால், |
| **द्विरूपतां**<br>**த்³விரூபதாம்** | = | இருவிதமாக இருக்கும் தன்மையை, |
| **धत्ते**<br>**த⁴த்தே** | = | தரிக்கிறது. |

உபரதி என்ற சொல்லுக்கு ஓய்வுபெறுவது என்று பொருள். ஒரு காரியத்தைச் செய்து வந்தவன் அந்தக்காரியத்தை இனி செய்யாமல் ஒதுங்கிவிடுவது உபரதியாகும் இதுபோல் விஷய ஸுகததைத்தேடி ஆசையுடன் அனுபவித்து வருபவன் இதை விட்டு ஒதுங்கிவிடுவதும் உபரதியாகும். இதுவரை உலகவிஷயங்களைக்கண்டு மனதில் பலவிதமான விருத்திகள் ஏற்பட்டு வருவதைத்தடுத்து அம்மாதிரி விருத்திகள் ஏற்படாமல் செய்வது தான் இங்கு உபரதியாகும். இது காரியத்தைப் பொறுத்து முக்கியமென்றும் கௌணமென்றும் இருவிதமாகும். **(206)**

## वृत्तेर्दृश्यपरित्यागो मुख्यार्थ इति कथ्यते ।
## गौणार्थः कर्मसंन्यासः श्रुतेरङ्गतया मतः॥ २०७ ॥

**வ்ருத்தேர்த்³ருஶ்யபரித்யாகோ³ முக்²யார்த² இதி கத்²யதே ।**
**கௌ³ணார்த²ஃ கர்மஸம்ந்யாஸஃ ஶ்ருதேரங்க³தயா மதஃ ॥ 207 ॥**

| | | |
|---|---|---|
| **वृत्तेः**<br>**வ்ருத்தே:** | = | மனோவிருத்தியின், |
| **दृश्यपरित्यागः**<br>**த்³ருஶ்யபரித்யாக³ஃ** | = | அறியப்படும் விஷயத்தை ஒதுக்குவது, |
| **मुख्यार्थ इति**<br>**முக்²யார்த² இதி** | = | உபரதி என்ற சொல்லின் முக்கியமான அர்த்தமென்று, |
| **कथ्यते**<br>**கத்²யதே** | = | சொல்லப்படுகிறது, |
| **श्रुतेः**<br>**ஶ்ருதே** | = | சிரவணததிற்கு, |
| **अङ्गतया**<br>**அங்க³தயா** | = | அங்கமாக, |
| **मतः**<br>**மதஃ** | = | ஒப்புக்கொள்ளப்பட்ட, |
| **कर्मसंन्यासः**<br>**கர்மஸம்ந்யாஸஃ** | = | விதிபூர்வமாக கர்ம பரிதயாகமானது, |
| **गौणार्थः**<br>**கௌ³ணார்த²ஃ** | = | கௌணமான அர்த்தம். |

மனது விஷயவடிவமாகப் பரிணமமடைவதுதான் விருத்தி எனப்படும் இதில் விஷயவடிவத்தை நீக்குவதுதான் முக்யமான உபரதியாகும் மனதில் விருத்தியே ஏற்படக்கூடாது. அல்லது திருச்யவடிவமில்லாமல் ஆத்மாகாரமாக இருக்கலாம். சிரவணத்திற்கு அங்கமான கர்மஸந்யாஸமானது கௌணமான உபரதியாகும். விதிபூர்வமாக கர்மாக்களிலிருந்து ஒதுங்குவதால் இதுவும் உபரதி என்று சொல்லப் படுகிறது. (207)

**पुंसः प्रधानसिद्ध्यर्थमङ्गस्याश्रयणं ध्रुवम् ।**
**कर्तव्यमङ्गहीनं चेत्प्रधानं नैव सिध्यति ॥ २०८ ॥**

**பும்ஸꞏ ப்ரதா⁴னஸித்³த்⁴யர்த²மங்க³ஸ்யாஶ்ரயணம் த்⁴ருவம் ।**
**கர்தவ்யமங்க³ஹீனம் சேத்ப்ரதா⁴னம் நைவ ஸித்⁴யதி ॥ 208 ॥**

**पुंसः** **பும்ஸꞏ** = மனிதனுக்கு,

**प्रधानसिद्ध्यर्थं** **ப்ரதா⁴னஸித்³த்⁴யர்த²ம்** = பிரதானம் நிறைவேறுவதற்கு,

**ध्रुवम्** **த்⁴ருவம்** = நிச்சயமாக,

**अङ्गस्य आश्रयणं** **அங்க³ஸ்ய ஆஶ்ரயணம்** = அங்கத்தை ஆச்ரயிப்பது,

**कर्तव्यम्** **கர்தவ்யம்** = செய்யத்தகுந்தது,

**अङ्गहीनं चेत्** **அங்க³ஹீனம் சேத்** = அங்கம் இல்லாவிட்டால்,

**प्रधानं** **ப்ரதா⁴னம்** = பிரதானம்,

**नैव सिध्यति** **நைவ ஸித்⁴யதி** = நிறைவேறுது.

மனிதனுக்கு பிரதானமாயுள்ளது ஸித்திப்பதற்காக அங்கத்தையும் அவசியம் அனுஷ்டிக்கவேணடும். அங்கம் குறைந்திருந்தால் பிரதானம் ஸித்திக்கவே மாட் டாது. அங்கமான ஸந்யாஸத்தை ஸ்வீகரித்துக்கொண்டு சிரவணுதிகளையனுஷ்டித் தால் தான் பின்னல் மனோவிருத்திபரித்யாகரூபமான முக்ய உபரதி ஸித்திக்கும். (208)

**संन्यसेत्सुविरक्तः सन्निहामुत्रार्थतः सुखात् ।**
**अविरक्तस्य संन्यासो निष्फलोऽयाज्ययागवत् ॥ २०९ ॥**

**ஸம்ந்யஸேத்ஸுவிரக்தꞏ ஸன்னிஹாமுத்ரார்த²தꞏ ஸுகா²த் ।**
**அவிரக்தஸ்ய ஸம்ந்யாஸோ நிஷ்ப²லோ(அ)யாஜ்யயாக³வத் ॥ 209 ॥**

| | | |
|---|---|---|
| **इहामुत्रार्थत:** <br> **இஹாமுத்ரார்த²த:** | = | இவ்வுலகிலும் மேலுலகிலுமுள்ள விஷயத்திலிருந்து (உண்டாகும்), |
| **सुखात्** <br> **ஸுகா²த்** | = | ஸுகத்திலிருந்து, |
| **सुविरक्त: सन्** <br> **ஸுவிரக்த: ஸன்** | = | நன்கு வைராக்யமடைந்துகொண்டு, |
| **संन्यासेत्** <br> **ஸம்ந்யாஸேத்** | = | ஸந்யாஸம் செய்துகொள்ள வேண்டும், |
| **अविरक्तस्य** <br> **அவிரக்தஸ்ய** | = | வைராக்யமில்லாதவனின், |
| **संन्यास:** <br> **ஸம்ந்யாஸ:** | = | ஸந்யாஸமானது, |
| **अयाज्ययागवत्** <br> **அயாஜ்யயாக³வத்** | = | யாகம் செய்யத்தகாதவன் செய்யும் யாகம் போல, |
| **निष्फलं** <br> **நிஷ்ப²லம்** | = | பலனற்றது. |

இஹலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள விஷயங்களிலிருந்து கிடைக்கக் கூடிய ஸுகங்களில் தீவிர வைராக்யமுள்ளவன்தான் ஸன்யாஸம் செய்து கொள்ள வேண்டியது. வைராக்யமில்லாதவனுடைய ஸன்யாஸம், யாகம் செய்ய அதிகார மில்லாதவன் செய்யும் யாகத்தைப்போல, பலனற்றதேயாகும். **(209)**

**संन्यस्य तु यतिः कुर्यात्न पूर्वविषयस्मृतिम् ।**
**तां तां तत्स्मरणे तस्य जुगुप्सा जायते यतः ॥ २१० ॥**

**ஸம்ந்யஸ்ய து யதி: குர்யாத்ன பூர்வவிஷயஸ்ம்ருதிம் ।**
**தாம் தாம் தத்ஸ்மரணே தஸ்ய ஜுகு³ப்ஸா ஜாயதே யத: ॥ 210 ॥**

| | | |
|---|---|---|
| **संन्यस्य** <br> **ஸம்ந்யஸ்ய** | = | ஸந்யாஸம் செய்துகொண்டு, |
| **यति:** <br> **யதி:** | = | யதியானவர், |
| **तां तां** <br> **தாம் தாம்** | = | அந்தந்த, |
| **पूर्वविषयस्मृतिं** <br> **பூர்வவிஷயஸ்ம்ருதிம்** | = | முன் அனுபவித்த விஷயங்களின் நிஜனவை, |
| **न कुर्यात्** <br> **ந குர்யாத்** | = | செய்யக்கூடாது, |

**यत:** = ஏனெனில்,
**யத:**
**तत्स्मरणे** = அதை நினைவு படுத்திக்கொண்டபொழுது,
**தத்ஸ்மரணே**
**तस्य** = அவனுக்கு,
**தஸ்ய**
**जुगुप्सा** = ஜுகுபஸை (அருவறுப்பு),
**ஜுகு³ப்ஸா**
**जायते** = உண்டாகும்.
**ஜாயதே**

ஸந்யாஸம் செய்துகொண்டதற்குப்பிறகு ஏற்கனவே முன்னால் அநுபவித்த அந்தந்த விஷயங்களைப் பற்றிச் சிறிதும் நினைக்கக்கூடாது அதை நினைக்கும்போதே அதில் அருவறுப்பு உண்டாகும். **(210)**

**சிரத்தை**: -

(**அவதாரிகை**) சமாதிஷட்கத்தில் அடங்கிய 5 வது அம்சமான சிரத்தை என்பதைப்பற்றி சுருக்கமாக 8 சுலோகங்களில் விளக்குகிறார்: -

**गुरुवेदान्तवाक्येषु बुद्धिर्या निश्चयात्मिका ।**
**सत्यमित्येव सा श्रद्धा निदानं मुक्तिसिद्धये ॥ २११ ॥**

**கு³ருவேதா³ந்தவாக்யேஷு பு³த்³தி⁴ர்யா நிஶ்சயாத்மிகா ।**
**ஸத்யமித்யேவ ஸா ஶ்ரத்³தா⁴ நிதா³னம் முக்திஸித்³த⁴யே ॥ 211 ॥**

**गुरुवेदान्तवाक्येषु** = குருவின் வார்த்தைகளிலும் உபநிஷத்
**கு³ருவேதா³ந்தவாக்யேஷு** வாக்யங்களிலும்,
**सत्यमित्येव** = ஸத்யம்தான்,
**ஸத்யமித்யேவ**
**इति** = என்ற,
**இதி**
**निश्चयात्मिका** = உறுதியான,
**நிஶ்சயாத்மிகா**
**या बुद्धि:** = எந்த எண்ணமுண்டோ,
**யா பு³த்³தி⁴:**
**सा** = அது,
**ஸா**

**मुक्तिसिद्धये** = முக்திகிடைப்பதன் பொருட்டு,
**முக்திஸித்3த4யே**

**निदानं** = காரணமான,
**நிதா3னம்**

**श्रद्धा** = சிரத்தையாகும்.
**ஶ்ரத்3தா4**

குரு உபதேசிக்கும் வாக்கியங்களிலும் உபநிஷத் வாக்கியங்களிலும் ஸத்யம் தான் என்ற நிச்சயரூபமான எண்ணம்தான் சிரத்தை என்பது. இது மோக்ஷம் ஸித்திப்பதற்குக் காரணமாயுள்ளது. **(211)**

**श्रद्धावतामेव सतां पुमर्थः समीरितः सिध्यति नेतरेषाम् ।**
**उक्तं सुसूक्ष्मं परमार्थतत्त्वं श्रद्धत्स्व सोम्येति च वक्ति वेदः ॥ २१२ ॥**

**ஶ்ரத்3தா4வதாமேவ ஸதாம் புமர்த2:**
**ஸமீரித: ஸித்4யதி நேதரேஷாம் ।**
**உக்தம் ஸுஸூக்ஷ்மம் பரமார்த2தத்த்வம்**
**ஶ்ரத்3த4த்ஸ்வ ஸோம்யேதி ச வக்தி வேத3:॥ 212 ॥**

**श्रद्धावतां** = சிரத்தையுடன் கூடிய,
**ஶ்ரத்3தா4வதாம்**

**सतामेव** = ஸாதுக்களுக்குத்தான்,
**ஸதாமேவ**

**समीरितः** = சாஸ்திரத்தில் கூறப்பட்ட,
**ஸமீரித:**

**पुमर्थः** = புருஷார்த்தம்,
**புமர்த2:**

**सिध्यति** = ஸித்திக்கும்,
**ஸித்4யதி**

**इतरेषां** = மற்றவர்களுக்கு (சிரத்தையில்லாதவர்களுக்கு)
**இதரேஷாம்**

**न** = ஸித்திக்காது,
**ந**

**उक्तं** = உபதேசிக்கப்பட்ட,
**உக்தம்**

**परमार्थतत्वं** = ப்ரஹ்மதத்வம்,
**பரமார்த2தத்வம்**

**सुसूक्ष्मं** = மிகவும் ஸூக்ஷ்மமானது,

**ஸுஸூக்ஷ்மம்**

**सोम्य** = ஸோம்யா!

**ஸோம்ய**

**अद्धत्स्व** = நம்பு,

**அத்³த⁴த்ஸ்வ**

**इति** = என்று,

**இதி**

**वेदश्र** = வேதமும்,

**வேத³ஶ்ர**

**वक्ति** = சொல்கிறது.

**வக்தி**

சிரத்தையுள்ள ஸாதுக்களுக்குத்தான் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற புருஷார்த்தம் ஸித்திக்கும். மற்றவர்களுக்கு ஸித்திக்காது. சாஸ்திரத்தில் சொல்லப் பட்ட பிரஹ்மதத்வம் மிகவும் ஸூக்ஷ்மமானது. "ஸோம்ய, நம்பு" என்று சாந்தோக்ய உபநிஷத்தும் சிரத்தையைப்பற்றிச் சொல்கிறது. **(212)**

**श्रद्धाविहीनस्य तु न प्रवृत्तिः प्रवृत्तिशून्यस्य न साध्यसिद्धिः ।**
**अश्रद्धयैवाभिहताच सर्वे मज्जन्ति संसारमहासमुद्रे ॥ २१३ ॥**

**ஶ்ரத்³தா⁴விஹீனஸ்ய து ந ப்ரவ்ருத்திः**
**ப்ரவ்ருத்திஶூன்யஸ்ய ந ஸாத்⁴யஸித்³தி⁴ः ।**
**அஶ்ரத்³த⁴யைவாபி⁴ஹதாச ஸர்வே**
**மஞ்ஜந்தி ஸம்ஸாரமஹாஸமுத்³ரே ॥ 213 ॥**

**अद्धाविहीनस्य तु** = சிரத்தை இல்லாதவனுக்கோவெனில்,

**அத்³தா⁴விஹீனஸ்ய து**

**न प्रवृत्तिः** = ப்ரவ்ருத்தி ஏற்படாது,

**ந ப்ரவ்ருத்திः**

**प्रवृत्तिशून्यस्य** = ப்ரவ்ருத்தி இல்லாதவனுக்கு,

**ப்ரவ்ருத்திஶூன்யஸ்ய**

**न साध्यसिद्धिः** = ஸாதிக்கவேண்டிய காரியம் நிறைவேறுது,

**ந ஸாத்⁴யஸித்³தி⁴ः**

**सर्वे च** = எல்லோரும்,

**ஸர்வே ச**

**अश्रद्धयैव** = அச்ரத்தையிஞலேயே,

**அஶ்ரத்³த⁴யைவ**

**अभिहता:** = அடிபட்டவர்களாக,

**அபி⁴ஹதா꞉**

**संसारमहासमुद्रे** = ஸம்ஸாரமென்னும் பெரிய கடலில்,

**ஸம்ஸாரமஹாஸமுத்³ரே**

**मञ्जन्ति** = மூழ்குகிறுர்கள்.

**மஞ்ஜந்தி**

சிரத்தை (நம்பிக்கை) இல்லாதவன் காரியத்தில் பிரவர்த்திக்க மாட்டான். காரியம் செய்யாதவன் அதன் பலனை அடைய மாட்டான். ஸம்ஸாரஸாகரத்தைக் கடப்பதற்கு ஸாதனங்கள் இருந்தபோதிலும் இந்த ஸாதனத்தால் பலன் ஏற்படும் என்ற நம்பிக்கை இல்லாததால்தான் உலகில் எல்லாரும் தாண்ட முடியாமல் ஸம்ஸாரக் கடலிலேயே மூழ்கிறுர்கள். **(213)**

**दैवे च वेदे च गुरौ च मन्त्रे तीर्थे महात्मन्यपि भेषजे च ।**
**श्रद्धा भवत्यस्य यथा यथान्तः तथा तथा सिद्धिरुदेति पुंसाम् ॥ २१४ ॥**

**தை³வே ச வேதே³ ச கு³ரௌ ச மந்த்ரே**
**தீர்தே² மஹாத்மன்யபி பே⁴ஷஜே ச ।**
**ஶ்ரத்³தா⁴ ப⁴வத்யஸ்ய யதா² யதா²ந்த꞉**
**ததா² ததா² ஸித்³தி⁴ருதே³தி பும்ஸாம் ॥ 214 ॥**

**दैवे च** = தைவத்தினிடமும்,

**தை³வே ச**

**वेदे च** = வேதத்திலும்,

**வேதே³ ச**

**गुरौ च** = குருவினிடமும்,

**கு³ரௌ ச**

**मन्त्रे** = மந்திரத்திலும்,

**மந்த்ரே**

**तीर्थे** = புண்யதீர்த்தத்திலும்,

**தீர்தே²**

**महात्मन्यपि** = பெரியோரிடமும்,

**மஹாத்மன்யபி**

**भेषजे च** = மருந்திலும்,

**பே⁴ஷஜே ச**

**अस्य** = இவனுக்கு,

**அஸ்ய**

**अन्त:** = மனதில்,

**அந்த꞉**

| | | |
|---|---|---|
| **यथा यथा** | = | எவ்வளவுக்கெவ்வளவு, |
| **யதா² யதா²** | | |
| **श्रद्धा** | = | சிரத்தையானது, |
| **ஶ்ரத்³தா⁴** | | |
| **भवति** | = | ஏற்படுகிறதோ, |
| **ப⁴வதி** | | |
| **तथा तथा** | = | அவ்வளவுக்கவ்வளவு, |
| **ததா² ததா²** | | |
| **पुंसां** | = | மனிதர்களுக்கு, |
| **பும்ஸாம்** | | |
| **सिद्धिः** | = | காரியஸித்தி, |
| **ஸித்³தி⁴:** | | |
| **उदेति** | = | உண்டாகிறது. |
| **உதே³தி** | | |

தைவத்தினிடத்திலும், வேதத்திலும், குருவிடத்திலும், மந்திரத்திலும் புண்ய தீர்த்தத்திலும், பெரியோரிடத்திலும், மருந்திலும், மனிதனுக்கு எவ்வளவுக் கெவ்வ ளவு மனஸில் சிரத்தை இருக்கிறதோ. அவ்வளவுக்கவ்வளவு மனிதர்களுக்கு கார்ய ஸித்தியானது ஏற்படும் உலகில் எந்தக்காரியம் நிறைவேறுவதற்கும் முதலில் சிரத்தை அவசியம் இருக்கவேண்டும். **(214)**

## अस्तीत्येवोपलब्धव्यं वस्तु सद्भावनिश्चयात् ।
## सद्भावनिश्चयस्तस्य श्रद्धया शास्त्र सिद्धया ॥ २१५ ॥

**அஸ்தீத்யேவோபலப்³த⁴வ்யம் வஸ்து ஸத்³பா⁴வநிஶ்வயாத் ।**
**ஸத்³பா⁴வநிஶ்சயஸ்தஸ்ய ஶ்ரத்³த⁴யா ஶாஸ்த்ர ஸித்³த⁴யா ॥ 215 ॥**

| | | |
|---|---|---|
| **सद्भावनिश्चयात्** | = | இருக்கும் தன்மை உறுதியாஹல் தான், |
| **ஸத்³பா⁴வநிஶ்வயாத்** | | |
| **वस्तु** | = | வஸ்து, |
| **வஸ்து** | | |
| **अस्तीत्येव** | = | இருக்கிறது என்றே, |
| **அஸ்தீத்யேவ** | | |
| **उपलब्धव्यं** | = | அறியத்தக்கது, |
| **உபலப்³த⁴வ்யம்** | | |
| **शास्त्र सिद्धया** | = | சாஸ்திரத்தில் ஏற்பட்ட, |
| **ஶாஸ்த்ர ஸித்³த⁴யா** | | |
| **श्रद्धया** | = | சிரத்தையால், |
| **ஶ்ரத்³த⁴யா** | | |

**तस्य** = அந்தவஸ்துவின்,

**தஸ்ய**

**सद्भावनिश्चय:** = இருக்கும் தன்மையின் உறுதி ஏற்படும்.

**ஸத்³பா⁴வநிஸ்²சய:**

ப்ரஹ்மம் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது. ஆகையால் நாம் அதை நேரில் பார்த்து அது இருப்பதை தெரிந்துகொள்ள முடியாது. ஆனாலும் உபநிஷத்துக்கள் ப்ரஹ்மத்தைப்பற்றி விரிவாகப் பேசுகின்றன. இந்த உபநிஷத் வாக்யங்களில் ஒருவனுக்கு நம்பிக்கை ஏற்படுமேயானால் அவன் ஸந்தேஹமில்லாமல் ப்ரஹ்மம் இருப்பதை உறுதிப்படுத்திக்கொள்வான். பிறகு சிரவாதிகளால் ஸத்ரூபமாக ப்ரஹ்ம த்தை நேரில் தெரிந்து கொள்வான். **(215)**

**तस्मात् श्रद्धा सुसंपाद्या गुरुवेदान्तवाक्ययो: ।**
**मुमुक्षो: श्रद्दधानस्य फलं सिध्यति नान्यथा ॥ २१६ ॥**

**தஸ்மாத் ஸ்²ரத்³தா⁴ ஸுஸம்பாத்³யா கு³ருவேதா³ந்தவாக்யயோ: ।**
**முமுக்ஷோ: ஸ்²ரத்³த³தா⁴னஸ்ய ப²லம் ஸித்⁴யதி நான்யதா² ॥ 216 ॥**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**गुरुवेदान्तवाक्ययो:** = குருவின் வார்த்தையிலும் உபநிஷத்

**கு³ருவேதா³ந்தவாக்யயோ:** வாக்யங்களிலும்,

**श्रद्धा** = சிரத்தையானது,

**ஸ்²ரத்³தா⁴**

**सुसंपाद्या** = நன்கு ஸம்பாதிக்கத்தக்கது,

**ஸுஸம்பாத்³யா**

**श्रद्दधानस्य** = சிரத்தையுள்ள,

**ஸ்²ரத்³த³தா⁴னஸ்ய**

**मुमुक्षो:** = முமுக்ஷுவுக்கு,

**முமுக்ஷோ:**

**फलं** = பலன்,

**ப²லம்**

**सिध्यति** = கிடைக்கும்,

**ஸித்⁴யதி**

**अन्यथा** = வேறுவிதமாக,

**அன்யதா²**

**न** = கிடைக்காது.

**ந**

ஆகையால் குருவின் வாக்யத்திலும் வேதாந்த வாக்யத்திலும் சிரத்தை நன்கு ஸம்பாதிக்கப்படவேண்டும். மோக்ஷத்தில் ஆசையுள்ளபோதிலும் சிரத்தை இருந்தால் தான் பலன் ஸித்திக்கும் சிரத்தை இல்லாமல் போனால் பலன் கிடைக்காது. **(216)**

**यथार्थवादिता पुंसां श्रद्धाजननकारणम् ।**
**वेदस्येश्वरवाक्यत्वात् यथार्थत्वे न संशयः ॥ २१७ ॥**

**யதா²ர்த²வாதி³தா பும்ஸாம் ஶ்ரத்³தா⁴ஜனனகாரணம் ।**
**வேத³ஸ்யேஶ்வரவாக்யத்வாத் யதா²ர்த²த்வே ந ஸம்ஶய: ॥ 217 ॥**

**मुक्तस्येश्वररूपत्वात् गुरोर्वागपि तादृशी ।**
**तस्मात् तद्वाक्ययोः श्रद्धा सतां सिध्यति धीमताम् ॥ २१८ ॥**

**முக்தஸ்யேஶ்வரரூபத்வாத் கு³ரோர்வாக³பி தாத்³ருஶீ ।**
**தஸ்மாத் தத்³வாக்யயோ: ஶ்ரத்³தா⁴ ஸதாம் ஸித்⁴யதி தீ⁴மதாம் ॥ 218 ॥**

**यथार्थवादिता** = உண்மையே பேசும் தன்மை,
**யதா²ர்த²வாதி³தா**
**पुंसां** = மனிதர்களுக்கு,
**பும்ஸாம்**
**श्रद्धाजननकारणम्** = சிரத்தை உண்டாவதற்குக் காரணம்,
**ஶ்ரத்³தா⁴ஜனனகாரணம்**
**वेदस्य** = வேதம்,
**வேத³ஸ்ய**
**ईश्वरवाक्यत्वात्** = ஈசுவரனின் வாக்யமானதால்,
**ஈஶ்வரவாக்யத்வாத்**
**यथार्थत्वे** = உண்மைத்தன்மையில்,
**யதா²ர்த²த்வே**
**न संशयः** = ஸந்தேஹமில்லை.
**ந ஸம்ஶய:**

**मुक्तस्य** = முக்தன்,
**முக்தஸ்ய**
**ईश्वररूपत्वात्** = ஈசுவர ஸ்வரூபமாயிருப்பதால்,
**ஈஶ்வரரூபத்வாத்**
**गुरोः** = குருவின்,
**கு³ரோ:**

| | | |
|---|---|---|
| **वागपि** <br> **வாக³பி** | = | வார்த்தையும், |
| **तादृशी** <br> **தாத்³ருஶீ** | = | அவ்விதமானது (உண்மையானது), |
| **तस्मात्** <br> **தஸ்மாத்** | = | ஆகையால், |
| **तद्वाक्ययोः** <br> **தத்³வாக்யயோ:** | = | அந்த குருவேதாந்த வாக்கியங்களில், |
| **श्रद्धा** <br> **ஶ்ரத்³தா⁴** | = | சிரத்தையானது, |
| **धीमतां सतां** <br> **தீ⁴மதாம் ஸதாம்** | = | புத்தியுள்ள ஸாதுக்களுக்கு, |
| **सिध्यति** <br> **ஸித்⁴யதி** | = | உண்டாகிறது. |

விஷயம் எப்படியிருக்கிறதோ அப்படியே சொல்லும் தன்மை தான் மனிதர்களுக்கு சிரத்தையை உண்டுபண்ணக்காரணமாகும். வேதம் ஈசுவரனுடைய வாக்கியமாயிருப்பதால் உள்ளபடி தான் சொல்லு என்கிற அம்சத்தில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை.

ஸம்ஸாரபந்தத்திலிருந்து முக்தியடைந்திருக்கும் குருவும் ஈசுவர ஸ்வரூபமாகவேயிருப்பதால் அவருடைய வார்த்தையும் அதே மாதிரி ஸத்யம்தான். ஆகையால் குரு, வேதாந்தம் இருவர் வாக்யங்களிலும் தெளிந்த புத்தியுடைய ஸாதுக்களுக்கு சிரத்தை ஏற்படுகிறது. ஒரு மனிதன் உண்மையையே பேசி வருவானுகில் அவன் வார்த்தையில் ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும். பொய் பேசும் ஸ்வபாவமுள்ளவன் வார்த்தையை யாரும் நம்ப மாட்டார்கள். உண்மையே பேசி வருபவன் கூட ஏதாவது ஒரு சமயம் தன் நலத்தை உத்தேசித்து பொய் பேசும்படி நேரிடலாம். ஆனதால் மனிதனின் வார்த்தை எல்லாக்காலத்திலும் ஸத்தியம் தான் என்று தீர்மானிக்கமுடியாது. வேதமோ ஈசுவர வாக்யம். அவாப்த ஸமஸ்த காமனுன ஈசுவரனின் வாக்யம் எப்பொழுதும் உண்மைதான். ஞானியான குருவும் ஈசுவர ஸ்வரூபமாகி விட்ட படியால் குருவசனமும் ஈசுவர வாக்யம்தான். ஆகவே புத்திமான்களான ஸாதுக்கள் வேதவாக்கியத்திலும் குருவார்த்தையிலும் சிரத்தையே கொள்வார்கள். **(217-218)**

**ஸமாதானம்: -**

**(அவதாரிகை)** இதுவரை சிரத்தையைப்பற்றி சொல்லிவிட்டு இனி ஸமாதானம் என்பதின் லக்ஷணத்தைச் சொல்லுகிறுர்: -

**श्रुत्युक्तार्थावगाहाय विदुषा ज्ञेयवस्तुनि ।**
**चित्तस्य सम्यगाधानं समाधानमितीर्यते ॥ २१९ ॥**

**ஶ்ருத்யுக்தார்தா²வகா³ஹாய விது³ஷா ஜ்ஞேயவஸ்துனி ।**
**சித்தஸ்ய ஸம்யகா³தா⁴னம் ஸமாதா⁴னமிதீர்யதே ॥ 219 ॥**

**श्रुत्युक्तार्थावगाहाय** = உபநிஷத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை
**ஶ்ருத்யுக்தார்தா²வகா³ஹாய** நன்கு தெரிந்துகொள்வதற்காக,
**विदुषा** = புத்திமானால்,
**விது³ஷா**
**ज्ञेयवस्तुनि** = அறியவேண்டிய விஷயத்தில்,
**ஜ்ஞேயவஸ்துனி**
**चित्तस्य** = மனதை,
**சித்தஸ்ய**
**सम्यगाधानं** = நன்கு நிலை நிறுத்துவது,
**ஸம்யகா³தா⁴னம்**
**समाधानं** = ஸமாதானம்,
**ஸமாதா⁴னம்**
**इति** = என்று,
**இதி**
**ईर्यते** = சொல்லப்படுகிறது.
**ஈர்யதே**

உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷயத்தை நன்கு அறிந்து கொள்வதற்காக அறிய வேண்டிய வஸ்துவினிடத்தில் மனஸைச் செலுத்தி அதிலேயே நன்றாக நிறுத்தி வைப்பது ஸமாதானம் என்று சொல்லப்படுகிறது. உலகில் புதிதாக எந்த ஒரு விஷயத்தையும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் அந்த ஸமயத்தில் மனதை வேறு இடத்தில் போக விடாமல் தடுத்து அது ஒன்றிலேயே ஈடுபடுத்த வேண்டும். அப்பொழுது தான் நன்கு மனதில் பதியும் இப்படியிருக்க பரமஸூக்ஷ்மமான ப்ரஹ்ம வஸ்துவைப்பற்றிக் கேட்பானேன்? **(219)**

**चित्तस्य साध्यैकपरत्वमेव पुमर्थसिद्धेर्नियमेन कारणम् ।**
**नैवान्यथा सिध्यति साध्यमीषत्मनःप्रमादे विफलः प्रयत्नः॥ २२० ॥**

**சித்தஸ்ய ஸாத்⁴யைகபரத்வமேவ புமர்த²ஸித்³தே⁴ர்நியமேன காரணம் ।**
**நைவான்யதா² ஸித்⁴யதி ஸாத்⁴யமீஷத்மன: ப்ரமாதே³ விப²ல: ப்ரயத்ன: ॥ 220 ॥**

**चित्तस्य** = மனதிற்கு,
**சித்தஸ்ய**

| | | |
|---|---|---|
| **साध्यैकपरत्वमेव**<br>**ஸாத்4யைகபரத்வமேவ** | = | ஸாதிக்கவேண்டிய ஒன்றிலேயே ஈடுபட்டிருக்கும் தன்மைதான், |
| **पुमर्थसिद्धेः**<br>**புமர்த2ஸித்3தே4:** | = | புருஷார்த்த ஸித்திக்கு, |
| **नियमेन कारणम्**<br>**நியமேன காரணம்** | = | நிச்சயமாக காரணம், |
| **साध्यं**<br>**ஸாத்4யம்** | = | ஸாதிக்க வேண்டியது, |
| **अन्यथा**<br>**அன்யதா2** | = | இதைத்தவிற வேறு விதமாக, |
| **नैव सिध्यति**<br>**நைவ ஸித்4யதி** | = | ஒரு போதும் ஸித்திக்காது, |
| **ईषत्मनःप्रमादे**<br>**ஈஷத்மனꞏப்ரமாதே3** | = | மனதிற்குக் கொஞ்சம் கவனக்குறைவு ஏற்பட்டாலும், |
| **प्रयत्नः**<br>**ப்ரயத்னꞏ** | = | முயற்சி, |
| **विफलः**<br>**விப2லꞏ** | = | வீணாகிவிடும். |

புருஷார்த்தம் ஸித்திப்பதற்கு நியமமாக உள்ள காரணம் ஸாதிக்க வேண்டிய விஷயம் ஒன்றிலேயே மனம் குறிப்பாய் ஈடுபட்டிருப்பது தான் வேறு விதமிருந்தால் ஸாதிக்கப்பட வேண்டியது ஸித்திக்கவே ஸித்திக்காது. கொஞ்சம் மனஸ் பிசகினாலும் பிரயத்தினம் வீண் தான். **(220)**

**चित्तं च दृष्टिं करणं तथाऽन्यदेकत्र बध्नाति हि लक्ष्यभेत्ता ।**
**किंचित्प्रमादे सति लक्ष्यभेत्तुः वाणप्रयोगो विफलो यथा तथा ॥ २२१ ॥**

**சித்தம் ச த்3ருஷ்டிம் கரணம் ததா2(அ)ன்யதே3கத்ர**
**ப3த்4னாதி ஹி லக்ஷ்யபே4த்தா ।**
**கிஞ்சித்ப்ரமாதே3 ஸதி லக்ஷ்யபே4த்துꞏ**
**வாணப்ரயோகோ3 விப2லோ யதா2 ததா2 ॥ 221 ॥**

| | | |
|---|---|---|
| **लक्ष्यभेत्ता**<br>**லக்ஷ்யபே4த்தா** | = | குறிபார்த்து அடிப்பவன், |
| **चित्तं च**<br>**சித்தம் ச** | = | மனதையும், |
| **दृष्टिं**<br>**த்3ருஷ்டிம்** | = | பார்வையையும், |

| | | |
|---|---|---|
| **तथा** | = | அப்படியே, |
| **ததா²** | | |
| **अन्यत्** | = | வேறு, |
| **அன்யத்** | | |
| **करणं** | = | கருவியையும், |
| **கரணம்** | | |
| **एकत्र** | = | ஒரே இடத்தில் (குறியிலேயே), |
| **ஏகத்ர** | | |
| **बध्नाति हि** | = | கட்டுப்படுத்துகிறனல்லவா! |
| **ப³த்⁴நாதி ஹி** | | |
| **किंचित्प्रमादे सति** | = | கொஞ்சம் கவனக் குறைவு ஏற்பட்ட பொழுதும், |
| **கிஞ்சித்ப்ரமாதே³ ஸதி** | | |
| **लक्ष्यभेत्तु:** | = | குறியை அடிப்பவனின், |
| **லக்ஷ்யபே⁴த்து:** | | |
| **वाणप्रयोगो:** | = | பாணப்ரயோகம், |
| **வாணப்ரயோகோ³:** | | |
| **यथा** | = | எப்படி, |
| **யதா²** | | |
| **विफल:** | = | வீணுகுமோ, |
| **விப²ல:** | | |
| **तथा** | = | அப்படி. |
| **ததா²** | | |

குறி வைத்துள்ளதை அடிப்பவன் தன் மனஸ், பார்வை, மற்ற கருவி எல்லாவற்றையும் ஒரே இடத்தில் ஈடு படுத்துகிறனல்லவா? குறியை அடிப்பவனுக்கு கொஞ்சம் பிசகு ஏற்பட்டு விட்டாலும் அம்பை பிரயோகித்தது வீணுகப்போய் விடுகிறது. அதாவது, அம்பு குறியை அடிப்பதில்லை. இதுபோல் மனஸ் ஸமாதானமில்லாவிட்டால் ப்ரஹ்ம வஸ்துவை அறிந்துகொள்ள முடியாது. **(221)**

**सिद्धेश्चित्तसमाधानं असाधारणकारणम् ।**
**यतस्ततो मुमुक्षूणां भवितव्यं सदामुना ॥ २२२ ॥**

**ஸித்³தே⁴ஶ்சித்தஸமாதா⁴னம் அஸாதா⁴ரணகாரணம் ।**
**யதஸ்ததோ முமுக்ஷூணும் ப⁴விதவ்யம் ஸதா³முனு ॥ 222 ॥**

| | | |
|---|---|---|
| **यत:** | = | எதனுல், |
| **யத:** | | |
| **सिद्धे:** | = | காரியஸித்திக்கு, |
| **ஸித்³தே⁴:** | | |

| | | |
|---|---|---|
| **चित्तसमाधानं**<br>**சித்தஸமாதா⁴னம்** | = | மனதின் ஒரு நிலையானது, |
| **असाधारणकारणं**<br>**அஸாதா⁴ரணகாரணம்** | = | முக்யமான காரணமோ, |
| **ततः**<br>**தத꞉** | = | அதனால், |
| **मुमुक्षूणां**<br>**முமுக்ஷூணும்** | = | மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்களுக்கு, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **अमुना भवितव्यं**<br>**அமுனு ப⁴விதவ்யம்** | = | இது (சித்தஸமாதானம்) இருக்க வேண்டும். |

சித்தத்தின் ஸமாதானம் பலன் ஸித்திப்பதற்கு இன்றியமையாத காரணமாக இருக்கிறபடியால், மோக்ஷ இச்சையுள்ளவர்களுக்கு இது எப்பொழுதும் இருக்க வேண்டும். **(222)**

**अत्यन्ततीव्रवैराग्यं फललिप्सा महत्तरा ।**
**तदेतदुभयं विद्यात् समाधानस्य कारणम् ॥ २२३ ॥**

**அத்யந்ததீத்ரவைராக்³யம் ப²லலிப்ஸா மஹத்தரா ।**
**ததே³தது³ப⁴யம் வித்³யாத் ஸமாதா⁴னஸ்ய காரணம் ॥ 223 ॥**

| | | |
|---|---|---|
| **अत्यन्ततीव्रवैराग्यं**<br>**அத்யந்ததீத்ரவைராக்³யம்** | = | மிகவும் தீவ்ரமான வைராக்யமும், |
| **महत्तरा**<br>**மஹத்தரா** | = | மிகவும் அதிகமான, |
| **फललिप्सा**<br>**ப²லலிப்ஸா** | = | பலனை அடைவதில் ஆவலும், |
| **तदेतत् उभयं**<br>**ததே³தத் உப⁴யம்** | = | அந்த இவ்விரண்டும், |
| **समाधानस्य**<br>**ஸமாதா⁴னஸ்ய** | = | சித்த ஸமாதானத்திற்கு, |
| **कारणं**<br>**காரணம்** | = | காரணமாக, |
| **विद्यात्**<br>**வித்³யாத்** | = | அறியத்தக்கது. |

எல்லை கடந்த தீவிரமான வைராக்யம், பலனை யடைய வேண்டு மென்றமிக அதிகமான ஆவல், ஆக இவ்விரண்டும் சித்த ஸமாதானத்திற்குக் காரணமாகும். **(223)**

**(அவதாரிகை)** இவ்விதமாக சமாதி ஷட்க மென்ற 3 வது ஸாதனத்தில் அடங்கிய சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, ஸமாதானம், இவைகளின் லக்ஷணத்தையும் அவசியத் தன்மையையும் தனித் தனியே எடுத்துக் காட்டி விட்டு, இப்பொழுது இவ்வாறும் சேர்ந்து மோக்ஷத்திற்குக் கொண்டு விடக்கூடிய ஸாதனங் களுக்குள் அந்தரங்கமான ஸாதனமாகு மென்பதை 3 சுலோகங்களால் சொல்கிறார்: -

**बहिरङ्गं श्रुतिः प्राह ब्रह्मचर्यादि मुक्तये ।**
**शमादिषट्कमेवैतदन्तरङ्गं विदुर्बुधाः ॥ २२४ ॥**

**ப³ஹிரங்க³ம் ஶ்ருதிः ப்ராஹ ப்³ரஹ்மசர்யாதி³ முக்தயே ।**
**ஶமாதி³ஷட்கமேவைதத³ந்தரங்க³ம் விது³ர்பு³தா⁴ः ॥ 224 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्मचर्यादि** ப்³ரஹ்மசர்யாதி³ | = | ப்ரஹ்மசர்யம் முதலானவற்றை, |
| **मुक्तये** முக்தயே | = | முக்தியின் பொருட்டு, |
| **बहिरङ्गं** ப³ஹிரங்க³ம் | = | வெளிப்படையான ஸாதனமாக, |
| **श्रुतिः** ஶ்ருதிः | = | வேதம், |
| **प्राह** ப்ராஹ | = | சொல்கிறது, |
| **एतत्** ஏதத் | = | இந்த, |
| **शमादिषट्कमेव** ஶமாதி³ஷட்கமேவ | = | சமம் முதலான ஆறையே, |
| **अन्तरङ्गं** அந்தரங்க³ம் | = | அந்தரங்க ஸாதனமாக, |
| **बुधाः** பு³தா⁴ः | = | வித்வான்கள், |
| **विदुः** விது³ः | = | தெரிந்திருக்கிறார்கள். |

பிரஹ்மசர்யம் முதலியது (105, 106, 107 சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கும் அம்சங்கள்) மோக்ஷத்திற்கு வெளி அங்கமென்று வேதம் சொல்கிறது. இந்த சமம்

முதலான ஆறுதான் மோக்ஷத்திற்கு அந்தரங்கம் என்று அறிவாளிகள் அறிந்திருக்கிறுர்கள். **(224)**

**अन्तरङ्गं हि बलवत् बहिरङ्गात् यतस्ततः।**
**शमादिषट्कं जिज्ञासोः अवश्यं भाव्यमान्तरम् ॥ २२५ ॥**

**அந்தரங்க³ம் ஹி ப³லவத் ப³ஹிரங்கா³த் யதஸ்தத꞉ ।**
**ஶமாதி³ஷட்கம் ஜிஜ்ஞாஸோ꞉ அவஶ்யம் பா⁴வ்யமாந்தரம் ॥ 225 ॥**

**यतः** = எதனுல்,
**யத꞉**
**बहिरङ्गात्** = பஹிரங்கத்தைக்காட்டிலும்,
**ப³ஹிரங்கா³த்**
**अन्तरङ्गं** = அந்தரங்கம்,
**அந்தரங்க³ம்**
**बलवत्** = பலமுள்ளதோ,
**ப³லவத்**
**ततः** = ஆகையால்,
**தத꞉**
**आन्तरं** = அந்தரங்க ஸாதனமான,
**ஆந்தரம்**
**शमादिषट्कं** = சமம் முதலான ஆறும்,
**ஶமாதி³ஷட்கம்**
**जिज्ञासोः** = ப்ரஹ்மத்தை அறியவிரும்புபவனுக்கு,
**ஜிஜ்ஞாஸோ꞉**
**अवश्यं भाव्यं** = கட்டாயம் இருக்க வேண்டும்.
**அவஶ்யம் பா⁴வ்யம்**

அந்தரங்கம் வெளியங்கத்தை விட பலமுள்ளது என்பது பிரஸித்தமானதிஞல் பிரஹ்மத்தையறிய இச்சைப் படுபவருக்கு உள் ஸாதனமான சமாதி ஆறும் அவசியம் இருந்து தீர வேண்டும். **(225)**

**अन्तरङ्गविहीनस्य कृतश्रवणकोटयः ।**
**न फलन्ति यथा योधुः अधीरस्यास्त्रसंपदः ॥ २२६ ॥**

**அந்தரங்க³விஹீனஸ்ய க்ருதஶ்ரவணகோடய꞉ ।**
**ந ப²லந்தி யதா² யோது⁴꞉ அதீ⁴ரஸ்யாஸ்த்ரஸம்பத³꞉ ॥ 226 ॥**

**अधीरस्य** = தைர்யமில்லாத,

**அதீ⁴ரஸ்ய**

**योधुः** = யுத்தம் செய்கிறவனுக்கு,

**யோது⁴ঃ**

**यथा अस्त्रसंपदः** = ஏராளமான அஸ்திரங்கள் எப்படியோ

**யதா² அஸ்த்ரஸம்பத³ঃ** (அப்படியே),

**अन्तरङ्गविहीनस्य** = அந்தரங்க ஸாதனமில்லாதவனுக்கு,

**அந்தரங்க³விஹீனஸ்ய**

**कृतश्रवणकोटयः** = கோடித்தடவை செய்யப்பட்ட சிரவணங்களும்,

**க்ருதஶ்ரவணகோடயঃ**

**न फलन्ति** = பலனைத்தருகிறதில்லை.

**ந ப²லந்தி**

மனதில் தைர்ய மில்லாமல் யுத்தம் செய்கிறவனுக்கு அஸ்திர ஸம்பத்துக்கள் (ஏராளமாக ஆயுதங்கள் இருந்தும்) எப்படி பிரயோஜனப்படாதோ, அப்படியேதான் சமம் முதலான உள் ஸாதனங்களில்லாதவனுக்கு கோடி முறை வேதாந்த சிரவணம் செய்தாலும் பிரயோஜனப்படாது. **(226)**

**முமுக்ஷுத்வம்: -**

**(அவதாரிகை)** வேதாந்த விசாரத்தில் அதிகாரம் பெற்றவனுக்கு அவசியம் இருக்க வேண்டிய நான்கு ஸாதனங்களில் விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், இம்மூன்றையும் நிர்வசனம் செய்து விட்டு, நான்காவது ஸாதனமாகிய முமுக்ஷுத்வம், (மோக்ஷத்தில் இச்சை) என்பதைப் பற்றி 227 முதல் 251 முடிய 25 சுலோகங்களில் எடுத்துச் சொல்கிறார்: -

**ब्रह्मात्मैकत्वविज्ञानात् यद्विद्वान् मोक्तुमिच्छति ।**
**संसारपाशबन्धं तत् मुमुक्षुत्वं निगद्यते ॥ २२७ ॥**

**ப்³ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞானாத் யத்³வித்³வான் மோக்துமிச்ச²தி ।**
**ஸம்ஸாரபாஶப³ந்த⁴ம் தத் முமுக்ஷுத்வம் நிக³த்³யதே ॥ 227 ॥**

**ब्रह्मात्मैकत्वविज्ञानात्** = ப்ரஹ்மமும் ஆத்மாவும், ஒன்று என்பதை

**ப்³ரஹ்மாத்மைகத்வவிஜ்ஞானாத்** அறிவதனால்,

**विद्वान्** = வித்வான்,

**வித்³வான்**

**संसारपाशबन्धं** = ஸம்ஸாரமென்னும் பாசக்கட்டை,

**ஸம்ஸாரபாஶப³ந்த⁴ம்**

| | | |
|---|---|---|
| **मोक्तुं**<br>**மோக்தும்** | = | அவிழ்த்துவிடுவதற்கு, |
| **इच्छति यत्**<br>**இச்ச²தி யத்** | = | விரும்புகிறுன் என்பது எதுவோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **मुमुक्षुत्वं**<br>**முமுக்ஷுத்வம்** | = | முமுக்ஷுத்வமாக, |
| **निगद्यते**<br>**நிக³த்³யதே** | = | சொல்லப்படுகிறது. |

பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று என்ற ஞானத்தினால் வித்வான் ஸம்ஸாரமாகிற கயிற்றினால் ஏற்பட்டிருக்கும் கட்டிலிருந்து விடுபட விரும்புவது முமுக்ஷுத்வம், என்று சொல்லப்படுகிறது. **(227)**

**साधनानां तु सर्वेषां मुमुक्षा मूलकारणम् ।**
**अनिच्छोः अप्रवृत्तस्य क श्रुतिः क नु तत्फलम् ॥ २२८ ॥**

**ஸாத⁴னானாம் து ஸர்வேஷாம் முமுக்ஷா மூலகாரணம் ।**
**அனிச்சோ²: அப்ரவ்ருத்தஸ்ய க ஶ்ருதிः க நு தத்ப²லம் ॥ 228 ॥**

| | | |
|---|---|---|
| **सर्वेषां साधनानां**<br>**ஸர்வேஷாம் ஸாத⁴னானாம்** | = | எல்லா ஸாதனங்களுக்குள்ளும், |
| **मुमुक्षा**<br>**முமுக்ஷா** | = | முமுக்ஷையானது, |
| **मूलकारणम्**<br>**மூலகாரணம்** | = | ஆதிகாரணம், |
| **अनिच्छोः**<br>**அனிச்சோ²:** | = | இச்சை இல்லாதவனுயும், |
| **अप्रवृत्तस्य**<br>**அப்ரவ்ருத்தஸ்ய** | = | பிரயத்னம் செய்யாதவனாயுமுள்ள மனிதனுக்கு, |
| **क श्रुतिः**<br>**க ஶ்ருதிः** | = | சிரவணம் எங்கே? |
| **तत्फलम् नु क**<br>**தத்ப²லம் நு க** | = | அதன் பலன்தான் எங்கே? |

எல்லா ஸாதனங்களுக்கும் இந்த முமுக்ஷையே மூலகாரணம். ஏனெனில் முக்தியில் ஆசையுள்ளவன் தான் அதன் ஸாதனமான சிரவணுதிகளைக் கைக்கொள்வான் அதன் மூலம் அவனுக்கு பலன் கிடைக்கும். மோக்ஷமடைவதில்

ஒருவனுக்கு ஆசையே இல்லா விட்டால் அவன் பிரயத்னம் செய்ய மாட்டான், பலனும் கிடைக்காது. **(228)**

**तीव्र मध्यममन्दातिमन्दभेदात् चतुर्विधा ।**
**मुमुक्षा तत्प्रकारोऽपि कीर्त्यते श्रूयतां बुधैः ॥ २२९ ॥**

**தீவ்ர மத்⁴யமமந்தா³திமந்த³பே⁴தா³த் சதுர்விதா⁴ ।**
**முமுக்ஷா தத்ப்ரகாரோ(அ)பி கீர்த்யதே ஶ்ரூயதாம் பு³தை⁴: ॥ 229 ॥**

**मुमुक्षा** = முமுக்ஷையானது,
**முமுக்ஷா**
**तीव्र मध्यम-मन्दाति-मन्दभेदात्**= தீவ்ரம், மத்யமம், மந்தம், அதிமந்தம்
**தீவ்ர மத்⁴யமமந்தா³திமந்த³பே⁴தா³த்** என்ற பேதத்தால்,
**चतुर्विधा** = நான்குவிதம்,
**சதுர்விதா⁴**
**तत्प्रकारोऽपि** = அதன் ப்ரகாரம்,
**தத்ப்ரகாரோ(அ)பி**
**कीर्त्यते** = சொல்லப்படுகிறது,
**கீர்த்யதே**
**बुधैः** = புத்திமான்களால்,
**பு³தை⁴:**
**श्रूयतां** = கேட்கப்படட்டும்.
**ஶ்ரூயதாம்**

அந்த முமுக்ஷை தீவிரம், மத்யமம், மந்தம், அதிடந்தம், என்று நான்கு விதமாகும். அவை பற்றி அடுத்த சுலோகங்களில் சொல்லப்படுகிறது. **(229)**

**तापैस्त्रिभिः नित्यमनेकरूपैः संतप्यमानः क्षुभितान्तरात्मा ।**
**परिग्रहं सर्वमनर्थ बुद्धया जहाति सा तीव्रतरा मुमुक्षा ॥ २३० ॥**

**தாபைஸ்த்ரிபி⁴: நித்யமனேகரூபை: ஸந்தப்யமான: க்ஷுபி⁴தாந்தராத்மா ।**
**பரிக்³ரஹம் ஸர்வமனர்த² பு³த்³த⁴யா ஜஹாதி ஸா தீவ்ரதரா முமுக்ஷா ॥ 230 ॥**

**अनेकरूपैः** = பலவிதமாக உள்ள,
**அனேகரூபை:**
**त्रिभिः तापैः** = மூன்று தாபங்களால்,
**ஸ்த்ரிபி⁴: தாபை:**

**नित्य** = எப்பொழுதும்,

**நித்ய**

**संतप्यमान:** = தபிக்கப்படுகிறவனுய்,

**ஸந்தப்யமானः**

**क्षुभितान्तरात्मा** = கலக்கமடைந்த மனமுள்ளவனுய்,

**க்ஷுபி⁴தாந்தராத்மா**

**अनर्थ बुद्धया** = துன்பம் தரும் என்ற எண்ணத்தால்,

**அனர்த² பு³த்³த⁴யா**

**सर्वं परिग्रहं** = தன்னுடையதாக சேகரித்துக் கொண்ட

**ஸர்வம் பரிக்³ரஹம்** எல்லா வஸ்துவையும்,

**जहाति** = விட்டுவிடுகிறான்,

**ஜஹாதி**

**सा** = அது,

**ஸா**

**तीव्रतरा** = மிகத்தீவ்ரமான,

**ஸா தீவ்ரதரா**

**मुमुक्षा** = முமுக்ஷையாகும்.

**முமுக்ஷா**

ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என தாபங்கள் மூன்றுவிதம். வற்றில் ஒவ்வொன்றும் எத்தனையோ விதமாக மனிதனை எப்பொழுதும் துன்புறுத்து கிறது. இந்த தாபத்தைத் தாங்க மாட்டாமல் ஒருவன் மனம் சலங்கியவனுய், இதுவரை தன்னுடையதாக சேகரித்துள்ள எல்லா வஸ்துக்களும் தான் இந்த தாபத்தி ற்குக் காரணமென எண்ணி எப்பொழுது அவற்றை எல்லாம் த்யாகம் செய்து விடுகிறனே அப்பொழுது அவனுக்கு தீவ்ரமான முமுக்ஷை இருப்பதாக தீர்மானிக்க லாம் அவனை மோக்ஷ வழியில் செல்வதை யாரும் தடுக்க முடியாது. **(230)**

**तापत्रयं तीव्रमवेक्ष्य वस्तु दृष्ट्वा कलत्रं तनयान् विहातुम् ।**
**मध्ये द्वयो: लोडनमात्मनो यत्सैषा मता माध्यमिकी मुमुक्षा ॥ २३१ ॥**

**தாபத்ரயம் தீவ்ரமவேக்ஷ்ய வஸ்து**
**த்³ருஷ்ட்வா கலத்ரம் தனயான் விஹாதும் ।**
**மத்⁴யே த்³வயோः லோட³னமாத்மனே யத்**
**ஸைஷா மதா மாத்⁴யமிகீ முமுக்ஷா ॥ 231 ॥**

**तापत्रयं** = மூன்று தாபமும்,

**தாபத்ரயம்**

**तीव्रं** = கடுமையாயிருப்பதை,

**தீவ்ரம்**

| | | |
|---|---|---|
| **अवेक्ष्य** **அவேக்ஷ்ய** | = | நன்கு கவனித்து, |
| **वस्तु** **வஸ்து** | = | வஸிப்பதற்கு, |
| **कलत्रं** **கலத்ரம்** | = | மனைவியையும், |
| **तनयान्** **தனயான்** | = | பிள்ளைகளையும், |
| **विहातुं** **விஹாதும்** | = | விடுவதற்கு, |
| **दृष्ट्वा** **த்³ருஷ்ட்வா** | = | ஆலோசித்து, |
| **द्वयोमध्ये** **த்³வயோமத்⁴யே** | = | இரண்டிற்கும் நடுவில், |
| **आत्मनो लोडनं यत्** **ஆத்மனோ லோட³னம் யத்** | = | மனது ஊசலாடுவது எதுவோ, |
| **सा एषा** **ஸா ஏஷா** | = | அந்த இது, |
| **माध्यमिकी मुमुक्षा** **மாத்⁴யமிகீ முமுக்ஷா** | = | மத்யமமுமுக்ஷையாக, |
| **मता** **மதா** | = | கருதப்பட்டிருக்கிறது. |

மூன்றுவித தாபங்களும் மிகக்கடுமையாக தன்னைத் துன்புறுத்தி வருவதை எண்ணிப் பார்க்கிறன். இந்தத் தாபங்களை விலக்க வேண்டு மென்ற எண்ணம் தோன்றுகிறது. தன் மனைவி, தனயன், பொருள், இவையே தாபத்திற்குக் காரணம் என்று தோன்றி ஒருசமயம் இவைகளை தியாகம் செய்து விடலாமா என்றும் தோன்றுகிறது. ஆனல் முன் சுலோகத்தில் சொல்லப்பட்டவனுக்குப் போல் தைர்ய மில்லாததால் தயங்குகிறன். இவ்வாறு ஸம்ஸார வாழ்க்கையில் விருப்பமுமில்லா மல் வெறுப்புமில்லாமல் நடுவில் மனம் ஊசலாடிக் கொண்டிருப்பது மத்யம முமு க்ஷையாகும். **(231)**

**मोक्षस्य कालोऽस्ति किमद्य मे त्वरा भुक्त्वैव भोगान् क्रुतसर्वकार्यः ।**
**मुक्त्यै यतिष्येऽहमति बुद्धिरेषैव मन्दा कथिता मुमुक्षा ॥ २३२ ॥**

**மோக்ஷஸ்ய காலோ(அ)ஸ்தி கிமத்³ய மே த்வரா**
**பு⁴க்த்வைவ போ⁴கா³ன் க்ருதஸர்வகார்ய: ।**
**முக்த்யை யதிஷ்யே(அ)ஹமதி பு³த்³தி⁴ரேஷைவ**
**மந்தா³ கதி²தா முமுக்ஷா ॥ 232 ॥**

| | | |
|---|---|---|
| **मोक्षस्य** | = | மோக்ஷத்திற்கு, |
| **மோக்ஷஸ்ய** | | |
| **काल:** | = | காலம், |
| **காலः** | | |
| **अस्ति** | = | (பின்னல்) இருக்கிறது, |
| **அஸ்தி** | | |
| **अद्य** | = | இப்பொழுது, |
| **அத்³ய** | | |
| **मे** | = | எனக்கு, |
| **மே** | | |
| **त्वरा किम्** | = | அவஸரம் ஏன்? |
| **த்வரா கிம்** | | |
| **क्रुतसर्वकार्य:** | = | எல்லா காரியங்களையும் செய்தவனுக, |
| **க்ருதஸர்வகார்யः** | | |
| **भोगान्** | = | விஷய ஸுகங்களை, |
| **போ⁴கா³ன்** | | |
| **भुक्त्वैव** | = | அனுபவித்துவிட்டுத்தான், |
| **பு⁴க்த்வைவ** | | |
| **अथ** | = | பிறகு, |
| **அத²** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **मुक्त्यै** | = | முத்தியின் பொருட்டு, |
| **முக்த்யை** | | |
| **यतिष्ये** | = | முயற்சிக்கப்போகிறேன், |
| **யதிஷ்யே** | | |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **बुद्धि:** | = | எண்ணம் (எதுவோ), |
| **பு³த்³தி⁴:** | | |
| **एषैव** | = | இதுதான், |
| **ஏஷைவ** | | |
| **मन्दा** | = | மந்தமான, |
| **மந்தா³** | | |
| **मुमुक्षा** | = | முமுக்ஷையாக, |
| **முமுக்ஷா** | | |

**कथिता** = சொல்லப்பட்டிருக்கிறது.

**கதி²தா**

மோக்ஷமடைவதற்கு வேண்டிய முயற்சிகளை எல்லாம் ஆயுளின் கடைசி காலத்தில் தான் செய்ய வேண்டும். அதற்கு இப்போது என்ன அவஸரம்? எனக்கு என்ன வயதாகி விட்டதா! வாழ்க்கையில் கிடைக்கும் ஸுகங்களை யெல்லாம் நன்ருக அனுபவித்து விட்டு செய்ய வேண்டிய காரியங்களை யெல்லாம் பாக்கி யன்னியில் பூர்த்தி செய்து விட்டு பின்னுல் ஸாவகாசமாக ஒரு தொந்தரவுமில்லா மல் முக்திக்கு வேண்டிய பிரயத்னங்களைச் செய்தால் போதுமானது என்று நினைப் பது மந்தமான முழுக்ஷை யாகும். **(232)**

## मार्गे प्रयातुर्मणिलाभवन्मे लभ्येत मोक्षो यदि तर्हि धन्यः ।
## इत्याशया मूढधियां मतिर्या सैषाऽतिमन्दाऽभिमता मुमुक्षा ॥ २३३ ॥

**மார்கே³ ப்ரயாதுர்மணிலாப⁴வன்மே**
**லப்⁴யேத மோக்ஷோ யதி³ தர்ஹி த⁴ன்யঃ ।**
**இத்யாஶயா மூட⁴தி⁴யாம் மதிர்யா**
**ஸைஷா(அ)திமந்தா³(அ)பி⁴மதா முமுக்ஷா ॥ 233 ॥**

**मार्गे** = வழியில்,

**மார்கே³**

**प्रयातुः** = செல்கிறவனுக்கு,

**ப்ரயாதுঃ**

**मणिलाभवत्** = ரத்னம் கிடைப்பதுபோல்,

**மணிலாப⁴வத்**

**मे** = எனக்கு,

**மே**

**मोक्षः** = மோக்ஷம்,

**மோக்ஷঃ**

**यदि लभ्येत** = கிடைக்குமேயானுல்,

**யதி³ லப்⁴யேத**

**तर्हि** = அப்பொழுது,

**தர்ஹி**

**धन्यः** = (நான்) அதிருஷ்டசாலி,

**த⁴ன்யঃ**

**इत्याशया** = என்ற ஆசையோடு,

**இத்யாஶயா**

| | | |
|---|---|---|
| **मूढधियां**<br>**மூட⁴தி⁴யாம்** | = | மூடபுத்தியுள்ளவர்களின், |
| **या मति**<br>**யா மதி** | = | எந்த எண்ணமோ, |
| **सा एषा**<br>**ஸா ஏஷா** | = | அந்த இது, |
| **अतिमन्दा**<br>**அதிமந்தா³** | = | மிகவும் மந்தமான, |
| **मुमुक्षा**<br>**முமுக்ஷா** | = | முமுக்ஷையாக, |
| **अभिमता**<br>**அபி⁴மதா** | = | ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. |

வேறு காரியமாக நடந்து செல்லும் அதிருஷ்டசாலியான ஒருவனுக்கு வழியில் திடீரென எதிர்பாராத விதத்தில் விலையுயர்ந்த ஒரு ரத்னம் கிடைப்பது போல நானும் முக்திக்காக ஒரு பிரயத்னமும் செய்யாமலேயே என்மனம் போனபடி உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் பொழுதே அதிருஷ்டவசமாக எனக்கும் முக்தி கிடைக்கட்டுமே அதுவே போதும் என்று நினைப்பது அதிமந்தமான முமுக்ஷையாகும் இந்த நாலு பிரிவினருக்கும் மோக்ஷமடைய வேண்டுமென்ற எண்ணம் இருப்பதைக் கொண்டு எல்லோரையும் முமுக்ஷுக்கள் என்றே குறிப்பிட்டார். மோக்ஷத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாமலும், அதை அடைய வேணுமென்ற ஆவல் கொஞ்சமு மில்லாமலும் உலகவாழ்க்கையில் உழலுபவர்களைப் பற்றி இங்கு குறிப்பிடவே யில்லை. **(233)**

(**அவதாரிகை**) இந்த நான்குவித முமுக்ஷுக்களில் தீவிரமான முமுக்ஷையுள் ளவனின் லக்ஷணத்தை எடுத்துச் சொல்லிவிட்டு அவனுக்குத்தான் இந்த ஜன்மத்தி லேயே மோக்ஷம் கிடைக்கலா மென்றும், நடுத்தர முமுக்ஷுவுக்கு மற்றொரு ஜன்மத்திலும், மந்தனுக்கு மற்றொரு யுகத்திலும் கிடைக்கலாமென்றும், அதிமந்த முமுக்ஷையுள்ளவனுக்கு கிடைக்கவே கிடைக்காது என்றும் விளக்குகிறார்: -

**जन्मानेकसहस्त्रेषु तपसाऽऽराधितेश्वरः ।**
**तेन निःशेषनिर्धूतहृदयस्थितकल्मषः ॥ २३४ ॥**

**ஜன்மானேகஸஹஸ்த்ரேஷு தபஸா(ஆ)ராதி⁴தேஶ்வரः ।**
**தேன நிःஶேஷநிர்தூ⁴தஹ்ருத³யஸ்தி²தகல்மஷः॥ 234 ॥**

**शास्त्रवित् गुणदोषज्ञो भोग्यमात्रे विनिःस्पृहः ।**
**नित्यानित्यपदार्थज्ञो मुक्तिकामो दृढव्रतः ॥ २३५ ॥**

**ஶாஸ்த்ரவித் கு³ணதோ³ஷஜ்ஞோ போ⁴க்³யமாத்ரே விநிःஸ்ப்ருஹः ।**
**நித்யாநித்யபதா³ர்த²ஜ்ஞோ முக்திகாமோ த்³ருட⁴வ்ரதः ॥ 235 ॥**

**निष्टप्तमग्निना पात्रं उद्वास्य त्वरया यथा ।**
**जहाति गेहं तद्वच्च तीव्रमोक्षेच्छया द्विजः ॥ २३६ ॥**

**நிஷ்டப்தமக்³நிநா பாத்ரம் உத்³வாஸ்ய த்வரயா யதா² ।**
**ஜஹாதி கே³ஹம் தத்³வச்ச தீவ்ரமோக்ஷேச்ச²யா த்³விஜः ॥ 236 ॥**

**स एव सद्यस्तरति संसृतिं गुर्वनुग्रहात् ।**
**यस्तु तीव्रमुमुक्षुः स्यात् स जीवन्नेव मुच्यते ॥ २३७ ॥**

**ஸ ஏவ ஸத்³யஸ்தரதி ஸம்ஸ்ருர்தி கு³ர்வனுக்³ரஹாத் ।**
**யஸ்து தீவ்ரமுமுக்ஷுः ஸ்யாத் ஸ ஜீவன்னேவ முச்யதே ॥ 237 ॥**

| | | |
|---|---|---|
| **जन्मानेकसहस्रेषु** ஜன்மானேகஸஹஸ்த்ரேஷு | = | பல ஆயிரம் பிறவிகளில், |
| **तपसा** தபஸா | = | தவத்தால், |
| **आराधितेश्वरः** ஆராதி⁴தேஶ்வரः | = | ஈசுவரனை ஆராதித்தவனாகவும், |
| **तेन** தேன | = | அதனால், |
| **निःशेष** நிःஶேஷ | = | மீதியன்னியில், |
| **निर्धूत** நிர்தூ⁴த | = | போக்கப்பட்ட, |
| **हृदयस्थित** ஹ்ருத³யஸ்தி²த | = | மனதிலுள்ள, |
| **कल्मषः** கல்மஷः | = | பாபமென்னும் அழுக்குகளை உடையவனாகவும், |
| **शास्त्रवित्** ஶாஸ்த்ரவித் | = | சாஸ்திரங்களை அறிந்தவனாகவும், |
| **गुणदोषज्ञः** கு³ணதோ³ஷஜ்ஞः | = | குணங்களையும் தோஷங்களையும் அறிந்தவனாகவும், |
| **भोग्यमात्रे** போ⁴க்³யமாத்ரே | = | போக வஸ்துக்கள் எல்லாவற்றிலும், |
| **विनिःस्पृहः** விநிःஸ்ப்ருஹः | = | நன்கு ஆசை நீங்கியவனாகவும், |

| | | |
|---|---|---|
| **नित्यानित्यपदार्थज्ञः**<br>**நித்யாநித்யபதா³ர்த²ஜ்ஞ:** | = | நித்யபதார்த்ததையும அநித்யபதார்த்தங்களேயும் அறிந்தவனுகவும், |
| **मुक्तिकामः**<br>**முக்திகாம:** | = | முக்தியில் ஆசையுள்ளவனுகவும், |
| **दृढव्रतः**<br>**த்³ருட⁴வ்ரத:** | = | உறுதியான ஸங்கல்பமுள்ளவனுயும் உள்ள, |
| **द्विजः**<br>**த்³விஜ:** | = | (எந்த) பிராஹ்மணன், |
| **यथा**<br>**யதா** | = | எப்படி, |
| **अग्निना**<br>**அக்³னிஞ** | = | நெருப்பினுல், |
| **निष्टप्तं**<br>**நிஷ்டப்தம்** | = | நன்கு சூடேறியுள்ள, |
| **पात्रं**<br>**பாத்ரம்** | = | (கையில் எடுத்த) பாத்திரத்தை, |
| **त्वरया**<br>**த்வரயா** | = | வேகத்தோடு, |
| **उद्वास्य**<br>**உத்³வாஸ்ய** | = | தூர எறிந்து விட்டு (இருப்பானே), |
| **तद्वच्च**<br>**தத்³வச்ச** | = | அதுபோல், |
| **तीव्रमोक्षेच्छया**<br>**தீவ்ரமோக்ஷேச்ச²யா** | = | மோக்ஷத்தில் தீவ்ரமான விருப்பத்தால், |
| **गेहं**<br>**கே³ஹம்** | = | வீட்டை, |
| **जहाति**<br>**ஜஹாதி** | = | துறக்கிறுனே, |
| **स एव**<br>**ஸ ஏவ** | = | அவன்தான், |
| **गुर्वनुग्रहात्**<br>**கு³ர்வனுக்³ரஹாத்** | = | குருவின் அனுக்ரஹத்தால், |
| **सद्यः**<br>**ஸத்³:** | = | உடனேயே, |
| **संसृतिं**<br>**ஸம்ஸ்ருர்தி** | = | ஸம்ஸாரத்தை, |

**तरति** = தாண்டுகிறன்,

**தரதி**

**यस्तु** = எவன்,

**யஸ்து**

**तीव्रमुमुक्षुः स्यात्** = தீவ்ர முமுக்ஷுவாக இருப்பானே,

**தீவ்ரமுமுக்ஷு: ஸ்யாத்**

**सः** = அவன்,

**ஸ:**

**जीवन्नेव** = ஜீவித்துக்கொண்டிருக்கிறவனுகவே,

**ஜீவன்னேவ**

**मुच्यते** = முக்தியடைகிறன்.

**முச்யதே**

அநேக ஆயிரம் ஜன்மாக்களில் தபஸினுல் ஈசுவரனை ஆராதித்து அந்த தபஸினுல் மனஸிலுள்ள அழுக்குகளை பாக்கி யன்னியில் துடைத்து சாஸ்திர மறிந்து, குணதோஷங்களையறிந்து, போக்ய பதார்த்தம் யாவற்றிலும் ஆசையற்று, எது நித்யம் எது அநித்யம் என்று பதார்த்தங்களை நன்கு அறிந்து, மோக்ஷத்தில் ஆவலும், திடமான ஸங்கல்பமும் கொண்டு நன்றுக நெருப்புச் சூடேறியுள்ள பாத்திரத்தை மறதியால் கையால் எடுத்தாலும் சூடு தாங்காமல் அந்த க்ஷணத்திலே யே எத்தனை வேகத்துடன் தூரவீசி எறிவானே அது போல மோக்ஷமடைவதில் தீவ்ரமான இச்சையால் எவன் உடனேயே வீட்டைத் துறந்து செல்கிறனே அவன் தான் குருவின் அனுக்ரஹத்தினுல் உடனேயே ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டு வான். இந்த தீவ்ர முமுக்ஷு தான் உயிருடன் இருக்கும் போதே முக்தியை அடைவான். **(234-237)**

**जन्मान्तरे मध्यमस्तु तदन्यस्तु युगान्तरे ।**
**चतुर्थः कल्पकोट्यां वा नैव बन्धाद्विमुच्यते ॥ २३८ ॥**

**ஜன்மாந்தரே மத்⁴யமஸ்து தத³ன்யஸ்து யுகா³ந்தரே ।**
**சதுர்த²: கல்பகோட்யாம் வா நைவ ப³ந்தா⁴த்³விமுச்யதே ॥ 238 ॥**

**मध्यमस्तु** = மத்யமமுமுக்ஷுவோவெனில்,

**மத்⁴யமஸ்து**

**जन्मान्तरे** = வேறு ஜன்மாவிலும்,

**ஜன்மாந்தரே**

**तदन्यस्तु** = அவனைக்காட்டிலும் வேறன

**தத³ன்யஸ்து** மந்தமுமுக்ஷுவோவெனில்,

**युगान्तरे** = வேறு யுகத்திலும் (முக்தியடைகிறன்),

**யுகா³ந்தரே**

**चतुर्थः** = நான்காவதான அதிமந்த முமுக்ஷு,

**சதுர்த²:**

**कल्पकोट्यां वा** = கோடிகல்ப காலங்களிலும்,

**கல்பகோட்யாம் வா**

**बन्धात्** = ஸம்ஸார பந்தத்திலிருந்து,

**ப³ந்தா⁴த்**

**नैव विमुच्यते** = விடுபடுவதே இல்லை.

நைவ விமுச்யதே

நடுத்தர வைராக்யமுள்ளவன் மற்றொரு பிறவியிலும், அவனுக்கடுத்த மந்தன் மற்றொரு யுகத்திலும் முக்தியடையலாம் நான்காவதான அதிமந்த வைராக்யமுள்ளவன் கோடி கல்பமானாலும் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைவதே கிடையாது. **(238)**

**(அவதாரிகை)** இவ்விதமாக நான்கு ஸாதனங்களையும் வர்ணித்து விட்டு விவேகமுள்ளவன் தாமதமன்னியில் முக்தியின் பொருட்டு பிரயத்தினம் செய்ய வேண்டியது மிகவும் அவசியமென்பதையும் அவ்விதம் பிரயத்தினம் செய்யாத விஷயத்தில் ஜன்மமே வீண் என்பதையும் மேல் சுலோகங்களில் வற்புறுத்துகிறார்: -

**नृजन्म जन्तोरतिदुर्लभं विदुः स्ततोऽपि पुंस्त्वं च ततो विवेकः।**
**लब्ध्वा तदेतत् त्रितयं महात्मा यतेत मुक्त्यै सहसा विरक्तः॥ २३९ ॥**

**ந்ருஜன்ம ஜந்தோரதிது³ர்லப⁴ம் விது³:**
**ஸ்ததோ(அ)பி பும்ஸ்த்வம் ச ததோ விவேக:।**
**லப்³த்⁴வா ததே³தத் த்ரிதயம் மஹாத்மா**
**யதேத முக்த்யை ஸஹஸா விரக்த:॥ 239 ॥**

**जन्तो** = பிராணிக்கு,

**ஜந்தோ**

**नृजन्म** = மனிதப்பிறவி,

**ந்ருஜன்ம**

**अतिदुर्लभं** = மிகவும் கஷ்டப்பட்டு கிடைப்பதாக,

**அதிது³ர்லப⁴ம்**

**विदुः** = அறிந்திருக்கிறார்கள்,

**விது³:**

**ततोपि** = அதிலும்,

**ததோபி**

**पुंस्त्वं च** = புருஷத்தன்மையும்,

**பும்ஸ்த்வம் ச**

| | | |
|---|---|---|
| **ततः** | = | அதிலும், |
| **தத:** | | |
| **विवेकः** | = | விவேகமும் (கிடைத்தற்கரியது), |
| **விவேக:** | | |
| **तत् एवत्** | = | அந்த இந்த, |
| **தத் ஏவத்** | | |
| **त्रितयं** | = | மூன்றையும், |
| **த்ரிதயம்** | | |
| **लब्ध्वा** | = | அடைந்து, |
| **லப்³த்⁴வா** | | |
| **महात्मा** | = | உயர்ந்த மனமுள்ளவன், |
| **மஹாத்மா** | | |
| **सहसा** | = | உடனே, |
| **ஸஹஸா** | | |
| **विरक्तः** | = | ஆசையைத் துறந்தவனாய், |
| **விரக்த:** | | |
| **मुक्त्यै** | = | முக்தியின் பொருட்டு, |
| **முக்த்யை** | | |
| **यतेत** | = | முயற்சிக்கவேண்டும். |
| **யதேத** | | |

கர்மவசமாக பல பிறவிகளை எடுக்கும் ஜீவனுக்கு மனுஷ்ய ஜன்மம் கிடைப்பது மிகவும் அரிது என்று பெரியோர்கள் அறிந்திருக்கிறார்கள். மனிதப்பிறவி கிடைத்தாலும் சாஸ்திரங்களில் அதிகாரமுள்ள புருஷப் பிறவி கிடைப்பது அதனிலும் அரிது. புருஷப் பிறவி கிடைத்தாலும் விவேகம் பெறுவது மிகவும் அரிது. இந்த மூன்றும் கிடைத்திருக்கும்போது உத்தமமான மனஸ் உள்ளவன் எல்லாவற்றிலும் வைராக்யமடைந்து உடனே முக்தியின் பொருட்டு பிரயத்தினம் செய்யவேண்டும்.

**(239)**

**पुत्रमित्रकलत्रादिसुखं जन्मनि जन्मनि ।**
**मर्त्यत्वं पुरुषत्वं च विवेकश्च न लभ्यते ॥ २४० ॥**

**புத்ரமித்ரகலத்ராதி³ஸுக²ம் ஜன்மனி ஜன்மனி ।**
**மர்த்யத்வம் புருஷத்வம் ச விவேகஶ்ச ந லப்⁴யதே ॥ 240 ॥**

| | | |
|---|---|---|
| **पुत्र** | = | பிள்ளைகள், |
| **புத்ர** | | |
| **मित्र** | = | நண்பர், |
| **மித்ர** | | |

**कलत्रादि** = மனைவி முதலானவர்களால் உண்டாகும்,

**கலத்ராதி³**

**सुखं** = இன்பமானது,

**ஸுக²ம்**

**जन्मनि जन्मनि** = ஒவ்வொரு பிறவியிலும் (கிடைக்கும்),

**ஜன்மனி ஜன்மனி**

**मर्त्यत्वं** = மனிதத்தன்மையும்,

**மர்த்யத்வம்**

**पुरुषत्वं च** = புருஷத்தன்மையும்,

**புருஷத்வம் ச**

**विवेकश्च** = விவேகமும்,

**விவேகஶ்ச**

**न लभ्यते** = கிடைக்காது.

**ந லப்⁴யதே**

பிள்ளைகள், நண்பர்கள், மனைவி முதலானவர்களால் ஏற்படும் ஸுகம் ஒவ்வொரு ஜன்மாவிலும் கிடைக்கும். மனிதப் பிறவியும் அதிலும் புருஷனாகப் பிறப்பதும், விவேகமும் ஸுலபமாகக் கிடைக்காது. **(240)**

**लब्ध्वा सुदुर्लभतरं नरजन्म जन्तुः**
**तत्रापि पौरुषं अतः सदसद्विवेकम् ।**
**संप्राप्य चैहिकसुखाभिरतो यदि स्यात्**
**धिक् तस्य जन्म कुमतेः पुरुषाधमस्य ॥ २४१ ॥**

**லப்³த்⁴வா ஸுது³ர்லப⁴தரம் நரஜன்ம ஜந்து:**
**தத்ராபி பௌருஷம் அத: ஸத³ஸத்³விவேகம் ।**
**ஸம்ப்ராப்ய சைஹிகஸுகா²பி⁴ரதோ யதி³ ஸ்யாத்**
**தி⁴க் தஸ்ய ஜன்ம குமதே: புருஷாத⁴மஸ்ய ॥ 241 ॥**

**जन्तुः** = ஜீவன்,

**ஜந்து:**

**सुदुर्लभतरं** = கிடைப்பதற்கு மிகவும் அரிதான,

**ஸுது³ர்லப⁴தரம்**

**नरजन्म** = மனிதப்பிறவியை,

**நரஜன்ம**

**लब्ध्वा** = அடைந்து,

**லப்³த்⁴வா**

| | | |
|---|---|---|
| **तत्रापि** <br> **தத்ராபி** | = | அதிலும், |
| **पौरुषं** <br> **பௌருஷம்** | = | புருஷத்தன்மையையும், |
| **अतः** <br> **அத:** | = | அதிலும், |
| **सदसद्विवेकं च** <br> **ஸத³ஸத்³விவேகம் ச** | = | இது நல்லது, இது கெட்டது என்ற பகுத்தறிவையும், |
| **संप्राप्य** <br> **ஸம்ப்ராப்ய** | = | அடைந்து, |
| **ऐहिकसुखाभिरतः** <br> **ஐஹிகஸுகா²பி⁴ரத:** | = | இவ்வுலகத்தில் கிடைக்கும் விஷயங்களின் ஸுகத்திலேயே பிரீதியுள்ளவனாக, |
| **यदि स्यात्** <br> **யதி³ ஸ்யாத்** | = | இருப்பானேயாகில், |
| **पुरुषाधमस्य** <br> **புருஷாத⁴மஸ்ய** | = | மனிதர்களில் தாழ்ந்தவனான, |
| **कुमतेः** <br> **குமதே:** | = | கெட்டபுத்தியுள்ள, |
| **तस्य** <br> **தஸ்ய** | = | அவனுடைய, |
| **जन्म** <br> **ஜன்ம** | = | பிறவி, |
| **धिक्** <br> **தி⁴க்** | = | நிந்திக்கத்தக்கது. |

ஒரு ஜீவன் அடைவதற்கு மிக மிக அரிதான மனிதப் பிறவியைப் பெற்று அதிலும் புருஷ ஜன்மாவையும், அதிலும் இது நல்லது இது கெட்டது என்று அறியக் கூடிய விவேகத்தையும் அடைந்தும், அவன் இம்மையிலுள்ள விஷய ஸுகத்திலே யே ஈடுபட்டவனாக இருப்பானேயானால் அவன் மனிதர்களில் மிகத் தாழ்ந்தவன் தான், புத்திஹீனன், அவனுக்குக் கிடைத்த புருஷ ஜன்மமும் விவேகமும் வீண் தான். **(241)**

**खादते मोदते नित्यं शुनकः सूकरः खरः ।**
**तेषामेषां विशेषः को वृत्तिर्येषां तु तैः समा ॥ २४२ ॥**

**கா²த³தே மோத³தே நித்யம் ஶுனக: ஸூகர: க²ர: ।**
**தேஷாமேஷாம் விஶேஷ: கோ வ்ருத்திர்யேஷாம் து தை: ஸமா ॥ 242 ॥**

| | | |
|---|---|---|
| **शुनकः** | = | நாயும், |
| **ஶுனக:** | | |
| **सूकरः** | = | பன்றியும், |
| **ஸூகர:** | | |
| **खरः** | = | கழுதையும், |
| **க²ர:** | | |
| **नित्यं** | = | எப்பொழுதும், |
| **நித்யம்** | | |
| **खादते** | = | தின்கிறது, |
| **கா²த³தே** | | |
| **मोदते** | = | இன்பமடைகிறது, |
| **மோத³தே** | | |
| **येषां** | = | எவர்களின், |
| **யேஷாம்** | | |
| **वृत्तिः** | = | வாழ்க்கை, |
| **வ்ருத்தி:** | | |
| **तैः** | = | அவைகளோடு, |
| **தை:** | | |
| **समा** | = | ஸமமாக இருக்கிறதோ, |
| **ஸமா** | | |
| **तेषां** | = | அவர்களுக்கும், |
| **தேஷாம்** | | |
| **एषां** | = | இவைகளுக்கும், |
| **ஏஷாம்** | | |
| **को विशेषः** | = | என்ன வித்யாஸம்? |
| **கோ விஶேஷ:** | | |

நாயும், பன்றியும், கழுதையும் நித்யம் தின்கிறது, ஸந்தோஷம் அவைகளைப் போலவே மனிதனும் தின்பத்திலும் அதனுல் இன்பமடைவதிலும் ஆயுள் காலத்தைக் கழிப்பானேயாகில் அவைகளுக்கும் இவனுக்கும் என்ன வித்தியாஸம்? **(242)**

**यावत्नाश्रयते रोगो यावत्नाक्रमते जरा ।**
**यावत्न धीर्विपर्येति यावन्मृत्युं न पश्यति ॥ २४३ ॥**

**யாவத்நாஶ்ரயதே ரோகோ³ யாவத்ஞக்ரமதே ஜரா ।**
**யாவன்ன தீ⁴ர்விபர்யேதி யாவன்ம்ருத்யும் ந பஶ்யதி ॥ 243 ॥**

**तावदेव नरः स्वस्थः सारग्रहणतत्परः ।**
**विवेकी प्रयतेताशु भवबन्धविमुक्तये ॥ २४४ ॥**

**தாவதே³வ நரः ஸ்வஸ்த²ः ஸாரக்³ரஹணதத்பரः ।**
**விவேகீ ப்ரயதேதாஶு ப⁴வப³ந்த⁴விமுக்தயே ॥ 244 ॥**

**यावत्** = எதற்குள்,
**யாவத்**
**रोगः** = பிணி,
**ரோக³ः**
**न आश्रयते** = வந்து அண்டவில்லையோ,
**ந ஆஶ்ரயதே**
**यावत्** = எதற்குள்,
**யாவத்**
**जरा** = மூப்பு,
**ஜரா**
**न आक्रमते** = தாக்கவில்லையோ,
**ந ஆக்ரமதே**
**यावत्** = எதற்குள்,
**யாவத்**
**धीः** = புத்தி,
**தீ⁴ः**
**न विपर्येति** = தடுமாறவில்லையோ,
**ந விபர்யேதி**
**यावत्** = எதற்குள்,
**யாவத்**
**मृत्युं** = மரணத்தை,
**ம்ருத்யும்**
**न पश्यति** = பார்க்கவில்லையோ,
**ந பஶ்யதி**
**तावदेव** = அதற்குள்ளாகவே,
**தாவதே³வ**
**स्वस्थः** = ஸ்வஸ்தனாக இருக்கும்,
**ஸ்வஸ்த²ः**
**नरः** = மனிதன்,
**நரः**
**सारग्रहणतत्परः** = ஸாரமானதை ஸ்வீகரிப்பதில்
**ஸாரக்³ரஹணதத்பரः** ஈடுபட்டவனாய்,

**विवेकी** = விவேகத்துடன் கூடியவனாய்,

**விவேகீ**

**भवबन्धविमुक्तये** = ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதற்காக,

**ப⁴வப³ந்த⁴விமுக்தயே**

**आशु** = விரைவில்,

**ஆஶு**

**प्रयतेत** = முயற்சிக்கவேண்டும்.

**ப்ரயதேத**

உடம்பில் பிணிகள் வந்து தாக்குவதற்கு முன்னாலேயே, கிழட்டுத்தனம் வருவதற்கு முன்னதாகவே, புத்திக் கலக்கம் ஏற்படுவதற்கு முன்பாகவே, மரணம் ஏற்படுவதற்கு முன்பாகவே, சரீரம் ஸ்வஸ்தமாயிருக்கும் பொழுதே ஸாரமற்றதை நீக்கி ஸாரமுள்ளதையே க்ரஹிப்பதில் ஈடுபட்டு விவேகத்துடன் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட உடனே முயற்சிக்க வேண்டும் ஸ்வஸ்தனாயிருக்கும் பொழுது முயற்சிக்காவிட்டால் பின்னால் பலவியாதிகளும், கிழட்டுத்தனமும், புத்திக் கலக்கமும் வந்துவிடும். அந்த நிலையில் அவன் என்ன முயற்சி செய்ய முடியும்? கடைசியில் மரணம் அடைந்து விட்டால் இம்மாதிரியான பிறவி கிடைப்பது என்ன நிச்சயம்? **(243-244)**

## देवर्षिपितृमर्त्यर्णबन्धमुक्तास्तु कोटिशः ।
## भवबन्धविमुक्तस्तु यः कश्चित् ब्रह्मवित्तमः ॥ २४५ ॥

**தே³வர்ஷிபித்ருமர்த்யர்ணப³ந்த⁴முக்தாஸ்து கோடிஶः ।**
**ப⁴வப³ந்த⁴விமுக்தஸ்து யः கஶ்சித் ப்³ரஹ்மவித்தமः ॥ 245 ॥**

**देवर्षि** = தேவதைகள், ருஷிகள்,

**தே³வர்ஷி**

**पितृ** = பித்ருக்கள்,

**பித்ரு**

**मर्त्यर्ण** = மனிதர்கள் இவர்களால் உண்டாகும்

**மர்த்யர்ண** கடனாகிற,

**बन्ध** = கட்டிலிருந்து,

**ப³ந்த⁴**

**मुक्तास्तु** = விடுபட்டவர்களோவெனில்,

**முக்தாஸ்து**

**कोटिशः** = கோடிக்கணக்கில் இருக்கின்றனர்,

**கோடிஶः**

**भवबन्धविमुक्तस्तु** = ஸம்ஸாரபந்தத்திலிருந்து

**ப⁴வப³ந்த⁴விமுக்தஸ்து** விடுபட்டவனோவெனில்,

| | | |
|---|---|---|
| **ब्रह्मवित्तमः** | = | ப்ரஹ்ம வித்துக்களுள் சிறந்த, |
| **ப்³ரஹ்மவித்தமः** | | |
| **यः कश्चित्** | = | யாரோ ஒருவர்தான். |
| **யः கஶ்சித்** | | |

உலகில் பிறக்கும் பொழுதே ஒவ்வொருவனும் தேவருணம், ருஷிருணம், பித்ருருணம் என்ற மூன்று கடன்களோடேயே பிறக்கிறுன். இத்துடன் தனக்கு உதவி செய்த தாய் தந்தையர் முதலானவர்களுடைய ருணமும் புதிதாக ஏற்படுகிறது கடன் என்பதும் பந்தம் தான். அதைத் தீர்க்காத வரை சிரேயஸ்ஸை அடைய முடியாமல் அது தடுத்துவிடுகிறது. யாகங்கள் செய்வதன் மூலம் தேவருணத்தையும், ப்ரஹ்ம சர்ய நியமத்துடன் வேதாத்யயனம் செய்வதால் ருஷிருணத்தையும் விவாஹம் செய்து கொண்டு ஸத்புத்ரனைப் பெறுவதன் மூலம் பித்ருருணத்தையும், பதில் உதவி செய்வதன் மூலம் மனுஷ்யருணத்தையும் தீர்த்து, இந்த ருண பந்தத்திலிருந்து விடுபட்டவர்கள் உலகில் கோடிக்கணக்கில் இருக்கின்றனர். ஆனுல் பிறவிக் கட்டிலிருந்து விடுபட்டவர் ப்ரஹ்மவித்துக்களுள் உயர்ந்த நிலையில் உள்ள யாரோ ஒருவர் தான். பலகோடி மனிதர்களுள் யாரோ ஒருவர் தான் பிறவித்தளையிலிருந்து விடுபடுகிறான். **(245)**

**अन्तर्बन्धेन बद्धस्य किं बहिर्बन्धमोचनैः ।**
**तदन्तर्बन्धमुक्त्यर्थं क्रियतां कृतिभिः कृतिः ॥ २४६ ॥**

**அந்தர்ப³ந்தே⁴ன ப³த்³த⁴ஸ்ய கிம் ப³ஹிர்ப³ந்த⁴மோசனைः ।**
**தத³ந்தர்ப³ந்த⁴முக்த்யர்த²ம் க்ரியதாம் க்ருதிபி⁴ः க்ருதிः ॥ 246 ॥**

| | | |
|---|---|---|
| **अन्तर्बन्धेन** | = | உள் கட்டினுல், |
| **அந்தர்ப³ந்தே⁴ன** | | |
| **बद्धस्य** | = | கட்டுப்பட்டவனுக்கு, |
| **ப³த்³த⁴ஸ்ய** | | |
| **बहिर्बन्धमोचनैः** | = | வெளிக்கட்டுகளிலிருந்து விடுதலைகளால், |
| **ப³ஹிர்ப³ந்த⁴மோசனைः** | | |
| **किं** | = | என்ன பயன்? |
| **கிம்** | | |
| **तत्** | = | ஆகையால், |
| **தத்** | | |
| **कृतिभिः** | = | புத்திசாலிகளால், |
| **க்ருதிபி⁴ः** | | |
| **मुक्त्यर्थं** | = | உள்கட்டிலிருந்து விடுபடுவதற்கு, |
| **முக்த்யர்த²ம்** | | |

| | | |
|---|---|---|
| **कृतिः** | = | பிரயத்னம், |
| **க்ருதி꞉** | | |
| **क्रियतां** | = | செய்யப்படட்டும். |
| **க்ரியதாம்** | | |

முன் சுலோகத்தில் கூறப்பட்ட தேவருணம் முதலானவை பாஹ்யபந்தங்கள் (வெளிக்கட்டுகள்) அக்ஞானம் உள்கட்டு. உள்கட்டிலிருந்து விடுபடாதவரை வெளிக் கட்டுகளை மட்டும் நீக்குவதால் யாதொரு பயனுமில்லை. அக்ஞான மென்னும் உள்கட்டு இருக்கும் வரை மேலும் மேலும் பிறவிகள் வரிசையாக வந்து கொண்டே யிருக்கும் இப்பிறவியில் வெளிக்கட்டுகளை நீக்கினாலும் உள்கட்டு நீங்காததால் அடுத்த பிறவிகள் ஒவ்வொன்றிலும் வெளிக்கட்டுகள் தோன்றிக் கொண்டே யிருக்கும். ஒவ்வொரு தடவையும் முயற்சிகள் செய்து வெளிக்கட்டுகளைப் போக்க வேண்டும். ஆதலால் புத்திமான்கள் உள்கட்டான அக்ஞானம் நீங்குவதற்கு முயற்சி செய்யவேண்டும். அக்ஞானம் நீங்கி விட்டால் மறுபிறவியில்லை. வெளிக்கட்டுகளும் ஏற்படாது. **(246)**

**कृतिपर्यवसानैव मता तीव्रमुमुक्षुता ।**
**अन्या तु रञ्जनामात्रा यत्र नो दृश्यते कृतिः ॥ २४७ ॥**

**க்ருதிபர்யவஸானைவ மதா தீவ்ரமுமுக்ஷுதா ।**
**அன்யா து ரஞ்ஜநாமாத்ரா யத்ர நோ த்³ருஶ்யதே க்ருதி꞉ ॥ 247 ॥**

| | | |
|---|---|---|
| **कृतिपर्यवसानैव** | = | ப்ரயத்னம் செய்வதில் முடிவுபெறுவதுதான், |
| **க்ருதிபர்யவஸானைவ** | | |
| **तीव्रमुमुक्षुता** | = | மோக்ஷமடைவதில் தீவ்ரவிருப்பமாக, |
| **தீவ்ரமுமுக்ஷுதா** | | |
| **मता** | = | எண்ணப்பட்டுள்ளது, |
| **மதா** | | |
| **यत्र** | = | எதில், |
| **யத்ர** | | |
| **कृतिः** | = | பிரயத்னம், |
| **க்ருதி꞉** | | |
| **नो दृश्यते** | = | காணப்படவில்லையோ (அந்த), |
| **நோ த்³ருஶ்யதே** | | |
| **अन्या तु** | = | வேறு முமுக்ஷயோவெனில், |
| **அன்யா து** | | |
| **रञ्जनामात्रा** | = | பிறர் மனதை கவர்ச்சி செய்யத்தான் |
| **ரஞ்ஜநாமாத்ரா** | | (தனக்கு பலனில்லை). |

பிரயத்னம் செய்வதில் முடிவு பெறுவதுதான் தீவ்ர முமுக்ஷையாகும் முக்தி யடைவதற்காக எவன் பிரயத்னம் செய்கிறனோ அவனிடம்தான் தீவ்ர முமுக்ஷை யிருப்பதாகக் கருதலாம். எவனுக்கு மோக்ஷத்தில் இச்சையிருந்தும் பிரயத்னம் செய்யவில்லையோ, அவனுடைய முமுக்ஷையானது ஜனங்களை மயக்குவதற்கு உபயோகப்படுமேதவிற இவனுக்கு அதனல் யாதொரு பயனுமில்லை. **(247)**

**गेहादि सर्वमपहाय लघुत्वबुद्ध्या**
**सौख्येच्छया स्वपतिनानलमाविविक्षोः ।**
**कान्ताजनस्य नियता सुदृढा त्वरा या**
**सैषा फलान्तगमने करणं मुमुक्षोः ॥ २४८ ॥**

**கே³ஹாதி³ ஸர்வமபஹாய லகு⁴த்வபு³த்³த்⁴யா**
**ஸௌக்²யேச்ச²யா ஸ்வபதினானலமாவிவிக்ஷோ: ।**
**காந்தாஜனஸ்ய நியதா ஸுத்³ருடா⁴ த்வரா யா**
**ஸைஷா ப²லாந்தக³மனே கரணம் முமுக்ஷோ: ॥ 248 ॥**

**लघुत्वबुद्ध्या** = ஸாரமற்றது என்ற எண்ணத்துடன்,
**லகு⁴த்வபு³த்³த்⁴யா**
**गेहादि सर्वं** = வீடு முதலான எல்லாவற்றையும்,
**கே³ஹாதி³ ஸர்வம்**
**अपहाय** = விட்டுவிட்டு,
**அபஹாய**
**सौख्येच्छया** = பரலோக ஸுகத்தில் விருப்பத்தால்,
**ஸௌக்²யேச்ச²யா**
**स्वपतिना** = தன் கணவனேடுகூட,
**ஸ்வபதினை**
**अनलं आविविक्षोः** = நெருப்பில் (சிதையில்) பிரவேசிக்க விரும்பும்,
**அனலம் ஆவிவிக்ஷோ:**
**कान्ताजनस्य** = பெண்ணினத்திற்கு,
**காந்தாஜனஸ்ய**
**नियता** = தீர்மானமாயும்,
**நியதா**
**सुदृढा** = நன்கு உறுதியுள்ளதுமான,
**ஸுத்³ருடா⁴**
**या** = எந்த,
**யா**
**त्वरा** = வேகமிருக்குமோ,
**த்வரா**

**सा एषा** = அந்த இதுதான்,

**ஸா ஏஷா**

**मुमुक्षोः** = மோக்ஷததில் விருப்பமுள்ளவனுக்கு,

**முமுக்ஷோ:**

**फलान्तगमने** = பலனின் முடிவை அடைவதில்,

**ப²லாந்தக³மனே**

**करणं** = ஸாதனமாகும்.

**கரணம்**

பிரயோஜனமற்றது என்ற எண்ணத்துடன், வீடு முதலானது எல்லாவற்றையும் விட்டு விட்டு பரலோகஸுகத்தில் ஆசையினுல், இறந்த தன் பர்த்தாவுடன் கூட அக்னியில் பிரவேசிக்க நிஜைக்கும் பத்னிக்கு தீர்மானமாயும் நன்கு திடமாயும் எந்த மஞேவேகம் இருக்குமோ, அம்மாதிரியான மஞேவேகம்தான் மோக்ஷத்தை விரும்புகிறவனுக்குப் பலனின் முடிவை அடைவதற்கு ஸாதனமாகும். **(248)**

## नित्यानित्यविवेकश्च देहक्षणिकतामतिः ।
## मृत्योर्भीतिश्च तापश्च मुमुक्षावृद्धिकारणम् ॥ २४९ ॥

**நித்யாநித்யவிவேகஶ்ச தே³ஹக்ஷணிகதாமதி: ।**
**ம்ருத்யோர்பீ⁴திஶ்ச தாபஶ்ச முமுக்ஷாவ்ருத்³தி⁴காரணம் ॥ 249 ॥**

**नित्यानित्यविवेकश्च** = இது நித்யம், இது அநித்யம் என்ற பகுத்தறிவும்,

**நித்யாநித்யவிவேகஶ்ச**

**देहक्षणिकतामतिः** = சரீரம் நிலையற்றது என்ற எண்ணமும்,

**தே³ஹக்ஷணிகதாமதி:**

**मृत्यो** = மரணத்திலிருந்து,

**ம்ருத்யோ**

**भीतिश्च** = பயமும்,

**பீ⁴திஶ்ச**

**तापश्च** = ஆத்யாதமிகாதி தாபமும்,

**தாபஶ்ச**

**मुमुक्षावृद्धिकारणम्** = மோக்ஷேச்சை வளர்வதற்கு ஸாதனம்.

**முமுக்ஷாவ்ருத்³தி⁴காரணம்**

இது நித்யம் இது அநித்யம் என்ற பகுத்தறிவும், சரீரம் க்ஷணிகம் (நிஜேயற்றது) என்ற எண்ணமும், மரணத்திலிருந்து பயமும், தாபமும், முமுக்ஷையை விருத்தி செய்வதற்குக் காரணங்களாகும். **(249)**

(**அவதாரிகை**) நித்யா நித்ய விவேகம் முதலான நான்கு ஸாதனங்களுக்குள் ஒன்றுக்கொன்று எவ்வித ஸம்பந்த மென்பதையும், இந்த நான்கு ஸாதனங்களும் அமைந்திருப்பவன் அடையக்கூடிய பலனையும் சொல்கிறார்: -

**शिरो विवेकस्त्वत्यन्तं वैराग्यं वपुरुच्यते ।**
**शमादयः षडङ्गानि मोक्षेच्छा प्राण इष्यते ॥ २५० ॥**

**ஶிரோ விவேகஸ்த்வத்யந்தம் வைராக்³யம் வபுருச்யதே ।**
**ஶமாத³ய: ஷட³ங்கா³னி மோக்ஷேச்சா² ப்ராண இஷ்யதே ॥ 250 ॥**

**विवेकः** = நித்யாநித்ய விவேகம்,
**விவேக:**
**शिरः** = தலையாகவும்,
**ஶிர:**
**अत्यन्तं** = தீவ்ர வைராக்யம்,
**அத்யந்தம்**
**वपुः** = உடலாகவும்,
**வபு:**
**उच्यते** = சொல்லப்படுகிறது,
**உச்யதே**
**शमादयः षट्** = சமம் முதலான ஆறும்,
**ஶமாத³ய: ஷட்**
**अङ्गानि** = சரீராவயவங்களாகவும்,
**அங்கா³னி**
**मोक्षेच्छा** = மோக்ஷத்தில் விருப்பம்,
**மோக்ஷேச்சா²**
**प्राणः** = பிராணனாகவும்,
**ப்ராண:**
**इष्यते** = எண்ணப்படுகிறது.
**இஷ்யதே**

விவேகம் சிரஸாகவும், தீவிரமான வைராக்யம் சரீரமாகவும் சமம் முதலிய ஆறும் சரீராவயவங்களாகவும் மோக்ஷத்தில் ஆசை உயிராகவும் கருதப்படுகிறது. **(250)**

**ईदृशाङ्गसमायुक्तो जिज्ञासुर्युक्तिकोविदः ।**
**शूरो मृत्युं निहन्त्येव सम्यग्ज्ञानासिना ध्रुवम् ॥ २५१ ॥**

**ஈத்³ருஶாங்க³ஸமாயுக்தோ ஜிஜ்ஞாஸுர்யுக்திகோவித³: ।**
**ஶூரோ ம்ருத்யும் நிஹந்த்யேவ ஸம்யக்³ஜ்ஞானாஸினா த்⁴ருவம் ॥ 251 ॥**

| | | |
|---|---|---|
| ईदृशाङ्गसमायुक्तः<br>ஈத்³ருஶாங்க³ஸமாயுக்த: | = | இவ்விதமான விவேகம் முதலான அங்கங்களோடு கூடியவனுயும், |
| जिज्ञासुः<br>ஜிஜ்ஞாஸு: | = | ஞானம் அடைவதில் விருப்பமுள்ளவனுயும், |
| युक्तिकोविदः<br>யுக்திகோவித³: | = | யுக்திகளைக்கண்டு பிடிப்பதில் ஸாமர்த்யசாலியாயும் உள்ள, |
| शूरः<br>ஶூர: | = | தீரன், |
| ध्रुवं<br>த்⁴ருவம் | = | நிச்சயமாக, |
| सम्यग्ज्ञानासिना<br>ஸம்யக்³ஜ்ஞானாஸினு | = | தத்வ ஞானம் என்ற கத்தியால், |
| मृत्युं<br>ம்ருத்யும் | = | மரணத்தை, |
| निहन्त्येव<br>நிஹந்த்யேவ | = | அழித்தே விடுவான். |

யுத்தத்தில் ஜயத்தை விரும்பும் சூரன் யுத்ததந்திரங்களை நன்கு அறிந்தவனுய் ரதம், கஜம் முதலான ஸேநாங்கங்களுடன் சென்று சண்டைசெய்து முடிவில் கத்தியால் எதிரியை வெட்டிக் கொல்வது போல் விவேகம் முதலான அங்கங்களுடன் கூடியயதியும் ஞானத்தை அடைய விரும்பி யுக்தியில் சிறந்தவனுய் ஆத்ம விசாரம் செய்து தத்வ ஞானம் பெற்று அதனுல் மரணத்தைத் தொலைக்கிறுன். பிறப்பு இறப்பு அற்ற சாச்வத நிலையை அடைகிறுன். இவனே சூரன். **(251)**

**(அவதாரிகை)** விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷை, ஆகிய நான்கு ஸாதனங்களுமுள்ளவன் வேதாந்த விசாரம்செய்வதில் அதிகாரியாயிருப்பதால், ஆத்ம தத்வத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அதை நன்கு அறிந்திருக்கும் குருவைத் தேடி யடையவேண்டும். அந்த குரு எவ்வித லக்ஷணங்களுடன் இருக்கவேண்டும், அவரிடம் சிஷ்யன் போகவேண்டிய கிரமம் எப்படி, அவரிடம் போய் கேட்கவேண்டியது என்ன, என்பதையெல்லாம் ஸ்ரீமத் ஆசார்யார் விஸ்தாரமாகவும் தெளிவாகவும் எடுத்துச்சொல்கிறுர்: -

**उक्तसाधनसंपन्नो जिज्ञासूर्यतिरात्मनः ।**
**जिज्ञासायै गुरुं गच्छेत् समित्पाणिः नयोज्ज्वलः ॥ २५२ ॥**

**உக்தஸாத⁴னஸம்பன்னே ஜிஜ்ஞாஸூர்யதிராத்மன: ।**
**ஜிஜ்ஞாஸாயை கு³ரும் க³ச்சே²த் ஸமித்பாணி: நயோஜ்ஜ்வல: ॥ 252 ॥**

| | | |
|---|---|---|
| **उक्तसाधनसंपन्नः** | = | கீழே கூறப்பட்ட ஸாதனங்களோடுகூடிய, |
| **உக்தஸாத⁴னஸம்பன்னஃ** | | |
| **जिज्ञासूः** | = | ஞானத்தில் விருப்பமுள்ள, |
| **ஜிஜ்ஞாஸூ** | | |
| **यतिः** | = | ஸந்யாஸி, |
| **யதிஃ** | | |
| **आत्मनो जिज्ञासायै** | = | ஆத்மவிசாரத்திற்காக, |
| **ஆத்மனோ ஜிஜ்ஞாஸாயை** | | |
| **समित्पाणिः** | = | ஸமித்துக்களைக் கையில் |
| **ஸமித்பாணிஃ** | | எடுத்துக்கொண்டவனாக, |
| **नयोज्ज्वलः** | = | விநயத்துடன் பிரகாசிக்கிறவனாக, |
| **நயோஜ்ஜ்வலஃ** | | |
| **गुरुं गच्छेत्** | = | ஆசாரியரிடம் செல்லவேண்டும். |
| **கு³ரும் க³ச்சே²த்** | | |

முன் சொல்லப்பட்டிருக்கும் ஸாதனங்களுடன் கூடினவனாய் ஆத்மாவை அறிந்து கொள்ள எண்ணமுள்ள ஸன்யாஸி ப்ரஹ்ம விசாரம் செய்வதற்காக கையில் ஸமித்துக்களை எடுத்துக் கொண்டு, மிகவும் விநயத்துடன் பிரகாசிக்கிறவனாய், குருவிடம் போகவேண்டும். **(252)**

**श्रोत्रियो ब्रह्मनिष्ठो यः प्रशान्तः समदर्शनः ।**
**निर्ममो निरहंकारो निर्द्वन्द्वो निष्परिग्रहः ॥ २५३ ॥**

**ஶ்ரோத்ரியோ ப்³ரஹ்மநிஷ்டோ² யஃ ப்ரஶாந்தஃ ஸமத³ர்ஶனஃ ।**
**நிர்மமோ நிரஹங்காரோ நிர்த்³வந்த்³வோ நிஷ்பரிக்³ரஹஃ ॥ 253 ॥**

**अनपेक्षः शुचिर्दक्षः करुणा मृतसागरः ।**
**एवंलक्षणसंपन्नः स गुरुर्ब्रह्मवित्तमः ।**
**उपासाद्यः प्रयत्नेन जिज्ञासोः स्वार्थसिद्धये ॥ २५४ ॥**

**அனபேக்ஷஃ ஶுசிர்த³க்ஷஃ கருணா ம்ருதஸாக³ரஃ ।**
**ஏவம்லக்ஷணஸம்பன்னஃ ஸ கு³ருர்ப்³ரஹ்மவித்தமஃ ।**
**உபாஸாத்³யஃ ப்ரயத்னேன ஜிஜ்ஞாஸோஃ ஸ்வார்த²ஸித்³த⁴யே ॥ 254 ॥**

| | | |
|---|---|---|
| **यः** | = | எவர், |
| **யஃ** | | |
| **श्रोत्रियः** | = | வேதமறிந்தவராயும், |
| **ஶ்ரோத்ரியஃ** | | |

| | | |
|---|---|---|
| **ब्रह्मनिष्ठः** | = | ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவராயும், |
| **ப்³ரஹ்மநிஷ்ட²:** | | |
| **प्रशान्तः** | = | சாந்தஸ்வபாவமுள்ளவராயும், |
| **ப்ரஶாந்த:** | | |
| **समदर्शनः** | = | ஸமமான பார்வையுள்ளவராயும், |
| **ஸமத³ர்ஶன:** | | |
| **निर्ममः** | = | தனது என்ற அபிமானமில்லாதவராயும், |
| **நிர்மம:** | | |
| **निरहंकारः** | = | அஹங்காரமற்றவராயும், |
| **நிரஹங்கார:** | | |
| **निर्द्वन्द्वः** | = | ஸுகதுக்கம் முதலான தவந்த்வங்களால் |
| **நிர்த்³வந்த்³வ:** | | (இரட்டைகளால்) பாதிக்கப்படாதவராயும், |
| **निष्परिग्रहः** | = | வஸ்துக்களை சேகரிக்காதவராயும், |
| **நிஷ்பரிக்³ரஹ:** | | |
| **अनपेक्षः** | = | ஒன்றிலும் தேவையற்றவராயும், |
| **அனபேக்ஷ:** | | |
| **शुचिः** | = | பரிசுத்தராயும், |
| **ஶுசி:** | | |
| **दक्षः** | = | ஸாமர்தயமுள்ளவராயும், |
| **த³க்ஷ:** | | |
| **करुणा मृतसागरः** | = | கருணையென்னும் அமிருதத்திற்குக் |
| **கருணா ம்ருதஸாக³ர:** | | கடல்போன்றவராயும், |
| **एवंलक्षणसंपन्नः** | = | இந்த லக்ஷணங்களுடன் கூடியவராக |
| **ஏவம்லக்ஷணஸம்பன்ன:** | | உள்ளவரோ, |
| **सः** | = | அந்த, |
| **ஸ:** | | |
| **ब्रह्मवित्तमः** | = | ப்ரஹ்ம ஞானிகளுக்குள் மிகச்சிறந்த, |
| **ப்³ரஹ்மவித்தம:** | | |
| **गुरुः** | = | குருவானவர், |
| **கு³ரு:** | | |
| **जिज्ञासोः** | = | ஆத்மாவை அறிய விருப்பமுள்ளவனுக்கு, |
| **ஜிஜ்ஞாஸோ:** | | |
| **स्वार्थसिद्धये** | = | தனது இஷ்டம் நிறைவேறுவதற்காக, |
| **ஸ்வார்த²ஸித்³த⁴யே** | | |
| **प्रयत्नेन** | = | முயற்சியால், |
| **ப்ரயத்னேன** | | |

**उपासाद्यः** = விநயத்துடன் அடையத்தக்கவர்.

**உபாஸாத்³யஃ**

வேதாத்யயனம் செய்தவராயும், பிரஹ்மத்தில் நிலைத்தவராயும் நல்ல சாந்த ஸ்வபாவமுள்ளவராயும் எங்கும் ஸமமான பார்வையுள்ளவராயும் ஒன்றிலும் மமதை (தனது என்ற எண்ணம்) அற்றவராயும் சரீராதிகளில் நான் என்ற அபிமான மில்லாதவராயும் ஒன்றுக்கொன்று எதிரிடையான சீதம் உஷ்ணம் முதலானவைக ளால் மனம் பாதிக்கப்படாமல் ஸமமாயிருப்பவராயும் தன்னுடையதாக ஒன்றையும் சேர்த்து வைத்துக் கொள்ளாதவராயும ஒன்றிலும் தேவையில்லாதவராயும் பரிசுத்த ராயும், ஸாமர்த்தியசாலியாயும், கருணைக்கடலாயும், பிரஹ்மவித் சிரேஷ்டராயு மிருக்கும் குருவை, ஆத்மாவை அறிய எண்ணுபவர் தன் உத்தேசம் நிறைவேறுவதற் காக முயற்சித்துத் தேடி அடையவேண்டும். **(253-254)**

(**அவதாரிகை**) இவ்வித லக்ஷணங்களெல்லாம் பொருந்தின குரு அகப்படுவா ரா என்று அதைரியப்படவேண்டாம். அவ்வித குருவை அடையத்தக்க அதிருஷ்டம் நம்மிடம் இருக்குமானல் பகவானே குருவாக நம் கண்முன தோன்றுவார். அல்லது நாம் பக்தியுடன் ஸேவை செய்யும் குருவின் மூர்த்தி மூலமாகவே பகவான் அனுகரஹம் செய்வார். என்பதையும் அந்த அதிருஷ்டம் யாருக்குக்கிடைக்கும் என்பதையும் காட்டுகிறுர்: -

**जन्मानेकशतैः सदाऽऽदरयुजा भक्त्या समाराधितो**
**भक्तैर्वैदिकलक्षणेन विधिना संतुष्ट ईशः स्वयम् ।**
**साक्षात् श्रीगुरुरूपमेत्य कृपया दृग्गोचरः सन् प्रभुः**
**तत्वं साधु विबोध्य तारयति तान् संसारदुःखार्णवात् ॥ २५५ ॥**

**ஜன்மானேகஶதைஃ ஸதா³(ஆ)த³ரயுஜா ப⁴க்த்யா ஸமாராதி⁴தோ**
**ப⁴க்தைர்வைதி³கலக்ஷணேன விதி⁴னா ஸந்துஷ்ட ஈஶஃ ஸ்வயம் ।**
**ஸாக்ஷாத் ஶ்ரீகு³ருரூபமேத்ய க்ருபயா த்³ருக்³கோ³சரஃ ஸன் ப்ரபு⁴ஃ**
**தத்வம் ஸாது⁴ விபோ³த்⁴ய தாரயதி தான் ஸம்ஸாரது³ஃகா²ர்ணவாத் ॥255॥**

**भक्तैः** = பக்தர்களால்,

**ப⁴க்தைஃ**

**जन्मानेकशतैः** = பல நூறு பிறவிகளில்,

**ஜன்மானேகஶதைஃ**

**आदरयुजा** = ஆதரவுடன் கூடிய,

**ஆத³ரயுஜா**

**भक्त्या** = பக்தியோடு,

**ப⁴க்த்யா**

| | | |
|---|---|---|
| **वैदिकलक्षणेन**<br>**வைதி³கலக்ஷணேன** | = | வேதத்தில் சொல்லப்பட்டது என்ற லக்ஷணமுள்ள, |
| **विधिना**<br>**விதி⁴னா** | = | விதியால், |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **समाराधितः**<br>**ஸமாராதி⁴த:** | = | நன்கு ஆராதிக்கப்பட்டு, |
| **संतुष्टः**<br>**ஸந்துஷ்ட:** | = | ஸந்தோஷமடைந்த, |
| **प्रभुः**<br>**ப்ரபு⁴:** | = | ஸர்வசக்தியுள்ள, |
| **ईशः**<br>**ஈஶ:** | = | ஈசுவரன், |
| **कृपया**<br>**க்ருபயா** | = | கருணையினால், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானாகவே, |
| **श्रीगुरुरूपमेत्य**<br>**ஶ்ரீகு³ருரூபமேத்ய** | = | குரு உருவமெடுத்துக் கொண்டு, |
| **साक्षात्**<br>**ஸாக்ஷாத்** | = | நேரிடையாகவே, |
| **दृग्गोचरः सन्**<br>**த்³ருக்³கோ³சர: ஸன்** | = | கண்பார்வைக்கு படுகிறவராய்கொண்டு, |
| **तत्वं**<br>**தத்வம்** | = | ஜீவப்ரஹ்மைக்ய தத்வத்தை, |
| **साधु**<br>**ஸாது⁴** | = | நன்றாக, |
| **विबोध्य**<br>**விபோ³த்⁴ய** | = | அறியும்படி உபதேசித்து, |
| **तान्**<br>**தான்** | = | அவர்களை, |
| **संसारदुःखार्णवात्**<br>**ஸம்ஸாரது³:கா²ர்ணவாத்** | = | ஸம்ஸாரத் துன்பக்கடலிலிருந்து, |
| **तारयति**<br>**தாரயதி** | = | தாண்டி வைக்கிறார். |

பக்தர்கள் பலநூறு பிறவிகளில் எப்பொழுதும் ஆதரவுடனும் பக்தியுடனும் வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள தனது கடமைகளான நித்யநைமித்திக கர்மாக்களைச் செய்வதன் மூலம் பகவானை ஆராதித்து வந்தால், அதனால் ஸந்தோஷமடைந்த ஈசுவரன் கிருபையால் தானே குரு உருவம் தாங்கி இவனது கண்களில் படும்படி நேராக வந்து, அல்லது இவர்கள் யாரை குருவாக சரணமடைந்திருக்கிறார்களோ அவரிடம் ஸாந்நித்யம் கொண்டு ஜீவப்ரஹ்மைக்ய தத்வத்தை நன்கு உபதேசித்து பிறவித் துன்பக்கடலிலிருந்து இவர்களை தாண்டும்படி செய்கிறார்.

**तमेतं वेदानुवचमेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽसाशकेन**

**தமேதம் வேதா³னுவசமேன ப்³ராஹ்மணா விவிதி³ஷந்தி யஜ்ஞேன தா³னேன தபஸா(அ)ஸாஶகேன**

என்ற சுருதியில் பலாபேக்ஷை இல்லாமல் செய்யும் விஹித கர்மாக்கள் ஞானத்திற்கு ஸாதனம் என்று கூறுவதால் இந்த கர்மாக்களே ஸத்குரு லாபத்திற்கும் ஸாதனம் என்று தெரிய வருகிறது.

இந்த சுலோகத்தில் குரு கிடைப்பதற்கு ஸாதனம் ஈசுவர பிரஸாதம். அப்பிரஸாதம் கிடைப்பதற்கு ஸாதனம் அவரால் விதிக்கப்பட்டிருக்கிற வைதிக கர்மானுஷ்டானம் அதை வெகு காலம் இடைவிடாமல் ஆதரவுடன் மிகவும் பக்தியுடன் செய்ய வேண்டும். என்று கூறுவதன் மூலம் கர்மா, பக்தி, ஞானம் எல்லாவற்றையும் ஸமன்வயப்படுத்தி எல்லாமே ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைவதற்கு அவசியமென்பதை தெளிவுபடுத்தி யிருக்கிறார். **(255)**

**अविद्याहृदयग्रन्थिविमोक्षोऽपि भवेद्यतः ।**
**तमेव गुरुरित्याहुः गुरुशब्दार्थवेदिनः ॥ २५६ ॥**

**அவித்³யாஹ்ருத³யக்³ரந்தி²விமோக்ஷோ(அ)பி ப⁴வேத்³யதः ।**
**தமேவ கு³ருரித்யாஹுः கு³ருஶப்³தா³ர்த²வேதி³னः ॥ 256 ॥**

| | | |
|---|---|---|
| **अविद्या** அவித்³யா | = | அக்ஞானமென்னும், |
| **हृदयग्रन्थि** ஹ்ருத³யக்³ரந்தி² | = | மனதிலுள்ள முடிச்சு, |
| **विमोक्षोऽपि** விமோக்ஷோ(அ)பி | = | அவிழ்ந்துபோவதும்கூட, |
| **यतः** யதः | = | எவரால், |
| **भवेत्** ப⁴வேத் | = | ஏற்படுமோ, |

| | | |
|---|---|---|
| **तमेव** | = | அவரையே, |
| **தமேவ** | | |
| **गुरुः इति** | = | குரு என்று, |
| **கு³ரு: இதி** | | |
| **गुरुशब्दार्थवेदिनः** | = | குரு என்ற சொல்லின் பொருளை |
| **கு³ருஶப்³தா³ர்த²வேதி³ன:** | | அறிந்தவர்கள், |
| **आहुः** | = | சொல்கிறார்கள். |
| **ஆஹு:** | | |

அக்ஞானம் என்கிற மனதிலுள்ள முடிச்சு எவரால் அவிழ்க்கப்படுகிறதோ அவர்தான் குரு என்று சொல்லப்படுகிறார். **(256)**

**शिव एव गुरुः साक्षात् गुरुरेव शिवः स्वयम् ।**
**उभयोरन्तरं किंचित् न द्रष्टव्यं मुमुक्षुभिः ॥ २५७ ॥**

**ஶிவ ஏவ கு³ரு: ஸாக்ஷாத் கு³ருரேவ ஶிவ: ஸ்வயம் ।**
**உப⁴யோரந்தரம் கிஞ்சித் ந த்³ரஷ்டவ்யம் முமுக்ஷுபி⁴: ॥ 257 ॥**

| | | |
|---|---|---|
| **गुरुः** | = | குருவானவர், |
| **கு³ரு:** | | |
| **साक्षात्** | = | நேராக வந்த, |
| **ஸாக்ஷாத்** | | |
| **शिव एव** | = | பரமசிவன் தான், |
| **ஶிவ ஏவ** | | |
| **शिवः** | = | பரமசிவன், |
| **ஶிவ:** | | |
| **स्वयं** | = | தானாகவே வந்த, |
| **ஸ்வயம்** | | |
| **गुरुरेव** | = | குருதான், |
| **கு³ருரேவ** | | |
| **मुमुक्षुभिः** | = | மோக்ஷமடைய விருப்பமுள்ளவர்களால், |
| **முமுக்ஷுபி⁴:** | | |
| **उभयोः** | = | குரு, சிவன் இருவர்களுக்கும், |
| **உப⁴யோ:** | | |
| **किंचित्** | = | கொஞ்சம்கூட, |
| **கிஞ்சித்** | | |
| **अन्तरं** | = | வேற்றுமை, |
| **அந்தரம்** | | |

**न द्रष्टव्यं** = காணக்கூடாது.
**ந த்³ரஷ்டவ்யம்**

சிவன் தான் குரு. குருதான் சிவன். இருவருக்கும் கொஞ்சம்கூட வித்யா ஸமிருப்பதாக முமுக்ஷுக்கள் எண்ணக் கூடாது. **(257)**

**बन्धमुक्तं ब्रह्मनिष्ठं कृतकृत्यं भजेद्गुरुम् ।**
**यस्य प्रसादात् संसारसागरो गोष्पदायते ॥ २५८ ॥**

**ப³ந்த⁴முக்தம் ப்³ரஹ்மநிஷ்ட²ம் க்ருதக்ருத்யம் ப⁴ஜேத்³கு³ரும் ।**
**யஸ்ய ப்ரஸாதா³த் ஸம்ஸாரஸாக³ரோ கோ³ஷ்பதா³யதே ॥ 258 ॥**

**यस्य** = எவருடைய,
**யஸ்ய**
**प्रसादात्** = அநுக்ரஹத்தால்,
**ப்ரஸாதா³த்**
**संसारसागरः** = ஸம்ஸாரமென்னும் கடல்,
**ஸம்ஸாரஸாக³ரः**
**गोष्पदायते** = மாட்டுக்குளம்படிபோல் சிறிதாக
**கோ³ஷ்பதா³யதே** ஆகிவிடுகிறதோ (அந்த),
**बन्धमुक्तं** = ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவரும்,
**ப³ந்த⁴முக்தம்**
**ब्रह्मनिष्ठं** = ப்ரஹ்மஸ்வரூபத்தில் நிலைத்திருப்பவரும்,
**ப்³ரஹ்மநிஷ்ட²ம்**
**कृतकृत्यं** = செய்யவேண்டிய காரியங்களைச் செய்து
**க்ருதக்ருத்யம்** முடித்தவருமான,
**गुरुं** = குருவை,
**கு³ரும்**
**भजेत्** = ஸேவிக்கவேண்டும்.
**ப⁴ஜேத்**

எவருடைய அனுக்கிரஹத்தினுல் ஸம்ஸாரமாகிற ஸமுத்திரம், பசுவின் குளம்படிபோல், சிறிதாகி விடுகிறதோ, அப்பேற்பட்டவரும் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டவரும் பிரஹ்மத்தில் நிலைத்தவரும், செய்யவேண்டியதை யெல்லாம் செய்து முடித்தவராயுமுள்ள, குருவை ஸேவிக்கவேண்டும். **(258)**

**शुश्रूषया सदा भक्त्या प्रणामैर्विनयोक्तिभिः।**
**प्रसन्नं गुरुमासाद्य प्रष्टव्यं ज्ञेयमात्मनः ॥ २५९ ॥**

**ஶுஶ்ரூஷயா ஸதா³ ப⁴க்த்யா ப்ரணாமைர்வினயோக்திபி⁴:।**
**ப்ரஸன்னம் கு³ருமாஸாத்³ய ப்ரஷ்டவ்யம் ஜ்ஞேயமாத்மன: ॥ 259 ॥**

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**
**भक्त्या** = பக்தியோடு,
**ப⁴க்த்யா**
**शुश्रूषया** = பணிவிடையாலும்,
**ஶுஶ்ரூஷயா**
**प्रणामैः** = நமஸ்காரங்களாலும்,
**ப்ரணாமை:**
**विनयोक्तिभिः** = வணக்கத்தைக் காட்டும் பேச்சுக்களாலும்,
**வினயோக்திபி⁴:**
**प्रसन्नं** = பிரீதி அடைந்த,
**ப்ரஸன்னம்**
**गुरुं** = குருவை,
**கு³ரும்**
**आसाद्य** = நெருங்கி,
**ஆஸாத்³ய**
**आत्मनः** = தனக்கு,
**ஆத்மன:**
**ज्ञेयं** = அறியவேண்டிய தத்வம்,
**ஜ்ஞேயம்**
**प्रष्टव्यं** = கேட்கவேண்டும்.
**ப்ரஷ்டவ்யம்**

எப்பொழுதும் பக்தியுடன் சுசுரூஷை செய்து வருவதினாலும், நமஸ்காரங்களி னாலும், வினயத்துடன் பேசுவதினாலும், குருவை ஸந்தோஷப்படுத்தி அவரிடம் நெருங்கி தனக்குத் தெரிந்து கொள்ளவேண்டியதைப்பற்றிக் கேட்கவேண்டும். **(259)**

**(அவதாரிகை)** கேட்கவேண்டிய விஷயத்தையும், கேட்கவேண்டிய முறையை யும் மேல் ஆறு சுலோகங்களில் போதிக்கிறார்: -

**भगवन्करुणासिन्धो भवसिन्धोर्भवांस्तरिः।**
**यमाश्रित्याश्रमेणैव परं पारं गता बुधाः॥ २६० ॥**

**ப⁴க³வன்கருணாஸிந்தோ⁴ ப⁴வஸிந்தோ⁴ர்ப⁴வாம்ஸ்தரி:।**
**யமாஶ்ரித்யாஶ்ரமேணைவ பரம் பாரம் க³தா பு³தா⁴: ॥ 260 ॥**

**भगवन्** = பகவானே!

**ப⁴க³வன்**

**करुणासिन्धो** = கருணைக்கடலே!

**கருணாஸிந்தோ⁴**

**भवान्** = தாங்கள்,

**ப⁴வான்**

**भवसिन्धोः** = ஸம்ஸாரமென்னும் கடலுக்கு,

**ப⁴வஸிந்தோ⁴:**

**तरिः** = ஓடமாக விளங்குகிறீர்,

**தரி:**

**यं** = எந்த உம்மை,

**யம்**

**आश्रित्य** = அண்டி,

**ஆஶ்ரித்ய**

**बुधाः** = புத்திசாலிகள்,

**பு³தா⁴:**

**अश्रमेणैव** = சிரமமில்லாமலேயே,

**அஶ்ரமேணைவ**

**परं पारं** = (ஸம்ஸாரக்கடலின்) எதிர்கரையை,

**பரம் பாரம்**

**गताः** = அடைந்திருக்கிறார்களோ.

**க³தா:**

ஹேபகவன், கருணைக்கடலே, தாங்கள் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டுவதற்கு ஓடமாக விளங்குகிறீர்கள். வித்வான்கள் தங்களை அண்டி சிரமமன்னியிலேயே ஸம்ஸாரக்கடலைத்தாண்டி அக்கரைக்குப் போய்விட்டார்கள். **(260)**

**जन्मान्तरकृतानन्तपुण्यकर्मफलोदयः ।**
**अद्य संनिहितो यस्मात् त्वत्कृपापात्रमस्म्यहम् ॥ २६१ ॥**

**ஜன்மாந்தரக்ருதானந்தபுண்யகர்மப²லோத³ய: ।**
**அத்³ய ஸம்நிஹிதோ யஸ்மாத் த்வத்க்ருபாபாத்ரமஸ்ம்யஹம் ॥ 261 ॥**

**यस्मात्** = எதனால்,

**யஸ்மாத்**

**अहं** = நான்,

**அஹம்**

| | | |
|---|---|---|
| **त्वत्कृपापात्रं** | = | உங்களுடைய கருஊணக்கு இலக்காக, |
| **த்வத்க்ருபாபாத்ரம்** | | |
| **अस्मि** | = | ஆகியிருக்கிறேனே (ஆகையால்), |
| **அஸ்மி** | | |
| **जन्मान्तरकृत** | = | முற்பிறவிகளில் செய்யப்பட்ட, |
| **ஜன்மாந்தரக்ருத** | | |
| **अनन्त** | = | ஏராளமான, |
| **அனந்த** | | |
| **पुण्यकर्म** | = | புண்யகர்மாக்களுடைய, |
| **புண்யகர்ம** | | |
| **फलोदयः** | = | பலாவிர்பாவமானது, |
| **ப²லோத³ய:** | | |
| **अद्य** | = | இப்பொழுது, |
| **அத்³ய** | | |
| **संनिहितः** | = | நெருங்கிவிட்டது. |
| **ஸம்நிஹித:** | | |

முன் ஜன்மாக்களில் செய்திருக்கும் எல்லயற்ற புண்ய கர்மாக்கள் இப்பொழுது பலன் கொடுக்க ஆரம்பித்து விட்டன. அதனுல் தான் தங்களுடைய கிருபைக்கு நான் பாத்திரமாகியிருக்கிறேன் பலபிறவிகளில் ஏராளமாகப் புண்யம் செய்தவர்களுக்குத்தான் குருகிருபை கிடைக்கும். **(261)**

**संप्रीतिमक्ष्णोर्वदनप्रसादं आनन्दमन्तःकरणस्य सद्यः।**
**विलोकनं ब्रह्मविदस्तनोति छिनत्ति मोहं सुगतिं व्यनक्ति ॥ २६२ ॥**

**ஸம்ப்ரீதிமக்ஷ்ணோர்வத³னப்ரஸாத³ம்**
**ஆனந்த³மந்த:கரணஸ்ய ஸத்³ய:।**
**விலோகனம் ப்³ரஹ்மவித³ஸ்தனோதி**
**சி²னத்தி மோஹம் ஸுக³திம் வ்யனக்தி॥ 262 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्मविदः** | = | ப்ரஹ்ம ஞானியின், |
| **ப்³ரஹ்மவித³:** | | |
| **विलोकनं** | = | கடாக்ஷமானது, |
| **விலோகனம்** | | |
| **अक्ष्णोः** | = | இருகண்களுக்கும், |
| **அக்ஷ்ணோ:** | | |
| **संप्रीतिं** | = | ப்ரீதியையும், |
| **ஸம்ப்ரீதிம்** | | |

**वदनप्रसादं** = முகத்திற்குத் தெளிவையும்,

**வத³னப்ரஸாத³ம்**

**सद्यः** = உடனே,

**ஸத்³ய:**

**अन्तःकरणस्य** = மனதிற்கு,

**அந்த:கரணஸ்ய**

**आनन्दं** = ஆனந்தத்தையும்,

**ஆனந்த³ம்**

**तनोति** = உண்டுபண்ணுகிறது,

**தனோதி**

**मोहं** = அக்ஞானத்தை,

**மோஹம்**

**छिनत्ति** = தொலைக்கிறது,

**சி²னத்தி**

**सुगतिं** = நற்கதியை,

**ஸுக³திம்**

**व्यनक्ति** = வெளிப்படுத்துகிறது.

**வ்யனக்தி**

பிரஹ்மவித்தின் கடாக்ஷ வீக்ஷணமானது (பிரஹ்மவித்தைப் பார்ப்பது என்றும் வைத்துக்கொள்ளலாம்) உடனே இரு கண்களுக்கு விசேஷப் பிரீதியையும், முகத்தில் தெளிவையும் மனஸில் ஆனந்தத்தையும் கொடுக்கிறது. மோஹத்தைப் பிளந்து விடுகிறது. நல்ல கதியைத் தெளிவுபடுத்துகிறது. **(262)**

**हुताशनानां शशिनामिनानामप्यर्बुदं वाऽपि न यन्निहन्तुम् ।**
**शक्नोति तद्ध्वान्तमनन्तमान्तरंहन्त्यात्मवेत्ता सकृदीक्षणेन ॥ २६३ ॥**

**ஹுதாஶனானாம் ஶஶினாமினானா**
**மப்யர்பு³த³ம் வா(அ)பி ந யன்னிஹந்தும்।**
**ஶக்னோதி தத்³த்⁴வாந்தமனந்தமாந்தரம்**
**ஹந்த்யாத்மவேத்தா ஸக்ருதீ³க்ஷணேன ॥ 263 ॥**

**हुताशनानां** = அக்னிகளுடையவும்,

**ஹுதாஶனானாம்**

**शशिनां** = சந்திரன்களுடையவும்,

**ஶஶினாம்**

**इनानामपि** = ஸூர்யர்களுடையவும்,

**இனானாமபி**

| | | |
|---|---|---|
| **अर्बुदं वाऽपि**<br>**அர்பு³த³ம் வா(அ)பி** | = | பத்து கோடியும், |
| **यत्**<br>**யத்** | = | எதை, |
| **निहन्तुं**<br>**நிஹந்தும்** | = | போக்குவதற்கு, |
| **न शक्नोति**<br>**ந ஶக்னோதி** | = | முடியாதோ, |
| **तत्**<br>**தத்** | = | அந்த, |
| **अनन्तं**<br>**அனந்தம்** | = | முடிவில்லாத, |
| **आन्तरं**<br>**ஆந்தரம்** | = | மனதிலுள்ள, |
| **ध्वान्तं**<br>**த்⁴வாந்தம்** | = | அக்ஞான இருளை, |
| **आत्मवेत्ता**<br>**ஆத்மவேத்தா** | = | ஆத்மஞானி, |
| **सकृत्**<br>**ஸக்ருத்** | = | ஒரு தடவை, |
| **ईक्षणेन**<br>**ஈக்ஷணேன** | = | கடாக்ஷத்தால், |
| **हन्ति**<br>**ஹந்தி** | = | போக்குகிறார். |

பத்துகோடி அக்னிகளோ, சந்திரன்களோ, ஸூர்யன்களோ சேர்ந்து வந்தாலும் கூட மனதிலுள்ள முடிவற்ற அக்ஞான இருளைப் போக்க முடியாது. ஆனால் ஆத்ம ஞானி ஒருதடவை பார்வையினாலேயே (பார்க்கப்படுவதினாலேயே அந்த அக்ஞான இருளை போக்கடித்து விடுகிறார். இதைத்தவிற வேறுவிதமாக முடிவு இல்லாததால் அது அநந்தம். **(263)**

**दुष्पारे भवसागरे जनिमृतिव्याध्यादिदुःखोत्कटे**
**घोरे पुत्रकलत्रमित्रबहुलग्राहाकरे भीकरे ।**
**कर्मोत्तुङ्गतरङ्गभङ्गनिकरैः आकृष्यमाणो मुहुः**
**यातायातगतिभ्रमेण शरणं किंचित्न पश्याम्यहम् ॥ २६४ ॥**

**து³ஷ்பாரே ப⁴வஸாக³ரே ஜனிம்ருதிவ்யாத்⁴யாதி³து³:கோ²த்கடே**
**கோ⁴ரே புத்ரகலத்ரமித்ரப³ஹுலக்³ராஹாகரே பீ⁴கரே ।**
**கர்மோத்துங்க³தரங்க³ப⁴ங்க³நிகரை: ஆக்ருஷ்யமாணோ முஹு:**
**யாதாயாதக³திப்⁴ரமேண ஶரணம் கிஞ்சித்ன பஶ்யாம்யஹம் ॥ 264 ॥**

| | | |
|---|---|---|
| **दुष्पारे** து³ஷ்பாரே | = | சிரமப்பட்டு அடையக்கூடிய அக்கரையை உடையதும், |
| **जनिमृतिव्याध्यादि** ஜனிம்ருதிவ்யாத்⁴யாதி³ | = | பிறவி, மரணம், வியாதி முதலியவைகளால் உண்டாகும், |
| **दुःखोत्कटे** து³:கோ²த்கடே | = | துன்பங்கள் நிறைந்ததும், |
| **घोरे** கோ⁴ரே | = | கோரமானதும், |
| **पुत्रकलत्रमित्र** புத்ரகலத்ரமித்ர | = | பிள்ளைகள், மனைவி, நண்பர்கள் இவர்களாகிற, |
| **बहुलग्राहाकरे** ப³ஹுலக்³ராஹாகரே | = | அநேகம் முதலைகளுக்கு இருப்பிடமானதும், |
| **भीकरे** பீ⁴கரே | = | பயங்கரமானதுமான, |
| **भवसागरे** ப⁴வஸாக³ரே | = | ஸம்ஸாரக்கடலில், |
| **कर्मोत्तुङ्गतरङ्गभङ्गनिकरैः** கர்மோத்துங்க³தரங்க³ப⁴ங்க³நிகரை: | = | கர்மாக்களாகிற உயரமான பற்பல அலைகளின் கூட்டங்களாலும், |
| **यातायातगतिभ्रमेण** யாதாயாதக³திப்⁴ரமேண | = | போவது, வருவது என்ற கதியாகிற சுழலினாலும், |
| **मुहुः** முஹு: | = | அடிக்கடி, |
| **आकृष्यमाणः** ஆக்ருஷ்யமாண: | = | இழுக்கப்படுகிற, |
| **अहं** அஹம் | = | நான், |
| **शरणं** ஶரணம் | = | காப்பாற்றுகிற, |
| **किंचित्** கிஞ்சித் | = | ஒன்றையும், |
| **न पश्यामि** ந பஶ்யாமி | = | பார்க்கவில்லை. |

அக்கரை சேரமுடியாததாய் ஜனனம் மரணம் வியாதி முதலான துக்கங்கள் நிறைந்ததாய், மிகவும் கோரமாய், புத்ரன், மனைவி மித்திரன் முதலான பலவித முதலைகள் கூடியிருப்பதாய், பயங்கரமாய் இருக்கும் ஸம்ஸாரமாகிற ஸாகரத்தில், கர்மாக்களாகிற உயரமான பலவித அலைகளின் கூட்டங்களினாலும், போகிறது வருகிறது என்ற நிலைமையாகிற சுழலினாலும், அடிக்கடி இழுக்கப்பட்டவனாக இருந்து வரும் நான் சரணமாக (என்னை காப்பாற்றக் கூடியதாக) எதையும் காணவில்லை. **(264)**

## केन वा पुण्यशेषेण तव पादाम्बुजद्वयम्।
## दृष्टवानस्मि मामार्तं मृत्योस्त्राहि दयादृशा ॥ २६५ ॥

**கேன வா புண்யஶேஷேண தவ பாதா³ம்பு³ஜத்³வயம்।**
**த்³ருஷ்டவானஸ்மி மாமார்தம் ம்ருத்யோஸ்த்ராஹி த³யாத்³ருஶா ॥ 265 ॥**

**केन वा पुण्यशेषेण** = மீதியிருந்த ஏதோ புண்யவசத்தால்,
**கேன வா புண்யஶேஷேண**
**तव** = உங்களுடைய,
**தவ**
**पादाम्बुजद्वयं** = தாமரைபோன்ற இருதிருவடிகளையும்,
**பாதா³ம்பு³ஜத்³வயம்**
**दृष्टवानस्मि** = பார்த்துவிட்டவனாயிருக்கிறேன்,
**த்³ருஷ்டவானஸ்மி**
**आर्तं** = துன்பமடைந்த,
**ஆர்தம்**
**मां** = என்னை,
**மாம்**
**दयादृशा** = கருணைகடாக்ஷத்தால்,
**த³யாத்³ருஶா**
**मृत्योः** = மரணத்திலிருந்து,
**ம்ருத்யோ:**
**त्राहि** = காப்பாற்றவேணும்.
**த்ராஹி**

ஏதோ பாக்கியிருந்த புண்ணியத்தினால் தங்களுடைய பாதாரவிந்தங்களையும் தர்சித்துவிட்டேன் மிகவும் துக்கப்படும் என்னை தாங்கள் தயையோடு கூடிய பார்வை யினால் மிருத்யுவிடமிருந்து காப்பாற்றிவிடுங்கள். **(265)**

(**அவதாரிகை**) இவ்விதம் வினயத்தோடு பிரார்த்திக்கும் சிஷ்யனுக்கு குருவானவர் உடனே அபயப் பிரதானம் செய்து பயத்திற்குக் காரணமேயில்லை யென்று உபதேசிக்கவேண்டிய கிரமத்தையும் ஸ்ரீமத் ஆசார்யார் காட்டுகிறுர்: -

**वदन्तमेवं तं शिष्यं दृष्ट्वैव दयया गुरुः ।**
**दद्यादभयमे तस्मै मा भैष्टेति मुहुर्मुहुः ॥ २६६ ॥**

**வத³ந்தமேவம் தம் ஶிஷ்யம் த்³ருஷ்ட்வைவ த³யயா கு³ரு꞉ ।**
**த³த்³யாத³ப⁴யமே தஸ்மை மா பை⁴ஷ்டேதி முஹுர்முஹு꞉ ॥ 266 ॥**

**एवं** = இவ்வாறு,
**ஏவம்**

**वदन्तं** = சொல்கிற,
**வத³ந்தம்**

**तं** = அந்த,
**தம்**

**शिष्यं** = சிஷ்யனை,
**ஶிஷ்யம்**

**दयया** = கருணையால்,
**த³யயா**

**दृष्ट्वैव** = கடாக்ஷித்து,
**த்³ருஷ்ட்வைவ**

**गुरुः** = குருவானவர்,
**கு³ரு꞉**

**मुहुर्मुहुः** = அடிக்கடி,
**முஹுர்முஹு꞉**

**मा भैष्ट** = பயப்படவேண்டாம்,
**மா பை⁴ஷ்ட**

**इति** = என்று,
**இதி**

**एतस्मै** = இந்த சிஷ்யனுக்கு,
**ஏதஸ்மை**

**अभयं दद्यात्** = அபயப்ரதானம் செய்யவேண்டும்.
**அப⁴யம் த³த்³யாத்**

இவ்விதம் சொல்லும் அந்த சிஷ்யனை குரு கருணையுடன் கடாக்ஷித்து அடிக்கடி பயப்படாதே பயப்படாதே என்று அவனுக்கு அபயம் கொடுக்கவேண்டும். **(266)**

**विद्वन् मृत्युभयं जहीहि भवतो नास्त्येव मृत्युः क्वचित्**
**नित्यस्य द्वयवर्जितस्य परमानन्दात्मनो ब्रह्मणः ।**
**भ्रान्त्या किंचिदवेक्ष्य भीतमनसा मिथ्या त्वया कथ्यते**
**मां त्राहीति हि सुप्तवत् प्रलपनं शून्यात्मकं ते मृषा ॥ २६७ ॥**

**வித்³வன் ம்ருத்யுப⁴யம் ஜஹீஹி ப⁴வதோ நாஸ்த்யேவ ம்ருத்யுঃ க்வசித்**
**நித்யஸ்ய த்³வயவர்ஜிதஸ்ய பரமானந்தா³த்மனோ ப்³ரஹ்மணঃ ।**
**ப்⁴ராந்த்யா கிஞ்சித³வேக்ஷ்ய பீ⁴தமனஸா மித்²யா த்வயா கத்²யதே**
**மாம் த்ராஹீதி ஹி ஸுப்தவத் ப்ரலபனம் ஶூன்யாத்மகம் தே ம்ருஷா ॥ 267 ॥**

| | | |
|---|---|---|
| **विद्वन्** **வித்³வன்** | = | அறிவுள்ளவனே, |
| **मृत्युभयं** **ம்ருத்யுப⁴யம்** | = | மரணபயத்தை, |
| **जहीहि** **ஜஹீஹி** | = | விட்டுவிடு, |
| **नित्यस्य** **நித்யஸ்ய** | = | அழிவற்றவனும், |
| **द्वयवर्जितस्य** **த்³வயவர்ஜிதஸ்ய** | = | இரண்டற்றவனும், |
| **परमानन्दात्मनः** **பரமானந்தா³த்மனঃ** | = | உயர்ந்த ஆனந்தஸ்வரூபனும், |
| **ब्रह्मणः** **ப்³ரஹ்மணঃ** | = | ப்ரஹ்மஸ்வரூபமாயுமுள்ள, |
| **भवतः** **ப⁴வதঃ** | = | உனக்கு, |
| **क्वचित्** **க்வசித்** | = | ஒரு இடத்திலும், |
| **मृत्युः** **ம்ருத்யுঃ** | = | மரணம், |
| **नास्त्येव** **நாஸ்த்யேவ** | = | கிடையவே கிடையாது, |
| **भ्रान्त्या** **ப்⁴ராந்த்யா** | = | ப்ரமத்தினால், |
| **किंचित्** **கிஞ்சித்** | = | வேறாக எதையோ, |

| | | |
|---|---|---|
| **अवेक्ष्य**<br>**அவேக்ஷ்ய** | = | பார்த்து, |
| **भीतमनसा**<br>**பீ⁴தமனஸா** | = | பயந்த மனமுள்ள, |
| **त्वया**<br>**த்வயா** | = | உன்னுல், |
| **मां**<br>**மாம்** | = | என்ஜன, |
| **त्राहीति**<br>**த்ராஹீதி** | = | காப்பாற்று, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **मिथ्या**<br>**மித்²யா** | = | பொய்யாக, |
| **कथ्यते**<br>**கத்²யதே** | = | சொல்லப்படுகிறது, |
| **ते**<br>**தே** | = | உன்னுடைய, |
| **प्रलपनं**<br>**ப்ரலபனம்** | = | பிதற்றல், |
| **सुप्तवत्**<br>**ஸுப்தவத்** | = | தூங்குகிறவனுடையதுபோல், |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | பொய்யானது, |
| **शून्यात्मकं**<br>**ஶூன்யாத்மகம்** | = | அர்த்தமில்லாதது. |

ஏ அறிவுள்ளவனே, மரண பயத்தை விட்டுவிடு. நித்யமாயும் இரண்டாவதற்றதாயும் மேலான ஆனந்த ஸ்வரூபமாயும் பிரஹ்மமாயும் இருக்கும் உனக்கு எவ்விடத்திலும் எக்காலத்திலும் எதிலிருந்தும் மிருத்யு கிடையவே கிடையாது. பிராந்தியினுல் எதையோ பார்த்து விட்டு பயந்த மனஸுடன் "என்ஜனக் காப்பாற்று" என்று பொய்யாக உன்னுல் சொல்லப்படுகிறது, தூக்கத்தில் ஸ்வப்னம் கண்டவன் பிதற்றுவதுபோல் நீயும் பிதற்றுகிறுய், உன் வாக்கியத்திற்கு அர்த்தமேயில்ஜல. வெறும் பொய்.

நித்யம், இரண்டாவதற்றது, பரமானந்த ஸ்வரூபம், பிரஹ்மமாயிருத்தல் என்ற ஒவ்வொரு அம்சமும் பயத்திற்கு நிமித்தமில்ஜல யென்பதைக் சாட்டுகிறது. நித்யமானதினுல் நாசத்திற்கு இடமில்ஜல. இரண்டாவது எதவும் இல்லாததினுல்

பயப்படுத்தக் கூடியதொன்றுமில்லை. ஆனந்தமே ஸ்வரூபமானதினால் துக்கத்திற்கு அவகாசமில்லை. மிகப்பெரிதானதினால் பயப்படவேண்டியதில்லை. அப்படியிருந்தும் பயம் ஏற்பட்டிருக்கிறதே, அதற்குக் காரணம் என்னவென்றால், பிராந்தியைத்தவிர வேறு காரணம் சொல்ல முடியாது. தூக்கத்தில், வாஸ்தவமாக எவ்வித நிமித்தமும் இல்லாமல் இருக்கும் போது, ஸ்வப்னம் கண்டு பயப்படுவது எப்படியோ, அப்படியே தான் இதவும். **(267)**

(**அவதாரிகை**) ஸ்வப்ன திருஷ்டாந்தத்தை விவரித்துச் சொல்கிறார்: -

**निद्रागाढतमोवृतः किल जनः स्वप्ने भुजङ्गादिना**
**ग्रस्तं स्वं समवेक्ष्य यत्प्रलपति त्रासाद्धतोऽस्मीत्यलम् ।**
**आप्तेन प्रतिबोधितः करतलेनाताड्य पृष्टः स्वयं**
**किंचिन्नेति वदत्यमुष्य वचनं स्यात्तत्किमर्थं वद ॥ २६८ ॥**

**நித்³ராகா³ட⁴தமோவ்ருதஃ கில ஜனஃ ஸ்வப்னே பு⁴ஜங்கா³தி³னா**
**க்³ரஸ்தம் ஸ்வம் ஸமவேக்ஷ்ய யத்ப்ரலபதி த்ராஸாத்³த⁴தோ(அ)ஸ்மீத்யலம்।**
**ஆப்தேன ப்ரதிபோ³தி⁴தஃ கரதலேனாதாட்³ய ப்ருஷ்டஃ ஸ்வயம்**
**கிஞ்சின்னேதி வத³த்யமுஷ்ய வசனம் ஸ்யாத்தத்கிமர்த²ம் வத³ ॥ 268 ॥**

| | | |
|---|---|---|
| **निद्रा** நித்³ரா | = | தூக்கமாகிற, |
| **गाढतमोवृतः** கா³ட⁴தமோவ்ருதஃ | = | நல்ல இருளினால் சூழப்பட்ட, |
| **जनः** ஜனஃ | = | மனிதன், |
| **स्वप्ने** ஸ்வப்னே | = | ஸ்வப்னத்தில், |
| **भुजङ्गादिना** பு⁴ஜங்கா³தி³னா | = | பாம்பு முதலியவற்றால், |
| **ग्रस्तं** க்³ரஸ்தம் | = | பிடிக்கப்பட்டதாக, |
| **स्वं** ஸ்வம் | = | தன்னை, |
| **समवेक्ष्य** ஸமவேக்ஷ்ய | = | பார்த்து, |
| **त्रासात्** த்ராஸாத் | = | பயத்தால், |

| | | |
|---|---|---|
| **इतोऽस्मि**<br>**இதோ(அ)ஸ்மி** | = | "கொல்லப்பட்டிருக்கிறேன்", |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **यत्**<br>**யத்** | = | எதனால், |
| **अलं**<br>**அலம்** | = | நன்றாக, |
| **प्रलपति**<br>**ப்ரலபதி** | = | புலம்புகிறானே (பிறகு), |
| **आप्तेन**<br>**ஆப்தேன** | = | நண்பனால், |
| **करतलेन**<br>**கரதலேன** | = | கையால், |
| **आताड्य**<br>**ஆதாட்³ய** | = | தட்டி, |
| **प्रतिबोधितः**<br>**ப்ரதிபோ³தி⁴தः** | = | எழுப்பப்பட்டு, |
| **पृष्टः**<br>**ப்ருஷ்டः** | = | கேட்கப்பட்டவனாய், |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானாகவே, |
| **किंचित् न**<br>**கிஞ்சித் ந** | = | ஒன்றும் இல்லை, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **वदति**<br>**வத³தி** | = | சொல்கிறான், |
| **तत्**<br>**தத்** | = | ஆகையால், |
| **अमुष्य**<br>**அமுஷ்ய** | = | அவனுடைய, |
| **वचनं**<br>**வசனம்** | = | வார்த்தை, |
| **किमर्थं**<br>**கிமர்த²ம்** | = | என்ன பொருளை உடையதாக, |

**स्यात्** = இருக்கும்?

**ஸ்யாத்**

**वद** = சொல் (அவன் வார்த்தைக்குப் பொருளே

**வத³** கிடையாது பொய்தான்).

நன்ருகத் தூங்கும் பொழுது ஸ்வப்னத்தில் மனிதன் தன்ஊன ஸர்ப்பம் முதலா னது பிடித்துக்கொண்டு விட்டதாகப் பார்த்து பயத்திஞல் "நான் கொல்லப்பட்டு விட்டேன்" என்று கதறுகிருனல்லவா? அச்சமயம் ஒரு நண்பன் கையால் தட்டி அவஊன எழுப்பி ஏன் கதறிஞய் என்று கேட்டால் அவன் "ஒன்றுமில்ஊல" என்று தாஞகவே சொல்கிருனே! ஆகவே அவனுடைய வார்த்தை பொய்தானே! முதலில் அவன் சொன்ன வார்த்தைக்கு ஏதாவது பொருள் உண்டா? சொல்

ஸ்வப்னத்திலிருந்து விழித்துக்கொண்ட பிறகு “தான் ஸ்வப்னகாலத்தில் பிதற்றினதற்கு வாஸ்தவமாக எவ்வித காரணமும் கிடையாது. இருந்ததாக நிஊனத்து பிராந்தியிஞல் பிதற்றிஞேம்" என்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்படுவதிஞல் தான் “ஒன்றுமில்ஊல" என்று சொல்கிருன். தூங்கி ஸ்வப்னம் காணும் போதுதான் இல்லாத பதார்த்தம் இருப்பதாகத்தோன்றி பிரமத்தை யுண்டுபண்ணுகிறது என்பதில்ஊல, விழித்துக் கொண்டிருக்கும்போதே பிரமம் ஏற்படுவதுமுண்டு என்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிருர். **(268)**

**रज्जोस्तु तत्वमनवेक्ष्य गृहीतसर्प**
**भावः पुमानयमहिर्वसतीति मोहात् ।**
**आक्रोशति प्रतिबिभेति च कम्पते तत्**
**मिथ्यैव नात्र भुजगोऽस्ति विचार्यमाणे ॥ २६९ ॥**

**ரஜ்ஜோஸ்து தத்வமனவேக்ஷ்ய க்³ருஹீதஸர்ப**
**பா⁴வः புமானயமஹிர்வஸதீதி மோஹாத் ।**
**ஆக்ரோஶதி ப்ரதிபி³பே⁴தி ச கம்பதே தத்**
**மித்²யைவ நாத்ர பு⁴ஜகோ³(அ)ஸ்தி விசார்யமாணே ॥ 269 ॥**

**रज्जोः** = கயிறின்,

**ரஜ்ஜோः**

**तत्वं** = உண்மையை,

**தத்வம்**

**अनवेक्ष्य** = கவனிக்காமல்,

**அனவேக்ஷ்ய**

**गृहीतसर्प भावः** = பாம்பு இருப்பதாக எண்ணிக்கொண்ட,

**க்³ருஹீதஸர்ப பா⁴வः**

| | | |
|---|---|---|
| **पुमान्** | = | மனிதன், |
| **புமான்** | | |
| **अयं अहिः वसति** | = | இது பாம்பு, வஸிக்கிறது |
| **அயம் அஹிः வஸதி** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **मोहात्** | = | ப்ராந்தியினுல், |
| **மோஹாத்** | | |
| **आक्रोशति** | = | கத்துகிறுன், |
| **ஆக்ரோஶதி** | | |
| **प्रतिबिभेति** | = | பயப்படுகிறுன், |
| **ப்ரதிபி³பே⁴தி** | | |
| **कम्पते च** | = | நடுங்குகிறுன், |
| **கம்பதே ச** | | |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **मिथ्यैव** | = | பொய்தான், |
| **மித்²யைவ** | | |
| **विचार्यमाणे** | = | நன்கு கவனித்துப்பார்க்கும்பொழுது, |
| **விசார்யமாணே** | | |
| **अत्र** | = | இங்கு, |
| **அத்ர** | | |
| **भुजगः** | = | பாம்பு, |
| **பு⁴ஜக³ः** | | |
| **नास्ति** | = | இல்ஜல. |
| **நாஸ்தி** | | |

வாஸ்தவமாசக் கயிறு இருப்பதைப் பார்க்காமல், மோஹத்தினுல் ஸர்ப்ப மிருப்பதாக எண்ணிக்கொண்ட மனிதன் "இது ஸர்ப்பம். இது இங்கேயிருக்கிறது" என்று சப்தமிடுகிறுன், பயப்படுகிறுன், நடுங்குகிறுன். இது பொய்யேதான். இங்கே கவனித்து விசாரித்துப்பார்த்தால் ஸர்ப்பமே கிடையாது. **(269)**

**तद्वत्त्वयाप्यात्मन उक्तमेतत् जन्माप्ययव्याधिजरादिदुःखम् ।**
**मृषैव सर्वं भ्रमकल्पितं ते सम्यग्विचार्यात्मनि मुञ्च भीतिम् ॥ २७० ॥**

**தத்³வத்த்வயாப்யாத்மன உக்தமேதத்**
**ஜன்மாப்யயவ்யாதி⁴ஜராதி³து³ः க²ம் ।**
**ம்ருஷைவ ஸர்வம் ப்⁴ரமகல்பிதம் தே**
**ஸம்யக்³விசார்யாத்மனி முஞ்ச பீ⁴திம்॥ 270 ॥**

| | | |
|---|---|---|
| **तद्वत्**<br>**தத்³வத்** | = | அது போல், |
| **त्वया**<br>**த்வயா** | = | உன்ஞல், |
| **उक्तं**<br>**உக்தம்** | = | சொல்லப்பட்ட, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **आत्मनः**<br>**ஆத்மனஃ** | = | ஆத்மாவினுடைய, |
| **जन्माप्ययव्याधिजरादिदुःखमपि**<br>**ஜன்மாப்யயவ்யாதி⁴ஜராதி³து³:க²மபி** | = | பிறவி, மரணம், பிணி, மூப்பு, முதலியவைகளால் உண்டாகும் துன்பமும், |
| **मृषैव**<br>**ம்ருஷைவ** | = | பொய்தான், |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாம், |
| **ते**<br>**தே** | = | உன்னுடைய, |
| **भ्रमकल्पितं**<br>**ப்⁴ரமகல்பிதம்** | = | பிராந்தியிஞல் கல்பிக்கப்பட்டது, |
| **सम्यक्**<br>**ஸம்யக்** | = | நன்ருக, |
| **विचार्य**<br>**விசார்ய** | = | ஆராய்ந்து பார்த்து, |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **भीतिं**<br>**பீ⁴திம்** | = | பயத்தை, |
| **मुञ्च**<br>**மும்ஞ்ச** | = | விட்டு விடு. |

அது போலவே தனக்கு பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, முதலான துக்கமிருப்பதாக உன்ஞல் சொல்லப்பட்டதே, அது எல்லாம் பொய்தான். உன்னிடத்தில் பிரமத்திஞல் கல்பிக்கப்பட்டது. நன்கு விசாரித்துப்பார்த்து தன்னிடமுள்ள பயத்தை விட்டு விடு. **(270)**

**भवान् अनात्मनो धर्मान् आत्मन्यारोप्य शोचति ।**
**तदज्ञानकृतं सर्वं भयं त्यक्त्वा सुखी भव ॥ २७१ ॥**

**ப⁴வான் அனாத்மனோ த⁴ர்மான் ஆத்மன்யாரோப்ய ஶோசதி ।**
**தத³ஜ்ஞானக்ருதம் ஸர்வம் ப⁴யம் த்யக்த்வா ஸுகீ² ப⁴வ ॥ 271 ॥**

**भवान्** = நீ,
**ப⁴வான்**
**अनात्मनः** = ஆத்மாவைக்காட்டிலும் வேறான வஸ்துவின்,
**அனாத்மன:**
**धर्मान्** = தர்மங்களை,
**த⁴ர்மான்**
**आत्मनि** = ஆத்மாவில்,
**ஆத்மனி**
**आरोप्य** = (பிராந்தியால்) இருப்பதாக எண்ணி,
**ஆரோப்ய**
**शोचति** = துக்கப்படுகிறாய்,
**ஶோசதி**
**तत्** = ஆகையால்,
**தத்**
**अज्ञानकृतं** = அக்ஞானத்தால் ஏற்பட்ட,
**அஜ்ஞானக்ருதம்**
**सर्वं भयं** = எல்லா பயத்தையும்,
**ஸர்வம் ப⁴யம்**
**त्यक्त्वा** = விட்டுவிட்டு,
**த்யக்த்வா**
**सुखी भव** = ஸுகமாக இரு.
**ஸுகீ² ப⁴வ**

ஆத்மாவல்லாதது எதுவோ, அதன் லக்ஷணங்களை ஆத்மாவினிடத்தில் ஏற்றிக்கொண்டு, சோகத்தையடைகிறாய். ஆகையால் அறிவின்மையால் ஏற்பட்டிருக்கும் எல்லா பயத்தையும் விட்டு விட்டு ஸுகமாக இரு. **(271)**

**(அவதாரிகை)** இவ்விதம் குரு தெளிவாக எடுத்தச் சொன்னது சிஷ்யனுக்கு நன்கு புரிந்துவிட்ட போதிலும் அனுபவத்திற்கு வராததினால் பலவித ஸந்தேகங்கள் ஏற்படுகின்றன அவைகளையும் நிவிருத்தி செய்து கொடுக்கும்படி குருவை மிக வணக்கத்துடன் பிரார்த்தித்துக்கேட்டுக்கொள்கிறான்: -

**शिष्यः –**

**श्रीमद्भिरुक्तं सकलं मृषेति दृष्टान्त एव ह्युपपद्यते तत्।**
**दार्ष्टान्तिके नैव भवादिदुःखं प्रत्यक्षतः सर्वजनप्रसिद्धम् ॥ २७२ ॥**

**ஶிஷ்யஃ** - சிஷ்யன் (கேட்கிறன்),

**ஶ்ரீமத்³பி⁴ருக்தம் ஸகலம் ம்ருஷேதி**
**த்³ருஷ்டாந்த ஏவ ஹ்யுபபத்³யதே தத்।**
**தா³ர்ஷ்டாந்திகே நைவ ப⁴வாதி³து³:க²ம்**
**ப்ரத்யக்ஷத: ஸர்வஜனப்ரஸித்³த⁴ம் ॥ 272 ॥**

**सकलं** = எல்லாம்,
**ஸகலம்**
**मृषा** = பொய்,
**ம்ருஷா**
**इति** = என்று,
**இதி**
**श्रीमद्भिः** = தங்களால்,
**ஶ்ரீமத்³பி⁴:**
**रुक्तं** = சொல்லப்பட்டது,
**ருக்தம்**
**दृष्टान्त एव** = த்ருஷ்டாந்தத்தில்தான்,
**த்³ருஷ்டாந்த ஏவ**
**उपपद्यते** = பொருந்துகிறது,
**உபபத்³யதே**
**तत्** = அது,
**தத்**
**दार्ष्टान्तिके** = தாஷ்டாந்திகத்தில்,
**தா³ர்ஷ்டாந்திகே**
**नैव** = பொருந்தவே இல்லை (ஏனெனில்),
**நைவ**
**भवादिदुःखं** = பிறப்பு முதலானதால் உண்டாகும் துன்பம்,
**ப⁴வாதி³து³:க²ம்**
**प्रत्यक्षतः** = நேராக,
**ப்ரத்யக்ஷத:**

**सर्वजनप्रसिद्धम्** = எல்லா ஜனங்களுக்கும் பிரஸித்தமானது,

**ஸர்வஜனப்ரஸித்³த⁴ம்**

எல்லாம் பொய் என்று தாங்கள் சொன்னது திருஷ்டாந்தத்தில் தான் பொருந்துகிறது. தார்ஷ்டாந்திகத்தில் அது பொருந்தவேயில்லை. ஏனென்றல் ஸம்ஸாரம் முதலான துக்கம் பிரத்யக்ஷமாக ஸகல ஜனங்களாலும் அனுபவிக்கப் படுகிறதே! என்று சிஷ்யன் தன் ஸந்தேகங்களையெல்லாம் கேட்க ஆரம்பிக்கிறன்.

**(272)**

**प्रत्यक्षेणानुभूतार्थः कथं मिथ्यात्वमर्हति ।**
**चक्षुषो विषयं कुम्भं कथं मिथ्या करोम्यहम् ॥ २७३ ॥**

**ப்ரத்யக்ஷேணானுபூ⁴தார்த²: கத²ம் மித்²யாத்வமர்ஹதி ।**
**சக்ஷுஷோ விஷயம் கும்ப⁴ம் கத²ம் மித்²யா கரோம்யஹம் ॥ 273 ॥**

**प्रत्यक्षेणा** = பிரத்யக்ஷ பிரமாணத்தால்,

**ப்ரத்யக்ஷேண**

**अनुभूत** = அனுபவிக்கப்பட்ட,

**அனுபூ⁴த**

**कर्थः** = வஸ்து,

**கர்த²:**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**मिथ्यात्वमर्हति** = பொய்த்தன்மையை அடையும்?

**மித்²யாத்வமர்ஹதி**

**चक्षुषः** = கண்பார்வைக்கு,

**சக்ஷுஷ:**

**विषयं** = இலக்காக இருக்கும்,

**விஷயம்**

**कुम्भं** = குடத்தை,

**கும்ப⁴ம்**

**अहं** = நான்,

**அஹம்**

**कथं** = எவ்வாறு,

**கத²ம்**

**मिथ्या करोमि** = பொய்யாகச் செய்வேன்?

**மித்²யா கரோமி**

நாம் பிரத்யக்ஷமாக அனுபவிக்கப்படும் பொருளை எப்படிப் பொய்யென்று கூறமுடியும்? எதிரில் குடம் வைத்திருக்கிறது. நேரில் நான் என்கண்களால் பார்க்கிறேன். இக்குடத்தை எப்படிப்பொய்யாக ஆக்கமுடியும்? **(273)**

**विद्यमानस्य मिथ्यात्वं कथं नु घटते प्रभो ।**
**प्रत्यक्षं खलु सर्वेषां प्रमाणं प्रस्फुटार्थकम् ॥ २७४ ॥**

**வித்³யமானஸ்ய மித்⁴யாத்வம் கத²ம் நு க⁴டதே ப்ரபோ⁴ ।**
**ப்ரத்யக்ஷம் க²லு ஸர்வேஷாம் ப்ரமாணம் ப்ரஸ்பு²டார்த²கம் ॥ 274 ॥**

**प्रभो** = பிரபுவே!
**ப்ரபோ⁴**
**विद्यमानस्य** = இருக்கும் பொருளுக்கு,
**வித்³யமானஸ்ய**
**मिथ्यात्वं** = பொய்த்தன்மை,
**மித்⁴யாத்வம்**
**कथं नु घटते** = எப்படிப்பொருந்தும்?
**கத²ம் நு க⁴டதே**
**सर्वेषां** = எல்லோருக்கும்,
**ஸர்வேஷாம்**
**प्रत्यक्षं** = பிரத்யக்ஷமானது,
**ப்ரத்யக்ஷம்**
**प्रस्फुटार्थकं** = பொருளை நன்கு தெளிவாகக் காட்டும்,
**ப்ரஸ்பு²டார்த²கம்**
**प्रमाणं खलु** = பிரமாணமல்லவா!
**ப்ரமாணம் க²லு**

உலகில் எல்லோருக்கும் பிரத்யக்ஷம் தான் பொருளை நன்கு விளக்கிக் காட்டும் பிரமாணம் இந்த பிரத்யக்ஷப்பிரமாணத்தால் வஸ்து இருப்பது நன்கு தெரிகிறது. என் கண்ணுல் நேரில் நான் காணும் பொருள் நிச்சயமாக அங்கு இருக்கும் பொழுது அந்தப்பொருள் இல்லையென்றோ, பொய் என்றோ எப்படிக்கூற முடியும்? **(274)**

**मर्त्यस्य मम जन्मादिदुःखभाजोऽल्पजीविनः ।**
**ब्रह्मत्वं अपि नित्यत्वं परमानन्दता कथम् ॥ २७५ ॥**

**மர்த்யஸ்ய மம ஜன்மாதி³து³:க²பா⁴ஜோ(அ)ல்பஜீவின: ।**
**ப்³ரஹ்மத்வம் அபி நித்யத்வம் பரமானந்த³தா கத²ம் ॥ 275 ॥**

**मर्त्यस्य** = மரணமடைகிறவனும்,
**மர்த்யஸ்ய**

| | | |
|---|---|---|
| **जन्मादिदु:खभाज:** ஜன்மாதி³து³:க²பா⁴ஜ: | = | பிறவி முதலியவற்றால் துன்பமடைகிறவனும், |
| **अल्पजीविन:** அல்பஜீவின: | = | சிறிது காலமே வாழ்கிறவனுமான, |
| **मम** மம | = | எனக்கு, |
| **ब्रह्मत्वं** ப்³ரஹ்மத்வம் | = | மிகப்பெரியதான ப்ரஹ்மத்தன்மையும், |
| **नित्यत्वं** நித்யத்வம் | = | உத்பத்திவிநாசமிலலாதிருக்கும் தன்மையும், |
| **परमानन्दतापि** பரமானந்த³தாபி | = | பரமானந்தத்தன்மையும், |
| **कथम्** கத²ம் | = | எப்படிப்பொருந்தும்? |

நான் மரணம் (நாசம்) அடைபவன். எனக்குப் பிறவி முதலானவைகளால் துக்கமுண்டு. சிறிது காலமே நான் வாழ்பவன். இப்பேற்பட்ட நான் ப்ரஹ்மமாகவும் அதாவது எல்லாவற்றையும்விட மிகப்பெரியவனாகவும், பிறப்பு நாசங்களற்றவனாகவும், மேலான ஆனந்த ரூபியாகவும் எப்படி ஆகமுடியும்? **(275)**

**क आत्मा कस्त्वनात्मा च किमु लक्षणमेतयोः ।**
**आत्मन्यनात्मधर्माणां आरोपः क्रियते कथम् ॥ २७६ ॥**

**க ஆத்மா கஸ்த்வனாத்மா ச கிமு லக்ஷணமேதயோ: ।**
**ஆத்மன்யனாத்மத⁴ர்மாணாம் ஆரோப: க்ரியதே கத²ம் ॥ 276 ॥**

**किं अज्ञानं तदुत्पन्नभयत्यागोऽपि वा कथम् ।**
**किमु ज्ञानं तदुत्पन्नसुखप्राप्तिश्च वा कथम् ॥ २७७ ॥**

**கிம் அஜ்ஞானம் தது³த்பன்னப⁴யத்யாகோ³(அ)பி வா கத²ம் ।**
**கிமு ஜ்ஞானம் தது³த்பன்னஸுக²ப்ராப்திஶ்ச வா கத²ம் ॥ 277 ॥**

**सर्वमेतद्यथापूर्वं करामलकवत्स्फुटम् ।**
**प्रतिपादय मे स्वामिन् श्रीगुरो करुणानिधे ॥ २७८ ॥**

**ஸர்வமேதத்³யதா²பூர்வம் கராமலகவத்ஸ்பு²டம்।**
**ப்ரதிபாத³ய மே ஸ்வாமின் ஶ்ரீகு³ரோ கருணாநிதே⁴ ॥ 278 ॥**

**क:** = எது,

**க**

**आत्मा** = ஆத்மா?

**ஆத்மா**

**अनात्मा च** = அநாத்மாவும்,

**அனாத்மா ச**

**कस्तु** = எது,

**கஸ்து**

**एतयो:** = இவ்விரண்டுகளுடைய,

**ஏதயோ:**

**लक्षणं** = லக்ஷணம்,

**லக்ஷணம்**

**किमु** = என்ன?

**கிமு**

**आत्मनि** = ஆத்மாவில்,

**ஆத்மனி**

**अनात्मधर्माणां** = அநாத்மாவினுடைய தர்மங்களின்,

**அனாத்மத4ர்மாணாம்**

**आरोप:** = ஆரோபம்,

**ஆரோப:**

**कथं** = எவ்விதம்,

**கத2ம்**

**क्रियते** = செய்யப்படுகிறது?

**க்ரியதே**

**किं अज्ञानं** = அக்ஞாநம் எது?

**கிம் அஜ்ஞானம்**

**तदुत्पन्नभयत्यागोऽपि वा** = அதனால் உண்டான பயத்தை விடுவதும்,

**தது3த்பன்னப4யத்யாகோ3(அ)பி வா**

**कथं** = எப்படி?

**கத2ம்**

**किमु ज्ञानं** = ஞானம் எது?

**கிமு ஜ்ஞானம்**

**तदुत्पन्नसुखप्राप्तिश्च वा** = அதனாலுண்டான ஸுகத்தை அடைவதும்,

**தது3த்பன்னஸுக2ப்ராப்திஶ்ச வா**

**कथं** = எப்படி?

**கத²ம்**

**स्वामिन्** = ஹே ஸ்வாமியே,

**ஸ்வாமின்**

**श्रीगुरो** = ஸ்ரீ குருவே,

**ஸ்ரீகு³ரோ**

**करुणानिधे** = கருணாநிதியே,

**கருணாநிதே⁴**

**एतत् सर्वं** = இது எல்லாவற்றையும்,

**ஏதத் ஸர்வம்**

**यथापूर्वं** = முன்போல்,

**யதா²பூர்வம்**

**करामलकवत्** = உள்ளங்கையில் விளங்கும் நெல்லிக்கனிபோல,

**கராமலகவத்**

**स्फुटम्** = தெளிவாக,

**ஸ்பு²டம்**

**मे** = எனக்கு,

**மே**

**प्रतिपादय** = விளக்கவேண்டும்.

**ப்ரதிபாத³ய**

ஆத்மா எது? அனாத்மா எது? இவ்விரண்டிற்கும் லக்ஷணம் என்ன? ஆத்மா விடத்தில் அனாத்மாக்களின் தர்மங்களை எவ்விதம் ஆரோபம் செய்யப்படுகிறது? அக்ஞானம் என்பது என்ன? அதினால் ஏற்படும் பயத்தை விடுவது தான் எப்படி? ஞானம் என்பது என்ன? அதினால் ஏற்படும் ஸுகத்தின் பிராப்திதான் எப்படி? ஹே ஸ்வாமின், ஸ்ரீகுரோ, கருணாநிதே, இது எல்லாவற்றையும் முன்போல கையிலுள்ள நெல்லிக்கனிபோல தெளிவாக எனக்கு எடுத்துச் சொல்லுங்கள். **(276-278)**

**(அவதாரிகை)** இவ்வாறு சிஷ்யன் ஆத்மா, அநாத்மா, ஞாநம், அக்ஞாநம், மித்யாத்வம், அத்யாஸம், ஜீவப்ரஹ்மைக்யம், பந்த முக்தி, ஆனந்தப்ராப்தி இவை பற்றி தனக்கு உபதேசிக்க வேண்டும் என்று பிரார்த்தித்ததும் குருவானவர் 6 சுலோக ங்களால் சிஷ்யனையும் அவனுடைய கேள்வியையும் புகழ்ந்து விட்டு பிறகு அவன் கேட்டதற்கெல்லாம் ஸமாதானம் கூறுகிறார்: -

**श्रीगुरुः -**

ஸ்ரீ குரு சொல்கிறார்.

धन्यः कृतार्थस्त्वमहो विवेकः शिवप्रसादस्तव विद्यते महान् ।
विसृज्य तु प्राकृतलोकमार्गं ब्रह्मावगन्तुं यतसे यतस्त्वम् ॥ २७९ ॥

த⁴ன்யः க்ருதார்த²ஸ்த்வமஹோ விவேகः
ஶிவப்ரஸாத³ஸ்தவ வித்³யதே மஹான் ।
விஸ்ருஜ்ய து ப்ராக்ருதலோகமார்க³ம்
ப்³ரஹ்மாவக³ந்தும் யதஸே யதஸ்த்வம்॥ 279 ॥

त्वं = நீ,
த்வம்
धन्यः = பாக்யசாலி,
த⁴ன்யः
कृतार्थः = பயன்பெற்றவன்,
க்ருதார்த²ः
अहो = ஆச்சரியமான விவேகம்,
அஹோ
तव = உனக்கு,
தவ
महान् शिवप्रसादः = நிறைய, ஈசுவர அநுக்ரஹம்,
மஹான் ஶிவப்ரஸாத³ः
विद्यते = இருக்கிறது,
வித்³யதே
यतः = ஏனெனில்,
யதः
त्वं = நீ,
த்வம்
प्राकृतलोकमार्गं = பாமரஜனங்கள் செல்லும் வழியை,
ப்ராக்ருதலோகமார்க³ம்
विसृज्य = விட்டுவிட்டு,
விஸ்ருஜ்ய
ब्रह्म = ப்ரஹ்மஸ்வரூபத்தை,
ப்³ரஹ்ம
अवगन्तुं = அறிவதற்கு,
அவக³ந்தும்
यतसे = முயற்சிக்கிறாய்.
யதஸே

ஸாமான்யமாக பாமரஜனம் போகும் வழியை விட்டு விட்டு, நீயோ பிரஹ்மத்தை யறிந்துகொள்ளப் பிரயத்தினம் செய்கிறுய். அதனுல் நீ பாக்யசாலி. நீ நிஜனத்த கார்யம் கைகூடும். நல்ல விவேகமுள்ள உனக்கு பகவானுடைய பிரஸாதம் பூர்ணமாக இருக்கிறது. **(279)**

**शिवप्रसादेन विना न सिद्धिः शिवप्रसादेन विना न बुद्धिः ।**
**शिवप्रसादेन विना न युक्तिः शिवप्रसादेन विना न मुक्तिः ॥ २८० ॥**

**ஶிவப்ரஸாதே³ன விஞ ந ஸித்³தி⁴: ஶிவப்ரஸாதே³ன விஞ ந பு³த்³தி⁴: ।**
**ஶிவப்ரஸாதே³ன விஞ ந யுக்திः ஶிவப்ரஸாதே³ன விஞ ந முக்திः ॥ 280 ॥**

**शिवप्रसादेन विना** = ஈசனது அனுக்ரஹமில்லாமல்,
**ஶிவப்ரஸாதே³ன விஞ**
**न सिद्धिः** = காரியஸித்தி ஏற்படாது,
**ந ஸித்³தி⁴:**
**शिवप्रसादेन विना** = ஈசனது அருளில்லாமல்,
**ஶிவப்ரஸாதே³ன விஞ**
**बुद्धिः न** = ஞானம் ஏற்படாது,
**பு³த்³தி⁴: ந**
**शिवप्रसादेन विना** = ஈசுவரானுக்ரஹம் இல்லாமல்,
**ஶிவப்ரஸாதே³ன விஞ**
**युक्तिः न** = உபாயம் தெரியாது,
**யுக்திः ந**
**शिवप्रसादेन विना** = ஈசுவர அனுக்ரகமில்லாமல்,
**ஶிவப்ரஸாதே³ன விஞ**
**न मुक्तिः** = முக்தி கிடைக்காது.
**ந முக்திः**

சிவனுடைய பிரஸாதமன்னியில் கார்யம் கைகூடாது. சிவனுடைய பிரஸாதமன்னியில் நல்ல புத்தி உண்டாகாது. சிவனுடைய பிரஸாதமன்னியில் நல்ல யுக்தி தோன்றுது. சிவனுடைய பிரஸாதமன்னியில் மோக்ஷம் கிடையாது. **(280)**

**यस्य प्रसादेन विमुक्तसङ्गाः शुकादयः संसृतिबन्धमुक्ताः ।**
**तस्य प्रसादो बहुजन्मलभ्यो भक्त्येकगम्यो भवमुक्ति हेतुः ॥ २८१ ॥**

**யஸ்ய ப்ரஸாதே³ன விமுக்தஸங்கா³ः**
**ஶுகாத³யः ஸம்ஸ்ருதிப³ந்த⁴முக்தாः ।**
**தஸ்ய ப்ரஸாதோ³ ப³ஹுஜன்மலப்⁴யோ**
**ப⁴க்த்யேகக³ம்யோ ப⁴வமுக்தி ஹேதுः ॥ 281 ॥**

**यस्य** = எவருடைய,

**யஸ்ய**

**प्रसादेन** = அநுக்ரஹத்தால்,

**ப்ரஸாதே³ன**

**शुकादयः** = சுகர் முதலியவர்கள்,

**ஶுகாத³ய:**

**विमुक्तसङ्गाः** = பற்றுதலை விட்டவர்களாய்,

**விமுக்தஸங்கா³:**

**संसृतिबन्धमुक्ताः** = ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்து

**ஸம்ஸ்ருதிப³ந்த⁴முக்தா:** விடுபட்டவர்களோ,

**तस्य प्रसादः** = அவருடைய அநுக்ரஹம்,

**தஸ்ய ப்ரஸாத³:**

**बहुजन्मलभ्यः** = பல பிறவிகளுக்குப்பின் கிடைக்கக்கூடியது,

**ப³ஹுஜன்மலப்⁴ய:**

**भक्त्येकगम्यः** = பக்தி ஒன்றினாலேயே அடையத்தக்கது,

**ப⁴க்த்யேகக³ம்ய:**

**भवमुक्ति हेतुः** = ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு காரணம்.

**ப⁴வமுக்தி ஹேது:**

ஈசுவர பிரஸாதத்தினால் தான் ஸகல பற்றுகளையும் நீக்கி சுகர் முதலிய மஹான்கள் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட்டிருக்கிறார்கள், அந்த ஈசுவரனுடைய பிரஸாதம் ஸுலபமாக எல்லோருக்கும் கிடைக்காது பல பிறவிகளில் ஏகாந்த பக்தியுடன் ஈசுவரனை உபாஸித்தவருக்குத்தான் பகவத் ப்ரஸாதம் கிடைக்கும். பகவத் ப்ரஸாதமிருந்தால்தான் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட முடியும். **(281)**

**विवेको जन्तूनां प्रभवति जनिष्वेव बहुषु**
**प्रसादादेवैशात् बहुसुकृतपाकोदयवशात् ।**
**यतस्तस्मादेव त्वमपि परमार्थावगमने**
**कृतारम्भः पुंसामिदमिह विवेकस्य तु फलम् ॥ २८२ ॥**

**விவேகோ ஜந்தூனாம் ப்ரப⁴வதி ஜநிஷ்வேவ ப³ஹுஷு**
**ப்ரஸாதா³தே³வைஶாத் ப³ஹுஸுக்ருதபாகோத³யவஶாத் ।**
**யதஸ்தஸ்மாதே³வ த்வமபி பரமார்தா²வக³மனே**
**க்ருதாரம்ப⁴: பும்ஸாமித³மிஹ விவேகஸ்ய து ப²லம் ॥ 282 ॥**

**यतः** = எதனால்,

**யத:**

| | | |
|---|---|---|
| **जन्तूनां** | = | பிராணிகளுக்கு, |
| **ஜந்தூனாம்** | | |
| **बहुषु जनिष्वेव** | = | பல பிறவிகளில்தான், |
| **ப³ஹுஷு ஜநிஷ்வேவ** | | |
| **बहुसुकृतपाकोदयवशात्** | = | அநேக புண்யங்களின் பலன் தொடங்குவதற்கு |
| **ப³ஹுஸுக்ருதபாகோத³யவஶாத்** | | அதீனமாக (உண்டாகும்), |
| **ऐशात् प्रसादादेव** | = | ஈசுவரனின் அநுக்ரஹத்தாலேயே, |
| **ஐஶாத் ப்ரஸாதா³தே³வ** | | |
| **विवेकः** | = | விவேகம், |
| **விவேகः** | | |
| **प्रभवति** | = | உண்டாகிறதோ, |
| **ப்ரப⁴வதி** | | |
| **तस्मादेव** | = | அதனாலேயே, |
| **தஸ்மாதே³வ** | | |
| **त्वमपि** | = | நீயும், |
| **த்வமபி** | | |
| **परमार्थावगमने** | = | மேலான வஸ்துவை அறிந்துகொள்வதில், |
| **பரமார்தா²வக³மனே** | | |
| **कृतारम्भः** | = | முயற்சி ஆரம்பித்துள்ளவனாயிருக்கிறாய், |
| **க்ருதாரம்ப⁴ः** | | |
| **इदं** | = | இது, |
| **இத³ம்** | | |
| **इह** | = | இவ்வுலகில், |
| **இஹ** | | |
| **पुंसां** | = | மனிதர்களுக்கு, |
| **பும்ஸாம்** | | |
| **विवेकस्य** | = | விவேகத்தின், |
| **விவேகஸ்ய** | | |
| **फलम्** | = | பலன். |
| **ப²லம்** | | |

அநேக ஜன்மாக்களின் செய்த ஏராளமான புண்ணிய கர்மாக்களில் பலனாக ஈசுவரனுடைய பிரஸாதம் ஏற்பட்டு அதனாலேயே மனிதர்களுக்கு விவேகம் ஏற்படுகிறது. உனக்கு அந்த விவேகம் ஏற்பட்டிருப்பதால் தான் ஸத்யவஸ்துவான ஆத்மதத்வத்தை அறிந்துகொள்ள முயற்சி செய்கிறாய். இது தான் மனிதர்களுக்கு விவேகத்தின் பலன். **(282)**

**मर्त्यत्वसिद्धेरपि पुंस्त्वसिद्धेः विप्रत्वसिद्धेश्च विवेकसिद्धेः ।**
**वदन्ति मुख्यं फलमेव मोक्षं व्यर्थं समस्तं यदि चेन्न मोक्षः ॥ २८३ ॥**

**மர்த்யத்வஸித்³தே⁴ரபி பும்ஸ்த்வஸித்³தே⁴:**
**விப்ரத்வஸித்³தே⁴ஶ்வ விவேகஸித்³தே⁴: ।**
**வத³ந்தி முக்²யம் ப²லமேவ மோக்ஷம்**
**வ்யர்த²ம் ஸமஸ்தம் யதி³ சேன்ன மோக்ஷ: ॥ 283 ॥**

| | | |
|---|---|---|
| **मर्त्यत्वसिद्धेरपि** மர்த்யத்வஸித்³தே⁴ரபி | = | மனுஷ்யத்தன்மை கிடைத்திருப்பதற்கும், |
| **पुंस्त्वसिद्धेः** பும்ஸ்த்வஸித்³தே⁴: | = | புருஷத்தன்மை கிடைத்திருப்பதற்கும், |
| **विप्रत्वसिद्धेश्च** விப்ரத்வஸித்³தே⁴ஶ்வ | = | பிராமணத்தன்மை கிடைத்ததற்கும், |
| **विवेकसिद्धेः** விவேகஸித்³தே⁴: | = | விவேகம் ஏற்பட்டிருப்பதற்கும், |
| **मुख्यं फलम्** முக்²யம் ப²லம் | = | முக்ய பலனுக, |
| **मोक्षंमेव** மோக்ஷம்மேவ | = | மோக்ஷத்தையே, |
| **वदन्ति** வத³ந்தி | = | சொல்கிறுர்கள், |
| **मोक्षः** மோக்ஷ: | = | மோக்ஷம், |
| **यदि न चेत्** யதி³ ந சேத் | = | ஏற்படாவிட்டால், |
| **समस्तं** ஸமஸ்தம் | = | எல்லாம், |
| **व्यर्थं** வ்யர்த²ம் | = | வீண். |

மனுஷ்யப்பிறவி, அதிலும் புருஷஜன்ம, அதிலும் ப்ராஹ்மண்யம், விவேகம் இத்தனையும் ஏற்பட்டதற்குப்பலன், மோக்ஷம் தான். இவ்வளவும் இருந்தும் மோக்ஷத்தை அடைய ப்ரயத்னம் செய்யாவிடில் அவனுக்கு அத்தனையும் வீண்தான். **(283)**

**प्रश्नः समीचीनतरस्तवायं यदात्मतत्त्वावगमे प्रवृत्तिः।**
**ततस्तवैतत्सकलं समूलं निवेदयिष्यामि मुदा श्रृणुष्व ॥ २८४ ॥**

**ப்ரஶ்ன: ஸமீசீனதரஸ்தவாயம்**
**யதா³த்மதத்த்வாவக³மே ப்ரவ்ருத்தி:।**
**ததஸ்தவைதத்ஸகலம் ஸமூலம்**
**நிவேத³யிஷ்யாமி முதா³ ஶ்ர்ருணுஷ்வ॥ 284 ॥**

**तव** = உன்னுடைய,
**தவ**
**अयं** = இந்த,
**அயம்**
**प्रश्नः** = கேள்வி,
**ப்ரஶ்ன:**
**समीचीनतर** = மிகவும் சிலாக்யமானது,
**ஸமீசீனதர**
**यत्** = எதனல்,
**யத்**
**आत्मतत्त्वावगमे** = ஆத்ம ஸ்வரூபத்தை அறிவதில்,
**ஆத்மதத்த்வாவக³மே**
**प्रवृत्तिः** = (உனக்கு) ப்ரவ்ருத்தி ஏற்பட்டு உள்ளதோ,
**ப்ரவ்ருத்தி:**
**ततः** = அதனல்,
**தத:**
**तव** = உனக்கு,
**தவ**
**मुदा** = ஸந்தோஷத்தோடு,
**முதா³**
**एतत् सकलं** = இது எல்லாவற்றையும்,
**ஏதத் ஸகலம்**
**समूलं** = ஆதியோடு,
**ஸமூலம்**
**निवेदयिष्यामि** = தெரிவிக்கிறேன்.
**நிவேத³யிஷ்யாமி**
**श्रृणुष्व** = கேள்.
**ஶ்ர்ருணுஷ்வ**

உன்னுடைய இந்தக் கேள்வி மிகவும் சிலாக்யமானது ஆத்மாவின் தத்வத்தை அறிந்துகொள்ள நீ பிரவிருத்தி செய்கிறபடியால் உனக்கு அடியிலிருந்து எல்லாவற்றையும் ஸந்தோஷமாகத் தெரிவிக்கிறேன். கேள். **(284)**

**(அவதாரிகை)** முதலில் 275 வது சுலோகத்தில் கேட்ட கேள்விக்கு பதில் கூறுகிறுர்: -

**मर्त्यत्वं त्वयि कल्पितं भ्रमवशात् तेनैव जन्मादयः**
**तत्संभावितमेव दुःखमपि ते नो वस्तुतः तन्मृषा ।**
**निद्रामोहवशात् उपागतसुखं दुःखं च किं नु त्वया**
**सत्यत्वेन विलोकितं क्वचिदपि ब्रूहि प्रबोधागमे ॥ २८५ ॥**

**மர்த்யத்வம் த்வயி கல்பிதம் ப்⁴ரமவஶாத் தேனைவ ஜன்மாத³யஃ**
**தத்ஸம்பா⁴விதமேவ து³ஃக²மபி தே நோ வஸ்துதஃ தன்ம்ருஷா ।**
**நித்³ராமோஹவஶாத் உபாக³தஸுக²ம் து³ஃக²ம் ச கிம் நு த்வயா**
**ஸத்யத்வேன விலோகிதம் க்வசித³பி ப்³ரூஹி ப்ரபோ³தா⁴க³மே ॥ 285 ॥**

| | | |
|---|---|---|
| **त्वयि** த்வயி | = | உன்னிடம், |
| **मर्त्यत्वं** மர்த்யத்வம் | = | மனிதத்தன்மை, |
| **भ्रमवशात्** ப்⁴ரமவஶாத் | = | பிராந்தியினுல், |
| **कल्पितं** கல்பிதம் | = | ஆரோபிக்கப்பட்டிருக்கிறது, |
| **तेनैव** தேனைவ | = | அதனுல்தான், |
| **जन्मादयः** ஜன்மாத³யஃ | = | பிறவி முதலியவைகள், |
| **ते** தே | = | உனக்கு, |
| **दुःखमपि** து³ஃக²மபி | = | துக்கமும், |
| **तत्संभावितमेव** தத்ஸம்பா⁴விதமேவ | = | அதனுல் ஆரோபிக்கப்பட்டதுதான், |
| **वस्तुतः नो** வஸ்துதஃ நோ | = | உண்மையாக இல்லெ, |
| **तत्** தத் | = | அது, |
| **मृषा** ம்ருஷா | = | பொய், |

| | | |
|---|---|---|
| **निद्रामोहवशात्** | = | தூக்கமாகிற மயக்கத்தால், |
| **நித்³ராமோஹவஶாத்** | | |
| **उपागतसुखं** | = | வந்த ஸுகமும், |
| **உபாக³தஸுக²ம்** | | |
| **दु:खं च** | = | துக்கமும், |
| **து³:க²ம் ச** | | |
| **प्रबोधागमे** | = | விழிப்புவந்தபின், |
| **ப்ரபோ³தா⁴க³மே** | | |
| **क्वचिदपि** | = | ஒரு இடத்திலாவது, |
| **க்வசித³பி** | | |
| **त्वया** | = | உன்ஞல், |
| **த்வயா** | | |
| **सत्यत्वेन** | = | உண்மையாக, |
| **ஸத்யத்வேன** | | |
| **किं नु विलोकितं** | = | பார்க்கப்பட்டிருக்கிறதா,? |
| **கிம் நு விலோகிதம்** | | |
| **ब्रूहि** | = | சொல். |
| **ப்³ரூஹி** | | |

மர்த்யத்வம் (மரணமடையும் தன்மை) மனுஷ்யத்தன்மை உனக்கு ஸ்வபாவ த்தில் கிடையாது இது சரீரத்தைச் சேர்ந்தது. பிராந்தியினுல் இதை உன்னிடத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிருய். இதனுல் தான் பிறவி முதலானவைகளும் அவைகள் மூலம் துன்பமும் உன்னிடம் ஏற்படுவதாகத் தோன்றுகிறது. இது எல்லாம் உண்மையல்ல. பொய்தான். இரவில் தூக்கத்தில் சுய அறிவு இழந்த நிஜலயில் ஸுகமும் துக்கமும் உனக்கு ஏற்படுவதாகத் தோன்றுகிறது. ஒரு சமயத்திலாவது விழித்துக்கொண்டபின் அந்த ஸுகதுக்கங்கஜள நீ உண்மையென்று நம்புகிருயா? தூக்கத்தில் காண்பதைப்போலவே விழித்திருக்கும் நிஜலயில் ஏற்படும் துக்கமும் பொய்தான். **(285)**

**नाशेषलोकैरनुभूयमानः प्रत्यक्षतोऽयं सकलप्रपञ्चः ।**
**कथं मृषा स्यादिति शङ्कनीयं विचारशून्येन विमुह्यता त्वया ॥ २८६ ॥**

**நாஶேஷலோகைரனுபூ⁴யமானঃ**
**ப்ரத்யக்ஷதோ(அ)யம் ஸகலப்ரபஞ்சঃ ।**
**கத²ம் ம்ருஷா ஸ்யாதி³தி ஶங்கனீயம்**
**விசாரஶூன்யேன விமுஹ்யதா த்வயா ॥ 286 ॥**

| | | |
|---|---|---|
| **अशेषलोकै** | = | எல்லா ஜனங்களாலும், |
| **அஶேஷலோகை** | | |

| | | |
|---|---|---|
| **प्रत्यक्षत:** <br> **ப்ரத்யக்ஷத꞉** | = | நேராக, |
| **अनुभूयमान:** <br> **அனுபூ⁴யமான꞉** | = | அனுபவிக்கப்படுகிற, |
| **अयं** <br> **அயம்** | = | இந்த, |
| **सकलप्रपञ्च:** <br> **ஸகலப்ரபஞ்ச꞉** | = | எல்லா பிரபஞ்சமும், |
| **कथं** <br> **கத²ம்** | = | எப்படி, |
| **मृषा** <br> **ம்ருஷா** | = | பொய்யாக, |
| **स्यात्** <br> **ஸ்யாத்** | = | ஆகும், |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **विचारशून्येन** <br> **விசாரஶூன்யேன** | = | விசாரமில்லாத, |
| **विमुह्यता** <br> **விமுஹ்யதா** | = | மோஹமடைகிற, |
| **त्वया** <br> **த்வயா** | = | உன்னால், |
| **न शङ्कनीयं** <br> **ந ஶங்கனீயம்** | = | ஸந்தேஹப்படவேண்டாம். |

எல்லா ஜனங்களாலும் பிரத்யக்ஷமாக அனுபவிக்கப்படுகிற இந்த எல்லா பிரபஞ்சமும் எப்படி பொய்யாக இருக்கும் என்று விசாரம் செய்யாமல் மோஹம் கொண்டு மற்றவர்களைப் போல் நீ கேள்வி கேட்க கூடாது. விசாரம் செய்து மோஹத்தை நீக்கியவர்கள் கேட்கமாட்டார்கள். **(286)**

**दिवान्धदृष्टेस्तु दिवान्धकार: प्रत्यक्षसिद्धोऽपि स किं यथार्थ:।**
**तद्वद्भ्रमेणावगत: पदार्थो भ्रान्तस्य सत्य: सुमतेर्मृषैव ॥ २८७ ॥**

**தி³வாந்த⁴த்³ருஷ்டேஸ்து தி³வாந்த⁴கார꞉**
**ப்ரத்யக்ஷஸித்³தோ⁴(அ)பி ஸ கிம் யதா²ர்த²꞉।**
**தத்³வத்³ப்⁴ரமேணாவக³த꞉ பதா³ர்தோ²**
**ப்⁴ராந்தஸ்ய ஸத்ய꞉ ஸுமதேர்ம்ருஷைவ ॥ 287 ॥**

| | | |
|---|---|---|
| **दिवान्धदृष्टेः** **தி³வாந்த⁴த்³ருஷ்டே** | = | பகலில கண் குருடாக உள்ள ஆந்தைக்கு, |
| **दिवान्धकारः** **தி³வாந்த⁴காரः** | = | பகலில் இருட்டு, |
| **प्रत्यक्षसिद्धोऽपि** **ப்ரத்யக்ஷஸித்³தோ⁴(அ)பி** | = | நேரில் கண்டபோதிலும், |
| **सः** **ஸ:** | = | அது, |
| **यथार्थः किं** **யதா²ர்த²ः கிம்** | = | உண்மையா? |
| **तद्वत्** **தத்³வத்** | = | அதுபோலவே, |
| **भ्रमेण** **ப்⁴ரமேண** | = | பிராந்தியால், |
| **अवगतः** **அவக³தः** | = | அறிந்துகொள்ளப்பட்ட, |
| **पदार्थः** **பதா³ர்த²ः** | = | வஸ்து, |
| **भ्रान्तस्य** **ப்⁴ராந்தஸ்ய** | = | மோஹமுள்ளவனுக்கு, |
| **सत्यः** **ஸத்யः** | = | உண்மை, |
| **सुमतेस्तु** **ஸுமதேஸ்து** | = | நல்ல புத்தியுள்ளவனுக்கோவெனில், |
| **मृषैव** **ம்ருஷைவ** | = | பொய்தான். |

பகலில் குருட்டுக்கண்ணுள்ள ஆந்தைக்கு பகலில் இருட்டு பிரத்யக்ஷமாகத் தெரிந்தபோதிலும் அந்த இருட்டு வாஸ்தவமாகி விடுமா? அது போலவே, பிரமத்தினுல் காணப்படும் பதார்த்தம் பிராந்தனுக்கு ஸத்யமாகத்தோன்றிய போதிலும் பிராந்தியில்லாத நல்ல புத்தியுள்ளவனுக்குப் பொய் தான். **(287)**

**घटोऽयमित्यत्र घटाभिधानः प्रत्यक्षतः कश्चिदुदेति दृष्टेः ।**
**विचार्यमाणे स तु नास्ति तत्र मृदस्ति तद्भावविलक्षणा सा ॥ २८८ ॥**

**க⁴டோ(அ)யமித்யத்ர க⁴டாபி⁴தா⁴னः**
**ப்ரத்யக்ஷதः கஶ்சிது³தே³தி த்³ருஷ்டேः ।**
**விசார்யமாணே ஸ து நாஸ்தி தத்ர**
**ம்ருத³ஸ்தி தத்³பா⁴வவிலக்ஷணா ஸா ॥ 288 ॥**

| | | |
|---|---|---|
| **अयं घटः** | = | இது குடம், |
| **அயம் க⁴டः** | | |
| **इत्यत्र** | = | என்ற இடத்தில், |
| **இத்யத்ர** | | |
| **घटाभिधानः** | = | குடம் என்ற பெயருள்ள, |
| **க⁴டாபி⁴தா⁴னः** | | |
| **कश्चित्** | = | ஒரு பொருள், |
| **கஶ்சித்** | | |
| **प्रत्यक्षतः** | = | நேராக, |
| **ப்ரத்யக்ஷதः** | | |
| **दृष्टेः** | = | கண் பார்வைக்கு, |
| **த்³ருஷ்டேः** | | |
| **उदेति** | = | தோன்றுகிறது, |
| **உதே³தி** | | |
| **विचार्यमाणे** | = | நன்கு ஆராய்ந்து பார்க்கும்பொழுது, |
| **விசார்யமாணே** | | |
| **स तु** | = | அந்த குடமோவெனில், |
| **ஸ து** | | |
| **तत्र** | = | அங்கு, |
| **தத்ர** | | |
| **नास्ति** | = | இல்லை, |
| **நாஸ்தி** | | |
| **मृत** | = | மண்தான், |
| **ம்ருத** | | |
| **अस्ति** | = | இருக்கிறது, |
| **அஸ்தி** | | |
| **सा** | = | அந்த மண், |
| **ஸா** | | |
| **तद्भावविलक्षणा** | = | குடத்தன்மையைக்காட்டிலும் மாறுபட்ட |
| **தத்³பா⁴வவிலக்ஷணா** | | லக்ஷணமுள்ளது. |

"இது குடம்" என்கிற இடத்தில் குடமென்ற பெயருள்ள ஒரு பதார்த்தம் கண்ணுக்கு பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. ஆனால் நன்கு விசாரித்துப் பார்த்தால் அங்கே அவ்வித பதார்த்தமே கிடையாது. மண்தான் இருக்கிறது. அது குடத்தின் தன்மைக்கு மாறுபட்ட தன்மையுள்ளது. **(288)**

**प्रादेशमात्रः परिदृश्यतेऽर्कः शास्त्रेण संदर्शितलक्ष योजनः ।**
**मानान्तरेण कचिदेति बाधां प्रत्यक्षमप्यत्र हि न व्यवस्था ॥ २८९ ॥**

**ப்ராதே³ஶமாத்ர: பரித்³ருஶ்யதே(அ)ர்க:**
**ஶாஸ்த்ரேண ஸந்த³ர்ஶிதலக்ஷ யோஜன: ।**
**மானாந்தரேண கசிதே³தி பா³தா⁴ம்**
**ப்ரத்யக்ஷமப்யத்ர ஹி ந வ்யவஸ்தா² ॥ 289 ॥**

| | | |
|---|---|---|
| **शास्त्रेण** ஶாஸ்த்ரேண | = | வான சாஸ்திரத்தால், |
| **संदर्शितलक्ष योजनः** ஸந்த³ர்ஶிதலக்ஷ யோஜன: | = | லக்ஷம் யோஜன விஸ்தாரமுள்ளதாக காட்டப்படும், |
| **अर्कः** அர்க: | = | ஸூரியன், |
| **प्रादेशमात्रः** ப்ராதே³ஶமாத்ர: | = | ஒட்டச்சாண் அகலமுள்ளதாகத்தான், |
| **परिदृश्यते** பரித்³ருஶ்யதே | = | காணப்படுகிறுன், |
| **प्रत्यक्षमपि** ப்ரத்யக்ஷமபி | = | பிரத்யக்ஷமும், |
| **कचित्** கசித் | = | சில இடத்தில், |
| **मानान्तरेण** மானாந்தரேண | = | வேறு பிரமாணத்தால், |
| **बाधां एति** பா³தா⁴ம் ஏதி | = | பாதிக்கப்படுகிறது, |
| **अत्र** அத்ர | = | இவ்விஷயத்தில், |
| **व्यवस्था नहि** வ்யவஸ்தா² நஹி | = | தீர்மானம் இல்லையல்லவா! |

நம் கண்ணுக்கு ஒட்டச் சாண் அகல முள்ளதாகத்தான் ஸூரியன் தெரிகிறது. ஆனுல் வானசாஸ்திரமோ ஸூரிய மண்டலம் லக்ஷம் யோஜன விஸ்தார முள்ளதாகக் கூறுகிறது. ஆகையால் பிரத்யக்ஷமும் சிலஸமயங்களில் வேறு பிரமாணத்தினுல் பாதிக்கப்பட்டு விடுகிறது, இவ்விஷயத்தில் இப்படித்தான் என்ற தீர்மானம் கிடையாது என்பது பிரஸித்தம். **(289)**

**तस्मात्त्वयीदं भ्रमतः प्रतीतं मृषैव नो सत्यमवेहि साक्षात् ।**
**ब्रह्म त्वमेवासि सुखस्वरूपं त्वत्तो न भिन्नं विचिनुष्व बुद्धौ ॥ २९० ॥**

**தஸ்மாத்த்வயீத³ம் ப்⁴ரமத꞉ ப்ரதீதம்**
**ம்ருஷைவ நோ ஸத்யமவேஹி ஸாக்ஷாத் ।**
**ப்³ரஹ்ம த்வமேவாஸி ஸுக²ஸ்வரூபம்**
**த்வத்தோ ந பி⁴ன்னம் விசினுஷ்வ பு³த்³தௌ⁴ ॥ 290 ॥**

**तस्मात्** = ஆகையினுல்,
**தஸ்மாத்**
**त्वयिं** = உன்னிடம்,
**த்வயிம்**
**भ्रमतः** = பிராந்தியினுல்,
**ப்⁴ரமத꞉**
**प्रतीतं** = தோன்றின,
**ப்ரதீதம்**
**इदं** = இது,
**இத³ம்**
**मृषैव** = பொய்தான்,
**ம்ருஷைவ**
**नो सत्यम्** = உண்மையல்ல,
**நோ ஸத்யம்**
**अवेहि** = அறிந்துகொள்,
**அவேஹி**
**त्वं** = நீ,
**த்வம்**
**सुखस्वरूपं** = ஆனந்த ரூபமான,
**ஸுக²ஸ்வரூபம்**
**साक्षात् ब्रह्मत्वमेवासि** = ஸாக்ஷாத்ப்ரஹ்மமாகவே இருக்கிறாய், (அது)
**ஸாக்ஷாத் ப்³ரஹ்மத்வமேவாஸி**
**त्वत्तः** = உன்ஐனக்காட்டிலும்,
**த்வத்த꞉**
**न भिन्नं** = வேறுனதல்ல,
**ந பி⁴ன்னம்**
**बुद्धौ** = புத்தியில்,
**பு³த்³தௌ⁴**
**विचिनुष्व** = ஆராய்ந்துபார்.
**விசினுஷ்வ**

ஆகையால் இது எல்லாம் உன்னிடத்தில் பிரமத்தால் தோன்றுபவை, ஆதலால் பொய் தான், ஸத்யமில்லை, நீ ஸாக்ஷாத்தாக ஆனந்த ஸ்வரூபமாயுள்ள பிரஹ்மம் தான், என்று தெரிந்துகொள். அதுஉன்னை விட்டு வேறுபட்டதல்ல. புத்தியில் இதை நன்கு பரிசீலனை செய்து பார். **(290)**

**लोकान्तरे वाऽत्र गुहान्तरे वा तीर्थान्तरे कर्म परंपरान्तरे ।**
**शास्त्रान्तरे नास्त्यनुपश्यतामिह स्वयं परं ब्रह्म विचार्यमाणे ॥ २९१ ॥**

**லோகாந்தரே வா(அ)த்ர கு³ஹாந்தரே வா**
**தீர்தா²ந்தரே கர்ம பரம்பராந்தரே ।**
**ஶாஸ்த்ராந்தரே நாஸ்த்யனுபஶ்யதாமிஹ**
**ஸ்வயம் பரம் ப்³ரஹ்ம விசார்யமாணே ॥ 291 ॥**

(பிரஹ்மமானது)

**लोकान्तरे वा** = வேறு உலகத்திலோ,
**லோகாந்தரே வா**
**अत्र** = இந்த உலகத்தில்,
**அத்ர**
**गुहान्तरे** = குஹைக்குள்ளோ,
**கு³ஹாந்தரே**
**तीर्थान्तरे** = புண்ய தீர்த்தங்களின் மத்தியிலோ,
**தீர்தா²ந்தரே**
**कर्म परंपरान्तरे** = கர்மாக்களின் வரிசையின் நடுவிலோ,
**கர்ம பரம்பராந்தரே**
**शास्त्रान्तरे** = சாஸ்திரங்களின் நடுவிலோ,
**ஶாஸ்த்ராந்தரே**
**नास्ति** = இல்லை,
**நாஸ்தி**
**विचार्यमाणे** = விசாரித்துப் பார்க்கும்பொழுது,
**விசார்யமாணே**
**इह** = இங்கு,
**இஹ**
**अनुपश्यतां** = கவனித்துப்பார்க்கிறவர்களுக்கு,
**அனுபஶ்யதாம்**
**स्वयं** = தானே,
**ஸ்வயம்**
**परं ब्रह्म** = பர ப்ரஹ்மம்.
**பரம் ப்³ரஹ்ம**

அந்த பிரஹ்மம் வேறு உலகத்திலோ, இவ்வுலகில் குஹைக்குள்ளோ தீர்த்தங்களின் மத்தியிலோ, கர்மாக்களின் வரிசையின் மத்தியிலோ, சாஸ்திரங்க ளுக்குள்ளேயோ, இல்லை. இங்கேயே அதைத்தேடிப்பார்ப்பவர்களுக்கு விசாரித்துப் பார்க்கும் போது தானே தான் அந்த மேலான பிரஹ்மம் என்பது துலங்கும். **(291)**

**तत्त्वमात्मस्थमज्ञात्वा मूढः शास्त्रेषु पश्यति ।**
**गोपः कक्षगतं छागं यथा कूपेषु दुर्मतिः॥ २९२ ॥**

**தத்த்வமாத்மஸ்த2மஜ்ஞாத்வா மூட4: ஶாஸ்த்ரேஷு பஶ்யதி ।**
**கோ3ப: கக்ஷக3தம் சா2க3ம் யதா2 கூபேஷு து3ர்மதி: ॥ 292 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா2** | = | எப்படி, |
| **दुर्मतिः**<br>**து3ர்மதி:** | = | முட்டாளான, |
| **गोपः**<br>**கோ3ப:** | = | இடையன், |
| **छागं**<br>**சா2க3ம்** | = | ஆட்டுக்குட்டி, |
| **कक्षगतं**<br>**கக்ஷக3தம்** | = | கஷ்கத்திலிருப்பதை, |
| **अज्ञात्वा**<br>**அஜ்ஞாத்வா** | = | தெரிந்து கொள்ளாமல், |
| **कूपेषु**<br>**கூபேஷு** | = | கிணறுகளில், |
| **पश्यति**<br>**பஶ்யதி** | = | பார்க்கிறானே (அதுபோல), |
| **मूढः**<br>**மூட4:** | = | முட்டாள், |
| **तत्वं**<br>**தத்வம்** | = | தத்வமானது, |
| **आत्प्रस्थं**<br>**ஆத்ப்ரஸ்த2ம்** | = | தன்னிடத்திலேயே இருப்பதை, |
| **अज्ञात्वा**<br>**அஜ்ஞாத்வா** | = | அறிந்துகொள்ளாமல், |
| **शास्त्रेषु**<br>**ஶாஸ்த்ரேஷு** | = | சாஸ்திரங்களில், |

**पश्यति** = பார்க்கிறுன்.
**பஶ்யதி**

எப்படி முட்டாளான இடையன் தன் கஷ்கத்தில் ஆட்டுக் குட்டியிருப்பதை மறந்து அதைத் தேடியஂலந்து கடைசியில் கிணறுகளில் குனிந்து பார்த்து (கிணற்றில் தோன்றும் பிரதி பிம்பத்தைப் பார்த்து) ஆட்டுக்குட்டி அங்கே இருப்பதாக நிஜனக்கிறுஞே, அதேமாதிரி தத்வம் தன்னிடமே யிருக்கிறதென்பதை தெரிந்துகொள்ளாமல் அறிவற்றவன் சாஸ்திரங்களில் தேடிப் பார்க்கிறுன். **(292)**

**स्वमात्मानं परं मत्वा परमात्मानमन्यथा ।**
**विमृग्यते पुनः स्वात्मा बहिः कोशेषु पण्डितैः ॥ २९३ ॥**

**ஸ்வமாத்மானம் பரம் மத்வா பரமாத்மானமன்யதா² ।**
**விம்ருக்³யதே புனஃ ஸ்வாத்மா ப³ஹிஃ கோஶேஷு பண்டி³தைஃ ॥ 293 ॥**

**स्वमात्मानं** = தனது ஆத்மாவை,
**ஸ்வமாத்மானம்**
**परं** = வேருகவும்,
**பரம்**
**परमात्मानं** = பரமாத்மாவை,
**பரமாத்மானம்**
**अन्यथा** = வேறுவிதமாகவும்,
**அன்யதா²**
**मत्वा** = எண்ணி,
**மத்வா**
**पुनः** = பிறகு,
**புனஃ**
**पण्डितैः** = பண்டிதர்களால்,
**பண்டி³தைஃ**
**बहिः** = வெளியே,
**ப³ஹிஃ**
**कोशेषु** = புஸ்தக கோசங்களில்,
**கோஶேஷு**
**स्वात्मा** = தனது ஆத்மா,
**ஸ்வாத்மா**
**विमृग्यते** = தேடப்படுகிறது.
**விம்ருக்³யதே**

தன்னுடைய ஆத்மாவை வேறான சரீராதிகளாக எண்ணி பரமாத்மாவையும் வேறு விதமாக நினைத்துப் பின்னர் பண்டிதர்கள் வெளியில் புஸ்தக கோசங்களில் (அல்லது அந்நமயாதி கோசங்களில்) தனது ஆத்மாவைத் தேடுகிறார்கள். **(293)**

**विस्मृत्य वस्तुनस्तत्त्वमध्यारोप्य च वस्तुनि ।**
**अवस्तुतां च तद्धर्मान्मुधा शोचति नान्यथा ॥ २९४ ॥**

**விஸ்ம்ருத்ய வஸ்துனஸ்தத்த்வமத்⁴யாரோப்ய ச வஸ்துனி ।**
**அவஸ்துதாம் ச தத்³த⁴ர்மான்முதா⁴ ஶோசதி நான்யதா² ॥ 294 ॥**

| | | |
|---|---|---|
| **वस्तुनः** வஸ்துனः | = | வஸ்துவின், |
| **तत्वं** தத்வம் | = | உண்மைஸ்வரூபத்தை, |
| **विस्मृत्य** விஸ்ம்ருத்ய | = | மறந்து, |
| **वस्तुनि** வஸ்துனி | = | வஸ்துவில், |
| **अवस्तुतां** அவஸ்துதாம் | = | வஸ்துவல்லாத பொய்ப் பொருள்களின் தன்மையையும், |
| **तद्धर्मान् च** தத்³த⁴ர்மான் ச | = | அதன் தர்மங்களையும், |
| **अध्यारोप्य** அத்⁴யாரோப்ய | = | ஆரோபம் செய்து, |
| **मुधा** முதா⁴ | = | வீணாக, |
| **शोचति** ஶோசதி | = | துன்புறுகிறான், |
| **न अन्यथा** ந அன்யதா² | = | வேறுவிதமாக இல்லை. |

வஸ்துவினுடைய உண்மை ஸ்வரூபத்தை மறந்து, வஸ்துவினிடத்தில் பொய்ப்பொருளின் தன்மையையும் அதன் தர்மங்களையும் ஏற்றிவைத்துவிட்டு வீணாக சோகத்தை யடைகிறான். இதைத்தவிர வேறில்லை. **(294)**

**आत्मानात्मविवेकं ते वक्ष्यामि शृणु सादरम् ।**
**यस्य श्रवणमात्रेण मुच्यतेऽनात्मबन्धनात् ॥ २९५ ॥**

**ஆத்மாஞத்மவிவேகம் தே வக்ஷ்யாமி ஶ்ருணு ஸாத³ரம் ।
யஸ்ய ஶ்ரவணமாத்ரேண முச்யதே(அ)ஞத்மப³ந்த⁴ஞத் ॥ 295 ॥**

| | | |
|---|---|---|
| **यस्य** யஸ்ய | = | எதை, |
| **श्रवणमात्रेण** ஶ்ரவணமாத்ரேண | = | கேட்பதாலேயே, |
| **अनात्मबन्धनात्** அஞத்மப³ந்த⁴ஞத் | = | அநாத்மக்கட்டிலிருந்து, |
| **मुच्यते** ச்யதே | = | விடுபடுகிருஞே (அந்த), |
| **आत्मानात्मविवेकं** ஆத்மாஞத்மவிவேகம் | = | ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்துத் தெரிந்துகொள்ளும் பிரகாரத்தை, |
| **ते** தே | = | உனக்கு, |
| **वक्ष्यामि** வக்ஷ்யாமி | = | சொல்கிறேன், |
| **सादरं** ஸாத³ரம் | = | ஆதரவுடன், |
| **शृणु** ஶ்ருணு | = | கேள். |

ஆத்மாவையும் அநாத்மாவையும் நன்கு பிரித்துத் தெரிந்து கொள்ளும் பிரகாரத்தை உனக்குச் சொல்கிறேன் கவனமாகக் கேள். இதை கேட்டமாத்திரத்தில் அநாத்மாவின் பந்தத்திலிருந்து விடுபடுவான். **(295)**

## इत्युक्त्वाऽभिमुखीकृत्य शिष्यं करुणया गुरुः ।
## अध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपञ्चयन् ॥ २९६ ॥

**இத்யுக்த்வா(அ)பி⁴முகீ²க்ருத்ய ஶிஷ்யம் கருணயா கு³ரு꞉ ।
அத்⁴யாரோபாபவாதா³ப்⁴யாம் நிஷ்ப்ரபஞ்சம் ப்ரபஞ்சயன் ॥ 296 ॥**

## सम्यक् प्राबोधयत् तत्वं शास्त्रदृष्टेन वर्त्मना ।
## सर्वेषामुपकाराय तत्प्रकारोऽत्र दर्श्यते ॥ २९७ ॥

**ஸம்யக் ப்ராபோ³த⁴யத் தத்வம் ஶாஸ்த்ரத்³ருஷ்டேன வர்த்மனா ।
ஸர்வேஷாமுபகாராய தத்ப்ரகாரோ(அ)த்ர த³ர்ஶ்யதே ॥ 297 ॥**

| | | |
|---|---|---|
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **उक्त्वा** | = | சொல்லி, |
| **உக்த்வா** | | |
| **गुरुः** | = | குரு, |
| **கு³ருः** | | |
| **करुणया** | = | கிருபையால், |
| **கருணயா** | | |
| **शिष्यं** | = | சிஷ்யனை, |
| **ஶிஷ்யம்** | | |
| **अभिमुखीकृत्य** | = | கவனிக்கும்படி செய்து, |
| **அபி⁴முகீ²க்ருத்ய** | | |
| **शास्त्रदृष्टेन** | = | சாஸ்திரத்தில் காட்டப்பட்ட, |
| **ஶாஸ்த்ரத்³ருஷ்டேன** | | |
| **वर्त्मना** | = | வழியாக, |
| **வர்த்மனா** | | |
| **निष्प्रपञ्चं** | = | பிரபஞ்ச ஸம்பந்தமில்லாத, |
| **நிஷ்ப்ரபஞ்சம்** | | |
| **तत्वं** | = | தத்வத்தை, |
| **தத்வம்** | | |
| **अध्यारोपापवादाभ्यां** | = | ஆரோபம் (ஏற்றுவது) அபவாதம் (நீக்குவது) |
| **அத்⁴யாரோபாபவாதா³ப்⁴யாம்** | | இவைகளால், |
| **प्रपञ्चयन्** | = | விரிவாக விளக்கிக்கொண்டு, |
| **ப்ரபஞ்சயன்** | | |
| **सम्यक्** | = | நன்றாக, |
| **ஸம்யக்** | | |
| **प्राबोधयत्** | = | போதித்தார், |
| **ப்ராபோ³த⁴யத்** | | |
| **सर्वेषां** | = | எல்லோருக்கும், |
| **ஸர்வேஷாம்** | | |
| **उपकाराय** | = | உபகாரத்தின் பொருட்டு, |
| **உபகாராய** | | |
| **तत्प्रकारः** | = | அந்த முறை, |
| **தத்ப்ரகாரः** | | |
| **अत्र** | = | இங்கு, |
| **அத்ர** | | |

**दर्श्यते** = காட்டப்படுகிறது.

**த³ர்ஶ்யதே**

இவ்விதமாகச்சொல்லி சிஷ்யனை நன்கு கவனிக்கச் செய்து குருவானவர் கருணையோடுகூட எவ்வித விஸ்தாரமுமில்லாத பிரஹ்மதத்வத்தை, சாஸ்திரத்தில் கண்டிருக்கும் முறைப்படி, அத்யாரோபம், அபவாதம் ஆகிய இருவகையாகவும் விஸ்தரித்து நன்கு போதித்தார். எல்லோருக்கும் உபகாரமாயிருக்கும் பொருட்டு அந்த முறை இங்கு காட்டப்படுகிறது. **(296-297)**

(**அவதாரிகை**) முதலில் அத்யாரோபம் என்பது என்ன வென்று சொல்லி விட்டு, அதன் மூலமாய் எப்படி பிரஹ்மத்தை யறியலாமென்று விஸ்தாரமாய் எடுத்துச்சொல்ல ஆரம்பிக்கிறார்: -

**वस्तुन्यवस्त्वारोपो यः सोऽध्यारोप इतीर्यते ।**
**असर्पभूते रज्ज्वादौ सर्पत्वारोपणं यथा ॥ २९८ ॥**

**வஸ்துன்யவஸ்த்வாரோபோ யஃ ஸோ(அ)த்⁴யாரோப இதீர்யதே ।**
**அஸர்பபூ⁴தே ரஜ்ஜ்வாதௌ³ ஸர்பத்வாரோபணம் யதா² ॥ 298 ॥**

**वस्तुनि** = உண்மைப்பொருளில்,

**வஸ்துனி**

**अवस्त्वारोपः** = உண்மையில்லாத பொருளை ஏற்றுவது,

**அவஸ்த்வாரோபஃ**

**यः** = எதுவோ,

**யஃ**

**सः** = அது,

**ஸஃ**

**अध्यारोपः** = அத்யாரோபம்,

**அத்⁴யாரோபஃ**

**इति** = என்று,

**இதி**

**ईर्यते** = சொல்லப்படுகிறது,

**ஈர்யதே**

**असर्पभूते** = பாம்பாக இல்லாத,

**அஸர்பபூ⁴தே**

**रज्ज्वादौ** = கயிறு முதலியவற்றில்,

**ரஜ்ஜ்வாதௌ³**

**सर्पत्वारोपणं यथा** = பாம்புத் தன்மையை ஆரோபம் செய்வதுபோல்.

**ஸர்பத்வாரோபணம் யதா²**

ஸர்பமாக இல்லாத கயிறு முதலியவற்றில் ஸர்பமாயிருக்கும் தன்மையை ஏற்றுவது எப்படியோ, அதேபோல வஸ்துவில் வஸ்துவல்லாததை ஏற்றுவது அத்யாரோபம் எனப்படுகிறது. **(298)**

## वस्तु तावत् परं ब्रह्म सत्यज्ञानादिलक्षणम् ।
## इदं आरोपितं यत्र भाति खे नीलतादिवत् ॥ २९९ ॥

**வஸ்து தாவத் பரம் ப்³ரஹ்ம ஸத்யஜ்ஞாநாதி³லக்ஷணம் ।**
**இத³ம் ஆரோபிதம் யத்ர பா⁴தி கே² நீலதாதி³வத் ॥ 299 ॥**

**खे** = ஆகாசத்தில்,
**கே²**
**नीलतादिवत्** = நீல நிறமாயிருக்கும் தன்மை முதலியது போல்,
**நீலதாதி³வத்**
**इदं** = இந்த பிரபஞ்சம்,
**இத³ம்**
**यत्र** = எதில்,
**யத்ர**
**आरोपितं** = ஆரோபிக்கப்பட்டு,
**ஆரோபிதம்**
**भाति** = தோன்றுகிறதோ (அந்த),
**பா⁴தி**
**सत्यज्ञानादिलक्षणम्** = ஸத்யம் ஞானம் முதலியவற்றை
**ஸத்யஜ்ஞாநாதி³லக்ஷணம்** ஸ்வரூபமாகக்கொண்ட,
**परं ब्रह्म** = பரப்ரஹ்மம்,
**பரம் ப்³ரஹ்ம**
**वस्तु तावत्** = வஸ்து என்பது.
**வஸ்து தாவத்**

இங்கே வஸ்து என்பது ஸத்யம் (முக்காலத்திலும் மாறுமலிருப்பது) ஞானம் (சித்ரூபம்) முதலான லக்ஷணங்களையுடைய பரப்ரஹ்மம். ஆகாசத்தில் நீலமாயிருக்கும் தன்மை முதலியது ஏற்றப்படுவதுபோல இந்த பிரஹ்மத்தினிடத்தில் இந்த ஜகத்தானது ஏற்றப்பட்டு விளங்குகிறது. **(299)**

## तत्कारणं यदज्ञानं सकार्यं सद्विलक्षणम्।
## अवस्त्वित्युच्यते सद्भिर्यस्य बाधा प्रदृश्यते ॥ ३०० ॥

**தத்காரணம் யத³ஜ்ஞானம் ஸகார்யம் ஸத்³விலக்ஷணம்।**
**அவஸ்த்வித்யுச்யதே ஸத்³பி⁴ர்யஸ்ய பா³தா⁴ ப்ரத்³ருஶ்யதே ॥ 300 ॥**

**कारणं** = காரணமாயும்,

**காரணம்**

**सकार्यं** = கார்யங்களோடு கூடினதாயும்,

**ஸகார்யம்**

**सद्विलक्षणं** = ஸத்ஸ்வரூபச்கைசகாட்டிலும் விலக்ஷணமாயும் உள்ள,

**ஸத்³விலக்ஷணம்**

**यत् अज्ञानं** = எந்த அக்ஞானமுண்டோ,

**யத் அஜ்ஞானம்**

**तत्** = அது,

**தத்**

**अवस्तु** = அவஸ்து,

**அவஸ்து**

**इति** = என்று,

**இதி**

**सद्भिः** = ஸாதுக்களால்,

**ஸத்³பி⁴:**

**उच्यते** = சொல்லப்படுகிறது,

**உச்யதே**

**यस्य** = எதற்கு,

**யஸ்ய**

**बाधा** = பாதமானது,

**பா³தா⁴**

**प्रदृश्यते** = காணப்படுகிறதோ.

**ப்ரத்³ருஶ்யதே**

அவ்விதம் ஏற்றப்படுவதற்கு காரணமாயும், ஸத் வஸ்துவின் லக்ஷணத்திற்கு மாறுன லக்ஷணத்தையுடையதாயும் உள்ள அக்ஞானமும் அதன் காரியங்களும் அவஸ்து என்று கூறப்படுகிறது இது பின்ஞல் பாதிக்கப்பட்டு விடும். அதாவது இல்லை என்று ஆகிவிடும். **(300)**

## अवस्तु तत्प्रमाणैर्यद्बाध्यते शुक्तिरौप्यवत् ।
## न बाध्यते यत्तद्वस्तु त्रिषु कालेषु शुक्तिवत् ॥ ३०१ ॥

**அவஸ்து தத்ப்ரமாணைர்யத்³பா³த்⁴யதே ஶுக்திரௌப்யவத்।**
**ந பா³த்⁴யதே யத்தத்³வஸ்து த்ரிஷு காலேஷு ஶுக்திவத் ॥ 301 ॥**

## शुक्तेर्बाधा न खल्वस्ति रजतस्य यथा तथा ।

**ஶுக்தேர்பா³தா⁴ ந க²ல்வஸ்தி ரஜதஸ்ய யதா² ததா² ।**

| | | |
|---|---|---|
| **शुक्तिरौप्यवत्**<br>**ஶுக்திரௌப்யவத்** | = | கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல், |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **प्रमाणैः**<br>**ப்ரமாணை:** | = | ப்ரமாணங்களால், |
| **बाध्यते**<br>**பா³த்⁴யதே** | = | பாதிக்கப்படுகிறதோ (இல்லாமல் போய் விடுகிற தோ), |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **अवस्तु**<br>**அவஸ்து** | = | அவஸ்துவாகும், |
| **शुक्तिवत्**<br>**ஶுக்திவத்** | = | கிளிஞ்சல்போல், |
| **त्रिषु कालेषु**<br>**த்ரிஷு காலேஷு** | = | மூன்று காலங்களிலும், |
| **यत्**<br>**யத்** | = | எது, |
| **न बाध्यते**<br>**ந பா³த்⁴யதே** | = | பாதிக்கப்படுவதில்லையோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **वस्तु**<br>**வஸ்து** | = | வஸ்துவாகும், |
| **यथा रजतस्य**<br>**யதா² ரஜதஸ்ய** | = | வெள்ளிக்கு எப்படியோ, |
| **तथा**<br>**ததா²** | = | அப்படி, |
| **शुक्तेः**<br>**ஶுக்த:** | = | கிளிஞ்சலுக்கு, |
| **बाधा**<br>**பா³தா⁴** | = | பாதமானது, |
| **न खल्वस्ति**<br>**ந க²ல்வஸ்தி** | = | இல்லையல்லவா. |

எது பிரமாணங்களினுல் பாதிக்கப்படுகிறதோ, இல்லை யென்று ஏற்படுகிறதோ அது அவஸ்து, சிப்பியில் தோன்றும் வெள்ளியைப்போல. எது மூன்று காலங்களி

லும் பாதிக்கப்படவில்லையோ ஒருக்காலும் இல்லை என்று ஆவதில்லையோ - அது வஸ்து, சிப்பியைப்போல வெள்ளிக்கு எப்படி பாதமானது ஏற்படுகிறதோ அப்படி சிப்பிக்கு பாதம் ஏற்படுவதில்லை யல்லவா?

சிப்பியில் தோன்றும் வெள்ளி தோன்றுவதற்கு முன் இல்லை, சிப்பின் தத்வம் தெரிந்த பிறகும் இல்லை, தோன்றும்போதும் வாஸ்தவத்தில் இல்லை. இவ்விதமாக பாதிக்கப்படுகிறபடியால், அது அவஸ்து என்று சொல்லப்படுகிறது. முன், பின், மத்ய காலங்கள் மூன்றிலும் சிப்பி அப்படியே யிருப்பதால், அதை வஸ்து என்கிறுர்கள்.

**(301)**

## अवस्तुसंज्ञितं यत् तत् जगदध्यासकारणम् ॥ ३०२ ॥

**அவஸ்துஸஞ்ஜ்ஞிதம் யத் தத் ஜக³த³த்⁴யாஸகாரணம் ॥ 302 ॥**

## सदसद्भ्यां अनिर्वाच्यं अज्ञानं त्रिगुणात्मकम् ।
## वस्तुतत्वावबोधकवाध्यं तत् भावलक्षणम् ॥ ३०३ ॥

**ஸத³ஸத்³ப⁴யாம் அநிர்வாச்யம் அஜ்ஞானம் த்ரிகு³ணாத்மகம் ।**
**வஸ்துதத்வாவபோ³த⁴கவாத்⁴யம் தத் பா⁴வலக்ஷணம் ॥ 303 ॥**

**यत्** = எது,
**யத்**

**अवस्तुसंज्ञितं** = அவஸ்து என்று பெயருள்ளதோ,
**அவஸ்துஸஞ்ஜ்ஞிதம்**

**जगदध्यासकारणम्** = (பிரஹ்மத்தில) பிரபஞ்சம் தோன்றுவதற்குக்
**ஜக³த³த்⁴யாஸகாரணம்** காரணம்,

**तत्** = அந்தககாரணமான,
**தத்**

**अज्ञानं** = அக்ஞானமானது,
**அஜ்ஞானம்**

**सदसद्भ्यां** = ஸத் (இருக்கிறது) என்றே அஸத் (இல்லாதது)
**ஸத³ஸத்³ப⁴யாம்** என்றே,

**अनिर्वाच्यं** = விளக்கிக்கூற முடியாதது,
**அநிர்வாச்யம்**

**त्रिगुणात्मकम्** = முக்குண வடிவமாயுள்ளது,
**த்ரிகு³ணாத்மகம்**

**वस्तुतत्वावबोधकवाध्यं** = வஸ்துவின் உண்மைத்தன்மையை அறிவது
**வஸ்துதத்வாவபோ³த⁴கவாத்⁴யம்** ஒன்றுலேயே பாதிக்கத்தக்கது,

**भावलक्षणम्** = பாவஸ்வரூபமானது,
**பா⁴வலக்ஷணம்**

எது அவஸ்து என்ற பெயருடையதோ, அதுதான் பிரஹ்மத்தினிடத்தில் ஜகத் தோன்றுவதற்குக் காரணம். அந்தக் காரணமாகிய அக்ஞானம் என்பது இருக்கிறது என்றே இல்லை யென்றே நிர்வசனம் செய்ய முடியாதது. மூன்று குணங்களை (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவைகளை) ஸ்வரூபமாகவுடையது. வஸ்துவின் தத்வத்தினுடைய ஞானமொன்றினுல் தான் பாதிக்கப்படும். அது இருக்கும் தன்மை யுடையது.

எது மூன்று காலங்களிலும் இருக்கிறதோ அதைத்தான். வாஸ்தவமாக "இருக்கிறது" என்று சொல்லலாம். இவ்வக்ஞானம் ஞானம் வந்தவுடன் மறைந்து விடுகிறபடியால் இதை "இருக்கிறது" என்று சொல்ல முடியவில்லை, எது மூன்று காலங்களிலும் இல்லவேயில்லையோ, முயல் கொம்பு மாதிரி அதைத்தான் வாஸ்த வமாக "இல்லை" என்று சொல்லலாம். இவ்வக்ஞானத்தினுல் பலவித கார்யங்கள் ஏற்படுகிற படியால் இதை "இல்லை" என்று சொல்லவும் முடியவில்லை. வாஸ்தவத்தில் மூன்று காலங்களிலும் இல்லாமலிருந்த போதிலும் மத்தியில் இருப்பது போல் தோன்றும் வாய்ப்பு இதற்கு இருப்பதால் இதை "இருக்கிறது" என்பதில் சேர்க்க முடியாமலும் "இல்லை" என்பதில் சேர்க்கமுடியாமலும் இருக்கிற தனி பதார்த்தமாக கணக்கிடவேண்டியிருக்கிறது. முயல் கொம்புபோல அத்யந்தம் இல்லை யென்பதற்கில்லாததினுல் இதை "அபாவம்" என்று சொல்ல முடியாது. இதற்கும் கார்யங்கள் இருப்பதினுல் இதையும் "பாவ" பதார்த்தமாகவே கருதவேண்டி யிருக்கிறது. ஆனுலும் இதனுடைய இருப்பு முக்காலங்களிலும் பாதிக்கப்படாத இருப்பு ஆகாது. **(302-303)**

**(அவதாரிகை)** இந்த அக்ஞானம் எங்கேயிருக்கிறது, எப்படியிருக்கிறது, என்று மேல் சுலோகத்தில் சொல்கிறுர்: -

**मिथ्यासंबन्धतस्तत्र ब्रह्मण्याश्रित्य तिष्ठति ।**
**मणौ शक्तिर्यथा तद्वत् नैतदाश्रयदूषकम् ॥ ३०४ ॥**

**மித்²யாஸம்ப³ந்த⁴தஸ்தத்ர ப்³ரஹ்மண்யாஶ்ரித்ய திஷ்ட²தி ।**
**மணௌ ஶக்திர்யதா² தத்³வத் நைததா³ஶ்ரயதூ³ஷகம் ॥ 304 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எப்படி, |
| **मणौ** மணௌ | = | ரத்னத்தில், |
| **शक्तिः** ஶக்தி꞉ | = | விசேஷமான சக்தி (இருக்கிறதோ), |
| **तद्वत्** தத்³வத் | = | அதுபோல, |

| | | |
|---|---|---|
| **तत्र**<br>**தத்ர** | = | அந்த, |
| **ब्रह्मणि**<br>**ப்³ரஹ்மணி** | = | ப்ரஹ்மத்தில், |
| **मिथ्यासंबन्धतः**<br>**மித்²யாஸம்ப³ந்த⁴த:** | = | பொய்யான ஸம்பந்தத்தால், |
| **आश्रित्य**<br>**ஆஶ்ரித்ய** | = | ஆச்ரயித்துக் கொண்டு, (அக்ஞானம்), |
| **तिष्ठति**<br>**திஷ்ட²தி** | = | இருக்கிறது, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த அக்ஞானம், |
| **न आश्रयदूषकं**<br>**ந ஆஶ்ரயதூ³ஷகம்** | = | தனது ஆச்ரயவஸ்துவைக் கெடுக்கிறதில்லை. |

ரத்தினத்தில் சக்தியிருப்பதுபோல் அந்த பிரஹ்மத்தினிடத்தில் பொய்யான ஸம்பந்தத்தினுல் (ஆத்யாஸிக தாதாதம்ய ஸம்பந்தத்தால்) அக்ஞானம் ஆசிரயித்துக்கொண்டு இருக்கிறது ஆனுல் இது சிரயமான பிரஹ்மத்தைக் கெடுக்காது.

சில ரத்னங்களில் அபூர்வமான சில சக்திகள் உண்டு. அந்த ரத்னத்தை தரித்துக்கொண்டு நெருப்பைத் தொட்டாலும் சூடு தெரிவதில்லை. இம்மாதிரியான சக்தியை ரத்தினத்தை விட்டுத் தனியாகக் காணமுடியாது. ஆனுலும் அது ரத்தினத்தைத் தவிற வேறில்லை யென்றும் சொல்லமுடியாது. இரண்டு பதார்த்தங்கள் வெவ்வேறுக இருந்தால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் சொல்ல முடியும். வெவ்வேறுக இல்லாமல் ஒன்றைவிட்டு மற்றென்று தனியாகக் காணப்படாமலிருக்கையில், அவ்விரண்டிற்கும் உள்ள ஸம்பந்தம் பொய் என்று தான் சொல்ல வேண்டும். தவிரவும் இவ்விதம் எது பொய் ஸம்பந்தத்தினுல் மற்றென்றில் இருப்பதாகக் காணப்படுகிறதோ, அது அந்த மற்றென்றை எவ்விதத்திலும் பாதிக்க மாட்டாது. கயிற்றில் தோன்றும் ஸர்பத்தினுல் கயிறு விஷமுள்ளதாக ஆகிவிடாது. தூணில் தோன்றும் திருடன் தூணிலுள்ள எந்த சாமானையும் திருட முடியாது இதுபோல் அக்ஞானமும் ப்ரஹ்மத்தை விட்டுத் தனியாகப்பிரித்து வேறுகக் காண முடியாதபடி ப்ரஹ்மத்திலேயே பொய்யான ஸம்பந்தத்தால் இருக்கிறது இவ்வித அக்ஞானத்தால் ஆச்ரயமான ப்ரஹ்மத்திற்கு எவ்வித மாறுபாடும் ஏற்படுவதில்லை.

**(304)**

**(அவதாரிகை)** அக்ஞானத்தின் ஸ்வரூபத்தை இவ்விதம் சொல்லிவிட்டு அது இருக்கிறது என்பதற்கு என்ன பிரமாணம் என்பதை அடுத்த சுலோகத்தில் சொல்கிறுர். அனுமானத்தினுல் அதை அறியலாம், சப்த பிரமாணத்தினுலும் அறியலாம், பிரத்யக்ஷமாகவும் அறியலாம், என்று எடுத்துக்காட்டுகிறுர்: -

**सद्भावे लिङ्गमेतस्य कार्यमेतच्चराचरम् ।**
**मानं श्रुतिः स्मृतिश्चाज्ञोऽहमित्यनुभवोऽपि च ॥ ३०५ ॥**

**ஸத்³பா⁴வே லிங்க³மேதஸ்ய கார்யமேதச்சராசரம் ।**
**மானம் ஶ்ருதிः ஸ்ம்ருதிஶ்சாஜ்ஞோ(அ)ஹமித்யனுப⁴வோ(அ)பி ச ॥ 305 ॥**

| | | |
|---|---|---|
| **एतत्** <br> **ஏதத்** | = | இந்த, |
| **चराचरं** <br> **சராசரம்** | = | ஸ்தாவர ஜங்கமரூபமான, |
| **कार्यं** <br> **கார்யம்** | = | உண்டாகும் பிரபஞ்சம், |
| **एतस्य सद्भावे** <br> **ஏதஸ்ய ஸத்³பா⁴வே** | = | இந்த அக்ஞானம் இருப்பதற்கு, |
| **लिङ्गं** <br> **லிங்க³ம்** | = | அடையாளம், |
| **श्रुतिः** <br> **ஶ்ருதிः** | = | வேதமும், |
| **स्मृतिश्चा** <br> **ஸ்ம்ருதிஶ்சா** | = | ஸ்மிருதியும், |
| **अहं अज्ञः** <br> **அஹம் அஜ்ஞः** | = | நான் அறியாதவன், |
| **इति** <br> **இதி** | = | என்ற, |
| **अनुभवोऽपि च** <br> **அனுப⁴வோ(அ)பி ச** | = | அநுபவமும், |
| **मानं** <br> **மானம்** | = | அக்ஞானமிருப்பதற்கு பிரமாணம். |

இந்த அக்ஞாநம் இருக்கிறது என்ற விஷயத்தில் அடையாளம் இதன் கார்யமான அசையும் பொருள் அசையாப் பொருள் அடங்கிய இந்த உலகமே யாகும்.

**मायां तु प्रकृति विद्यात्**
**மாயாம் து ப்ரக்ருதி வித்³யாத்**

இது முதலான சுருதிகளும்

**मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरं**
**மயா(அ)த்⁴யக்ஷேண ப்ரக்ருதிः ஸூயதே ஸசராசரம்**

இது முதலான ஸ்மிருதிகளும் 'நான் அறியாதவன்' என்ற நம்முடைய அனுபவமும் இந்த அக்ஞானம் இருப்பதற்குப் பிரமாணங்களாகும். **(305)**

**(அவதாரிகை)** ஜகத்தின் தோற்றத்திற்குக் காரணமாயும் பிரமாணங்களால் இருப்பதாக நிச்சயிக்கத்தக்கதாயுமுள்ள அக்ஞானத்திற்கே வேறு பல பெயர்களினுல் வியவஹாரம் உண்டென்பதைக் காட்டுகிருர்: -

**अज्ञानं प्रकृतिः शक्तिः अविद्येति निगद्यते ।**

**அஜ்ஞானம் ப்ரக்ருதிः ஶக்திः அவித்³யேதி நிக³த்³யதே ।**

**अज्ञानं** = அக்ஞானமானது,
**அஜ்ஞானம்**

**प्रकृतिः** = ப்ரக்ருதி என்றும்,
**ப்ரக்ருதிः**

**शक्तिः** = சக்தி என்றும்,
**ஶக்திः**

**अविद्या इति** = அவித்யை என்றும்,
**அவித்³யா இதி**

**निगद्यते** = சொல்லப்படுகிறது.
**நிக³த்³யதே**

அக்ஞானமானது பிரகிருதி என்றும் சக்தி என்றும் அவித்யை என்றும் சொல் லப்படுகிறது.

**(அவதாரிகை)** இதன் ஸ்வரூபம் இன்னவிதமென்று சொல்ல முடியாதென்று முன்னுல் சொன்னதையே மறுபடியும் விஸ்தாரமாக எடுத்துக்காட்டுகிருர்: -

**तदेतत् सत्न भवति नासद्वा शुक्तिरौप्यवत् ॥ ३०६ ॥**

**ததே³தத் ஸத்ன ப⁴வதி நாஸத்³வா ஶுக்திரௌப்யவத் ॥ 306 ॥**

**सतो भिन्नं अभिन्नं वा न दीपस्य प्रभा यथा ।**

**न सावयवं अन्यद्वा बीजस्यां कुरवत् क्वचित् ॥ ३०७ ॥**

**ஸதோ பி⁴ன்னம் அபி⁴ன்னம் வா ந தீ³பஸ்ய ப்ரபா⁴ யதா² ।**
**ந ஸாவயவம் அன்யத்³வா பீ³ஜஸ்யாம் குரவத் க்வசித் ॥ 307 ॥**

**अत एतदनिर्वाच्यं इत्येव कवयो विदुः ।**

**அத ஏதத³நிர்வாச்யம் இத்யேவ கவயோ விது³ः ।**

| | | |
|---|---|---|
| **तत् एतत्**<br>**தத் ஏதத்** | = | அந்த இது (அக்ஞானம்), |
| **शुक्तिरौप्यवत्**<br>**ஶுக்திரௌப்யவத்** | = | கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல, |
| **सत्न भवति**<br>**ஸத்ன ப⁴வதி** | = | ஸத்தாக இல்லை, |
| **असद्वा**<br>**அஸத்³வா** | = | அஸத்தாகவும், |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **दीपस्य**<br>**தீ³பஸ்ய** | = | தீபத்தின், |
| **प्रभा यथा**<br>**ப்ரபா⁴ யதா²** | = | ஒளிபோல, |
| **सतः**<br>**ஸதஃ** | = | ஸத் வஸ்துவைக்காட்டிலும், |
| **भिन्नं**<br>**பி⁴ன்னம்** | = | வேறுபட்டதாகவோ, |
| **अभिन्नं वा**<br>**அபி⁴ன்னம் வா** | = | வேறுபடாததாகவோ, |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **बीजस्य**<br>**பீ³ஜஸ்ய** | = | விதையின், |
| **अंकुरवत्**<br>**அங்குரவத்** | = | முளைபோல, |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | ஒரு இடத்திலும், |
| **सावयवं**<br>**ஸாவயவம்** | = | அவயவத்துடன் கூடியதாகவோ, |
| **अन्यद्वा**<br>**அன்யத்³வா** | = | அவயவம் இல்லாததாகவோ, |
| **न**<br>**ந** | = | இல்லை, |
| **अतः**<br>**அதஃ** | = | ஆகையால், |

**एतत्** = இந்த அக்ஞானம்,

**ஏதத்**

**अनिर्वाच्यं** = இன்னவிதமென்று, நிர்வசனம் செய்யமுடியாதது,

**அநிர்வாச்யம்**

**इत्येव** = என்றுதான்,

**இத்யேவ**

**कवय:** = வித்வான்கள்,

**கவய:**

**विदु:** = அறிந்திருக்கிருர்கள்.

**விது³:**

அந்த அக்ஞானம் இருப்புள்ளது என்ரே, இருப்பற்றது என்ரே கூறமுடியாது சிப்பியில் தோன்றும் வெள்ளியைப் போல. அது வாஸ்தவமாயிருக்கும் பதார்த்தத்தி லிருந்து வேறுபட்டதில்லை, வேறுபடாததும் இல்லை தீபத்தின் ஒளி போல. அது ஒருக்காலும் அவயவங்களுடன் கூடினதில்லை. அவயவங்களற்றதாகவும் இல்லை விதையின் முளையைப்போல ஆகையால் இது நிர்வசனம் செய்யத்தக்கதில்லை யென்றே அறிவாளிகள் அறிந்திருக்கிருர்கள்.

சிப்பியில் தோன்றும் வெள்ளி இல்லாத பதார்த்தமானுல் தோன்ருது. இருக்கிற பதார்த்தமானால் மறையாது; ஆகையால் அது இரண்டு இனங்களிலும் சேராது தீபத்தின் வெளிச்சம் தீபத்தை விட்டு தனித்து இருக்க முடியாது, ஆனுலும் தீபமில்லாத விடத்தில் வியாபிக்கிறது; ஆகையால் அது தீபத்தை விட வேறு என்ருவது, வேறில்லை யென்ருவது சொல்வதற்கில்லை. விதையை சோதித்துப் பார்த்தால் அதில் முளை தெரியவில்லை, அதில் முளை இல்லையானுல் பின்னுல் முளை வெளிக்கிளம்ப முடியாது; ஆகையால் அதை முளை என்னும் அவயவத்துடன் கூடியதென்ரே முளை என்னும் அவயவமற்றதென்ரே சொல்ல முடியாது. இவ்வித மே தோற்றமாயும் சக்தியாயும் காரணமாயும் உள்ள அக்ஞானம் இன்னதென்று சொல்வதற்கில்லை. இதையே அநிர்வசனீயம் என்று கூறுவார்கள். **(306-307)**

**(அவதாரிகை)** ப்ரஹ்ம விஷயமான அக்ஞானம் தான் ஜகத்தின் தோற்றத் திற்குக் காரணம் என்று முன் சொல்லப்பட்டது. அந்த அக்ஞானத்தைக் காரணமாசக் கொண்டு ஜகத் எந்த கிரமமாய்த் தோன்றுகிறது என்பதைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்வதற்காக முதலில் அந்த அக்ஞானம் இருவகைப்படுமென்று ஆரம்பிக்கிருர்.

**समष्टिव्यष्टिरूपेण द्विधाऽज्ञानं निगद्यते ॥ ३०८ ॥**

**ஸமஷ்டிவ்யஷ்டிரூபேண த்³விதா⁴(அ)ஜ்ஞானம் நிக³த்³யதே ॥ 308 ॥**

**अज्ञानं** = அக்ஞானமானது,

**அஜ்ஞானம்**

**समष्टिव्यष्टिरूपेण** = ஸமஷ்டி ரூபம், வியஷ்டி ரூபம் என்று,

**ஸமஷ்டிவ்யஷ்டிரூபேண**

**द्विधा** = இரண்டுவிதமாக,

**த்3விதா4**

**निगद्यते** = சொல்லப்படுகிறது,

**நிக3த்3யதே**

ஸமஷ்டி, வ்யஷ்டி, என்று அக்ஞானம் இரண்டு விதமாகச் சொல்லப்படுகிறது. **(308)**

**नानात्वेन प्रतीतानां अज्ञानानां अभेदतः ।**

**एकत्वेन समष्टिः स्यात् भूरुहाणां वनं यथा ॥ ३०९ ॥**

**நாநாத்வேன ப்ரதீதாநாம் அஜ்ஞாநாநாம் அபே4த3த: ।**

**ஏகத்வேன ஸமஷ்டி: ஸ்யாத் பூ4ருஹாணாம் வனம் யதா2 ॥ 309 ॥**

**भूरुहाणां** = மரங்களுக்கு,

**பூ4ருஹாணாம்**

**वनं यथा** = காடுபோல,

**வனம் யதா2**

**नानात्वेन** = பலவாக,

**நாநாத்வேன**

**प्रतीतानां** = தோன்றுகிற,

**ப்ரதீதாநாம்**

**अज्ञानानां** = அக்ஞானங்களுக்குள்,

**அஜ்ஞாநாநாம்**

**अभेदतः** = வேற்றுமையில்லாததால்,

**அபே4த3த:**

**एकत्वेन** = ஒன்றாக,

**ஏகத்வேன**

**समष्टिः स्यात्** = ஸமஷ்டியாகும்.

**ஸமஷ்டி: ஸ்யாத்**

பலவிதமான அநேகம் மரங்கள் சேர்ந்து காடு என்ற முறையில் எப்படி ஒன்றாகிறதோ அப்படியே பலவிதமாகத் தோன்றுகிற அக்ஞானங்களுக்குள் (அக்ஞானம் என்ற முறையில்) வேற்றுமையில்லாததினால் ஒன்றாகவே கருதப் பட்டால், 'ஸமஷ்டி' எனப்படும். மரங்கள் எல்லாவற்றையும் சேர்த்து ஒன்றாகவே காடு என்று பாவித்தால் ஸமஷ்டி என்று பெயர். மரங்களை தனித்தனியே பாவித்தால் வியஷ்டி என்பார்கள். அப்படியே எல்லா அக்ஞானங்களையும் ஒன்றாகச்

சேர்த்து மொத்தமாய்ப் பார்த்தால் ஸமஷ்டியாகும். அக்ஞானங்களைத் தனித்தனியே பார்த்தால் வியஷ்டியெனப்படும். **(309)**

**इयं समष्टिरुत्कृष्टा सत्वांशोत्कर्षतःपुरा ।**
**मायेति कथ्यते तज्जैः शुद्धसच्चैकलक्षणा ॥ ३१० ॥**

**இயம் ஸமஷ்டிருத்க்ருஷ்டா ஸத்வாம்ஸோத்கர்ஷதः புரா ।**
**மாயேதி கத்²யதே தஜ்ஜைः ஶுத்³த⁴ஸச்சைகலக்ஷணா ॥ 310 ॥**

**पुरा** = முதலில்,
**புரா**
**सत्वांशोत्कर्षतः** = ஸத்வகுணம் மேலிட்டிருப்பதால்,
**ஸத்வாம்ஸோத்கர்ஷதः**
**उत्कृष्टा** = சிறந்ததான,
**உத்க்ருஷ்டா**
**शुद्धसच्चैकलक्षणा** = சுத்தமான (ரஜஸ்தமோ குணங்களால் தாக்கப்
**ஶுத்³த⁴ஸச்சைகலக்ஷணா** படாத) ஸத்குணத்தையே ஸ்வரூபமாகக்கொண்ட,
**इयं समष्टिः** = இந்த ஸமஷ்டி அக்ஞானமானது,
**இயம் ஸமஷ்டி**ः
**तज्जैः** = அதை அறிந்தவர்களால்,
**தஜ்ஜைः**
**माया इति** = மாயை என்று,
**மாயா இதி**
**कथ्यते** = சொல்லப்படுகிறது.
**கத்²யதே**

இந்த ஸமஷ்டி அக்ஞானத்தில் முக்குணங்களிருந்தபோதிலும் எப்பொழுதும் ஸத்வகுணமே மேலிட்டிருப்பதால் இது சிறந்தது சுத்தமான ஸத்வ குணத்தை ஸ்வரூபமாகக் கொண்ட இது மாயை என்று சொல்லப்படுகிறது ரஜஸ் தமோகுணங்கள் கட்டுப்பட்டு மேலோங்காமல், அவைகளால் ஸத்வ குணம் தாக்கப்படாமல் ஸத்வகுணமே மேலோங்கியிருப்பது தான் சுத்த ஸத்வம் என்பதன் பொருள். மூன்று குணங்களும் ஸமமாக இருக்கும் போது "மேல்" "கீழ்" என்ற வியவஹாரத்திற்கு இடமில்லை. அந்த ஸமமாயிருக்கும் நிலை மாறி ஏதாவது ஒரு குணம் அதிகமாயும் மற்றது குறைந்தும் இருக்கும்போது தான் வேற்றுமையே ஏற்படுகிறது. **(310)**

(**அவதாரிகை**) ஸமஷ்டி அக்ஞானமாகிற மாயையில் பிரதிபலிக்கும் பிரஹ்ம சைதன்யமே ஈசுவரன் என்பதை குறிப்பிடுகிறார்: -

**मायोपहितचैतन्यं साभासं सत्त्वबृंहितम् ।**
**सर्वज्ञत्वादिगुणकं सृष्टिस्थित्यन्तकारणम् ।**
**अव्याकृतं तदव्यक्तमीश इत्यपि गीयते ॥ ३११ ॥**

**மாயோபஹிதசைதன்யம் ஸாபா⁴ஸம் ஸத்த்வப்³ரும்ஹிதம் ।**
**ஸர்வஜ்ஞத்வாதி³கு³ணகம் ஸ்ருஷ்டிஸ்தி²த்யந்தகாரணம் ।**
**அவ்யாக்ருதம் தத³வ்யக்தமீஶ இத்யபி கீ³யதே ॥ 311 ॥**

| | | |
|---|---|---|
| **साभासं** ஸாபா⁴ஸம் | = | பிரதிபிம்பத்துடன் கூடியதும், |
| **सत्त्वबृंहितम्** ஸத்த்வப்³ரும்ஹிதம் | = | ஸத்வகுணம் விருத்தியடைந்ததும், |
| **सर्वज्ञत्वादिगुणकं** ஸர்வஜ்ஞத்வாதி³கு³ணகம் | = | எல்லாவற்றையும் அறியும் தன்மை முதலான குணங்களுள்ளதும், |
| **सृष्टिस्थित्यन्तकारणम्** ஸ்ருஷ்டிஸ்தி²த்யந்தகாரணம் | = | ஸிருஷ்டி, ஸ்திதி, முடிவு இவைகளுக்குக் காரணமானதுமான, |
| **तत्** தத் | = | அந்த, |
| **मायोपहितचैतन्यं** மாயோபஹிதசைதன்யம் | = | மாயையை உபாதியாகக்கொண்ட சைதன்யம், |
| **अव्याकृतं** அவ்யாக்ருதம் | = | அவ்யாக்ருதமென்றும், |
| **अव्यक्तं** அவ்யக்தம் | = | அவ்யக்தமென்றும், |
| **ईश इत्यपि** ஈஶ இத்யபி | = | ஈசன் என்றும், |
| **गीयते** கீ³யதே | = | சொல்லப்படுகிறது. |

மாயையை உபாதியாகக்கொண்ட பிரஹ்ம சைதன்யம் மாயையில் ஏற்படும் பிரதிபிம்பத்துடன் ஸத்வகுணம் அதிகமாயிருந்து ஸர்வக்ஞத்தன்மை ஸர்வ சக்திகளுடன் கூடியிருக்கும் தன்மை முதலான குணங்களோடு கூடினதாய் ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கும் ஸ்திதிக்கும் முடிவிற்கும் காரணமாகும். அது அவ்யாகிருதம் (தனித்தனி பெயரும் ரூபமும் இல்லாதது) என்றும் அவ்யக்தம் (தெளிவாய் ஏற்படாதது) என்றும், ஈசுவரன் (ஆளுபவர்) என்றும் சொல்லப்படுகிறது. **(311)**

**सर्वशक्ति गुणोपेतः सर्वज्ञानावभासकः ।**
**स्वतन्त्रः सत्यसंकल्पः सत्यकामः स ईश्वरः ॥ ३१२ ॥**

**ஸர்வஶக்தி கு³ணோபேத: ஸர்வஜ்ஞாவபா⁴ஸக: ।**
**ஸ்வதந்த்ர: ஸத்யஸங்கல்ப: ஸத்யகாம: ஸ ஈஶ்வர: ॥ 312 ॥**

| | | |
|---|---|---|
| **स:** ஸ: | = | அந்த, |
| **ईश्वर:** ஈஶ்வர: | = | ஈசுவரன், |
| **सर्वशक्ति गुणोपेत:** ஸர்வஶக்தி கு³ணோபேத: | = | எல்லா சக்திகளோடும் குணங்களோடும் கூடியவர், |
| **सर्वज्ञानावभासक:** ஸர்வஜ்ஞாவபா⁴ஸக: | = | எல்லா ஞானங்களையும் பிரகாசப்படுத்துகிறவர், |
| **स्वतन्त्र:** ஸ்வதந்த்ர: | = | பிறருக்குக் கட்டுப்படாதவர், |
| **सत्यसंकल्प:** ஸத்யஸங்கல்ப: | = | ஸத்யமான ஸங்கல்பத்தை உடையவர், |
| **सत्यकाम:** ஸத்யகாம: | = | வீணாகாத காமனைகளை உடையவர். |

அந்த ஈசுவரர் எல்லா சக்திகளோடும் குணங்களோடும் கூடினவர், எல்லா ஞானத்தையும் பிரகாசப்படுத்துகிறவர், ஸ்வதந்திரர், அவருடைய ஸங்கல்பம் ஸத்ய மானது அதன்படியே காரியம் நடைபெறும் அவருடைய காமம் வீண்போகாது. கட்டாயம் நிறைவேறும்.

ஒரு சிறிய தீபத்தின் பின் புறத்தில் பளிச்சென்ற ஒருவித கண்ணாடியையோ தகரத்தையோ வைத்து விட்டால், அதில் தீபத்தின் வெளிச்சம் பிரதிபலித்து அதிக மான பிரகாசத்தை உண்டுபண்ணும். கண்ணாடிக்கோ, தகரத்திற்கோ தனித்த முறை யில் வெளிச்சம் கொடுக்க யோக்கியதையே கிடையாது. அப்படியிருந்தும் வெளிச்சத் தின் ஸமீபத்தில் இருந்தால் அவ்வெளிச்சத்தையே அதிகப்படுத்திக்காட்ட யோக்கி யதை யுள்ளதாயிருக்கிறது. அதுபோல, மாயை என்பது நான் ஜடமாயிருந்த போதிலும் பிரஹ்ம சைதன்யத்தின் ஸம்பந்தத்தினால் அனந்தமான குணங்களைத் தோன்றும்படிச் செய்யசக்திவாய்ந்தது அதின் சேர்க்கையினால் தான் ஸர்வக்ஞத் தன்மை, ஸர்வசக்தத்தன்மை முதலிய குணங்கள் ஏற்பட்டு ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி லயங்கள் நடக்கின்றன. பின்னுள்ள கண்ணாடியோ, தகரமோ எப்படி தீபத்தின் ஸ்வரூபத்தில் சேராமல் இருந்து கொண்டு பக்கத்தில் இருந்து தீபப்பிரகாசத்தை அதிகப்படுத்துகிறதோ அப்படியே மாயை பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தில் சேராமல் இருந்து கொண்டு அதை பலவிதமாக பிரகாசிக்கச் செய்கிறது. சேராமலிருந்தும் சேர்ந்திருப்பது போல் தோன்றுவதால் பிரஹ்மத்திற்கும் மாயைக்குமுள்ள ஸம்பந்தம் மித்யா (பொய்யானது) என்று முன் 304வது சுலோகத்தில் சொல்லப் பட்டது. **(312)**

**तस्यैतस्य महाविष्णोर्महाशक्तेर्महीयसः ।**
**सर्वज्ञत्वेश्वरत्वादिकारणत्वान्मनीषिणः ।**
**कारणं वपुरित्याहुः समष्टिं सत्त्वबृंहितम् ॥ ३१३ ॥**

**தஸ்யைதஸ்ய மஹாவிஷ்ணோர்மஹாஶக்தேர்மஹீயஸः ।**
**ஸர்வஜ்ஞத்வேஶ்வரத்வாதி³காரணத்வான்மனீஷிணः ।**
**காரணம் வபுரித்யாஹுः ஸமஷ்டிம் ஸத்த்வப்³ரும்ஹிதம் ॥ 313 ॥**

| | | |
|---|---|---|
| **महाविष्णोः** மஹாவிஷ்ணோः | = | மஹாவியாபகராயும், |
| **महाशक्ते** மஹாஶக்தே | = | பெரிய சக்திகளுள்ளவராயும், |
| **महीयसः** மஹீயஸः | = | மிகப்பெரியவராயும் உள்ள, |
| **तस्य** தஸ்ய | = | அந்த, |
| **एतस्य** ஏதஸ்ய | = | இந்த ஈசுவரனுக்கு, |
| **सर्वज्ञत्वेश्वरत्वादिकारणत्वात्** ஸர்வஜ்ஞத்வேஶ்வரத்வாதி³ காரணத்வாத் | = | ஸர்வஜ்ஞதவம், ஈசுவரத்வம் முதலானவை ஏற்படக்காரணமாயிருப்பதால், |
| **सत्त्वबृंहितम्** ஸத்த்வப்³ரும்ஹிதம் | = | ஸத்வகுணம விருத்தியடைந்த, |
| **समष्टिं** ஸமஷ்டிம் | = | ஸமஷ்டி அக்ஞானமான மாயையை, |
| **कारणं वपुः इति** காரணம் வபுः இதி | = | காரண சரீரமென்று, |
| **मनीषिणः** மனீஷிணः | = | வித்வான்கள், |
| **आहुः** ஆஹுः | = | சொல்கிறுர்கள். |

மஹாவியாபகராய் மஹாசக்தி யுள்ளவராய் மிகப்பெரியவராயிருக்கும் அந்த ஈசுவரருக்கு ஸர்வக்ஞத்தன்மை ஈசுவரத்தன்மை முதலானதுகளை ஏற்படுத்திக் கொடுக்கக் காரணமாயிருப்பதால் ஸத்வகுணம் தூக்கி நிற்கும் ஸமஷ்டி அக்ஞானத்தைக் காரண சரீரம் என்று சொல்கிறுர்கள். **(313)**

**आनन्दप्रचुरत्वेन छादकत्वेन कोशवत् ।**
**सैषाऽऽनन्दमयः कोश इतीशस्य निगद्यते ॥ ३१४ ॥**

**ஆனந்த³ப்ரசுரத்வேன சா²த³கத்வேன கோஶவத் ।**
**ஸைஷா(ஆ)நந்த³மயः கோஶ இதீஶஸ்ய நிக³த்³யதே ॥ 314 ॥**

**आनन्दप्रचुरत्वेन** = ஆனந்தம் அதிகமாக இருப்பதாலும்,
**ஆனந்த³ப்ரசுரத்வேன**

**कोशवत्** = உரைபோல,
**கோஶவத்**

**छादकत्वेन** = (ப்ரஹ்ம சைதன்யத்தை) மறைப்பதாலும்,
**சா²த³கத்வேன**

**सा एषा** = அந்த அக்ஞான ஸமஷ்டியானது,
**ஸா ஏஷா**

**ईशस्य** = ஈசுவரனுக்கு,
**ஈஶஸ்ய**

**आनन्दमयः कोश इती** = ஆனந்தமயகோசமென்று,
**ஆனந்த³மயः கோஶ இதீ**

**निगद्यते** = சொல்லப்படுகிறது.
**நிக³த்³யதே**

ஆனந்தம் அதிகமாக இருக்கிற காரணத்தினுலும், கத்தியை உரை மறைப்பது போல் இது சுத்த சைதன்யத்தை மறைக்கிற காரணத்தினுலும், இந்த ஸமஷ்டி அக்ஞானம் ஈசுவரருடைய ஆனந்தமய கோசம் (ஆனந்தம் மிகுந்த உரை) எனப்படு கிறது. **(314)**

**सर्वोपरम हेतुत्वात् सुषुप्तिस्थानमिष्यते ।**
**प्राकृतः प्रलयो यत्र श्राव्यते श्रुतिमिर्मुहुः ॥ ३१५ ॥**

**ஸர்வோபரம ஹேதுத்வாத் ஸுஷுப்திஸ்தா²னமிஷ்யதே ।**
**ப்ராக்ருதः ப்ரலயோ யத்ர ஶ்ராவ்யதே ஶ்ருதிமிர்முஹுः ॥ 315 ॥**

**यत्र** = எதில்,
**யத்ர**

**प्रलयः** = எல்லாம் ஒடுங்குவது,
**ப்ரலயः**

**प्राकृतः** = ப்ராக்ருதமாக,
**ப்ராக்ருதः**

| | | |
|---|---|---|
| **श्रुतिभिः** | = | வேதங்களால், |
| **ஶ்ருதிபி⁴:** | | |
| **मुहुः** | = | அடிக்கடி, |
| **முஹு:** | | |
| **श्राव्यते** | = | கேட்கும்படி செய்யப்படுகிறதோ (இது), |
| **ஶ்ராவ்யதே** | | |
| **सर्वोपरम हेतुत्वात्** | = | எல்லாம் ஓடுங்குவதற்குக் காரணமாயிருப்பதால், |
| **ஸர்வோபரம ஹேதுத்வாத்** | | |
| **सुषुप्तिस्थानं** | = | ஸுஷுப்திஸ்தானமாக, |
| **ஸுஷுப்திஸ்தா²னம்** | | |
| **इष्यते** | = | கருதப்படுகிறது. |
| **இஷ்யதே** | | |

எல்லாம் ஒடுங்குவதற்குக் காரணமாயிருப்பதால், அந்த ஸமஷ்டி அக்ஞானம் ஸுஷுப்தி ஸ்தானம் (நல்லதூக்கநிலை) என்று கருதப்படுகிறது. இந்த ஸமஷ்டி அக்ஞானத்தில் எல்லாம் ஒடுங்கும் நிலையைத்தான் ப்ராக்ருதப்ரளயம் என்று வேதம் கூறுகிறது.

இவ்விதமாக ஈசுவரருக்கு ஈசுவரருக்கு உபாதியாயிருக்கும் ஸமஷ்டி அக்ஞா னத்தை சரீரம் என்று வியவஹரித்தால் காரண சரீரம் என்றும், மறைக்கிற உரை என்று பார்த்தால் ஆனந்தமயகோசம் என்றும், ஒடுங்கும் நிலையாக பாவித்தால் ஸுஷுப்தி அவஸ்தை என்றும், பலவாறுகச் சொல்லமுடிகிறது. **(315)**

(**அவதாரிகை**) இதுவரை ஸமஷ்டி அக்ஞானத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு இனி வியஷ்டி அக்ஞானத்தைப்பற்றி விவரிக்கிறுர்: -

**अज्ञानं व्यष्ट्यभिप्रायात् अनेकत्वेन भिद्यते ।**
**अज्ञानवृत्तयो नाना तत्तद्गुणविलक्षणाः ॥ ३१६ ॥**

**அஜ்ஞானம் வ்யஷ்ட்யபி⁴ப்ராயாத் அனேகத்வேன பி⁴த்³யதே ।**
**அஜ்ஞானவ்ருத்தயோ நாறு தத்தத்³கு³ணவிலக்ஷணுः ॥ 316 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानवृत्तयः** | = | அக்ஞானத்தின் விருத்திகள், |
| **அஜ்ஞானவ்ருத்தயः** | | |
| **तत्तद्गुणविलक्षणाः** | = | அதன்தன் குணங்களால் மாறுபட்ட |
| **தத்தத்³கு³ணவிலக்ஷணுः** | | தன்மைகளுள்ளவைகளாக, |
| **नाना** | = | பலவாக இருக்கினறன. (ஆகையால்), |
| **நாறு** | | |

| | | |
|---|---|---|
| **अज्ञानं** | = | அக்ஞானமானது, |
| **அஜ்ஞானம்** | | |
| **व्यष्ट्यभिप्रायात्** | = | தனித்தனி என்ற அபிபபிராயத்தில், |
| **வ்யஷ்ட்யபி⁴ப்ராயாத்** | | |
| **अनेकत्वेन** | = | பலவாக, |
| **அனேகத்வேன** | | |
| **भिद्यते** | = | வேற்றுமையடைகிறது. |
| **பி⁴த்³யதே** | | |

அக்ஞானத்தில் அந்தந்த குணங்களையொட்டி விலக்ஷணமான அநேகம் விருத்திகள் ஏற்படுகின்றன. எல்லாவற்றையும் சேர்த்து பொதுவாகப்பார்த்தால் அக்ஞானம் என்பது ஒன்றுக இருந்த போதிலும் தனித்தனியாகப்பார்க்கும் பொழுது அக்ஞானமே அநேகமாக ஆகிறது. **(316)**

**वनस्य व्यष्ट्यभिप्रायात् भूरुहा इत्यनेकता ।**
**यथा तथैवाज्ञानस्य व्यष्टितः स्यादनेकता ॥ ३१७ ॥**

**வனஸ்ய வ்யஷ்ட்யபி⁴ப்ராயாத் பூ⁴ருஹா இத்யனேகதா ।**
**யதா² ததை²வாஜ்ஞானஸ்ய வ்யஷ்டித꞉ ஸ்யாத³னேகதா ॥ 317 ॥**

| | | |
|---|---|---|
| **वनस्य** | = | காட்டிற்கு, |
| **வனஸ்ய** | | |
| **व्यष्ट्यभिप्रायात्** | = | தனித்தனி என்ற அபிப்ராயத்தினுல், |
| **வ்யஷ்ட்யபி⁴ப்ராயாத்** | | |
| **भूरुहाः इति** | = | மரங்கள் என்று, |
| **பூ⁴ருஹா꞉ இதி** | | |
| **अनेकता** | = | பலவாக இருக்கும் தன்மை, |
| **அனேகதா** | | |
| **यथा** | = | எப்படியோ, |
| **யதா²** | | |
| **तथैव** | = | அப்படியே, |
| **ததை²வ** | | |
| **व्यष्टितः** | = | தனித்தனித் தன்மையால், |
| **வ்யஷ்டித꞉** | | |
| **अज्ञानस्य** | = | அக்ஞானத்திற்கு, |
| **அஜ்ஞானஸ்ய** | | |
| **अनेकता** | = | அநேகமாயிருக்கும் தன்மை, |
| **அனேகதா** | | |

**स्यात्** = ஏற்படும்.

**ஸ்யாத்**

அநேகம் மரங்கள் ஓரிடத்தில் சேர்ந்து இருப்பதைக்காடு என்கிறோம். காடு என்பது ஒன்றுக இருந்த போதிலும் அதிலுள்ள மரங்களைத்தனித்தனியாகப்பார்க்கும் பொழுது அநேகமாகத்தெரிகிறது. இதுபோலவேதான் அக்ஞானமும் அநேகமாக ஆகிறது. **(317)**

## व्यष्टिर्मलिनसचैषा रजसा तमसा युता ।
## ततो निकृष्टा भवति योपाधिः प्रत्यगात्मनः ॥ ३१८ ॥

**வ்யஷ்டிர்மலினஸசைஷா ரஜஸா தமஸா யுதா ।**
**ததோ நிக்ருஷ்டா ப⁴வதி யோபாதி⁴: ப்ரத்யகா³த்மன: ॥ 318 ॥**

**रजसा** = ரஜோகுணத்தோடும்,

**ரஜஸா**

**तमसा** = தமோகுணத்தோடும்,

**தமஸா**

**युता** = கூடிய,

**யுதா**

**एषा** = இந்த,

**ஏஷா**

**व्यष्टिः** = வியஷ்டி அக்ஞானமானது,

**வ்யஷ்டி:**

**मलिनसत्वा** = மலினமான ஸத்வகுணமுள்ளது,

**மலினஸத்வா**

**ततः** = ஆகையால்,

**தத:**

**निकृष्टा** = தாழ்ந்ததாக,

**நிக்ருஷ்டா**

**भवति** = ஆகிறது,

**ப⁴வதி**

**या** = எந்த இது,

**யா**

**प्रत्यगात्मनः** = ஜீவாத்மாவுக்கு,

**ப்ரத்யகா³த்மன:**

**उपाधिः** = உபாதியோ.

**உபாதி⁴:**

பரமாத்மாவுக்கு உபாதியாக உள்ள ஸமஷ்டி அக்ஞானத்தில் ஸத்வகுணம் மேலோங்கியும் ரஜஸ்தமோகுணங்கள் இதற்கு உள் அடங்கியுமிருப்பதால் அது சிறந்ததாகக்கூறப்பட்டது. வியஷ்டி அக்ஞானத்திலோவெனில் ரஜஸ்தமோகுணங்கள் மேலிட்டும் இவைகளால் ஸத்வகுணம் மறைக்கப்பட்டும் இருப்பதால் இது நிக்ருஷ்டமானது இந்த வியஷ்டி அக்ஞானம் தான் பிரத்யகாத்மாவுக்கு உபாதி. **(318)**

பிரத்யகாத்மாவென்பது எது என்று மேல் இரண்டு சுலோகங்களில் எடுத்துச் சொல்கிறர்:-

**चैतन्यं व्यष्टयवच्छिन्नं प्रत्यगात्मेति गीयते ।**
**साभासं व्यष्ट्युपहितं सत्तादात्म्येन तद्गुणैः ॥ ३१९ ॥**

**சைதன்யம் வ்யஷ்டயவச்சி2ன்னம் ப்ரத்யகா3த்மேதி கீ3யதே ।**
**ஸாபா4ஸம் வ்யஷ்ட்யுபஹிதம் ஸத்தாதா3த்ம்யேன தத்3கு3ணை: ॥ 319 ॥**

**अभिभूतः स एवात्मा जीव इत्यभिधीयते ।**
**किंचिज्ज्ञत्वानीश्वरत्व संसारित्वादिधर्मवान् ॥ ३२० ॥**

**அபி4பூ4த: ஸ ஏவாத்மா ஜீவ இத்யபி4தீ4யதே ।**
**கிஞ்சிஜ்ஜ்ஞத்வானீஸ்வரத்வ ஸம்ஸாரித்வாதி3த4ர்மவான் ॥ 320 ॥**

**व्यष्टयवच्छिन्नं** = வியஷ்டி அக்ஞானத்துடன் கூடியது,
**வ்யஷ்டயவச்சி2ன்னம்**

**व्यष्ट्युपहितं सत्** = வியஷ்டி அக்ஞானத்தை உபாதியாகக்கொண்டு,
**வ்யஷ்ட்யுபஹிதம் ஸத்**

**साभासं** = ப்ரதிபிம்பத்துடன் கூடியதுமான,
**ஸாபா4ஸம்**

**चैतन्यं** = சைதன்யமானது,
**சைதன்யம்**

**प्रत्यगात्मा इति** = பிரத்யகாத்மா என்று,
**ப்ரத்யகா3த்மா இதி**

**गीयते** = சொல்லப்படுகிறது,
**கீ3யதே**

**तादात्म्येन** = அந்த அக்ஞான ஸ்வரூபமாகவே இருப்பதால்,
**தாதா3த்ம்யேன**

**तद्गुणैः** = அதன் குணங்களால்,
**தத்3கு3ணை:**

**अभिभूतः** = மறைக்கப்பட்டு,
**அபி4பூ4த:**

| | | |
|---|---|---|
| **किंचिज्ज्ञत्व** | = | அல்ப அறிவு, |
| **கிஞ்சிஜ்ஜ்ஞத்வ** | | |
| **अनीश्वरत्व** | = | ஈசுவரனுயில்லாதிருக்கும் தன்மை, |
| **அனீஸ்வரத்வ** | | |
| **संसारित्वादि** | = | ஸம்ஸாரியாயிருக்கும் தன்மை முதலான, |
| **ஸம்ஸாரித்வாதி³** | | |
| **धर्मवान्** | = | தர்மங்களுடன் கூடிய, |
| **த⁴ர்மவான்** | | |
| **स एव आत्मा** | = | அந்த ஆத்மாவே, |
| **ஸ ஏவ ஆத்மா** | | |
| **जीव इति** | = | ஜீவன் என்று, |
| **ஜீவ இதி** | | |
| **अभिधीयते** | = | சொல்லப்படுகிறது. |
| **அபி⁴தீ⁴யதே** | | |

வியஷ்டி அக்ஞானத்துடன் கூடிய சைதன்யம் அதாவது வியஷ்டி அக்ஞானத்தை உபாதியாகக்கொண்டு அதில் ஏற்படும் பிரதிபிம்பத்துடன் கூடிய சைசன்யம் ப்ரத்யகாத்மா என்று சொல்லப்படுகிறது. உபாதியான அக்ஞானஸ்வருபத்துடன் ஒன்ருகக்கலந்து அதன் குணங்களால் மறைக்கப்பட்டு கிஞ்சிஜ்ஞத்வம் (அல்பஞானமுள்ளதன்மை) அநீசுவரத்வம் (ஸ்வதந்திர மற்றதன்மை) ஸம்ஸாரித்வம் (பிறவிமரணங்களுடன் கூடியிருக்கும் தன்மை) முதலான தர்மங்களுடன் கூடிய அந்த ஆத்மாவே ஜீவன் என்று சொல்லப்படுகிறது. **(319-320)**

## अस्य व्यष्टिरहंकारकारणत्वेन कारणम् ।
## वपुस्तत्राभिमान्यात्मा प्राज्ञ इत्युच्यते बुधैः ॥ ३२१ ॥

**அஸ்ய வ்யஷ்டிரஹங்காரகாரணத்வேன காரணம் ।**
**வபுஸ்தத்ராபி⁴மான்யாத்மா ப்ராஜ்ஞ இத்யுச்யதே பு³தை⁴: ॥ 321 ॥**

| | | |
|---|---|---|
| **अस्य** | = | இந்த ஜீவாத்மாவுக்கு, |
| **அஸ்ய** | | |
| **अहंकारकारणत्वेन** | = | அஹங்காரத்திற்கு காரணமாக இருப்பதால், |
| **அஹங்காரகாரணத்வேன** | | |
| **व्यष्टिः** | = | வியஷ்டி அக்ஞானம், |
| **வ்யஷ்டி:** | | |
| **कारणं वपु** | = | காரண சரீரமாகும், |
| **காரணம் வபு** | | |
| **तत्र** | = | அந்தக்காரண சரீரத்தில், |
| **தத்ர** | | |

**अभिमानी** = அபிமானம் கொண்ட,
**அபி⁴மானீ**
**आत्मा** = ஆத்மா,
**ஆத்மா**
**प्राज्ञ इति** = பிராக்ஞன் என்று,
**ப்ராஜ்ஞ இதி**
**बुधैः** = வித்வான்களால்,
**பு³தை⁴:**
**उच्यते** = சொல்லப்படுகிறுன்.
**உச்யதே**

இந்த ஆத்மாவிற்கு அஹங்காரம் அதாவது நான் என்கிற எண்ணம் உண்டாவதற்குக் காரணம் வியஷ்டி அக்ஞானம்தான் ஆகையால் இது ஆத்மாவிற்குக் காரண சரீரம் ஆகும். அந்த சரீரத்தை அபிமானிக்கும் ஆத்மா பிராக்ஞன் என்று சொல்லப் படுகிறது. **(321)**

**प्राज्ञत्वमस्यैकाज्ञानभासकत्वेन संमतम् ।**
**व्यष्टेर्निकृष्टत्वेनास्य नानेकाज्ञानभासकम् ॥ ३२२ ॥**

**ப்ராஜ்ஞத்வமஸ்யைகாஜ்ஞானபா⁴ஸகத்வேன ஸம்மதம் ।**
**வ்யஷ்டேர்னிக்ருஷ்டத்வேனாஸ்ய நானேகாஜ்ஞானபா⁴ஸகம் ॥ 322 ॥**

**एकाज्ञानभासकत्वेन** = ஒரு அக்ஞானத்தை விளக்குவதால்,
**ஏகாஜ்ஞானபா⁴ஸகத்வேன**
**अस्य** = இவனுக்கு,
**அஸ்ய**
**प्राज्ञत्वं** = பிராக்ஞத்தன்மை,
**ப்ராஜ்ஞத்வம்**
**संमतं** = ஒப்புக்கொள்ளப்பட்டது,
**ஸம்மதம்**
**अस्य** = இவனுடைய,
**அஸ்ய**
**व्यष्टेः** = வியஷ்டியானது,
**யஷ்டே:**
**निकृष्टत्वेन** = தாழ்ந்ததாயிருப்பதால்,
**நிக்ருஷ்டத்வேன**
**न अनेकाज्ञानभासकम्** = அநேகம் அக்ஞானங்களை விளக்குவது
**ந அனேகாஜ்ஞானபா⁴ஸகம்** இல்லை.

ஸாதாரணமாக நல்ல அறிவுள்ளவனைத்தான் பிராக்ஞன் என்று சொல்வது நியாயமாகும். அஹங்கார காரணமான வியஷ்டி அக்ஞானமாகிற காரண சரீரத்தை அபிமானிக்கிற ஜீவனை எப்படி பிராக்ஞன் என்று சொல்லலாம் என்று ஸந்தேகிக்க லாம் இவன் அக்ஞானத்தையே விளங்கும்படிச் செய்வதால் இவனுக்கு அந்தப் பெயர் ஏற்பட்டதென்றும், ஆனால் ஜீவனுடைய உபாதி தாழ்ந்ததானபடியால் இவனால் ஒரு அக்ஞானத்தைத் தான் விளங்கவைக்க முடியும். ஈசுவரனைப்போல எல்லா அக்ஞான ங்களையும் விளங்கவைக்கும் சக்தி இவனுக்கு இல்லையென்றும் ஆசார்யார் தெளிவு படுத்துகிறார். **(322)**

**स्वरूपाच्छादकत्वेनाप्यानन्दप्रचुरत्वतः।**
**कारणं वपुरानन्दमयः कोश इतीर्यते ॥ ३२३ ॥**

**ஸ்வரூபாச்சா²த³கத்வேனாப்யானந்த³ப்ரசுரத்வத:।**
**காரணம் வபுரானந்த³மய: கோஶ இதீர்யதே ॥ 323 ॥**

| | | |
|---|---|---|
| **स्वरूपाच्छादकत्वेन** ஸ்வரூபாச்சா²த³கத்வேன | = | சைதன்யஸ்வரூபத்தை மறைப்பதாலும், |
| **आमनन्दप्रचुरत्वतः अपि** ஆமனந்த³ப்ரசுரத்வத: அபி | = | ஆனந்தம் அதிகமாயிருப்பதாலும், |
| **कारणं वपुः** காரணம் வபு: | = | காரண சரீரம், |
| **आनन्दमयः कोश इति** ஆனந்த³மய: கோஶ இதி | = | ஆனந்தமயகோசம் என்று, |
| **इर्यते** இர்யதே | = | சொல்லப்படுகிறது. |

இந்தக் காரண சரீரமான வியஷ்டி அக்ஞானமானது கோசம் அதாவது உறை சத்தியை மறைப்பதுபோல் ஸ்வரூபத்தை மறைப்பதாலும் ஆனந்தம் அதிகமாயிரு ப்பதாலும் ஆனந்தமய கோசம் என்று சொல்லப்படுகிறது. **(323)**

**अस्यावस्था सुषुप्तिः स्याद्यत्रानन्दः प्रकृष्यते ।**
**एषोऽहं सुखमस्वाप्सं न तु किंचिदवेदिषम् ॥ ३२४ ॥**

**அஸ்யாவஸ்தா² ஸுஷுப்தி: ஸ்யாத்³யத்ரானந்த³: ப்ரக்ருஷ்யதே ।**
**ஏஷோ(அ)ஹம் ஸுக²மஸ்வாப்ஸம் ந து கிஞ்சித³வேதி³ஷம் ॥ 324 ॥**

**इत्यानन्दसमुत्कर्षः प्रबुद्धेषु प्रदृश्यते ।**

**இத்யானந்த³ஸமுத்கர்ஷ: ப்ரபு³த்³தே⁴ஷு ப்ரத்³ருஶ்யதே ।**

| | | |
|---|---|---|
| **अस्य**<br>**அஸ்ய** | = | இவனுடைய, |
| **अवस्था**<br>**அவஸ்தா²** | = | அவஸ்தையானது, |
| **सुषुप्तिः स्यात्**<br>**ஸுஷுப்தி: ஸ்யாத்** | = | ஸுஷுப்தியாகும், |
| **यत्र**<br>**யத்ர** | = | எதில், |
| **आनन्दः**<br>**ஆனந்த³:** | = | ஆனந்தமானது, |
| **प्रकृष्यते**<br>**ப்ரக்ருஷ்யதே** | = | சிறப்பாக இருக்கிறதோ, |
| **एषः अहं**<br>**ஏஷ: அஹம்** | = | இந்த நான், |
| **सुखं**<br>**ஸுக²ம்** | = | ஸுகமாக, |
| **अस्वाप्सं**<br>**அஸ்வாப்ஸம்** | = | தூங்கினேன், |
| **न तु किंचिदवेदिषम्**<br>**ந து கிஞ்சித³வேதி³ஷம்** | = | ஒன்றையும் அறிந்து கொள்ளவில்லை, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **प्रबुद्धेषु**<br>**ப்ரபு³த்³தே⁴ஷு** | = | (தூக்கத்திலிருந்து) விழிதிதுக் கொண்டவர்களிடம், |
| **आनन्दसमुत्कर्षः**<br>**ஆனந்த³ஸமுத்கர்ஷ:** | = | ஆனந்தத்தின் சிறப்பு, |
| **प्रदृश्यते**<br>**ப்ரத்³ருஶ்யதே** | = | காணப்படுகிறதோ. |

"நான் ஸுகமாகத் தூங்கினேன். எனக்கு ஒன்றும் தெரியாது" என்று தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவன் சொல்கிறுன். இரவில் நன்ருகத் தூங்கும்பொழுது தான் அனுபவித்த ஆனந்தத்தை நினைவுபடுத்திக்கொண்டு காலையில் இவ்வாறு கூறுவதால் ஸுஷுப்தி அவஸ்தையில் ஆனந்தம் அதிகமாக இருப்பதாகத் தெரிகிறது ஆகையால் ஆனந்தமய கோசமென்னும் காரண சரீரத்தில் அபிமானியான ப்ராஜ்ஞனுக்கு ஸுஷுப்தி ஸ்தானமாகும். **(324)**

(**அவதாரிகை**) இவ்விதமாக ஸமஷ்டி அக்ஞானத்தை உபாதியாக உடைய ஈசுவரனுக்கு அதுவே காரண சரீரம், ஆனந்தமயகோசம், ஸுஷுப்தி நிலை என்றும்,

வியஷ்டி அக்ஞானத்தை உபாதியாக உடைய பிராக்ஞனுக்கு அதுவே காரண சரீரம், ஆனந்தமய கோசம், ஸுஷுப்தி நிலை என்றும் வர்ணித்திருக்கிறபடியால், முன்னலேயே ஸமஷ்டிக்கும் வியஷ்டிக்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லையென்று காட்டிய நியாயப்படி, பிராச்ஞனும் ஈசுவரனும் ஸ்வரூபத்தில் வேறுபட்டவர்களில்லை என்பதை துலக்குகிருர்: -

**समष्टेरपि च व्यष्टेः उभयोर्वनवृक्षवत् ॥ ३२५ ॥**

**ஸமஷ்டேரபி ச வ்யஷ்டே꞉ உப⁴யோர்வனவ்ருக்ஷவத் ॥ 325 ॥**

**अभेद एव नो मेदो जात्येकत्वेन वस्तुत:**
**अभेद एव ज्ञातव्य: तथेशप्राज्ञयोरपि ॥ ३२६ ॥**

**அபே⁴த³ ஏவ நோ மேதோ³ ஜாத்யேகத்வேன வஸ்துத꞉**
**அபே⁴த³ ஏவ ஜ்ஞாதவ்ய꞉ ததே²ஶப்ராஜ்ஞயோரபி ॥ 326 ॥**

**वस्तुत:** = உண்மையில்,
**வஸ்துத꞉**
**जात्येकत्वेन** = ஜாதி ஒன்றுயிருப்பதால்,
**ஜாத்யேகத்வேன**
**समष्टेरपि** = ஸமஷ்டிக்கும்,
**ஸமஷ்டேரபி**
**व्यष्टेः च** = வியஷ்டிக்கும்,
**வ்யஷ்டே꞉ ச**
**उभयो:** = இரண்டிற்கும்,
**உப⁴யோ:**
**वनवृक्षवत्** = காட்டிற்கும் மாத்திற்தம்போல்,
**வனவ்ருக்ஷவத்**
**अभेद एव** = அபேதம் தான்,
**அபே⁴த³ ஏவ**
**नो मेद:** = வேற்றுமை இல்லை,
**நோ மேத³꞉**
**तथा** = அவ்வாறே,
**ததா²**
**ईशप्राज्ञयोरपि** = ஈசுவரனுக்கும் ப்ராக்ஞனுக்கும்,
**ஈஶப்ராஜ்ஞயோரபி**
**अभेद एव** = அபேதம்தான்,
**அபே⁴த³ ஏவ**
**ज्ञातव्य:** = அறியத்தக்கது.
**ஜ்ஞாதவ்ய꞉**

தனியான மரம், அநேகம் மரங்கள் சேர்ந்துள்ள காடு இரண்டிலும் மரம் என்ற ஒரே ஜாதியிருப்பதால் இரண்டிற்கும் வேற்றுமை கிடையாது இதுபோலவே ஸமஷ்டி, வியஷ்டி இரண்டும் அக்ஞானம் என்ற ஒரே ஜாதியைச் சேர்ந்ததால் இரண்டும் ஒன்றுதான், பேதம் கிடையாது. உபாதியான ஸமஷ்டி அக்ஞானத்திற்கும் வியஷ்டி அக்ஞானத்திற்கும் பேதமில்லாததால் இவைகளை உபாதியாகக்கொண்ட ஈசுவரனுக்கும் ப்ராக்ஞனுக்கும் பேதம் கிடையாது. அபேதம்தான். **(325-326)**

## सत्युपाध्योरभिन्नत्वे क्व भेदस्तद्विशिष्टयोः ।
## एकीभावे तरङ्गान्ध्योः को भेदः प्रतिबिम्बयोः ॥ ३२७ ॥

**ஸத்யுபாத்⁴யோரபி⁴ன்னத்வே க்வ பே⁴த³ஸ்தத்³விஶிஷ்டயோ: ।**
**ஏகீபா⁴வே தரங்கா³ந்த்⁴யோ: கோ பே⁴த³: ப்ரதிபி³ம்ப³யோ: ॥ 327 ॥**

**उपाध्योः** = இருஉபாதிகளுக்கும்,
**உபாத்⁴யோ:**
**अभिन्नत्वे सति** = வேற்றுமையில்லாதிருக்கும்பொழுது,
**அபி⁴ன்னத்வே ஸதி**
**तद्विशिष्टयोः** = அவைகளுடன் கூடியவைகளுக்கு,
**தத்³விஶிஷ்டயோ:**
**क्व भेदः** = வேற்றுமை ஏது?
**க்வ பே⁴த³:**
**तरङ्गान्ध्योः** = அலையும் ஸமுத்திரமும்,
**தரங்கா³ந்த்⁴யோ:**
**एकीभावे** = ஒன்றுயிருக்கும்பொழுது,
**ஏகீபா⁴வே**
**प्रतिबिम्बयोः** = (அவைகளிலுள்ள) ப்ரதி பிம்பங்களுக்கு,
**ப்ரதிபி³ம்ப³யோ:**
**को भेदः** = என்ன வேற்றுமை?
**கோ பே⁴த³:**

உபாதிகள் இரண்டும் வேறுபடாமலிருக்கையில், அவைகளுடன் சேர்ந்திருப்ப வைகளுக்குள் வேற்றுமை எங்கிருந்துவரும்? அலையும் ஸமுத்திரமும் ஒன்றாயி ருக்கும்போது அவைகளில் ஏற்படும் (ஸூர்ய) பிரத பிம்பங்களுக்குள் என்ன வேற்றுமையிருக்கும்? **(327)**

## अज्ञानतदवच्छिन्नाभासयोरुभयोरपि ।
## आधारं शुद्धचैतन्यं यत् तत् तुर्यमितीर्यते ॥ ३२८ ॥

**அஜ்ஞானதத³வச்சி²ந்நாபா⁴ஸயோருப⁴யோரபி ।**
**ஆதா⁴ரம் ஶுத்³த⁴சைதன்யம் யத் தத் துர்யமிதீர்யதே ॥ 328 ॥**

**अज्ञानतदवच्छिन्नाभासयोः उभयोरपि** = ஸமஷ்டியாயும் வியஷ்டியாயுமுள்ள அக்ஞானம் அதில் உள்ள பிரதிபிம்பம் இவ்விரண்டுகளுக்கும்,

**அஜ்ஞானதத³வச்சி²ந்நாபா⁴ஸயோ: உப⁴யோரபி**

**आधारं** = ஆச்ரயமாக இருக்கும்,

**ஆதா⁴ரம்**

**यत्** = எந்த,

**யத்**

**शुद्धचैतन्यं** = சுத்தசைதன்யமுண்டோ,

**ஶுத்³த⁴சைதன்யம்**

**तत्** = அது,

**தத்**

**तुर्यं** = துர்யம் (நான்காவது),

**துர்யம்**

**इति** = என்று,

**இதி**

**ईर्यते** = சொல்லப்படுகிறது.

**ஈர்யதே**

ஸமஷ்டியாயும் வியஷ்டியாயுமுள்ள அக்ஞானம், அதனுல் வரையறுக்கப் பட்டிருக்கும் பிரதிபிம்பம் (ஈசுவரன், பிராக்ஞன் இரண்டுவிதமும்) ஆகிய இரண்டிற்கும் ஆதாரமாய், அடிப்படையாய் இருக்கும் சுத்தமான சைதன்யம் துர்யம் நான்காவது என்று சொல்லப்படுகிறது. காரணம் ஒன்று, அதின் கார்யங்களாகிய ஸூக்ஷ்மம் ஸ்தூலம் என்கிற இரண்டு, ஆகமூன்றுக்கும் அடிப்படையாய் இருப்பதால் சுத்த சைதன்யம் நான்காவது என்று கருதப்படுகிறது. **(328)**

**एतदेवाविविक्तं सदुपाधिभ्यां च तद्गुणैः।**
**महावाक्यस्य वाच्यार्थो विविक्तं लक्ष्य इष्यते ॥ ३२९ ॥**

**ஏததே³வாவிவிக்தம் ஸது³பாதி⁴ப்⁴யாம் ச தத்³கு³ணை:।**
**மஹாவாக்யஸ்ய வாச்யார்தோ² விவிக்தம் லக்ஷ்ய இஷ்யதே ॥ 329 ॥**

**उपाधिभ्यां** = இரண்டு உபாதிகளோடும்,

**உபாதி⁴ப்⁴யாம்**

**तद्गुणैः** = அவைகளின் குணங்களோடும்,

**தத்³கு³ணை:**

**अविविक्तं सत्** = பிரிக்கப்படாமல் சேர்ந்திருக்கும்,

**அவிவிக்தம் ஸத்**

**एतत् एव** = இந்த சைதன்யமே,

**ஏதத் ஏவ**

| | | |
|---|---|---|
| **महावाक्यस्य** **மஹாவாக்யஸ்ய** | = | மஹாவாக்கியத்திற்கு, |
| **वाच्यार्थो** **வாச்யார்தோ²** | = | பதங்களால் நேரில் சொல்லப்படும் பொருள், |
| **विविक्तं** **விவிக்தம்** | = | பிரிக்கப்பட்டது, |
| **लक्ष्य** **லக்ஷ்ய** | = | லக்ஷணையால் குறிக்கப்படும் பொருளாக, |
| **इष्यते** **இஷ்யதே** | = | கருதப்படுகிறது. |

நான்காவதான இந்த சுத்த சைதன்யமே இரண்டுவித உபாதிகளிலிருந்தும், அவைகளின் குணங்களிலிருந்தும் வேறுபடாமலிருக்கும்போது. மஹாவாக்கியத்தின் பதங்களால் நேரில் சொல்லப்படும் பொருள் ஆகும். அதையே அவைகளிலிருந்து பிரித்து தனித்திருந்தால் லக்ஷணையால் குறிக்கப்படும் பொருள்.

"நீ அது" **तत्वमसि தத்வமஸி**

"நான் பிரஹ்மம்" **अहं ब्रह्मास्मि அஹம் ப்³ரஹ்மாஸ்மி**

என்று உள்ள மஹாவாக்கியங்களில் "நீ, நான்" என்கிற வார்த்தைகளினுல் நேரில் சொல்லப்படும் பொருள் வியஷ்டி அச்ஞானமாகிற உபாதியுடன் சேர்ந்த ஜீவனுகும். அதே பதங்களினுல் லக்ஷணையால் குறிக்கப்படும் பொருள் அவ்வுபாதியற்று தனித்திருக்கும் சைதன்யமாகும். அப்படியே, "அது, பிரஹ்மம்" என்ற பதங்களால் நேரில் சொல்லப்படும் பொருள் ஸமஷ்டி அக்ஞானமாகிற உபாதியுடன் சேர்ந்த ஈசுவரனுகும். அதே பதங்களால் லக்ஷணையால் குறிக்கப்படும் பொருள் அவ்வுபாதி யற்று தனித்திருக்கும் "நான்காவதான" சைதன்யமாகும். இவ்விஷயத்தை பின்னுல் ஸ்ரீமத் ஆசார்யாரே மிகவும் தெளிவாயும் விஸ்தாரமாயும் சொல்லப்போகிருர். **(329)**

**(அவதாரிகை)** இவ்வாறு ஆனந்தமய கோசத்தை வர்ணித்து விட்டு விக்ஞான மய கோசத்தை விளக்குவதற்காக, ஸமஷ்டி அக்ஞானமாகிய மாயையை அவலம்பி த்துக்கொண்டு ஈசுவரன் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டி செய்யும் பிரகாரத்தை விரிவாகக் கூறுகிருர்: -

**अनन्तशक्तिसंपन्नो मायोपाधिक ईश्वरः ।**
**ईक्षामात्रेण सृजति विश्वमेतच्चराचरम् ॥ ३३० ॥**

**அனந்தஶக்திஸம்பன்னே மாயோபாதி⁴க ஈஶ்வர꞉ ।**
**ஈக்ஷாமாத்ரேண ஸ்ருஜதி விஶ்வமேதச்சராசரம் ॥ 330 ॥**

| | | |
|---|---|---|
| **अनन्तशक्तिसंपन्नः** **அனந்தஶக்திஸம்பன்ன꞉** | = | எல்லையற்ற சக்திகளோடுகூடிய, |

**मायोपाधिकः** = மாயையை உபாதியாகக்கொண்ட,

**மாயோபாதி⁴கः**

**ईश्वरः** = ஈசுவரன்,

**ஈஶ்வரः**

**ईक्षामात्रेण** = ஸங்கல்பத்திஞலேயே,

**ஈக்ஷாமாத்ரேண**

**चराचरं** = ஜங்கமமும் ஸ்தாவரமாயுமுள்ள,

**சராசரம்**

**एतत् विश्वं** = இந்த பிரபஞ்சத்தை,

**ஏதத் விஶ்வம்**

**सृजति** = ஸ்ருஷ்டிக்கிறுர்.

**ஸ்ருஜதி**

ஈசுவரனுக்கு மாயை உபாதியாக உள்ளது. அதஞல் அவரிடம் எல்லையற்ற சக்திகள் உள்ளன. அவர் தமது ஸங்கல்பம் ஒன்றிஞலேயே ஸ்தாவர ஜங்கம ரூபமான பிரபஞ்சம் முழுவதையும் ஸிருஷ்டிக்கிறுர். **(330)**

**अद्वितीयस्वमात्रोऽसौ निरुपादान ईश्वरः ।**
**स्वयमेव कथं सर्वं सृजतीति न शङ्क्यताम् ॥ ३३१ ॥**

**அத்³விதீயஸ்வமாத்ரோ(அ)ஸௌ நிருபாதா³ன ஈஶ்வரः ।**
**ஸ்வயமேவ கத²ம் ஸர்வம் ஸ்ருஜதீதி ந ஶங்க்யதாம் ॥ 331 ॥**

**अद्वितीयस्वमात्रः** = இரண்டாவது பொருளில்லாமல் தான்

**அத்³விதீயஸ்வமாத்ரः** மட்டுமே தனித்து இருப்பவராயும்,

**निरुपादान** = உபாதான காரணப்பொருளற்றவராயும் உள்ள,

**நிருபாதா³ன**

**असौ** = அந்த,

**அஸௌ**

**ईश्वरः** = ஈசுவரன்,

**ஈஶ்வரः**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**सर्वं** = எல்லாவற்றையும்,

**ஸர்வம்**

**स्वयमेव** = தான் ஒருவராகவே,

**ஸ்வயமேவ**

**सृजति** = ஸிருஷ்டி செய்கிறுர்,

**ஸ்ருஜதி**

**इति** = என்று,

**இதி**

**न शङ्क्यतां** = சந்தேகப்படவேண்டாம்.

**ந ஶங்க்யதாம்**

இந்த ஈசுவரன் இரண்டாவது பதார்த்தமில்லாமல் தான் மாத்திரம் தனித்து இருப்பவர், அவருக்கு எடுத்துக் கொள்வதற்கு வேறு பதார்த்தம் கிடையாது. அப்படி யிருக்க அவர் தாஞகவே எல்லாவற்றையும் எப்படி ஸ்ருஷ்டி செய்ய முடியும் என்று ஸந்தேகப்படவேண்டாம். **(331)**

**निमित्तमप्युपादानं स्वयंमेव भवन् प्रभुः ।**
**चराचरात्मकं विश्वं सृजत्यवति लुम्पति ॥ ३३२ ॥**

**நிமித்தமப்யுபாதா³னம் ஸ்வயம்மேவ ப⁴வன் ப்ரபு⁴: ।**
**சராசராத்மகம் விஶ்வம் ஸ்ருஜத்யவதி லும்பதி ॥ 332 ॥**

**प्रभुः** = பிரபுவான ஈசுவரன்,

**ப்ரபு⁴:**

**स्वयंमेव** = தாஞகவே,

**ஸ்வயம்மேவ**

**निमित्तं** = நிமித்த காரணமாகவும்,

**நிமித்தம்**

**उपादानमपि** = உபாதான காரணமாகவும்,

**உபாதா³னமபி**

**भवन्** = ஆய்க் கொண்டு,

**ப⁴வன்**

**चराचरात्मकं** = ஜங்கமமாயும், ஸ்தாவரமாயுமுள்ள,

**சராசராத்மகம்**

**विश्वं** = பிரபஞ்சத்தை,

**விஶ்வம்**

**सृजति** = ஸ்ருஷ்டிக்கிறுர்,

**ஸ்ருஜதி**

**अवति** = காப்பாற்றுகிறுர்,

**அவதி**

**लुम्पति** = நாசம் செய்கிறுர்.

**லும்பதி**

உலகில் ஒரு குடம் உண்டாவதற்கு சேதனஞன குயவன் என்ற நிமித்த காரணமும் அசேதனமான மண் என்ற உபாதான காரணமும் தேவைப்படுகிறது. உபாதானம், நிமித்தம் என்ற இரண்டு காரணங்களுமிருந்தால்தான் காரியம் உண்டாகிறது என்பதை உலகில் பார்க்கிறோம் ஸிருஷ்டியின் ஆரம்பத்திலோ ஈசுவரன் ஒருவர்தான் இருக்கிறார். இரண்டாவது பொருள் ஒன்றுமேயில்லை. ஆகவே பிரபஞ்சத்திற்கு சேதனஞன ஈசுவரன் நிமித்த காரணமாக இருந்தபோதிலும் குடத்திற்கு மண்போல உபாதான காரணமான மூலப்பொருள் ஒன்றுமில்லாததால் ஈசுவரன் தான் ஒருவராக இருந்துகொண்டு பிரபஞ்சம் முழுவதை எப்படி ஸிருஷ்டி க்கமுடியும் என்று கேள்வி. இதற்கு ஸமாதானம்.

பிரபுவான ஈசுவரன் தானே செய்கிறவஞன குயவன் போல நிமித்தகாரண மாயும் செய்யப்படுகிற மண்போல உபாதான காரணமாயும் இருந்துகொண்டு அசையும் பொருள் அசையாப் பொருள் உருவமான உலகத்தை உண்டுபண்ணுகிறார். காப்பாற்றுகிறார். நாசம் செய்கிறார். **(332)**

**(அவதாரிகை)** ஒருவரே இரண்டுவிதமாக அதாவது உபாதான காரணமாகவும் நிமித்தகாரணமாகவும் ஆகமுடியும் என்பதற்கு திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார்: -

**स्वप्राधान्येन जगतो निमित्तमपि कारणम् ।**
**उपादानं तथोपाधिप्राधान्येन भवत्ययम् ॥ ३३३ ॥**

**ஸ்வப்ராதா4ன்யேன ஜக3தோ நிமித்தமபி காரணம் ।**
**உபாதா3னம் ததோ2பாதி4ப்ராதா4ன்யேன ப4வத்யயம் ॥ 333 ॥**

**यथा लूता निमित्तं च स्वप्रधानतया भवेत् ।**
**स्वशरीरप्रधानत्वेनोपादानं तथेश्वरः ॥ ३३४ ॥**

**யதா2 லூதா நிமித்தம் ச ஸ்வப்ரதா4னதயா ப4வேத் ।**
**ஸ்வஶரீரப்ரதா4னத்வேனோபாதா3னம் ததே2ஶ்வர: ॥ 334 ॥**

**यथा** = எப்படி,
**யதா2**

**लूता** = சிலந்திப்பூச்சியானது,
**லூதா**

**स्वप्रधानतया** = தான் பிரதானமாக இருப்பதால்,
**ஸ்வப்ரதா4னதயா**

**निमित्तं** = நிமித்தகாரணமாகவும்,
**நிமித்தம்**

**स्वशरीरप्रधानत्वेन** = தனது சரீரம் பிரதானமாயிருப்பதால்,
**ஸ்வஶரீரப்ரதா4னத்வேன**

| | | |
|---|---|---|
| **उपादानं च** <br> **உபாதா³னம் ச** | = | உபாதானகாரணமாகவும், |
| **भवेत्** <br> **ப⁴வேத்** | = | ஆகுமோ, |
| **तथा** <br> **ததா²** | = | அப்படி, |
| **अयं ईश्वरः** <br> **அயம் ஈஶ்வரः** | = | இந்த ஈசுவரன், |
| **स्वप्राधान्येन** <br> **ஸ்வப்ராதா⁴ன்யேன** | = | தன்னுடைய ப்ராதன்யத்தால், |
| **जगतः** <br> **ஜக³தः** | = | பிரபஞ்சத்திற்கு, |
| **निमित्तं कारणं** <br> **நிமித்தம் காரணம்** | = | நிமித்தகாரணமாகவும், |
| **तथा** <br> **ததா²** | = | அவ்வாறே, |
| **उपाधिप्राधान्येन** <br> **உபாதி⁴ப்ராதா⁴ன்யேன** | = | உபாதியான மாயையின ப்ராதான்யத்தால், |
| **उपादानं अपि** <br> **உபாதா³னம் அபி** | = | உபாதான காரணமாகவும், |
| **भवति** <br> **ப⁴வதி** | = | ஆகிருர். |

சிலந்திப்பூச்சியானது வெளியிலிருந்து ஒரு பொருளேயும் எதிர்பார்க்காமல் தன் சரீரத்திலிருந்தே நூலைத் தயாரித்த கூடு கட்டுகிறது ஜீவசைதன்யமும் சரீரமும் பிரிக்க முடியாதபடி ஒன்றுசேர்ந்து ஒரே பொருளாக விளங்கும் சிலந்தியே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறது. ஜீவனில்லாவிட்டாலும், சிலந்தி உடலில்லாவிட்டாலும் கூடு உண்டாகாது. இரண்டும் சேர்ந்தே கூட்டைத் தயாரித்த போதிலும் ஜீவனுடன் சேர்ந்த சரீரம் உபாதான காரணமாகவும் சரீரத்துடன் சேர்ந்த ஜீவன் நிமித்த காரணமாகவும் ஆகிறது இதைத்தவிற வேறு காரணத்தை எதிர் பார்ப்பதில்லை. இது போலவேதான் மாயாவச்சின்ன சைதன்ய ரூபமான ஈசுவரனே பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிருர்.

**"यथोर्णनाभिः सृजते "**

**யதோ²ர்ணநாபி⁴: ஸ்ருஜதே**

என்று முண்டகோப நிஷத்தில் கூறப்பட்டுள்ளது ஈசுவர ஸ்வரூபத்திலுள மாயை என்ற அம்சத்தைக்கொண்டு உபாசான காரணமாகவும், சைதன்யாம்சத்தைக்கொண்டு நிமித்தகாரணமாகவும் ஆகிருர். இரண்டு அம்சங்களும் சேர்ந்தே ஈசுவரனுதலால்

ஈசுவரனே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் ஆகிறார் என்று கூறப் பட்டது. **(333-334)**

(**அவதாரிகை**) சுத்த ஸத்வ பிரதானராயிருப்பவர் ஈசுவரன் என்றும், மலின ஸத்வ பிரதானராயிருப்பவன் ஜீவன் என்றும் முன் சொல்லப்பட்டது. ஜகத்திற்கு உபாதான காரணமாயிருப்பது மாயையின் எந்த அம்சம் என்ற கேள்வி ஏற்படக் கூடியதினால், அந்த அம்சம் தமோ குணத்தை முக்கியமாகவுள்ளதென்பதைச் சொல்லி அதிலிருந்துதான் ஆகாசம் முதலான ஐந்து பூதங்களும் அவைகளின் கார்யங்களும் ஏற்படுகின்றன என்பதை விவரிக்கிறார்: -

**तमः प्रधानप्रकृतिविशिष्टात् परमात्मनः**
**अभूत् सकाशात् आकाशं आकाशात् वायुः उच्यते ॥ ३३५ ॥**

**தம꞉ ப்ரதா⁴னப்ரக்ருதிவிஶிஷ்டாத் பரமாத்மன꞉**
**அபூ⁴த் ஸகாஶாத் ஆகாஶம் ஆகாஶாத் வாயு꞉ உச்யதே ॥ 335 ॥**

**वायोरग्निस्तथैवाग्नेरापोऽद्भ्यः पृथिवी क्रमात् ।**

**வாயோரக்³நிஸ்ததை²வாக்³னேராபோ(அ)த்³ப்⁴ய꞉ ப்ருதி²வீ க்ரமாத் ।**

**तमः प्रधानप्रकृतिविशिष्टात्** = தமோகுணத்தை முக்யமாகக்கொண்ட
**தம꞉ ப்ரதா⁴னப்ரக்ருதிவிஶிஷ்டாத்** மாயையுடன்கூடிய,
**परमात्मनः सकाशात्** = ஈசுவரனிடமிருந்து,
**பரமாத்மன꞉ ஸகாஶாத்**
**आकाशं** = ஆகாசம்,
**ஆகாஶம்**
**अभूत्** = உண்டாயிற்று,
**அபூ⁴த்**
**आकाशात्** = ஆகாசத்திலிருந்து,
**ஆகாஶாத்**
**वायुः** = வாயு,
**வாயு꞉**
**उच्यते** = உண்டானதாகச் சொல்லப்படுகிறது,
**உச்யதே**
**वायोः** = வாயுவிலிருந்து,
**வாயோ**
**अग्निं** = அக்னியும்,
**அக்³னிம்**
**तथैव** = அப்படியே,
**ததை²வ**

**अग्ने:** = அக்னியிலிருந்து,
**அக்³னே:**
**आप:** = ஜலமும்,
**ஆப:**
**अद्भ्य:** = ஜலத்திலிருந்து,
**அத்³ப்⁴ய:**
**पृथिवी** = பிருதிவியும்,
**ப்ருதி²வீ**
**क्रमात्** = வரிசையாக (உண்டாயிற்று).
**க்ரமாத்**

தமோ குணத்தை பிரதானமாயுடைய பிரகிருதியென்ற மாயையுடன் சேர்ந்திருக்கும் பரமாத்மாவான ஈசுவரனிடமிருந்து முதலில் ஆகாசம் உண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயுவும் வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருத்வியும் வரிசையாக உண்டாயின. **(335)**

**(அவதாரிகை)** தமோகுண ப்ரதானமான மாயைதான் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமென்பதை நிரூபணம் செய்கிறுர்: -

**शक्तेस्तमःप्रधानत्वं तत्कार्ये जाड्यदर्शनात् ॥ ३३६ ॥**

**ஶக்தேஸ்தம:ப்ரதா⁴னத்வம் தத்கார்யே ஜாட்³யத³ர்ஶனுத் ॥ 336 ॥**

**आरभन्ते कार्यगुणान् ये कारणगुणा हि ते ।**

**ஆரப⁴ந்தே கார்யகு³ணுன் யே காரணகு³ணு ஹி தே ।**

**तत्कार्ये** = அதன் காரியத்தில்,
**தத்கார்யே**
**जाड्यदर्शनात्** = ஜடத்தன்மை தெரிவதால்,
**ஜாட்³யத³ர்ஶனுத்**
**शक्ते:** = காரணமான மாயைக்கு,
**ஶக்தே:**
**तम:प्रधानत्वं** = தமோகுணம் முக்கியமாயிருப்பது (தெரிகிறது),
**தம:ப்ரதா⁴னத்வம்**
**ये** = எவை,
**யே**
**कारणगुणा** = காரணத்தின் குணங்களோ,
**காரணகு³ணு**
**ते** = அவைகள்,

**தே**

**कार्यगुणान्** = காரியத்தின் குணங்களை,

**கார்யகு³ணான்**

**आरभन्ते हि** = உண்டுபண்ணுமல்லவா!

**ஆரப⁴ந்தே ஹி**

காரணத்தில் எந்த குணங்கள் உள்ளனவோ அவைகளே கார்யத்திலும் ஏற்படுகின்றன என்பதை உலகில் பார்க்கிறோம். மண்ணிலுள்ள குணங்கள் குடத்தில் காணப்படுகின்றன. காரியமான பிரபஞ்சம் முழுவதிலும் ஜடத்தன்மை காணப்படு கிறது. ஆதலால் இதன் காரணமான மாயையிலும் ஜடத்தன்மை இருக்க வேண்டு மென்று தெரிகிறது, ஜடத்தன்மை என்பது தமோ குணத்தைச்சேர்ந்தது. ஆகையால் தமோகுண ப்ரதானமான மாயைதான் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமென்று தீர்மானிக்கப்படுகிறது. **(336)**

## एतानि सूक्ष्मभूतानि भूतमात्रा अपि क्रमात् ॥ ३३७ ॥

**ஏதானி ஸூக்ஷ்மபூ⁴தானி பூ⁴தமாத்ரா அபி க்ரமாத் ॥ 337 ॥**

**एतानि** = இவைகள்,

**ஏதானி**

**सूक्ष्मभूतानि** = ஸூக்ஷ்ம பூதங்கள்,

**ஸூக்ஷ்மபூ⁴தானி**

**क्रमात्** = வரிசையாக,

**க்ரமாத்**

**भूतमात्रा अपि** = அந்தந்த பூதங்களின் மாத்திரைகளாகவும்

**பூ⁴தமாத்ரா அபி** ஆகின்றன.

இப்பொழுது சொன்னவைகள் ஸூக்ஷ்ம பூதங்கள் ஆகும். அவைகளே வரிசையாக அந்தந்த பூத மாத்திரைகள் அதாவது ஆகாச தன் மாத்திரை, வாயு தன் மாத்திரை, தேஜஸ் தன் மாத்திரை, ஜல தன்மாத்திரை, பிருத்வீ தன் மாத்திரை. **(337)**

## एतेभ्यः सूक्ष्मभूतेभ्यः सूक्ष्मदेहा भवन्त्यपि ।
## स्थूलान्यपि च भूतानि चान्योन्यांशविमेलनात् ॥ ३३८ ॥

**ஏதேப்⁴ய: ஸூக்ஷ்மபூ⁴தேப்⁴ய: ஸூக்ஷ்மதே³ஹா ப⁴வந்த்யபி ।**
**ஸ்தூ²லான்யபி ச பூ⁴தானி சான்யோன்யாம்ஶவிமேலனாத் ॥ 338 ॥**

**एतेभ्यः** = இந்த,

**ஏதேப்⁴ய:**

**सूक्ष्मभूतेभ्यः** = ஸூக்ஷ்மபூதங்களிலிருந்து,

**ஸூக்ஷ்மபூ⁴தேப்⁴ய:**
**सूक्ष्मदेहा अपि** = ஸூக்ஷ்ம சரீரங்களும்,
**ஸூக்ஷ்மதே³ஹா அபி**
**अन्योन्यांशशविमेलनात्** = ஒவ்வொன்றுகளின் பாகங்கள் சேருவதால்,
**அன்யோன்யாம்ஶ்ஶவிமேலனாத்**
**स्थूलान्यपि च भूतानि** = ஸ்தூல பூதங்களும்
**ஸ்தூ²லான்யபி ச பூ⁴தானி**
**भवन्ति** = உண்டாகின்றன.
**ப⁴வந்தி**

இந்த ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம தேகங்களும் ஒன்றேடொன்று அம்சங்கள் கலப்பதினுல் ஸ்தூல பூதங்களும் உண்டாகின்றன.

[கலக்கும் முறையை பஞ்சீகரணம் என்பார்கள். ஆகாச தன் மாத்திரையில் பாதியும், வாயு தன்மாத்திரையில் அரைக்காலும், தேஜஸ் தன்மாத்திரையில் அரைக் காலும், ஜல தன்மாத்திரையில் அரைக்காலும், பிருத்வீ தன் மாத்திரையில் அரைக்காலும் சேர்ந்தால் ஒரு முழு ஆகாச ஸ்தூல பூதம் ஆகும். அப்படியே மற்ற பூதங்களிலும் பிரதானத்தில் பாதி. மற்ற நான்கில் அரைக்கால் அரைக்கால் என்று சேர்த்தால் அந்தந்த ஸ்தூல பூதங்கள் ஏற்படும் ஆக ஒவ்வொரு ஸ்தூல பூகத்திலும் எல்லா ஐந்து பூதங்களின் அம்சங்களும் சேருவதினுல், இவ்விதம் சேர்ப்பதை பஞ்சீகரணம் (ஐந்தாகச் செய்வது) என்று சொல்வார்கள். பஞ்சீகரணம் செய்யப்படாத பூத தன் மாத்திரைகள், அதாவது ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரங்கள் ஏற்படுகின்றன. அப்படியே பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூல பூதங்களிலிருந்து ஸ்தூலமாயுள்ள சரீரம் முதலியவை ஏற்படுகின்றன. பின்னுல் 397 முதல் 400 சுலோகங்களைப் பார்க்கவும்.] **(338)**

(**அவதாரிகை**) முதலில் பஞ்சீகரணம் செய்யப்படாத ஸூக்ஷ்மமான பூதங்களி லிருந்து ஏற்படும் ஸூக்ஷ்ம சரீரத்தின் தன்மையையும் அதனுள்ளடங்கியிருக்கும் அம்சங்களையும் விவரிக்கிறுர்: -

**अपञ्चीकृतभूतेभ्यो जातं सप्तदशाङ्गकम् ।**
**संसारकारणं लिङ्गं आत्मनो भोगसाधनम् ॥ ३३९ ॥**

**அபஞ்சீக்ருதபூ⁴தேப்⁴யோ ஜாதம் ஸப்தத³ஶாங்க³கம் ।**
**ஸம்ஸாரகாரணம் லிங்க³ம் ஆத்மனே போ⁴க³ஸாத⁴னம் ॥ 339 ॥**

**सप्तदशाङ्गकम्** = பதினேழு அவயவங்களை உடையதும்,
**ஸப்தத³ஶாங்க³கம்**

**संसारकारणं** = பிறவி மரணரூபமான ஸம்ஸாரத்திற்குக்

| | | |
|---|---|---|
| **ஸம்ஸாரகாரணம்** | | காரணமானதும், |
| **आत्मनः** | = | ஆத்மாவிற்கு, |
| **ஆத்மனः** | | |
| **भोगसाधनं** | = | ஸுகதுக்காநுபவத்திற்கு ஸாதனமாகவும் உள்ள, |
| **போ⁴க³ஸாத⁴னம்** | | |
| **लिङ्गं** | = | லிங்கசரீரம், |
| **லிங்க³ம்** | | |
| **अपञ्चीकृतभूतेभ्यः** | = | பஞ்சீகரணம் செய்யப்படாத ஸூக்ஷ்ம |
| **அபஞ்சீக்ருதபூ⁴தேப்⁴யः** | | பூதங்களிலிருந்து, |
| **जातं** | = | உண்டானது. |
| **ஜாதம்** | | |

பஞ்சீகரணம் செய்யப்படாத ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து உண்டானது லிங்க சரீரமெனப்படும். இதுவே ஸூக்ஷ்ம சரீரம். இதில் 17 அவயவங்கள் உள்ளன. இதுதான் பிறவி மரண ரூபமான ஸம்ஸாரத்திற்குக் காரணம். சரீரத்தில் வஸிக்கும் ஆத்மாவிற்கு ஸுக துக்காதி போகங்கள் ஏற்படுவதற்கும் இதுவே ஸாதனம். **(339)**

(**அவதாரிகை**) லிங்க சரீரத்திலுள்ள 17 அங்கங்களைக் கூறுகிறார்: -

**श्रोत्रादिपञ्चकं चैव वागादीनां च पञ्चकम् ।**
**प्राणादिपञ्चकं बुद्धिमनसी लिङ्गमुच्यते ॥ ३४० ॥**

**ஶ்ரோத்ராதி³பஞ்சகம் சைவ வாகா³தீ³னாம் ச பஞ்சகம் ।**
**ப்ராணாதி³பஞ்சகம் பு³த்³தி⁴மனஸீ லிங்க³முச்யதே ॥ 340 ॥**

| | | |
|---|---|---|
| **श्रोत्रादिपञ्चकं चैव** | = | காது முதலிய ஐந்தும், |
| **ஶ்ரோத்ராதி³பஞ்சகம் சைவ** | | |
| **वागादीनां पञ्चकं च** | = | வாக்கு முதலான ஐந்தும், |
| **வாகா³தீ³னாம் பஞ்சகம் ச** | | |
| **प्राणादिपञ्चकं** | = | பிராணன் முதலான ஐந்தும், |
| **ப்ராணாதி³பஞ்சகம்** | | |
| **बुद्धिमनसी** | = | புத்தியும் மனமும் (இவை சேர்ந்தது), |
| **பு³த்³தி⁴மனஸீ** | | |
| **लिङ्ग उच्यते** | = | லிங்கசரீரமென்று சொல்லப்படுகிறது. |
| **லிங்க³ உச்யதே** | | |

காது, த்வக், கண், நாக்கு, மூக்கு இவை ச்ரோத்ராதி பஞ்சகம். வாக்கு, கை, கால், பாயு, உபஸ்த்தம் இவை வாகாதி பஞ்சகம். பிராணன், அபானன் வியானன்,

உதானன், ஸமானன், இவை பிராணுதி பஞ்சகம். புத்தி, மனம், ஆக இந்த 17ம் சேர்ந்தது லிங்க சரீரமெனப்படும். **(340)**

## श्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणानि पञ्च जातानि ।
## आकाशादीनां सत्वांशेभ्यो धीन्द्रियाण्यनुक्रमतः॥ ३४१ ॥

**ஶ்ரோத்ரத்வக்சக்ஷுர்ஜிஹ்வாக்⁴ராணனி பஞ்ச ஜாதானி ।**
**ஆகாஶாதீ³னும் ஸத்வாம்ஶேப்⁴யோ தீ⁴ந்த்³ரியாண்யனுக்ரமத꞉ ॥ 341 ॥**

**आकाशादीनां** = ஆகாசம் முதலியவைகளின்,
**ஆகாஶாதீ³னும்**
**सत्वांशेभ्यः** = ஸத்வாம் சங்களிலிருந்து,
**ஸத்வாம்ஶேப்⁴ய꞉**
**अनुक्रमतः** = வரிசையாக,
**அனுக்ரமத꞉**
**श्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणानि** = காது, த்வக்கு, கண், நாக்கு, மூக்கு என்ற,
**ஶ்ரோத்ரத்வக்சக்ஷுர்ஜிஹ்வாக்⁴ராணனி**
**पञ्च** = ஐந்து,
**பஞ்ச**
**धीन्द्रियाणि** = ஞானேந்திரியங்கள்,
**தீ⁴ந்த்³ரியாணி**
**जातानि** = உண்டாயின.
**ஜாதானி**

இந்த பதினேழில் காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்தும் ஞானேந்திரி யங்கள். இவை ஆகாசம் முதலியவைகளின் ஸத்வாம்சங்களிலிருந்து வரிசையாக ஏற்பட்டவைகள்.

[இங்கே சொல்லப்படும் காது முதலியது ஸ்தூல சரீரத்தில் தெரியும் மாம்ஸ பிண்டங்கள் இல்லை. சப்தத்தை கிரஹிக்கும் சக்தி, ஸ்பர்சத்தை கிரஹிக்கும் சக்தி, ரூபத்தை கிரஹிக்கும் சக்தி, ரஸத்தை கிரஹிக்கும் சக்தி, வாஸனையை கிரஹிக்கும் சக்தி, என்றே அர்த்தம். இவைகள் அந்தந்த உணர்ச்சியை உண்டுபண்ணுவதினுல் ஞானேந்திரியங்கள் எனப்படுகின்றன. இவைகளில் ஆகாசத்தின் ஸத்வாம்சத்திலிரு ந்து ஏற்பட்டது காது என்கிற இந்திரியம், வாயுவின் ஸத்வாம்சத்திலிருந்து தோல் என்ற இந்திரியம், தேஜஸ்ஸின் ஸத்வாம்சத்திலிருந்து கண் என்ற இந்திரியம், ஜலத்தின் ஸத்வாம்சத்திலிருந்து நாக்கு என்ற இந்திரியம், பிருத்வியின ஸத்வாம் சத்திலிருந்து மூக்கு என்ற இந்திரியம், இவ்விதமாக ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து வரிசையாய் உண்டாகின்றன. முன்னுல் மாயையின் தமோகுணப் பிரதானமான அம்சத்திலிருந்து இந்த ஸூக்ஷ்ம பூதங்கள்

உண்டானதாகச் சொன்ன போதிலும் தமோகுணம் பிரதானமே தவிர அவைகளில் ஸத்வாம்சமும் உண்டு ரஜஸ் அம்சமும் உண்டு என்பதை மறந்து விடக்கூடாது.]

**(341)**

**आकाशादिगताः पञ्च सात्त्विकांशाः परस्परम् ।**
**मिलित्वैव अन्तःकरणं अभवत् सर्वकारणम् ॥ ३४२ ॥**

**ஆகாஶாதி³க³தா: பஞ்ச ஸாத்த்விகாம்ஶா: பரஸ்பரம் ।**
**மிலித்வைவ அந்த:கரணம் அப⁴வத் ஸர்வகாரணம் ॥ 342 ॥**

| | | |
|---|---|---|
| **आकाशादिगताः** ஆகாஶாதி³க³தா: | = | ஆகாசம் முதலியவைகளிலுள்ள, |
| **पञ्च सात्त्विकांशाः** பஞ்ச ஸாத்த்விகாம்ஶா: | = | ஐந்து ஸாத்விகாம்சங்களும், |
| **परस्परम्** பரஸ்பரம் | = | ஒன்றுக்கொன்று, |
| **मिलित्वैव** மிலித்வைவ | = | சேர்ந்துதான், |
| **सर्वकारणम्** ஸர்வகாரணம் | = | எல்லாவற்றிற்கும் காரணமான, |
| **अन्तःकरणं** அந்த:கரணம் | = | அந்தக்கரணமாக, |
| **अभवत्** அப⁴வத் | = | ஆனது. |

ஆகாசம் முதலான ஐந்து பூதங்களிலும் உள்ள ஐந்து ஸத்வ அம்சங்களும் ஒன்றேடொன்று சேர்ந்துதான் எல்லாவற்றிற்கும் காரணமாயிருக்கிற அந்தக்கரணம் என்ற உள் கருவி ஏற்பட்டது. **(342)**

(**அவதாரிகை**) ஞானேந்திரியங்கள் ஐந்தும் பஞ்ச பூதங்களின் ஸத்வாம்சங்களிலிருந்து உண்டானதற்குக் காரணம் கூறுகிறுர்: -

**प्रकाशकत्वादेतेषां सात्विकांशत्वमिष्यते ।**
**प्रकाशकत्वं सत्वस्य स्वच्छत्वेन यतस्ततः ॥ ३४३ ॥**

**ப்ரகாஶகத்வாதே³தேஷாம் ஸாத்த்விகாம்ஶத்வமிஷ்யதே।**
**ப்ரகாஶகத்வம் ஸத்வஸ்ய ஸ்வச்ச²த்வேன யதஸ்தத: ॥ 343 ॥**

| | | |
|---|---|---|
| **यतः** யத: | = | எந்தக்காரணத்தால், |

| | | |
|---|---|---|
| **स्वच्छत्वेन**<br>**ஸ்வச்ச²த்வேன** | = | ஸ்வச்சமாயிருப்பதால், |
| **सत्वस्य**<br>**ஸத்வஸ்ய** | = | ஸத்வகுணத்திற்கு, |
| **प्रकाशकत्वं**<br>**ப்ரகாஶகத்வம்** | = | பிரகாசப்படுத்தும் தன்மையுண்டோ, |
| **ततः**<br>**ததः** | = | அந்தக்காரணத்தால், |
| **एतेषां**<br>**ஏதேஷாம்** | = | இவைகளுக்கு, |
| **प्रकाशकत्वात्**<br>**ப்ரகாஶகத்வாத்** | = | பிரகாசப்படுத்தும் தன்மை இருப்பதால், |
| **सात्विकांशत्वं**<br>**ஸாத்விகாம்ஶத்வம்** | = | ஸாத்விகாம்சமாக இருக்கும் தன்மை, |
| **इष्यते**<br>**இஷ்யதே** | = | கருதப்படுகிறது. |

ஸத்வ குணம் மிகத்தெளிவாயிருப்பதால் அதற்குத்தான் பிரகாசப்படுத்தும் சக்தி உண்டு. ரஜஸ் தமோகுணங்களுக்கு இந்த சக்தி கிடையாது. ஐந்து ஞானேந்திரியங்களும் அந்தக்கரணமும் சப்தாதி சப்தாதி விஷயங்களை பிரகாசப்படுத்துகின்றன ஸத்வ குணத்தின் ஸ்வபாவம் இவற்றில் காணப்படுவதால் இவை பஞ்ச பூதங்களின் ஸத்வாம்சங்களிலிருந்து உண்டாயிருக்க வேண்டும் என்று தீர்மானிக்கலாம். **(343)**

**तदन्तःकरणं वृत्तिभेदेन स्यात् चतुर्विधम् ।**
**मनो बुद्धिः अहंकारः चित्तं चेति तदुच्यते ॥ ३४४ ॥**

**தத³ந்தःகரணம் வ்ருத்திபே⁴தே³ன ஸ்யாத் சதுர்வித⁴ம் ।**
**மனோ பு³த்³தி⁴ः அஹங்காரः சித்தம் சேதி தது³ச்யதே ॥ 344 ॥**

| | | |
|---|---|---|
| **तत्**<br>**தத்** | = | அந்த, |
| **अन्तःकरणं**<br>**அந்தःகரணம்** | = | அந்தக்கரணம், |
| **वृत्तिभेदेन**<br>**வ்ருத்திபே⁴தே³ன** | = | விருத்திகளின் வேற்றுமையால், |
| **चतुर्विधम् स्यात्**<br>**சதுர்வித⁴ம் ஸ்யாத்** | = | நான்குவிதமாக ஆகும், |
| **तत्**<br>**தத்** | = | அது, |

**मन:** = மனம்,
**மனः**
**बुद्धि:** = புத்தி,
**பு³த்³தி⁴ः**
**अहंकार:** = அஹங்காரம்,
**அஹங்காரः**
**चित्तं चेति** = சித்தம் என்றும்,
**சித்தம் சேதி**
**उच्यते** = சொல்லப்படுகிறது.
**உச்யதே**

அந்த அந்த கரணம் செய்கையின் வேறுபாட்டால் நான்குவிதமாக இருக்கும். அது மனஸ் என்றும், புத்தி என்றும், அஹங்காரம் என்றும், சித்தம் என்றும், சொல்லப்படுகிறது.

[லிங்க சரீரத்தில் அடங்கியதாக 340 வது சுலோகத்தில் புத்தி மனஸ் இரண்டு சொல்லியிருக்கையில் 342 வது சுலோகத்தில் புதிதாக அந்தக்கரணம் என்று ஒன்று சொல்லப்படுகிறதே என்று நினைக்கவேண்டாம், புத்தியும் மனஸும் அந்தக்கரணத்தில் அடங்கியவைதான். தவிரவும் நன்கு விசாரித்துப் பார்த்தால் அந்தக்கரணத்தில் புத்தி, மனஸ், சித்தம் அஹங்காரம் என்று நான்கு பிரிவுகள் இருக்கின்றன. அவைகளில் சித்தம் என்பதை மனஸிலும், அஹங்காரம் என்பதை புத்தியிலும், உள்ளடக்கி மனஸ், புத்தி யென்று இரண்டு மாத்திரம் அந்த சுலோகத்தில் கூறப்பட்டது.] **(344)**

**संकल्पात् मन इत्याहु: बुद्धि: अर्थस्य निश्चयात् ।**
**अभिमानात् अहंकार: चित्तं अर्थस्य चिन्तनात् ॥ ३४५ ॥**

**ஸங்கல்பாத் மன இத்யாஹுः பு³த்³தி⁴ः அர்த²ஸ்ய நிஶ்சயாத் ।**
**அபி⁴மாநாத் அஹங்காரः சித்தம் அர்த²ஸ்ய சிந்தனாத் ॥ 345 ॥**

**संकल्पात्** = ஸங்கல்பம் செய்வதால்,
**ஸங்கல்பாத்**
**मन इति** = மனமென்றும்,
**மன இதி**
**अर्थस्य निश्चयात्** = விஷயத்தைத் தீர்மானிப்பதால்,
**அர்த²ஸ்ய நிஶ்சயாத்**
**बुद्धि:** = புத்தி என்றும்,
**பு³த்³தி⁴ः**
**अभिमानात्** = நான் என்று அபிமானம் கொள்வதால்,
**அபி⁴மாநாத்**

**अहंकारः** = அஹங்காரமென்றும்,

**அஹங்காரः**

**अर्थस्य चिन्तनात्** = விஷயத்தை எண்ணுவதால்,

**அர்த²ஸ்ய சிந்தனுத்**

**चित्तं** = சித்தமென்றும்,

**சித்தம்**

**आहुः** = சொல்கிறுர்கள்.

**ஆஹுः**

ஆலோசஜன செய்கிற காரணத்திஞல் மனஸ் என்றும், விஷயத்தை நிச்சயம் செய்கிறபடியால் புத்தி என்றும், நான் என்கிற அபிமானம் செய்வதால் அஹங்காரம் என்றும், விஷயத்தை நிஜனத்துப் பார்ப்பதால் சித்தம் என்றும் இவ்வாறு ஒரே அந்தகரணம் நான்கு வகைப்படுகிறது. **(345)**

(**அவதாரிகை**) அஹங்காரம் சித்தம் இவ்விரண்டும் லிங்க சரீரத்தில் சேர்ந் ததுதான் என்பதை காரணத்துடன் கூறுகிறுர்: -

**मनस्यपि च बुद्धौ च चित्ताहंकारयोः क्रमात् ।**
**अन्तर्भावोऽय बोद्धव्यो लिङ्गलक्षणसिद्धये ॥ ३४६ ॥**

**மனஸ்யபி ச பு³த்³தௌ⁴ ச சித்தாஹங்காரயோः க்ரமாத் ।**
**அந்தர்பா⁴வோ(அ)ய போ³த்³த⁴வ்யோ லிங்க³லக்ஷணஸித்³த⁴யே ॥ 346 ॥**

**अत्र** = இங்கு,

**அத்ர**

**लिङ्गलक्षणसिद्धये** = லிங்கசரீரத்தின் லக்ஷணம் ஸித்திப்பதற்காக,

**லிங்க³லக்ஷணஸித்³த⁴யே**

**मनसि अपि च** = மனதிலும்,

**மனஸி அபி ச**

**बुद्धौ च** = புத்தியிலும்,

**பு³த்³தௌ⁴ ச**

**चित्ताहंकारयोः** = சித்தத்திற்கும் அஹங்காரத்திற்கும்,

**சித்தாஹங்காரயோः**

**क्रमात्** = வரிசையாக,

**க்ரமாத்**

**अन्तर्भावः** = உள் அடங்கியிருப்பது,

**அந்தர்பா⁴வः**

**बोद्धव्यः** = அறியத்தக்கது.

**போ³த்³த⁴வ்யः**

சித்தத்திற்கும் அஹங்காரத்திற்கும் லிங்க சரீர லக்ஷணம் ஸித்திப்பதற்காக மனதில் சித்தமும், புத்தியில் அஹங்காரமும் அடங்கியுள்ளதாகத் தெரிந்து கொள்ளவேண்டும். **(346)**

**चिन्तनं च मनोधर्मः संकल्पादिर्यथा तथा ।**
**अन्तर्भावो मनस्येव सम्यक् चित्तस्य सिध्यति ॥ ३४७ ॥**

**சிந்தனம் ச மனோத⁴ர்மः ஸங்கல்பாதி³ர்யதா² ததா² ।**
**அந்தர்பா⁴வோ மனஸ்யேவ ஸம்யக் சித்தஸ்ய ஸித்⁴யதி ॥ 347 ॥**

**संकल्पादिः** = ஸங்கல்பம் முதலானவை,
**ஸங்கல்பாதி³:**
**यथा** = எப்படியோ,
**யதா²**
**तथा** = அப்படியே,
**ததா²**
**चिन्तनं** = நினைப்பதும்,
**சிந்தனம்**
**मनोधर्मः** = மனதின் கார்யம் (ஆகையால்),
**மனோத⁴ர்மः**
**चित्तस्य** = சித்தத்திற்கு,
**சித்தஸ்ய**
**मनस्येव** = மனதில்தான்,
**மனஸ்யேவ**
**अन्तर्भावः** = அடக்கம்,
**அந்தர்பா⁴வः**
**सम्यक्** = நன்றாக,
**ஸம்யக்**
**सिध्यति** = ஸித்திக்கிறது.
**ஸித்⁴யதி**

எப்படி ஆலோசனை முதலானது மனஸின் தர்மமோ, அப்படியே நினைத்துப் பார்ப்பதும் மனோதர்மம் தான், ஆகையால் சித்தத்தை மனஸிலேயே உள்ளடக்குவது உசிதம் தான். **(347)**

**देहादा अहमित्येव भावो दृढतरो धियः।**
**दृश्यतेऽहंकृतेस्तस्मादन्तर्भावोऽत्र युज्यते ॥ ३४८ ॥**

**தே³ஹாதா³ அஹமித்யேவ பா⁴வோ த்³ருட⁴தரோ தி⁴ய꞉।**
**த்³ருஶ்யதே(அ)ஹங்க்ருதேஸ்தஸ்மாத³ந்தர்பா⁴வோ(அ)த்ர யுஜ்யதே ॥ 348 ॥**

**देहादा** = தேஹம் முதலியவற்றில்,
**தே³ஹாதா³**
**अहं इति** = நான் என்ற,
**அஹம் இதி**
**दृढतर:** = மிகஉறுதியான,
**த்³ருட⁴தர꞉**
**भाव:** = எண்ணம்,
**பா⁴வ꞉**
**धिय एव** = புத்திக்குத்தான்,
**தி⁴ய ஏவ**
**दृश्यते** = காணப்படுகிறது,
**த்³ருஶ்யதே**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**अत्र** = இந்த புத்தியில்,
**அத்ர**
**अहंकृते:** = அஹங்காரத்திற்கு,
**அஹங்க்ருதே꞉**
**अन्तर्भाव:** = அந்தர்பாவம்,
**அந்தர்பா⁴வ꞉**
**युज्यते** = பொருந் கிறது.
**யுஜ்யதே**

தேகம் முதலானதில் நான் என்கிற உறுதியான எண்ணம் புத்திக்குத்தான் காணப்படுகிறது. ஆகையால் இந்த புத்தியில் அஹங்காரத்தை உள்ளடக்குவது நியாயம் தான். 339 வது சுலோகத்தில் கூறப்பட்ட லிங்கசரீர லக்ஷணத்தில் உள்ள 17 அங்கங்களை விவரிக்கும் பொழுது 340 வது சுலோகத்தில் மனமும் புத்தியும் தான் சேர்க்கப்பட்டுள்ளது. சித்தமும் அஹங்காரமும் லிங்கசரீரத்தில் சேர்க்கப்படவில்லை. இங்கேயோ மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் இந்நான்கும் ஒரே அந்தக்கரணத்தின் ரூபங்களாகக் கூறப்படுகிறது சித்தமும், அஹங்காரமும் லிங்க சரீரத்தில் சேரவில்லையே என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. இதைப்போக்குகிறார் அந்தக்கரணத்தின் பேதங்களான மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் இந்நான்கும் லிங்கசரீரத்தில் சேர்ந்தது தான். 340வது சுலோகத்தில் புத்தி, அஹங்காரம் இவ்விரண்டும் புத்திபதத்தால் குறிக்கப்படுகிறது. அப்படியே மனஸ் என்ற பதத்தால் மனம் சித்தம் இரண்டும் குறிக்கப்படுகிறது. ஸங்கல்பம் போலவே சித்தம் என்ற பெயர் ஏற்படக் காரணமான ஸ்மரணமும் மனோ தர்மம். ஆகையால் சித்தமும் மனமும் ஒன்று

தான். நிச்சயத்தைப் போலவே அஹங்காரமும் புத்திதர்மம். ஆகையால் புத்தியும் அஹங்காரமும் ஒன்றுதான் மேலே கோசங்களை நிரூபணம் செய்வதற்காகத்தான் மனோபுத்திகளில் சித்தாஹங்காரங்களுக்கு அந்தர்பாவம் கூறப்படுகிறது. **(348)**

**तस्मादेव तु बुद्धेः कर्तृत्वं तदितरस्य करणत्वम् ।**
**सिध्यत्यात्मन उभयं विद्यात् संसारकारणं मोहात् ॥ ३४९ ॥**

**தஸ்மாதே³வ து பு³த்³தே⁴: கர்த்ருத்வம் ததி³தரஸ்ய கரணத்வம் ।**
**ஸித்⁴யத்யாத்மன உப⁴யம் வித்³யாத் ஸம்ஸாரகாரணம் மோஹாத் ॥ 349 ॥**

**तस्मादेव तु** = ஆகையினால்தான்,
**தஸ்மாதே³வ து**
**बुद्धेः** = புத்திக்கு,
**பு³த்³தே⁴:**
**कर्तृत्वं** = கர்த்தாவாக இருக்கும் தன்மையும்,
**கர்த்ருத்வம்**
**तदितरस्य** = அதைக்காட்டிலும் வேறான மனதிற்கு,
**ததி³தரஸ்ய**
**करणत्वम्** = கரணமாக இருக்கும் தன்மையும்,
**கரணத்வம்**
**सिध्यत्यति** = ஸித்திக்கிறது,
**ஸித்⁴யத்யதி**
**मोहात्** = அவிவேகத்தால்,
**மோஹாத்**
**आत्मनः** = ஆத்மாவுக்கு,
**ஆத்மன:**
**उभयं** = இரண்டும்,
**உப⁴யம்**
**संसारकारणं** = ஸம்ஸார காரணமாக,
**ஸம்ஸாரகாரணம்**
**विद्यात्** = அறியத்தக்கது.
**வித்³யாத்**

அஹங்காரம், அதாவது தேஹாதிகளை தான் என்று அபிமானிப்பது புத்தியின் தர்மமானபடியால் தான் புத்தியை கர்த்தாவாகவும், ஸங்கல்பம் முதலியவைகளைச் செய்யும் மனதை கரணமாகவும் சொல்லுகிறார்கள் கர்த்தாவாகவும், கரணமாகவும் உள்ள புத்தி, மனம் இவ்விரண்டும் தான் அவிவேகியான ஆத்மாவுக்கு ஸம்ஸாரம் ஏற்படக் காரணமாகிறது. நான் என்கிற எண்ணமும், இது என் கருவி என்கிற எண்ண மும் இருந்தால் தான் உலகத்தில் பிரவிருத்தி ஸாத்தியமாகும். பிரவிருத்தி

யேற்பட்டால் தான் புண்ணியம், பாபம், ஸுகம், துக்கம் முதலியது அடங்கிய ஸம்ஸாரம் ஏற்படும். **(349)**

**(அவதாரிகை)** இவ்விதம் உள்கருவியான அந்தக்கரணத்தை புத்தி மனஸ் என்று இரண்டாகப் பிரித்து, புத்தியுடன் ஞானேந்திரியங்களைச் சேர்த்தால் விக்ஞானமய கோசமென்றும் மனஸுடன் ஞானேந்திரியங்களைச் சேர்த்தால் மனோமய கோசம் என்றும், வியவஹாரம் ஏற்படுகிறதென்பதை மேலால் சொல்கிறார்: -

**विज्ञानमयकोशः स्यात् बुद्धिः ज्ञानेन्द्रियैः सह ।**
**विज्ञानप्रचुरत्वेनाप्याच्छादकतयाऽऽत्मनः ॥**
**विज्ञानमयकोशोऽयं इति विद्वद्भिरुच्यते ॥ ३५० ॥**

**விஜ்ஞானமயகோஶः ஸ்யாத் பு³த்³தி⁴ः ஜ்ஞானேந்த்³ரியைः ஸஹ ।**
**விஜ்ஞானப்ரசுரத்வேனாப்யாச்சா²த³கதயா(ஆ)த்மனः ॥**
**விஜ்ஞானமயகோஶோ(அ)யம் இதி வித்³வத்³பி⁴ருச்யதே ॥ 350 ॥**

**ज्ञानेन्द्रियैः सह** = ஞானேந்திரியங்களுடன்கூட,
**ஜ்ஞானேந்த்³ரியைः ஸஹ**
**बुद्धिः** = புத்தியானது,
**பு³த்³தி⁴ः**
**विज्ञानमयकोशः स्यात्** = விஞ்ஜானமயகோசமாகும்,
**விஜ்ஞானமயகோஶः ஸ்யாத்**
**विज्ञानप्रचुरत्वेन** = விஞ்ஞானம் அதிகமாக இருப்பதாலும்,
**விஜ்ஞானப்ரசுரத்வேன**
**आत्मनः आच्छादकतयाऽपि** = ஆத்மாவை மறைப்பதாலும்,
**ஆத்மனः ஆச்சா²த³கதயா(அ)பி**
**अयं** = இது,
**அயம்**
**विज्ञानमयकोश इति** = விஞ்ஞானமயகோசமென்று,
**விஜ்ஞானமயகோஶ இதி**
**विद्वद्भिः** = வித்வான்களால்,
**வித்³வத்³பி⁴ः**
**उच्यते** = சொல்லப்படுகிறது.
**உச்யதே**

காது, த்வக்கு, கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியும் சேர்ந்தது விஜ்ஞானமய கோசமாகும். இந்த ஆறுகரணங்களாலும் விஷயஞானம் ஏற்படுவதாலும் இவை ஆத்ம ஸ்வரூபத்தை உரைபோல் மறைப்பதாலும் இதற்கு விக்ஞானமய கோசெமென்ற பெயர் வந்தது. **(350)**

**अयं महानहंकारवृत्तिमान्कर्तृलक्षणः।**
**सर्वसंसारनिर्वोढा विज्ञानमयशब्दभाक् ॥ ३५१ ॥**

**அயம் மஹானஹங்காரவ்ருத்திமான்கர்த்ருலக்ஷணः।**
**ஸர்வஸம்ஸாரநிர்வோடா⁴ விஜ்ஞானமயஶப்³த³பா⁴க் ॥ 351 ॥**

**विज्ञानमयशब्दभाक्** = விஞ்ஞானமயன் என்ற பெயரை அடைந்திருக்கிற,
**விஜ்ஞானமயஶப்³த³பா⁴க்**

**अयं** = இது,
**அயம்**

**महान्** = பெரியது,
**மஹான்**

**अहंकारवृत्तिमान्** = நான் என்று எண்ணும் விருத்தியுடன் கூடியது,
**அஹங்காரவ்ருத்திமான்**

**कर्तृलक्षणः** = செய்கிற ஸ்வபாவமுள்ளது,
**கர்த்ருலக்ஷணः**

**सर्वसंसारनिर्वोढा** = எல்லா ஸம்ஸாரத்தையும் வஹிப்பது,
**ஸர்வஸம்ஸாரநிர்வோடா⁴**

இந்த விஜ்ஞானமய கோசம் பெரியது "அஹம்" (நான்) என்ற எண்ணம் இதற்குத் தான் ஏற்படுகிறது. இது தான் கர்த்தா அதாவது எல்லாக் காரியங்களையும் செய்கிறது. ஸுகம் துக்கம் முதலான ஸம்ஸாரத்தையே நடத்துவது இது தான். **(351)**

**अहं ममेत्येव सदाऽभिमानं देहेन्द्रियादौ कुरुते गृहादौ।**
**जीवामिमानः पुरुषोऽयमेव कर्ता च भोक्ता च सुखी च दुःखी ॥ ३५२ ॥**

**அஹம் மமேத்யேவ ஸதா³(அ)பி⁴மானம்**
**தே³ஹேந்த்³ரியாதௌ³ குருதே க்³ருஹாதௌ³ ॥**
**ஜீவாமிமானः புருஷோ(அ)யமேவ**
**கர்தா ச போ⁴க்தா ச ஸுகீ² ச து³ःகீ² ॥ 352 ॥**

**जीवामिमानः** = ஜீவன் என்ற அபிமானம் கொண்டு,
**ஜீவாமிமானः**

**कर्ता च** = கர்த்தாவாகவும்,
**கர்தா ச**

**भोक्ता च** = போக்தாவாகவும்,
**போ⁴க்தா ச**

**सुखी** = ஸுகியாகவும்,
**ஸுகீ²**

**दुःखी च** = துக்கியாகவும் உள்ள,

**து³:கீ² ச**

**अयमेव पुरुषः** = இந்த புருஷன்தான்,

**அயமேவ புருஷ:**

**देहेन्द्रियादौ** = தேஹம், இந்திரியம் முதலியவற்றிலும்,

**தே³ஹேந்த்³ரியாதௌ³**

**गृहादौ** = வீடு முதலியவற்றிலும்,

**க்³ருஹாதௌ³**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**अहं ममेत्येव** = நான், என்னுடையது என்றே,

**அஹம் மமேத்யேவ**

**अभिमानं कुरुते** = அபிமானத்தைச் செய்கிறுன்.

**அபி⁴மானம் குருதே**

இந்த விஜ்ஞானமயன் சான், தேஹம், இந்திரியம் முதலியவற்றிலும், வெளியிலுள்ள வீடு முதலியவற்றிலும் நான் என்றும் என்னுடையது என்றும் அபிமானம் கொள்கிறுன். தன்ஐன ஜீவன் என்று எண்ணுகிறவனும் இவனே. கர்மா வைச் செய்பவனும் அதன் பலனுன ஸுகதுக்கங்கஊ அனுபவிக்கிறவனும் இவனே. **(352)**

**स्ववासनाप्रेरित एव नित्यं करोति कर्मोभयलक्षणं च ।**
**भुङ्क्ते तदुत्पन्नफलं विशिष्टं सुखं च दुःखं च परत्र चात्र ॥ ३५३ ॥**

**ஸ்வவாஸனுப்ப்ரேரித ஏவ நித்யம்**
**கரோதி கர்மோப⁴யலக்ஷணம் ச ।**
**பு⁴ங்க்தே தது³த்பன்னப²லம் விஶிஷ்டம்**
**ஸுக²ம் ச து³:க²ம் ச பரத்ர சாத்ர ॥ 353 ॥**

**स्ववासनाप्रेरित एव** = தனது வாஸஊனகளால் தூண்டப்பட்டவனுகவே

**ஸ்வவாஸனுப்ப்ரேரித ஏவ** (இவன்),

**नित्यं** = எப்பொழுதும்,

**நித்யம்**

**उभयलक्षणं** = இரண்டுவித ஸ்வரூபமுள்ள,

**உப⁴யலக்ஷணம்**

**कर्म च** = கர்மாவையும்,

**கர்ம ச**

**करोति** = செய்கிறுன்,

**கரோதி**

| | | |
|---|---|---|
| **तदुत्पन्नफलं**<br>**தது³த்பன்னப²லம்** | = | அதிலிருந்து ஏற்பட்ட பலனை, |
| **विशिष्टं**<br>**விஶிஷ்டம்** | = | குறிப்பிட்ட, |
| **सुखं च**<br>**ஸுக²ம் ச** | = | ஸுகத்தையும், |
| **दु:खं च**<br>**து³:க²ம் ச** | = | துக்கத்தையும், |
| **अत्र**<br>**அத்ர** | = | இவ்வுலகிலும், |
| **परत्र च**<br>**பரத்ர ச** | = | மேலுலகிலும், |
| **भुङ्क्ते**<br>**பு⁴ங்க்தே** | = | அனுபவிக்கிறான். |

முற்பிறவிகளில் செய்த கர்மாக்களின் மூலம் அவற்றிற்குத்தக்கபடி ஸூக்ஷ்மமான வாஸனைகள் இவனிடம் சேர்ந்துள்ளன. இந்த வாஸனைகளால் தூண்டப்பட்டு ஸத்வாஸனையால் நல்ல கர்மாக்களையும், அஸத்வாஸனையால் கெட்ட கர்மாக்களையும் இப்பிறவியில் செய்கிறான். இந்த கர்மாக்களின் பலனை ஸுக துக்கங்களை இவ்வுலகிலும் மேல் லோகங்களான ஸ்வர்க்க நரகாதிகளிலும் அனுபவிக்கிறான். இத்துடன் அந்தந்த கர்மாக்களுக்குத் தக்கவாறு வாஸனைகளும் பலமடைகிறது. **(353)**

**नाना योनि सहस्रेषु जायमानो मुहुर्मुहुः ।**
**म्रियमाणो भ्रमत्येष जीवः संसारमण्डले ॥ ३५४ ॥**

**நானா யோனி ஸஹஸ்ரேஷு ஜாயமானோ முஹுர்முஹு: ।**
**ம்ரியமாணோ ப்⁴ரமத்யேஷ ஜீவ: ஸம்ஸாரமண்ட³லே ॥ 354 ॥**

| | | |
|---|---|---|
| **एष जीव:**<br>**ஏஷ ஜீவ:** | = | இந்த ஜீவன், |
| **मुहुर्मुहु:**<br>**முஹுர்முஹு:** | = | அடிக்கடி, |
| **नाना योनि सहस्रेषु**<br>**நானா யோனி ஸஹஸ்ரேஷு** | = | பல ஆயிரக்கணக்கான பிறவிகளில், |
| **जायमान:**<br>**ஜாயமான:** | = | பிறக்கிறவனாகவும், |
| **म्रियमाण:**<br>**ம்ரியமாண:** | = | இறக்கிறவனாகவும், |

**संसारमण्डले** = ஸம்ஸார மண்டலத்தில்,
**ஸம்ஸாரமண்ட³லே**
**भ्रमति** = சுற்றுகிறன்.
**ப்⁴ரமதி**

இவ்வாறு இந்த ஜீவன் பலவித ஆயிரக்கணக்கான பிறவிகளில் அடிக்கடி பிறந்து இறந்து ஸம்ஸாரமாகிற மண்டலத்தில் சுழல்கிறன். **(354)**

**(அவதாரிகை)** விக்ஞானமய கோசத்தை விளக்கி விட்டு மனோமய கோசத்தை வர்ணிக்கிறர்: -

**मनो मनोमयः कोशो भवेत् ज्ञानेन्द्रियैः सह ।**
**प्राचुर्यं मनसो यत्र दृश्यतेऽसौ मनोमयः ॥ ३५५ ॥**

**மனோ மனோமயः கோஶோ ப⁴வேத் ஜ்ஞானேந்த்³ரியைः ஸஹ ।**
**ப்ராசுர்யம் மனஸோ யத்ர த்³ருஶ்யதே(அ)ஸௌ மனோமயः ॥ 355 ॥**

**ज्ञानेन्द्रियैः सह** = ஞானேந்திரியங்களுடன்கூட,
**ஜ்ஞானேந்த்³ரியைः ஸஹ**
**मनः** = மனமானது,
**மனः**
**मनोमयः कोशो भवेत्** = மனோமயகோசம் ஆகும்,
**மனோமயः கோஶோ ப⁴வேத்**
**यत्र** = எதில்,
**யத்ர**
**मनसः** = மனதிற்கு,
**மனஸः**
**प्राचुर्यं** = அதிகத்தன்மை,
**ப்ராசுர்யம்**
**दृश्यते** = காணப்படுகிறதோ,
**த்³ருஶ்யதே**
**असौ** = அது,
**அஸௌ**
**मनोमयः** = மனோமயம்.
**மனோமயः**

ஞானேந்திரியங்களுடன் சேர்ந்த மனம் மனோமய கோசம் ஆகும். இதில் மனோவியாபாரம் அதிகமாகக் காணப்படுவதால் இதற்கு மனோமயம் என்று பெயர். **(355)**

**चिन्ताविषादहर्षाद्याः कामाद्याः अस्य वृत्तयः ।**
**मनुते मनसैवैष फलं कामयते बहिः ।**
**यतते कुरुते भुङ्क्ते तन्मनः सर्वकारणम् ॥ ३५६ ॥**

**சிந்தாவிஷாத³ஹர்ஷாத்³யாः காமாத்³யாः அஸ்ய வ்ருத்தயः ।**
**மனுதே மனஸைவைஷ ப²லம் காமயதே ப³ஹிः ।**
**யததே குருதே பு⁴ங்க்தே தன்மனः ஸர்வகாரணம் ॥ 356 ॥**

| | | |
|---|---|---|
| **चिन्ता** சிந்தா | = | கவலை, |
| **विषादः** விஷாத³ः | = | துயரம், |
| **हर्षाद्याः** ஹர்ஷாத்³யாः | = | ஸந்தோஷம் முதலியவைகளும், |
| **कामाद्याः** காமாத்³யாः | = | காமம் முதலியவைகளும், |
| **अस्य** அஸ்ய | = | இந்த மனோமயனுடைய, |
| **वृत्तयः** வ்ருத்தயः | = | வியாபாரங்கள், |
| **एषः** ஏஷः | = | இவன், |
| **मनसैव** மனஸைவைஷ | = | மனதாலேயே, |
| **मनुते** மனுதே | = | எண்ணுகிறுன், |
| **बहिः** ப³ஹிः | = | வெளியில், |
| **फलं** ப²லம் | = | பலனை, |
| **कामयते** காமயதே | = | விரும்புகிறுன், |
| **यतते** யததே | = | முயற்சிக்கிறுன், |
| **कुरुते** குருதே | = | செய்கிறுன், |
| **भुङ्क्ते** பு⁴ங்க்தே | = | அனுபவிக்கிறுன், |

| | | |
|---|---|---|
| **तत्** | = | ஆகையால், |
| **தத்** | | |
| **मनः** | = | மனம், |
| **மனः** | | |
| **सर्वकारणम्** | = | எல்லாவற்றிற்கும் காரணம். |
| **ஸர்வகாரணம்** | | |

கவலை, துயரம், ஸந்தோஷம் முதலியவைகளும் காமம் முதலியவைகளும் மனஸின் காரியங்கள் வெளியிலுள்ள பலனைப்பற்றிய எண்ணம் முதலில் மனதில் ஏற்பட்டபின்தான் அதை அடைய ஆசை கொள்கிறன். அதற்குப்பின் அதையடைய முயற்சி எடுத்துக்கொண்டு உபாயங்களான கர்மாக்களைச் செய்து பலனை அனுபவிக் கிறன். ஆதலால் எல்லாவற்றிற்கும் மூலகாரணம் மனம்தான். **(356)**

**मनो ह्यमुष्य प्रवणस्य हेतुः**
**अन्तर्बहिश्चार्थमनेन वेत्ति ।**
**श्रुणोति जिघ्रत्यमुनैव चेक्षते**
**वक्ति स्पृशत्यत्ति करोति सर्वम् ॥ ३५७ ॥**

**மனோ ஹ்யமுஷ்ய ப்ரவணஸ்ய ஹேதுः**
**அந்தர்ப³ஹிஶ்சார்த²மனேன வேத்தி ।**
**ஶ்ருணோதி ஜிக்⁴ரத்யமுனைவ சேக்ஷதே**
**வக்தி ஸ்ப்ருஶத்யத்தி கரோதி ஸர்வம் ॥ 357 ॥**

| | | |
|---|---|---|
| **अमुष्य** | = | இவனுடைய, |
| **அமுஷ்ய** | | |
| **प्रवणस्य** | = | ஈடுபாட்டிற்கு, |
| **ப்ரவணஸ்ய** | | |
| **मनः** | = | மனம், |
| **மனः** | | |
| **हेतुर्हि** | = | காரணமல்லவா, |
| **ஹேதுர்ஹி** | | |
| **अनेन** | = | இந்த மனதால், |
| **அனேன** | | |
| **अन्तर्बहिश्चा** | = | உள்ளும் வெளியும், |
| **அந்தர்ப³ஹிஶ்சா** | | |
| **अर्थं** | = | பொருளை, |
| **அர்தே²** | | |

| | | |
|---|---|---|
| **वेत्ति** <br> **வேத்தி** | = | அறிந்துகொள்கிறன், |
| **अमुनैव** <br> **அமுனைவ** | = | இந்த மனதாலேயே, |
| **श्रुणोति** <br> **ஶ்ருணோதி** | = | கேட்கிறன், |
| **जिघ्रति** <br> **ஜிக்⁴ரதி** | = | முகர்கிறன், |
| **ईक्षते** <br> **ஈக்ஷதே** | = | பார்க்கிறன், |
| **वक्ति** <br> **வக்தி** | = | பேசுகிறன், |
| **स्पृशति** <br> **ஸ்ப்ருஶதி** | = | தொடுகிறன், |
| **अत्ति** <br> **அத்தி** | = | தின்கிறன், |
| **सर्वं** <br> **ஸர்வம்** | = | எல்லாவற்றையும், |
| **करोति** <br> **கரோதி** | = | செய்கிறன். |

ஜீவன் உள்ளும் வெளியிலும் உள்ள விஷயங்களை மனதைக் கொண்டு தான் அறிந்து கொள்கிறன். கேட்பது, தொடுவது, பார்ப்பது, முகர்வது, தின்பது, பேசுவது எல்லாம் மனதால்தான். ஸுஷுப்தியிலும் ஸமாதியிலும் மனம் அடங்கியிருக்கும் பொழுது ஒன்றும் தெரிவதில்லை. மனம் வேறென்றில் நன்கு ஈடுபட்டிருக்குமானல் கண்கள் திறந்திருந்தும் பார்க்க முடிவதில்லை வாசனையை முகரவோ, காதால் சேட்கவோ முடிவதில்லை இதுபோலவே மற்றவையும். கண் முதலிய இந்திரியங் களே பார்ப்பது முதலியதில் கருவிகளாயிருந்த போதிலும் அவைசளுடன் மனஸ் சேராமலிருந்தால் அவை எவ்வித அறிவையும் உண்டு பண்ணுவதில்லை. இந்தக் காரணத்திஞல் மனஸே எல்லாவற்றையும் செய்கிற தென்று இங்கு சொல்லப் பட்டிருக்கிறது. விஷயங்களில் ஈடுபடுவதற்கும் மனம் தான் காரணம். **(357)**

**बन्धश्च मोक्षो मनसैव पुंसा**
**मर्थोऽप्यनर्थोऽप्यमुनैव सिध्यति ।**
**शुद्धेन मोक्षो मलिनेन बन्धो**
**विवेकतोऽर्थोऽप्यविवेकतोऽन्यः॥ ३५८ ॥**

**ப³ந்த⁴ஶ்ச மோக்ஷோ மனஸைவ பும்ஸா**
**மர்தோ²(அ)ப்யனர்தோ²(அ)ப்யமுனைவ ஸித்⁴யதி ।**
**ஶுத்³தே⁴ன மோக்ஷோ மலினேன ப³ந்தோ⁴**
**விவேகதோ(அ)ர்தோ²(அ)ப்யவிவேகதோ(அ)ன்ய:॥ 358 ॥**

| | | |
|---|---|---|
| **पुंसां** | = | மனிதர்களுக்கு, |
| **பும்ஸாம்** | | |
| **मनसैव** | = | மனதால்தான், |
| **மனஸைவ** | | |
| **बन्धश्च** | = | பந்தமும், |
| **ப³ந்த⁴ஶ்ச** | | |
| **मोक्षः** | = | மோக்ஷமும் ஏற்படுகிறது, |
| **மோக்ஷ:** | | |
| **अमुनैव** | = | இதனாலேயே, |
| **அமுனைவ** | | |
| **अर्थोऽपि** | = | புருஷார்த்தமும், |
| **அர்தோ²(அ)பி** | | |
| **अनर्थोऽपि** | = | துன்பமும், |
| **அனர்தோ²(அ)பி** | | |
| **सिध्यति** | = | கிடைக்கிறது, |
| **ஸித்⁴யதி** | | |
| **शुद्धेन** | = | சுத்தமான மனதால், |
| **ஶுத்³தே⁴ன** | | |
| **मोक्षः** | = | முக்தியும், |
| **மோக்ஷ:** | | |
| **मलिनेन** | = | அசுத்தமான மனதால், |
| **மலினேன** | | |
| **बन्धः** | = | பந்தமும், |
| **ப³ந்த⁴:** | | |
| **विवेकतः** | = | விவேகத்தால், |
| **விவேகத:** | | |
| **अर्थः** | = | புருஷார்த்தமும், |
| **அர்த²:** | | |
| **अविवेकतः** | = | அவிவேகத்தால், |
| **அவிவேகத:** | | |
| **अन्योपि** | = | மற்றதான துன்பமும் (ஏற்படுகிறது) |
| **அன்யோபி** | | |

மனிதர்களுக்கு பந்தமும் மோக்ஷமும் மனதால் தான் ஏற்படுகிறது. அவ்விதமே புருஷார்த்தமும், அனர்த்தமும் இந்த மனதால் தான் உண்டாகிறது எப்படி யெனில் மனதில் அழுக்கில்லாமல் சுத்தமாயிருந்தால் மோக்ஷம் கிடைக்கும். காமம் முதலான அழுக்குகள் ஏறி அசுத்தமாயிருந்தால் பந்தம் ஏற்படுகிறது ஆத்மாநாத்மவிவேகம் இருந்தால் புருஷார்த்தமும் விவேக மில்லாவிட்டால் அனர்த்தமும் உண்டாகிறது. **(358)**

**रजस्तमोभ्यां मलिनं त्वशुद्धं**
**अज्ञानजं सच्चगुणेन रिक्तम् ।**
**मनस्तमोदोषसमन्वितत्वात्**
**जडत्वमोहालसतप्रमादैः ।**
**तिरस्कृतं सत् न तु वेत्ति वास्त**
**पदार्थतत्त्वं ह्युपलभ्यमानम् ॥ ३५९ ॥**

**ரஜஸ்தமோப்⁴யாம் மலினம் த்வஶுத்³த⁴ம்**
**அஜ்ஞானஜம் ஸச்சகு³ணேன ரிக்தம் ।**
**மனஸ்தமோதோ³ஷஸமன்விதத்வாத்**
**ஜட³த்வமோஹாலஸதப்ரமாதை³ঃ ।**
**திரஸ்க்ருதம் ஸத் ந து வேத்தி வாஸ்த**
**பதா³ர்த²தத்த்வம் ஹ்யுபலப்⁴யமானம் ॥ 359 ॥**

**रजस्तमोभ्यां** = ரஜோகுணத்தாலும் தமோகுணத்தாலும்,
**ரஜஸ்தமோப்⁴யாம்**
**मलिनं** = அழுக்கடைந்ததும்,
**மலினம்**
**अशुद्धं** = சுத்தமில்லாததும்,
**அஶுத்³த⁴ம்**
**अज्ञानजं** = அக்ஞானத்தால் ஏற்பட்டதும்,
**அஜ்ஞானஜம்**
**सच्चगुणेन रिक्तम्** = ஸத்வகுணமற்றதுமான,
**ஸச்சகு³ணேன ரிக்தம்**
**मनः** = மனமானது,
**மன:**
**तमोदोषसमन्वितत्वात्** = தமோகுணமென்னும் தோஷத்துடன்
**தமோதோ³ஷஸமன்விதத்வாத்** கூடியிருப்பதால்,
**जडत्व** = அறிவின்மை,
**ஜட³த்வ**

| | | |
|---|---|---|
| **मोह** | = | மயக்கம், |
| **மோஹ** | | |
| **अलसता** | = | சோம்பல், |
| **அலஸதா** | | |
| **प्रमादैः** | = | கவனக்குறைவு இவைகளால், |
| **ப்ரமாதை³ঃ** | | |
| **तिरस्कृतं सत्** | = | மறைக்கப்பட்டதாய்க் கொண்டு, |
| **திரஸ்க்ருதம் ஸத்** | | |
| **उपलभ्यमानं** | = | அறியப்படுகிறதாயிருந்தபோதிலும், |
| **உபலப்⁴யமானம்** | | |
| **वास्तवं** | = | உண்மையான, |
| **வாஸ்தவம்** | | |
| **पदार्थतत्त्वं** | = | பதார்த்த ஸ்வரூபத்தை, |
| **பதா³ர்த²தத்த்வம்** | | |
| **न तु वेत्ति** | = | நன்கு அறிகிறதில்லை. |
| **ந து வேத்தி** | | |

ரஜோகுணமும் தமோகுணமும் மேலோங்கி ஸத்வகுணம் மறைந்திருக்குமாஞல் அந்த மனம் அழுக்கடைந்தது சுத்தமில்லாதது அக்ஞானத்தால் ஏற்பட்டது. இந்த மனம் தமோ குணத்தின் கார்யமான அறிவின்மை மயக்கம், சோம்பல், கவனக் குறைவு முதலான தோஷங்களால் மூடப்பட்டு உண்மையை அறியும் சக்தியை இழந்துவிடுகிறது. ஆகையால் வஸ்துக்களைத் தெரிந்துகொண்டாலும் அவற்றின் உண்மை தத்வம் மனதில் புலப்படுவதில்லை. **(359)**

**रजोदोषैर्युक्तं यदि भवति विक्षेपकगुणैः**
**प्रतीपैः कामाद्यैरनिशमभिभूतं व्यथयति ।**
**कथंचित्सूक्ष्मार्थावगतिमदपि भ्राम्यति भृशं**
**मनोदीपो यद्वत्प्रबलमरुता ध्वस्तमहिमा ॥ ३६० ॥**

**ரஜோதோ³ஷைர்யுக்தம் யதி³ ப⁴வதி விக்ஷேபககு³ணைঃ**
**ப்ரதீபைঃ காமாத்³யைரநிஶமபி⁴பூ⁴தம் வ்யத²யதி ।**
**கத²ஞ்சித்ஸூக்ஷ்மார்தா²வக³திமத³பி ப்⁴ராம்யதி ப்⁴ருஶம்**
**மனோதீ³போ யத்³வத்ப்ரப³லமருதா த்⁴வஸ்தமஹிமா॥ 360 ॥**

| | | |
|---|---|---|
| **विक्षेपकगुणैः** | = | விக்ஷேபத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ள, |
| **விக்ஷேபககு³ணைঃ** | | |
| **रजोदोषैः** | = | ரஜோகுண தோஷங்களோடு, |
| **ரஜோதோ³ஷைঃ** | | |

| | | |
|---|---|---|
| **युक्तं**<br>**யுக்தம்** | = | கூடினதாக, |
| **यदि भवति**<br>**யதி³ ப⁴வதி** | = | (மனம்) இருக்குமேயானுல், |
| **प्रतीपै:**<br>**ப்ரதீபைஃ** | = | ப்ரதிகூலமான, |
| **कामाद्यै:**<br>**காமாத்³யை:** | = | காமம் முதலியவைகளால், |
| **अनिशं**<br>**அநிஶம்** | = | எப்பொழுதும், |
| **अभिभूतं**<br>**அபி⁴பூ⁴தம்** | = | தாக்கப்பட்டு, |
| **व्यथयति**<br>**வ்யத²யதி** | = | துன்புறுத்துகிறது, |
| **कथंचित्**<br>**கத²ஞ்சித்** | = | சிரமப்பட்டு, |
| **सूक्ष्मार्थावगतिमदपि**<br>**ஸூக்ஷ்மார்தா²வக³திமத³பி** | = | ஸூக்ஷ்மமான விஷயங்களின் அறிவுடன் கூடியிருந்தபோதிலும், |
| **प्रबलमरुता**<br>**ப்ரப³லமருதா** | = | வலிமையுள்ள காற்றினுல், |
| **ध्वस्तमहिमा**<br>**த்⁴வஸ்தமஹிமா** | = | போக்கப்பட்ட மஹிமையை (பிரகாசப்படுத்தும் சக்தியை) உடைய, |
| **दीपो यद्वत्**<br>**தீ³போ யத்³வத்** | = | தீபம் போல், |
| **मन:**<br>**மனஃ** | = | மனமானது, |
| **भृशं**<br>**ப்⁴ருஶம்** | = | மிகவும், |
| **भ्राम्यति**<br>**ப்⁴ராம்யதி** | = | சுழலுகிறது. |

ரஜோகுணம் விக்ஷேபத்தை உண்டுபண்ணும் ஸ்வபாவமுள்ளது. இந்த ரஜோகுணத்தின் தோஷங்கள் மனதில் கூடியிருக்குமானுல் பிரதிகூலங்களான காமம் முதலியவை மனதைப் பற்றிக்கொண்டு மிகவும் துன்புறுத்துகிறது ஏதாவது ஒருசமயம் ஸூக்ஷ்மமான விஷயங்களை அறிய மனம் முற்பட்ட போதிலும் காமாதிகளினுல் சித்தத்திற்கு ப்ரமணம் ஏற்பட்டு நன்கு அறிய முடிவதில்லை. பலமான காற்றின் நடுவில் உள்ள தீபஜ்வாலை அதிகமாக சலிப்பதால் அதன் பிரகாச சக்தி மங்கி விடுவது போல் மனதின் சக்தியும் மங்கிவிடுகிறது. **(360)**

**ततो मुमुक्षुर्भवबन्धमुक्त्यै रजस्तमोभ्यां च तदीयकार्यैः।**
**वियोज्य चित्तं परिशुद्धसत्त्वं प्रियं प्रयत्नेन सदैव कुर्यात् ॥ ३६१ ॥**

**ததோ முமுக்ஷுர்ப⁴வப³ந்த⁴முக்த்யை**
**ரஜஸ்தமோப்⁴யாம் ச ததீ³யகார்யைঃ।**
**வியோஜ்ய சித்தம் பரிஶுத்³த⁴ஸத்த்வம்**
**ப்ரியம் ப்ரயத்னேன ஸதை³வ குர்யாத் ॥ 361 ॥**

| | | |
|---|---|---|
| **ततः** ததঃ | = | ஆகையால், |
| **मुमुक्षुः** முமுக்ஷுঃ | = | மோக்ஷம் அடைய விரும்புபவன், |
| **भवबन्धमुक्त्यै** ப⁴வப³ந்த⁴முக்த்யை | = | ஸம்ஸாரத்தளையிலிருந்து விடுபடுவதன் பொருட்டு, |
| **सदैव** ஸதை³வ | = | எப்போதும், |
| **प्रयत्नेन** ப்ரயத்னேன | = | முயற்சியுடன், |
| **रजस्तमोभ्यां** ரஜஸ்தமோப்⁴யாம் | = | ரஜோகுண தமோகுணங்களோடும், |
| **तदीयकार्यैः च** ததீ³யகார்யைঃ ச | = | அவைகளுடையகாரியங்களோடும், |
| **चित्तं** சித்தம் | = | மனதை, |
| **वियोज्य** வியோஜ்ய | = | சேராதிருக்கும்படி செய்து, |
| **परिशुद्धसत्त्वं** பரிஶுத்³த⁴ஸத்த்வம் | = | சுத்தமான ஸத்வகுணமுள்ளதாகவும், |
| **प्रियं** ப்ரியம் | = | ப்ரியமானதாகவும், |
| **कुर्यात्** குர்யாத் | = | செய்யவேண்டும். |

ஆகையினுல் முமுக்ஷுவாயிருப்பவன், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடையும் பொருட்டு, மனதிலுள்ள ரஜோகுணம், தமோகுணம் அவ்விரண்டின் கார்யங்கள் இவைகளை அடியோடு நன்கு விலக்கி விட்டு மேலும் அவைகளுக்குக் கொஞ்சமும் இடம் கொடாமல் மனதை சுத்தமான ஸத்வகுணமுள்ளதாகவும் பிரியமாகவும் பிரயத்தினத்துடன் எப்பொழுதுமே செய்ய வேண்டும். **(361)**

**गर्भावासजनिप्रणाशनजरा व्याध्यादिषु प्राणिनां**
**यद्दुःखं परिदृश्यते च नरके तच्चिन्तयित्वा मुहुः ।**
**दोषानेव विलोक्य सर्वविषयेष्वाशां विमुच्याभितः**
**चित्तग्रन्थिविमोचनाय सुमतिः सत्वं समालम्बताम् ॥ ३६२ ॥**

**க³ர்பா⁴வாஸஜனிப்ரணாஶனஜரா வ்யாத்⁴யாதி³ஷு ப்ராணினாம்**
**யத்³து³:க²ம் பரித்³ருஶ்யதே ச நரகே தச்சிந்தயித்வா முஹு: ।**
**தோ³ஷானேவ விலோக்ய ஸர்வவிஷயேஷ்வாஶாம் விமுச்யாபி⁴த:**
**சித்தக்³ரந்தி²விமோசனாய ஸுமதி: ஸத்வம் ஸமாலம்ப³தாம் ॥ 362 ॥**

**गर्भावास** = கர்ப்பவாஸம்,
**க³ர்பா⁴வாஸ**

**जनि** = பிறப்பு,
**ஜனி**

**प्रणाशन** = மரணம்,
**ப்ரணாஶன**

**जरा** = மூப்பு,
**ஜரா**

**व्याध्यादिषु** = பிணிமுதலியவைகளிலும்,
**வ்யாத்⁴யாதி³ஷு**

**नरके च** = நரகத்திலும்,
**நரகே ச**

**प्राणिनां** = பிராணிகளுக்கு,
**ப்ராணினாம்**

**यत् दुःखं** = எந்த துக்கம்,
**யத் து³:க²ம்**

**परिदृश्यते** = காணப்படுகிறதோ,
**பரித்³ருஶ்யதே**

**तत्** = அதை,
**தத்**

**मुहुः** = அடிக்கடி,
**முஹு:**

**चिन्तयित्वा** = ஆலோசித்து,
**சிந்தயித்வா**

**सर्वविषयेषु** = எல்லா விஷயங்களிலும்,
**ஸர்வவிஷயேஷு**

| | | |
|---|---|---|
| **दोषानेव** | = | தோஷங்களையே, |
| **தோ³ஷானேவ** | | |
| **विलोक्य** | = | பார்த்து, |
| **விலோக்ய** | | |
| **अभितः** | = | எங்கும், |
| **அபி⁴த:** | | |
| **आशां** | = | ஆசையை, |
| **ஆஶாம்** | | |
| **विमुच्य** | = | விட்டுவிட்டு, |
| **விமுச்ய** | | |
| **चित्तग्रन्थिविमोचनाय** | = | மனதிலுள்ள பந்தம் நீங்குவதற்காக, |
| **சித்தக்³ரந்தி²விமோசனாய** | | |
| **सुमतिः** | = | நல்ல புத்தியுள்ளவன், |
| **ஸுமதி:** | | |
| **सत्वं** | = | ஸத்வகுணத்தை, |
| **ஸத்வம்** | | |
| **समालम्बताम्** | = | ஆச்ரயிக்கட்டும். |
| **ஸமாலம்ப³தாம்** | | |

நல்ல புத்தியுள்ளவன் பிராணிகளுக்கு கர்பத்தில் வாஸம் செய்வது, பிறப்பு, அழிவு, மூப்பு, வியாதி முதலியவைகளிலும் நரகத்திலும் ஏற்படும் துக்கங்களை அடிக்கடி நினைத்துப் பார்த்து எல்லா விஷயங்களிலும் உள்ள தோஷங்களையே நன்கு கவனித்து ஒன்றிலும் ஆசை கொள்ளாமல் மனதிலுள்ள பந்தத்திலிருந்து விடுதலை யடைவதற்காக ஸத்வகுணத்தை அவலம்பிக்கட்டும்.

[சரீராதிகளில் நான் என்றும், புத்ரன் மனைவி முதலியவைகளில் என்னுடை யவை என்றும் அபிமானம் கொள்வது தான் சித்தக்ரந்தி என்பது] **(362)**

**(அவதாரிகை)** மனஸ் ரஜஸ்தமஸ்களிலிருந்து விடுபட்டு நல்ல ஸத்வ குணத்தால் சுத்தமாகி விட்டால் நன்கு தெளிவடைந்து ஆத்ம தத்வத்தை கிரஹிக் கும் யோக்கியதையைப் பெற்று முக்திக்கு ஸாதனமாகக் கூடியதினால், அந்த மனத் தெளிவு ஏற்படுவதற்குள்ள உபாயங்களையும் அதன் அவசியத்தன்மையையும் மேலால் விளக்குகிறார்: -

**यमेषु निरतो यस्तु नियमेषु च यत्नतः ।**
**विवेकिनः तस्य चित्तं प्रसादमधिगच्छति ॥ ३६३ ॥**

**யமேஷு நிரதோ யஸ்து நியமேஷு ச யத்னத: ।**
**விவேகின: தஸ்ய சித்தம் ப்ரஸாத³மதி⁴க³ச்ச²தி ॥ 363 ॥**

| | | |
|---|---|---|
| **यस्तु** | = | எவன், |
| **யஸ்து** | | |
| **यत्नत:** | = | முயற்சியுடன், |
| **யத்னத:** | | |
| **यमेषु** | = | யமங்களிலும், |
| **யமேஷு** | | |
| **नियमेषु च** | = | நியமங்களிலும், |
| **நியமேஷு ச** | | |
| **निरत:** | = | ஈடுபட்டிருக்கிறனே, |
| **நிரத:** | | |
| **तस्य** | = | அந்த, |
| **தஸ்ய** | | |
| **विवेकिन:** | = | விவேகமுள்ளவனுடைய, |
| **விவேகின:** | | |
| **चित्तं** | = | மனது, |
| **சித்தம்** | | |
| **प्रसादं अधिगच्छति** | = | தெளிவை அடைகிறது. |
| **ப்ரஸாத³ம் அதி⁴க³ச்ச²தி** | | |

எவன் யமங்களிலும் நியமங்களிலும் பிரயத்தின புரஸ்ஸரமாக ஈடுபட்டிருக்கிறனே, அந்த விவேகியினுடைய மனஸ் தெளிவையடைகிறது.

[அஹிம்ஸை (எல்லா பிராணிகள் விஷயமாயும் மனேவாக்குக் காயங்களால் துன்பம் ஏற்படுத்தாமலிருப்பது), ஸத்யம் (கண்டதை, கேட்டதை அப்படியே சொல்லுதல்) அஸ்தேயம் (பிறர் பொருளை மனேவாக்குக் காயங்களால் அபஹரிக்காமலிருத்தல்), பிரஹ்மசர்யம் (முன் 109, 110 சுலோகங்களில் சொல்லியபடி ஸ்திரீ ஸங்கமில்லாமலிருப்பது), அபரிக்ரஹம் (தன்னுடையது என்று எதையும் வைத்துக் கொள்ளாமலிருப்பது), ஆகிய இவை ஐந்தும் யமங்கள் எனப்படும். சௌசம் (சரீரத்தையும் மனஸையும் சுத்தமாக வைத்துக் கொள்வது) ஸந்தோஷம் (எப்பொழுதும் திருப்தியுடனிருப்பது), தபஸ் (இந்திரியங்கள் முதலானவைகளை நிக்ரஹம் செய்வது), ஸ்வாத்யாயம் (தனக்கு ஏற்பட்ட வேதபாகத்தை அத்யயனம் செய்வது), ஈசுவர பிரணிதானம் (பகவானிடத்தில் ஈடுபடல்), ஆகிய இவ்வைந்தும் நியமங்கள் எனப்படுகின்றன. பொதுவாக, தனக்கும் உலகத்திற்கும் உள்ள ஸம்பந்தத்தை கட்டுப்படுத்திக் கொள்வது யமம் என்றும், தன் நடத்தையே கட்டுப்படுத்திக் கொள்வது நியமம் என்றுமாகும். இந்த இரண்டுவித ஸாதனங்களும் மனஸ் தெளிவடைவதற்கு மிகவும் அவசியம்.] **(363)**

**आसुरीं संपदं त्यक्त्वा भजेद्यो दैवसंपदम् ।**
**मोक्षैक काङ्क्षया नित्यं तस्य चित्तं प्रसीदति ॥ ३६४ ॥**

**ஆஸுரீம் ஸம்பத³ம் த்யக்த்வா ப⁴ஜேத்³யோ தை³வஸம்பத³ம் ।**
**மோக்ஷைக காங்க்ஷயா நித்யம் தஸ்ய சித்தம் ப்ரஸீத³தி ॥ 364 ॥**

**यः** = எவன்,

**ய:**

**मोक्षैक काङ्क्षया** = மோக்ஷம் ஒன்றிலேயே விருப்பத்துடன்,

**மோக்ஷைக காங்க்ஷயா**

**आसुरीं संपदं** = ஆஸுர ஸம்பத்தை,

**ஆஸுரீம் ஸம்பத³ம்**

**त्यक्त्वा** = விட்டுவிட்டு,

**த்யக்த்வா**

**नित्यं** = எப்பொழுதும்,

**நித்யம்**

**दैवसंपदम्** = தைவஸம்பத்தை,

**தை³வஸம்பத³ம்**

**भजेत्** = அடைகிறனே,

**ப⁴ஜேத்**

**तस्य** = அவனுடைய,

**தஸ்ய**

**चित्तं** = மனது,

**சித்தம்**

**प्रसीदति** = தெளிவடைகிறது.

**ப்ரஸீத³தி**

எவன் மோக்ஷம் ஒன்றிலேயே ஆசையுடன், ஆஸுரமான ஸம்பத்தை விட்டு விட்டு தைவமான ஸம்பத்தையே, எப்பொழுதும் நாடுவானே, அவனுடைய மனம் தெளிவடையும்.

[ஆஸுர ஸம்பத்து, தைவ ஸம்பத்து இரண்டும் பகவத்கீதை 16வது அத்யாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அதை இங்கே எடுத்துச் சொல்வதானுல் மிகவும் விரியும். பொதுவாக எதெல்லாம் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாயிருக் குமோ, அவையெல்லாம் ஆஸுர ஸம்பத்து, எதெல்லாம் அப்பந்தத்திலிருந்து விடுதலை யடைவதற்கு உபயோகப்படுமோ, அவையெல்லாம் தைவ ஸம்பத்து, என்று அவ்வத்யாயம் 5வது சுலோகத்தில் கண்டிருப்பதை லக்ஷணமாக வைத்துக் கொள்ளலாம். மனஸின் தெளிவு மோக்ஷத்திற்கு ஸாதனமானதினுல் தைவ ஸம்பத்து அவசியம் வேண்டுமென்பதில் ஸந்தேகமில்லை.] **(364)**

**परद्रव्यपरद्रोहपरनिन्दा परस्त्रियः ।**
**नालम्बते मनो यस्य तस्य चित्तं प्रसीदति ॥ ३६५ ॥**

**பரத்³ரவ்யபரத்³ரோஹபரநிந்தா³ பரஸ்த்ரியः ।**
**நாலம்ப³தே மநோ யஸ்ய தஸ்ய சித்தம் ப்ரஸீத³தி ॥ 365 ॥**

| | | |
|---|---|---|
| **परद्रव्य** | = | பிறருடைய பொருள், |
| **பரத்³ரவ்ய** | | |
| **परद्रोह** | = | பிறருக்கு த்ரோஹம் செய்தல், |
| **பரத்³ரோஹ** | | |
| **परनिन्दा** | = | பிறரை தூஷிப்பது, |
| **பரநிந்தா³** | | |
| **परस्त्रियः** | = | பிறர் மனைவி இவைகளை, |
| **பரஸ்த்ரியः** | | |
| **यस्य मनः** | = | எவருடைய மனம், |
| **யஸ்ய மன:** | | |
| **नालम्बते** | = | நாடவில்லையோ, |
| **நாலம்ப³தே** | | |
| **तस्य** | = | அவனுடைய, |
| **தஸ்ய** | | |
| **चित्तं** | = | மனது, |
| **சித்தம்** | | |
| **प्रसीदति** | = | தெளிவடைகிறது. |
| **ப்ரஸீத³தி** | | |

பிறர் பொருளில் ஆசை கொள்ளாமலும், பிறருக்குத் தீங்கு செய்யாமலும், பிறரை நிந்திக்காமலும், பிறர் மனைவியிடம் ஆசை கொள்ளாமலும் இருப்பவனுடைய மனம் தான் ப்ரஸன்னமாக இருக்கும். **(365)**

**आत्मवत्सर्वभूतेषु यः समत्वेन पश्यति ।**
**सुखं दुःखं विवेकेन तस्य चित्तं प्रसीदति ॥ ३६६ ॥**

**ஆத்மவத்ஸர்வபூ⁴தேஷு யः ஸமத்வேன பஶ்யதி ।**
**ஸுக²ம் து³:க²ம் விவேகேன தஸ்ய சித்தம் ப்ரஸீத³தி ॥ 366 ॥**

| | | |
|---|---|---|
| **यः** | = | எவன், |
| **யः** | | |
| **विवेकेन** | = | விவேகத்தால், |
| **விவேகேன** | | |

| | | |
|---|---|---|
| सर्वभूतेषु<br>ஸர்வபூ⁴தேஷு | = | எல்லா பிராணிகளிடமும், |
| आत्मवत्<br>ஆத்மவத் | = | தன்னைப்போலவே, |
| सुखं<br>ஸுக²ம் | = | ஸுகத்தையும், |
| दुःखं<br>து³:க²ம் | = | துக்கத்தையும், |
| समत्वेन<br>ஸமத்வேன | = | ஸமமாக, |
| पश्यति<br>பஶ்யதி | = | பார்க்கிறானோ, |
| तस्य<br>தஸ்ய | = | அவனுடைய, |
| चित्तं<br>சித்தம் | = | மனம், |
| प्रसीदति<br>ப்ரஸீத³தி | = | தெளிவடைகிறது. |

தனக்கு ஸுகம் ஏற்பட்டால் ஸந்தோஷமடைவது போல் பிறருக்கு ஸுகம் ஏற்பட்டாலும் அஸூயை கொள்ளாமல் ஸந்தோஷமடைந்தும், தனக்கு துக்கம் ஏற்பட்டால் வருந்தி அதை நீக்க முயற்சிப்பதுபோல் பிறருக்கு துன்பம் ஏற்பட்டாலும் வருத்தமடைந்து அதை நீக்க முயற்சிக்கும் மனிதனுடைய மனம்தான் தெளிவடையும். ஸுகதுக்க விஷயங்களில் தன்னைப்போலவே எல்லா பிராணிகளையும் ஸமமாகப் பார்க்கவேண்டும். **(366)**

**अत्यन्तं श्रद्धया भक्त्या गुरुमीश्वरमात्मनि ।**
**यो भजत्यनिशं क्षान्तस्तस्य चित्तं प्रसीदति ॥ ३६७ ॥**

**அத்யந்தம் ஶ்ரத்³த⁴யா ப⁴க்த்யா கு³ருமீஶ்வரமாத்மனி ।**
**யோ ப⁴ஜத்யநிஶம் க்ஷாந்தஸ்தஸ்ய சித்தம் ப்ரஸீத³தி ॥ 367 ॥**

| | | |
|---|---|---|
| यः<br>ய: | = | எவன், |
| क्षान्तः<br>க்ஷாந்த: | = | பொறுமையுள்ளவனாக, |
| अनिशं<br>அநிஶம் | = | எப்பொழுதும், |

| | | |
|---|---|---|
| **अत्यन्तं** அத்யந்தம் | = | மிகவும், |
| **श्रद्धया** ஶ்ரத்³த⁴யா | = | சிரத்தையோடு, |
| **भक्त्या** ப⁴க்த்யா | = | பக்தியுடன், |
| **आत्मनि** ஆத்மனி | = | மனதில், |
| **गुरुं** கு³ரும் | = | குருவையும், |
| **ईश्वरं** ஈஶ்வரம் | = | ஈசுவரனையும், |
| **भजति** ப⁴ஜதி | = | ஸேவிக்கிறனே |
| **तस्य** தஸ்ய | = | அவனுடைய, |
| **चित्तं** சித்தம் | = | மனது, |
| **प्रसीदति** ப்ரஸீத³தி | = | தெளிவடைகிறது. |

எவன் பொறுமையாயிருந்து கொண்டு மனதில் மிகவும் சிரத்தையுடனும் பக்தியுடனும் குருவையும், ஈசுவரனையும் எப்பொழுதும் ஸேவிக்கிறனே அவனுடைய மனஸ் தெளிவடையும். **(367)**

**शिष्टान्नमीशार्चनमार्यसेवां तीर्थाटनं स्वाश्रमधर्मनिष्ठाम् ।**
**यमानुषक्तिं नियमानुवृत्तिं चित्तप्रसादाय वदन्ति तज्ज्ञाः ॥ ३६८ ॥**

**ஶிஷ்டான்னமீஶார்சனமார்யஸேவாம் தீர்தா²டனம் ஸ்வாஶ்ரமத⁴ர்மநிஷ்டா²ம் ।**
**யமானுஷக்திம் நியமானுவ்ருத்திம் சித்தப்ரஸாதா³ய வத³ந்தி தஜ்ஜ்ஞா꞉ ॥ 368 ॥**

| | | |
|---|---|---|
| **शिष्टान्नं** ஶிஷ்டான்னம் | = | ஸாதுக்களுடைய அன்னத்தையும் (சாஸ்திரங்களில் சாப்பிடும்படி விதிக்கப்பட்ட அன்னத்தையும்), |
| **ईशार्चनं** ஈஶார்சனம் | = | தேவபூஜையையும், |
| **आर्यसेवां** ஆர்யஸேவாம் | = | பெரியோர்களின் ஸேவையையும், |

**तीर्थाटनं** = புண்ய தீர்த்தங்களுக்குச் செல்வதையும்,

**தீர்தா2டனம்**

**स्वाश्रमधर्मनिष्ठाम्** = தனது ஆச்ரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களில

**ஸ்வாஶ்ரமத4ர்மநிஷ்டா2ம்** ஸ்திரமாக இருப்பதையும்,

**यमानुषक्तिं** = யமங்களில் ஈடுபாட்டையும்,

**யமானுஷக்திம்**

**नियमानुवृत्तिं** = நியமங்களை அனுஸரிப்பதையும்,

**நியமானுவ்ருத்திம்**

**चित्तप्रसादाय** = மனம் தெளிவடையும் பொருட்டாக,

**சித்தப்ரஸாதா3ய**

**तज्ज्ञाः** = அதை அறிந்தவர்கள்,

**தஜ்ஜ்ஞா:**

**वदन्ति** = சொல்கிறுர்கள்.

**வத3ந்தி**

சாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களுடைய அன்னம் (அல்லது சாஸ்திரத்தில் தடுக்கப்படாமல் விஹிதமான அன்னம்), ஈசுவரனை பூஜிப்பது, பெரியோர்களை ஸேவிப்பது, புண்ணிய தீர்த்தங்களுக்குப் போய்வருவது, தன்னுடைய ஆசிரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களை விடாமல் எப்போதும் அனுஷ்டிப்பது முன் கூறப்பட்ட யமங்களை அனுஷ்டிப்பதில் பிடிமானம், நியமங்களை அனுஸரிப்பது, இவையெல்லாம் மனஸின் தெளிவிற்கு ஸாதனங்கள் என்று இவ்விஷயம் அறிந்தவர்கள் சொல்கிறுர்கள். **(368)**

**कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिनाम् ।**
**पूतिपर्युषितादीनां त्यागः सत्त्वाय कल्पते ॥ ३६९ ॥**

**கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதா3ஹிநாம் ।**
**பூதிபர்யுஷிதாதீ3னாம் த்யாக3: ஸத்த்வாய கல்பதே ॥ 369 ॥**

**कटु** = அதிக கசப்பு,

**கடு**

**अम्ल** = புளிப்பு,

**அம்ல**

**लवण** = உப்பு,

**லவண**

**अत्युष्ण** = அதிகச் சூடு,

**அத்யுஷ்ண**

**तीक्ष्ण** = உரைப்பு,

**தீக்ஷ்ண**

| | | |
|---|---|---|
| **रूक्ष**<br>**ரூக்ஷ** | = | பசையில்லாதது, |
| **विदाहिनां**<br>**விதா³ஹிநாம்** | = | காந்தலை உண்டு பண்ணுவது இவ்விதமான ஆஹாரங்களுடையவும், |
| **पूतिपर्युषितादीनां**<br>**பூதிபர்யுஷிதாதீ³நாம்** | = | துர்கந்தமுள்ளது நாளபட்டது முதலியவைகளுடையவும், |
| **त्यागः**<br>**த்யாக³:** | = | விட்டு விடுவது, |
| **सत्त्वाय**<br>**ஸத்த்வாய** | = | ஸத்வகுணம் ஏற்படுவதற்கு, |
| **कल्पते**<br>**கல்பதே** | = | தக்கதாகிறது. |

அதிகமான கசப்பு, புளிப்பு, உப்பு, சூடு, உரைப்பு, பசையில்லாமல் காய்ந்தது, எரிச்சலை யுண்டுபண்ணக்கூடியது இவ்விதமான ராஜஸ ஆஹாரங்களையும் அழுகினது, நாள்பட்டது முதலான தாமஸ ஆஹாரங்களையும் சாப்பிடாமலிருப்பவனுக்கு ஸத்வகுணம் விருத்தியாகும். **(369)**

**श्रुत्या सत्वपुराणानां सेवया सत्ववस्तुनः।**
**अनुवृत्त्या च साधूनां सत्ववृत्तिः प्रजायते ॥ ३७० ॥**

**ஶ்ருத்யா ஸத்வபுராணாநாம் ஸேவயா ஸத்வவஸ்துந:।**
**அநுவ்ருத்த்யா ச ஸாதூ⁴நாம் ஸத்வவ்ருத்தி: ப்ரஜாயதே॥ 370 ॥**

| | | |
|---|---|---|
| **सत्वपुराणानां**<br>**ஸத்வபுராணாநாம்** | = | ஸாத்விகமான புராணங்களை, |
| **श्रुत्या**<br>**ஶ்ருத்யா** | = | கேட்பதாலும், |
| **सत्ववस्तुनः**<br>**ஸத்வவஸ்துந:** | = | ஸாத்விக வஸ்துவை, |
| **सेवया**<br>**ஸேவயா** | = | உபயோகிப்பதாலும், |
| **साधूनां**<br>**ஸாதூ⁴நாம்** | = | நல்லோர்களை அநுஸரித்து நடப்பதாலும், |
| **अनुवृत्त्या च**<br>**அநுவ்ருத்த்யா ச** | = | ஸாத்விகமான எண்ணம், |
| **सत्ववृत्तिः**<br>**ஸத்வவ்ருத்தி:** | = | உண்டாகிறது. |

ஸாத்விகமான புராணங்களைக் கேட்பதினாலும், ஸாத்விகமான வஸ்துக்களை உபயோகிப்பதினாலும், அனுஸரித்து நடப்பதினாலும், மனதில் ஸாத்விகமான விருத்தி (எண்ணம்) உண்டாகிறது. **(370)**

**यस्य चित्तं निर्विषयं हृदयं यस्य शीतलम् ।**
**तस्य मित्रं जगत्सर्वं तस्य मुक्तिः करस्थिता ॥ ३७१ ॥**

**யஸ்ய சித்தம் நிர்விஷயம் ஹ்ருத³யம் யஸ்ய ஶீதலம் ।**
**தஸ்ய மித்ரம் ஜக³த்ஸர்வம் தஸ்ய முக்திः கரஸ்தி²தா ॥ 371 ॥**

| | | |
|---|---|---|
| **यस्य** யஸ்ய | = | எவனுடைய, |
| **चित्तं** சித்தம் | = | மனது, |
| **निर्विषयं** நிர்விஷயம் | = | விஷயசிந்தையற்று இருக்கிறதோ, |
| **यस्य** யஸ்ய | = | எவனுடைய, |
| **हृदयं** ஹ்ருத³யம் | = | மனம், |
| **शीतलम्** ஶீதலம் | = | குளிர்ந்திருக்கிறதோ, |
| **तस्य** தஸ்ய | = | அவனுக்கு, |
| **सर्वं जगत्** ஸர்வம் ஜக³த் | = | உலகமெல்லாம், |
| **मित्रं** மித்ரம் | = | நட்புற்று இருக்கும், |
| **तस्य** தஸ்ய | = | அவனுக்கு, |
| **मुक्तिः** முக்திः | = | மோக்ஷம், |
| **करस्थिता** கரஸ்தி²தா | = | கையிலேயே இருக்கிறது. |

எவன் மனது உலக விஷயங்களில் ஆசை கொள்ளாமல் அதைச் சிந்திக்காமல் இருக்கிறதோ மனதில் காமக்ரோதாதிகளால் தாபம் ஏற்படாமல் குளிர்ந்து இருக்கிறதோ அவனை யாவரும் நேசிப்பார்கள். அவனுக்கு நிச்சயம் முக்தி கிடைக்கும். **(371)**

**हितपरिमितभोजी नित्यमेकान्तसेवी**
**सकृदुचितहितोक्तिः स्वल्पनिद्राविहारः ।**
**अनुनियमनशीलो यो भजत्युक्तकाले**
**स लभत इह शीघ्रं साधु चित्तप्रसादम् ॥ ३७२ ॥**

**ஹிதபரிமிதபோ⁴ஜீ நித்யமேகாந்தஸேவீ**
**ஸக்ருது³சிதஹிதோக்திः ஸ்வல்பநித்³ராவிஹாரः।**
**அனுநியமனஶீலோ யோ ப⁴ஜத்யுக்தகாலே**
**ஸ லப⁴த இஹ ஶீக்⁴ரம் ஸாது⁴ சித்தப்ரஸாத³ம்॥ 372 ॥**

| | | |
|---|---|---|
| **हितपरिमितभोजी** **ஹிதபரிமிதபோ⁴ஜீ** | = | நன்மை பயப்பதும் அளவுக்குட்பட்ட தாயுமுள்ள உணவை சாப்பிடுகிறவனையும், |
| **नित्यं** **நித்யம்** | = | எப்பொழுது, |
| **एकान्तसेवी** **ஏகாந்தஸேவீ** | = | தனிமையான இடத்திலே இருக்கிறவனையும், |
| **सकृत्** **ஸக்ருத்** | = | ஒரே தடவை, |
| **उचितहितोक्तिः** **உசிதஹிதோக்திः** | = | யோக்யமாயும் ஹிதமாயும் உள்ள வார்த்தைகளைப் பேசுகிறவனையும், |
| **स्वल्पनिद्राविहारः** **ஸ்வல்பநித்³ராவிஹாரः** | = | கொஞ்சமான தூக்கமும் ஸஞ்சாரமும் உள்ளவனையும், |
| **अनुनियमनशीलः** **அனுநியமனஶீலः** | = | சாஸ்திர விதிகளை அனுரித்துக் கட்டுப்படும் ஸ்வபாவமுள்ளவனாயுமிருந்து, |
| **यः** **யः** | = | எவன், |
| **उक्तकाले** **உக்தகாலே** | = | குறிப்பிட்ட காலத்தில், |
| **भजति** **ப⁴ஜதி** | = | ஸேவிக்கிறானோ, |
| **सः** **ஸः** | = | அவன், |
| **इह** **இஹ** | = | இங்கு, |
| **शीघ्रं** **ஶீக்⁴ரம்** | = | விரைவில், |

| | | |
|---|---|---|
| **साधु** | = | நன்கு, |
| **ஸாது⁴** | | |
| **चित्तप्रसादम्** | = | மனத்தெளிவை, |
| **சித்தப்ரஸாத³ம்** | | |
| **लभते** | = | அடைகிறான். |
| **லப⁴தே** | | |

சரீரத்திற்கும் மனதிற்கும் ஹிதத்தைத்தரும் உணவை வைத்ய சாஸ்திரத்தில் கூறப்பட்ட அளவுப்படி சாப்பிடவேண்டும் எப்பொழுதும் தனிமையாக இருக்க வேண்டும். பிறருக்கு ஹிதமாயும் பேசத்தக்கதாயும் உள்ள வார்த்தைகளை பேச வேண்டும். அதையும் வீணாகத்திருப்பித்திருப்பிக் கூறாமல் அவசியமானதை மிதமாகப் பேசவேண்டும். அதிகத்தூக்கமும் அதிக ஸஞ்சாரமும் கூடாது. தன் மனதையும் புலன்களையும் கட்டுப்படுத்திக் கொண்டு உரியகாலத்தில் (காலம் தவறாமல்) தன் கடமைகளைச்செய்து வரவேண்டும். இவ்வாறு நடந்து வருகிறவனுக்கு வெகு சீக்கிரத்தில் நன்றாக மனம் தெளிவடையும். **(372)**

**चित्तप्रसादेन विनावगन्तुं**
**बन्धं न शक्नोति परात्मतत्त्वम् ।**
**तत्त्वावगत्या तु विना विमुक्ति**
**र्न सिध्यति ब्रह्मसहस्रकोटिषु ॥ ३७३ ॥**

**சித்தப்ரஸாதே³ன விநாவக³ந்தும்**
**ப³ந்த⁴ம் ந ஶக்நோதி பராத்மதத்த்வம்।**
**தத்த்வாவக³த்யா து விநா விமுக்தி**
**ர்ன ஸித்⁴யதி ப்³ரஹ்மஸஹஸ்ரகோடிஷு॥ 373 ॥**

| | | |
|---|---|---|
| **चित्तप्रसादेन विना** | = | மனத்தெளிவு இல்லாமல், |
| **சித்தப்ரஸாதே³ன விநா** | | |
| **बन्धं** | = | பந்தத்தை, |
| **ப³ந்த⁴ம்** | | |
| **परात्मतत्त्वम्** | = | சுத்தமான பரமாத்ம தத்வத்தை, |
| **பராத்மதத்த்வம்** | | |
| **अवगन्तुं** | = | அறிவதற்கு, |
| **அவக³ந்தும்** | | |
| **न शक्नोति** | = | ஸமர்த்தனாகமாட்டான், |
| **ந ஶக்நோதி** | | |
| **तत्त्वावगत्या विना तु** | = | தத்வஞானம் இல்லாமல், |
| **தத்த்வாவக³த்யா விநா து** | | |

**ब्रह्मसहस्रकोटिषु** = ஆயிரம்கோடி ப்ரஹ்ம கல்பங்களிலும்,

**ப்³ரஹ்மஸஹஸ்ரகோடிஷு**

**विमुक्तिः** = மோக்ஷம்,

**விமுக்தி:**

**न सिध्यति** = கிடைக்காது.

**ந ஸித்⁴யதி**

சித்தத்தின் தெளிவு இல்லாமல் பந்தத்தை அறியவோ (?) உத்கிருஷ்டமான ஆத்மாவின் தத்வத்தை அறியவோ முடியாது. தத்வம் அறியாமலோ ஆயிரம் கோடிக்கணக்கான பிரஹ்மாக்களின் காலத்திலும் மோக்ஷம் ஸித்திக்காது. **(373)**

**मन:प्रसा(मा)द: पुरुषस्य बन्धो**
**मन:प्रसादो भवबन्धमुक्तिः ।**
**मन:प्रसादाधिगमाय तस्मात्**
**मनोनिरासं विदधीत विद्वान् ॥ ३७४ ॥**

**மன:ப்ரஸா(மா)த³: புருஷஸ்ய ப³ந்தோ⁴**
**மன:ப்ரஸாதோ³ ப⁴வப³ந்த⁴முக்தி: ।**
**மன:ப்ரஸாதா³தி⁴க³மாய தஸ்மாத்**
**மனோநிராஸம் வித³தீ⁴த வித்³வான் ॥ 374 ॥**

**मन:प्रमाद:** = மனதின் கவனமின்மை,

**மன:ப்ரமாத³:**

**पुरुषस्य** = மனிதனுக்கு,

**புருஷஸ்ய**

**बन्ध:** = பந்தம்,

**ப³ந்த⁴:**

**मन:प्रसाद:** = மனதிற்குத் தெளிவில்லாமை,

**மன:ப்ரஸாத³:**

**भवबन्धमुक्तिः** = ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை,

**ப⁴வப³ந்த⁴முக்தி:**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**विद्वान्** = அறிவுள்ளவன்,

**வித்³வான்**

**मन:प्रसादाधिगमाय** = மனம் தெளிவடைவதற்காக,

**மன:ப்ரஸாதா³தி⁴க³மாய**

**मनोनिरासं विदधीत** = மனதில் விஷயசிந்தனத்தை விலக்க வேண்டும்.
**மனோநிராஸம் வித³தீ⁴த**

மனஸின் கவனமின்மை தான் மனிதனுக்கு பந்தத்தின் காரணம். மனஸின் தெளிவே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலைக்கு ஸாதனம். ஆகையால் மனஸு தெளிவாகவேண்டும் அதற்காக வித்வானாயிருப்பவன் மனஸிலுள்ள தோஷங்களை யெல்லாம் விலக்க வேண்டும். **(374)**

(**அவதாரிகை**) லிங்கசரீரம் என்ற ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய விக்ஞான மய கோசம் மனோமய கோசம் இவ்விரண்டையும் இது வரை வர்ணித்து விட்டு அதில் அடங்கிய இன்னொரு அம்சமாகிய பிராணமய கோசத்தை வர்ணிப்பதற்காக பிராண - கர்மேந்த்ரிய ஸிருஷ்டியைக் கூறுகிறார்: -

**पञ्चानामेव भूतानां रजोंशेभ्योऽभवन् क्रमात् ।**
**वाक्पाणिपादपायूपस्थानि कर्मेन्द्रियाण्यनु ॥ ३७५ ॥**

**பஞ்சாநாமேவ பூ⁴தாநாம் ரஜோம்ஶேப்⁴யோ(அ)ப⁴வன் க்ரமாத் ।**
**வாக்பாணிபாத³பாயூபஸ்தா²னி கர்மேந்த்³ரியாண்யனு ॥ 375 ॥**

**पञ्चाना भूतानामेव** = ஐந்து பூதங்களுடையவே,
**பஞ்சானா பூ⁴தாநாமேவ**
**रजोंशेभ्यः** = ரஜோகுணாம்சங்களிலிருந்து,
**ரஜோம்ஶேப்⁴ய:**
**अनुक्रमात्** = வரிசையாக,
**அனுக்ரமாத்**
**वाक्पाणिपादपायूपस्थानि** = வாக்கு, கை, கால், பாயு, உபஸ்தம் என்ற,
**வாக்பாணிபாத³பாயூபஸ்தா²னி**
**कर्मेन्द्रियाणि** = கர்மேந்திரியங்கள்,
**கர்மேந்த்³ரியாணி**
**अभवन्** = உண்டாயின.
**அப⁴வன்**

முன்கூறப்பட்ட ஆகாசம் முதலான ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களுடைய ரஜோ குணத்தின் அம்சங்களிலிருந்து வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்கிற ஐந்து கர்மேந்திரியங்கள் வரிசையாக உண்டாயின.

[ஆகாச தன்மாத்திரையிலிருந்து வாக்கு, வாயு தன் மாத்திரையிலிருந்து கை, தேஜஸ் தன்மாத்திரையிலிருந்து கால், ஜல தன்மாத்திரையிலிருந்து உபஸ்தம், பிருத்வீ தன்மாத்திரையிலிருந்து பாயு, என்று தாத்பர்யம். இங்கேயும் கர்மேந்திரியங் கள் என்பது கை, கால், என்றெல்லாம் சொல்லப்படும் மாம்ஸ பிண்டங்கள் இல்லை

பேசும் கருவி, எடுக்கும் கருவி, நகரும் கருவி, மலமோசனம் செய்யும் கருவி, ஜலமோசனம் செய்யும் கருவி, என்று எடுத்துக் கொள்ளவேண்டும். இந்திரியங்களோ அந்தக்கரணமோ ஸூக்ஷ்ம பூதங்களால் ஏற்பட்டிருக்கிறபடியால், நம் கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகக் கூடியவை யல்ல.] **(375)**

**समस्तेभ्यो रजोंशेभ्यो व्योमादीनां क्रियात्मकाः ।**

**प्राणादयः समुत्पन्नाः पञ्चाप्यान्तरवायवः ॥ ३७६ ॥**

**ஸமஸ்தேப்⁴யோ ரஜோம்ஶேப்⁴யோ வ்யோமாதீ³னும் க்ரியாத்மகாः ।**
**ப்ராணுத³யः ஸமுத்பன்னுः பஞ்சாப்யாந்தரவாயவः ॥ 376 ॥**

**व्योमादीनां** = ஆகாசம் முதலியவைகளுடைய,
**வ்யோமாதீ³னும்**
**समस्तेभ्यः रजोंशेभ्यः** = ரஜோகுணாம்சங்கள் எல்லாவற்றிலிருந்தும்,
**ஸமஸ்தேப்⁴யः ரஜோம்ஶேப்⁴யः**
**क्रियात्मकाः** = க்ரியா ஸ்வபாவமுள்ள,
**க்ரியாத்மகாः**
**प्राणादयः** = பிராணன் முதலான,
**ப்ராணுத³யः**
**पञ्चाप्यान्तरवायवः** = உள் வாயுக்கள் ஐந்தும்,
**பஞ்சாப்யாந்தரவாயவः**
**समुत्पन्नाः** = உண்டாயின.
**ஸமுத்பன்னுः**

ஆகாசம் முதலான ஐந்து பூதங்களுடையவும் ரஜோ அம்சங்கள் எல்லாம் சேர்ந்து விடுவதிலிருந்து உள்ளிருக்கும் வாயுக்களாகிய ஐந்து பிராணன்கள் உண்டா யின. இவை எப்பொழுதும் சலன ஸ்வபாவ முள்ளவை. **(376)**

**(அவதாரிகை)** இந்த பிராணன் முதலான ஐந்து உள்வாயுக்களின் பெயர்களை யும் அவைகளின் தனித்தனி வியாபாரங்களினுல் அவ்வித பெயர்கள் ஏற்பட்டன என்பதையும் சொல்கிறுர்: -

**प्राणः प्राग्गमनेन स्यादपानोऽवाग्गमनेन च ।**

**व्यानस्तु विष्वग्गमनादुत्क्रान्त्योदान इष्यते ॥ ३७७ ॥**

**ப்ராணः ப்ராக்³க³மனேன ஸ்யாத³பானே(அ)வாக்³க³மனேன ச ।**
**வ்யானஸ்து விஷ்வக்³க³மநாது³த்க்ராந்த்யோதா³ன இஷ்யதே ॥ 377 ॥**

**अशितान्नरसादीनां समीकरणधर्मतः।**

**समान इत्यभिप्रेतो वायुर्यस्तेषु पञ्चमः॥ ३७८ ॥**

**அஶிதான்னரஸாதீ³னும் ஸமீகரணத⁴ர்மத꞉।**
**ஸமான இத்யபி⁴ப்ரேதோ வாயுர்யஸ்தேஷு பஞ்சம꞉ ॥ 378 ॥**

| | | |
|---|---|---|
| **प्राग्गमनेन**<br>**ப்ராக்³க³மனேன** | = | முன் (மேலே) செல்வதால், |
| **प्राणः स्यात्**<br>**ப்ராண꞉ ஸ்யாத்** | = | பிராணனாகும், |
| **अवाग्गमनेन च**<br>**அவாக்³க³மனேன ச** | = | கீழே செல்வதால், |
| **अपानः**<br>**அபான꞉** | = | அபானன், |
| **विष्वक्**<br>**விஷ்வக்** | = | நாலாபக்கங்களிலும், |
| **गमनात्**<br>**க³மனாத்** | = | செல்வதால், |
| **व्यानः**<br>**வ்யான꞉** | = | வியானன், |
| **उत्कान्त्या**<br>**உத்காந்த்யா** | = | மேலே கிளம்புவதால், |
| **उदानः**<br>**உதா³ன꞉** | = | உதானனாக, |
| **इष्यते**<br>**இஷ்யதே** | = | கருதப்படுகிறது, |
| **अशितान्नरसादीनां**<br>**அஶிதான்னரஸாதீ³னும்** | = | சாப்பிடப்பட்ட அன்னம் ரஸம் முதலியவைகளை, |
| **समीकरणधर्मतः**<br>**ஸமீகரணத⁴ர்மத꞉** | = | ஸமமாகச் செய்யும் காரியத்தால், |
| **तेषु**<br>**தேஷு** | = | அவைகளில், |
| **यः**<br>**ய꞉** | = | (எது), |
| **पञ्चमः वायु**<br>**பஞ்சம꞉ வாயு** | = | ஐந்தாவது வாயுவோ (அது), |
| **समान इति**<br>**ஸமான இதி** | = | ஸமானன் என்று, |
| **अभिप्रेतः**<br>**அபி⁴ப்ரேத꞉** | = | கருதப்பட்டது. |

முன்னுல் செல்லுவதால் பிராணன் ஆகும். கீழே செல்வதால் அபானன். நாலாபக்கங்களும் செல்வதனுல் வியானன். மேலே கிளம்புவதினுல் உதானன் என்று கருதப்படுகிறது. சாப்பிடப்பட்ட அன்னம் ரஸம் முதலானவைகளை எல்லா உருப்புக்களுக்கும் பங்கிட்டு ஸமமாகச் செய்வதினுல் ஸமானன் என்று எண்ணப் படுகிறது. **(377-378)**

**क्रियैव दृश्यते प्रायः प्राणकर्मेन्द्रियेष्वलम् ।**
**ततस्तेषां रजोंशेभ्यो जनिरङ्गीकृता बुधैः ॥ ३७९ ॥**

**க்ரியைவ த்³ருஶ்யதே ப்ராய: ப்ராணகர்மேந்த்³ரியேஷ்வலம் ।**
**ததஸ்தேஷாம் ரஜோம்ஶேப்⁴யோ ஜநிரங்கீ³க்ருதா பு³தை⁴: ॥ 379 ॥**

**प्रायः** = அநேகமாக,
**ப்ராய:**

**प्राणकर्मेन्द्रियेषु** = பிராணனிலும் கர்மேந்திரியங்களிலும்,
**ப்ராணகர்மேந்த்³ரியேஷு**

**अलं** = நன்கு,
**அலம்**

**क्रियैव** = செய்கையே,
**க்ரியைவ**

**दृश्यते** = காணப்படுகிறது,
**த்³ருஶ்யதே**

**ततः** = அதனுல்,
**தத:**

**तेषां** = அவைகளுக்கு,
**தேஷாம்**

**रजोंशेभ्यः** = ரஜோகுணத்தின் அம்சங்களிலிருந்து,
**ரஜோம்ஶேப்⁴ய:**

**जनिः** = உத்பத்தி,
**ஜநி:**

**बुधैः** = வித்வான்களால்,
**பு³தை⁴:**

**अङ्गीकृता** = ஒப்புக்கொள்ளப்பட்டது.
**அங்கீ³க்ருதா**

பிராணன்களிலும் கர்மேந்திரியங்களிலும் செய்கையே நன்றாகக் காணப்படுகிறது. ஆகையினுல் அவைகள் ஸூக்ஷ்ம பூதங்களின் ரஜஸ் அம்சங்களி லிருந்து உண்டானதாகச் சொல்லப்படுகிறது. **(379)**

**राजसीं तु क्रियाशक्तिं तमःशक्तिं जडात्मिकाम् ।**
**प्रकाशरूपिणीं सत्त्वशक्तिं प्राहुर्महर्षयः॥ ३८० ॥**

**ராஜஸீம் து க்ரியாஶக்திம் தமःஶக்திம் ஜடா³த்மிகாம் ।**
**ப்ரகாஶரூபிணீம் ஸத்த்வஶக்திம் ப்ராஹூர்மஹர்ஷயः ॥ 380 ॥**

| | | |
|---|---|---|
| **सत्वशक्तिं** ஸத்வஶக்திம் | = | க்ரியாசக்தியை, |
| **राजसीं** ராஜஸீம் | = | ரஜோகுணத்தைச்சேர்ந்ததாகவும், |
| **तमःशक्तिं** தமःஶக்திம் | = | தமோகுணத்தின் சக்தியை, |
| **जडात्मिकाम्** ஜடா³த்மிகாம் | = | ஜடஸ்வ ரூபமாகவும், |
| **सत्त्वशक्तिं** ஸத்த்வஶக்திம் | = | ஸத்வகுணத்தின் சக்தியை, |
| **प्रकाशरूपिणीं** ப்ரகாஶரூபிணீம் | = | ப்ரகாசஸ்வரூபமாகவும், |
| **महर्षयः** மஹர்ஷயः | = | மஹரிஷிகள், |
| **प्राहुः** ப்ராஹுः | = | சொல்கிறுர்கள். |

ரஜோகுணத்தின் சக்தி கிரியை, தமோகுணத்தின் சக்தி ஜாட்யம், ஸத்வ குணத்தின் சக்தி ப்ரகாசம் என்று மஹரிஷிகள் கூறுகிறுர்கள். **(380)**

**एते प्राणादयः पञ्च पञ्चकर्मेन्द्रियैः सह ।**
**भवेत्प्राणमयः कोशः स्थूलो येनैव चेष्टते ॥ ३८१ ॥**

**ஏதே ப்ராணாத³யः பஞ்ச பஞ்சகர்மேந்த்³ரியைः ஸஹ ।**
**ப⁴வேத்ப்ராணமயः கோஶः ஸ்தூ²லோ யேனைவ சேஷ்டதே ॥ 381 ॥**

| | | |
|---|---|---|
| **पञ्चकर्मेन्द्रियैः सह** பஞ்சகர்மேந்த்³ரியைः ஸஹ | = | ஐந்துகர்மேந்திரியங்களுடன் கூட, |
| **एते** ஏதே | = | இந்த, |
| **प्राणादयः पञ्च** ப்ராணாத³யः பஞ்ச | = | பிராணன் முதலானவைகள் ஐந்தும், |

| | | |
|---|---|---|
| प्राणमयः कोशः<br>ப்ராணமயஃ கோஶஃ | = | பிராணமயகோசமாக, |
| भवेत्<br>ப⁴வேத் | = | ஆகும், |
| येनैव<br>யேநைவ | = | எதனாலேயே, |
| स्थूलः<br>ஸ்தூ²லஃ | = | ஸ்தூலதேஹம், |
| चेष्टते<br>சேஷ்டதே | = | சேஷ்டிக்கிறதோ. |

இந்த பிராணன் முதலான ஐந்தும் ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்தது பிராணமய கோசம் ஆகும். இதனால் தான் ஸ்தூல சரீரம் சேஷ்டிக்கிறது. **(381)**

**यद्यद्धिनिष्पाद्यते कर्म पुण्यं वा पापमेव वा ।**
**वागादिभिश्च वपुषा तत्प्राणमयकर्तृकम् ॥ ३८२ ॥**

**யத்³யத்⁴நிஷ்பாத்³யதே கர்ம புண்யம் வா பாபமேவ வா ।**
**வாகா³தி³பி⁴ஶ்ச வபுஷா தத்ப்ராணமயகர்த்ருகம் ॥ 382 ॥**

| | | |
|---|---|---|
| वागादिभिश्च<br>வாகா³தி³பி⁴ஶ்ச | = | வாக்கு முதலியவைகளாலும், |
| वपुषा<br>வபுஷா | = | சரீரத்தாலும், |
| पुण्यं वा<br>புண்யம் வா | = | புண்யமோ, |
| पापमेव वा<br>பாபமேவ வா | = | பாபமோ, |
| यद्यते कर्म<br>யத்³யதே கர்ம | = | எந்த எந்த, |
| कर्म<br>கர்ம | = | காரியம், |
| निष्पाद्यते<br>நிஷ்பாத்³யதே | = | செய்யப்படுகிறதோ, |
| तत्<br>தத் | = | அது, |
| प्राणमयकर्तृकम्<br>ப்ராணமயகர்த்ருகம் | = | பிராணமயகோசத்தை கர்த்தாவாக உடையது. |

வாக் முதலியவைகளாலும் சரீரத்தாலும் செய்யப்படும் புண்யம், பாபம் முதலான செய்கைகளெல்லாம் பிராணமய கோசத்தின் காரியமாகும். **(382)**

**वायुनोच्चालितो वृक्षो नानारूपेण चेष्टते ।**
**तस्मिन्विनिश्चले सोऽपि निश्चलः स्याद्यथा तथा ॥ ३८३ ॥**

**வாயுனோச்சாலிதோ வ்ருக்ஷோ நானாரூபேண சேஷ்டதே ।**
**தஸ்மின்விநிஶ்சலே ஸோ(அ)பி நிஶ்சல꞉ ஸ்யாத்³யதா² ததா² ॥ 383 ॥**

**प्राणकर्मेन्द्रियैर्देहः प्रेर्यमाणः प्रवर्तते ।**
**नानाक्रियासु सर्वत्र विहिताविहितादिषु ॥ ३८४ ॥**

**ப்ராணகர்மேந்த்³ரியைர்தே³ஹ꞉ ப்ரேர்யமாண꞉ ப்ரவர்ததே ।**
**நானாக்ரியாஸு ஸர்வத்ர விஹிதாவிஹிதாதி³ஷு ॥ 384 ॥**

**यथा** = எப்படி,
**யதா²**
**वायुना** = காற்றினால்,
**வாயுனா**
**उच्चालितः** = அசைக்கப்பட்ட,
**உச்சாலித꞉**
**वृक्षः** = மரம்,
**வ்ருக்ஷ꞉**
**नानारूपेण** = பல ரிதமாக,
**நானாரூபேண**
**चेष्टते** = சேஷ்டிக்கிறதோ,
**சேஷ்டதே**
**तस्मिन्** = அது,
**தஸ்மின்**
**विनिश्चले** = அசையாமலிருந்தால்,
**விநிஶ்சலே**
**सोपि** = அந்த மரமும்,
**ஸோபி**
**निश्चलः** = அசைவற்றதாக,
**நிஶ்சல꞉**
**स्यात्** = ஆகுமோ,
**ஸ்யாத்**
**तथा** = அப்படி,
**ததா²**

**प्राणकर्मेन्द्रियैः** = பிராணனாலும் கர்மேந்திரியங்களாலும்,

**ப்ராணகர்மேந்த்³ரியை:**

**प्रेर्यमाणः** = ஏவப்படுகிற,

**ப்ரேர்யமாண:**

**देहः** = சரீரமானது,

**தே³ஹ:**

**सर्वत्र** = எங்கும்,

**ஸர்வத்ர**

**विहिताविहितादिषु** = விதிக்கப்பட்டதும் விதிக்கப்படாததுமான,

**விஹிதாவிஹிதாதி³ஷு**

**नानाक्रियासु** = பலவிதமான கர்மாக்களில்,

**நாநாக்ரியாஸு**

**प्रवर्तते** = ப்ரவர்த்திக்கிறது.

**ப்ரவர்ததே**

காற்று நன்றாக வீசும் பொழுது மரம் பலவிதமாக ஆடுகிறது. காற்று அடங்கி விட்டால் மரமும் அசைவதில்லை. இதுபோல் பிராணன்கள், கர்மேந்திரியங்கள் இவைகளால் தூண்டப்பட்டு சரீரம் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டதும் விதிக்கப்படாததும் தடுக்கப்பட்டதுமான பலவித செய்கைகளைச் செய்கிறது. **(383-384)**

(**அவதாரிகை**) இதுவரை நிர்வசனம் செய்யப்பட்ட விக்ஞானமய கோசம், மனோமய கோசம், பிராணமய கோசம், இம்மூன்றும் சேர்ந்து லிங்க சரீரம் என்றும், ஸூக்ஷ்ம சரீரம் என்றும் முன்னால் சொல்லப்பட்டது. அவ்விதப் பெயர்கள் ஏற்பட்டதற்குக் காரணத்தை இங்கு குறிப்பிடுகிறார்: -

**कोशत्रयं मिलित्वैतद्वपुः स्यात्सूक्ष्ममात्मनः ।**
**अतिसूक्ष्मतया लीनस्यात्मनो गमकत्वतः ।**
**लिङ्गमित्युच्यते स्थूलापेक्षया सूक्ष्ममिष्यते ॥ ३८५ ॥**

**கோஶத்ரயம் மிலித்வைதத்³வபு: ஸ்யாத்ஸூக்ஷ்மமாத்மன: ।**
**அதிஸூக்ஷ்மதயா லீனஸ்யாத்மனோ க³மகத்வத: ।**
**லிங்க³மித்யுச்யதே ஸ்தூ²லாபேக்ஷயா ஸூக்ஷ்மமிஷ்யதே ॥ 385 ॥**

**एतत्** = இந்த,

**ஏதத்**

**कोशत्रयं** = மூன்று கோசங்களும்,

**கோஶத்ரயம்**

**मिलित्वा** = சேர்ந்து,

**மிலித்வா**

**आत्मनः** = ஆத்மாவிற்கு,
**ஆத்மனः**
**सूक्ष्मं वपुः स्यात्** = ஸூக்ஷ்மசரீரமாகும்,
**ஸூக்ஷ்மம் வபுः ஸ்யாத்**
**अतिसूक्ष्मतया** = மிகவும் ஸூக்ஷ்மமாக இருப்பதால்,
**அதிஸூக்ஷ்மதயா**
**लीनस्य** = மறைந்துள்ள,
**லீனஸ்ய**
**आत्मनः** = ஆத்மாவிற்கு,
**ஆத்மனः**
**गमकत्वतः** = ஞாபகமாக இருப்பதால்,
**க³மகத்வதः**
**लिङ्गमिति** = லிங்கசரீரமென்று,
**லிங்க³மிதி**
**उच्यते** = சொல்லப்படுகிறது,
**உச்யதே**
**स्थूलापेक्षया** = ஸ்தூல சரீரத்தையபேக்ஷித்து,
**ஸ்தூ²லாபேக்ஷயா**
**सूक्ष्मं** = ஸூக்ஷ்மசரீரமாக,
**ஸூக்ஷ்மம்**
**इच्यते** = கருதப்படுகிறது.
**இச்யதே**

விக்ஞானமயம், மனோமயம், பிராணமயம் என்ற மூன்று கோசங்களையும் சேர்த்தால் இது ஆத்மாவின் ஸூக்ஷ்ம சரீரமாகும். மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பதால் மறைந்திருக்கும் ஆத்மாவை காட்டிக்கொடுக்கும் காரணத்தினால் இது லிங்கம் (அடையாளம்) என்று சொல்லப்படுகிறது. இது ஸ்தூல சரீரத்தை யுத்தேசித்து ஸூக்ஷ்மம் என்றும் கருதப்படுகிறது. **(385)**

**(அவதாரிகை)** முன் காரண சரீரத்தை ஸமஷ்டி, வியஷ்டி, என்று பிரித்துக் காட்டினது போல ஸூக்ஷ்ம சரீரத்திலும் அவ்விதப் பிரிவை எடுத்துச் சொல்கிறார்: -

**सर्वं लिङ्गवपुर्जातमेकधीविषयत्वतः ।**
**समष्टिः स्यात्तरुगणः सामान्येन वनं यथा ॥ ३८६ ॥**

**ஸர்வம் லிங்க³வபுர்ஜாதமேகதீ⁴விஷயத்வதः ।**
**ஸமஷ்டிः ஸ்யாத்தருக³ணः ஸாமான்யேன வனம் யதா² ॥ 386 ॥**

**यथा** = எப்படி,

**யதா²**

**तरुगण:** = மரங்களின் கூட்டம்,

**தருக³ண:**

**सामान्येन** = பொதுவாக,

**ஸாமான்யேன**

**वनं** = காடு ஆகிறதோ (அப்படியே),

**வனம்**

**सर्वं लिङ्गवपुर्जातं** = எல்லா லிங்க சரீரங்களின் கூட்டமும்,

**ஸர்வம் லிங்க³வபுர்ஜாதம்**

**एकधीविषयत्वत:** = ஒரே பாவனைக்கு விஷயமாவதால்,

**ஏகதீ⁴விஷயத்வத:**

**समष्टि: स्यात्** = ஸமஷ்டியாகும்.

**ஸமஷ்டி: ஸ்யாத்**

மரங்களை தனித்தனியாக கவனிக்காமல் மொத்தமாகச் சேர்த்துப்பார்த்தால் அது காடு என்ற பெயரை அடைகிறது. இது போல் உலகிலுள்ள எல்லா லிங்க சரீரங்களையும் தனித்தனியாக கவனிக்காமல் மொத்தமாகச் சேர்த்துப்பார்த்தால் இதுவே ஸூக்ஷ்ம ஸமஷ்டியாகும். **(386)**

**एतत्समष्ट्युपहितं चैतन्यं सफलं जगु: ।**
**हिरण्यगर्भ: सूत्रात्मा प्राण इत्यपि पण्डिता: ॥ ३८७ ॥**

**ஏதத்ஸமஷ்ட்யுபஹிதம் சைதன்யம் ஸப²லம் ஜகு³: ।**
**ஹிரண்யக³ர்ப⁴: ஸூத்ராத்மா ப்ராண இத்யபி பண்டி³தா: ॥ 387 ॥**

**एतत्समष्ट्युपहितं** = இந்த லிங்கசரீரஸமஷ்டியை உபாதியாகக் கொண்டதும்,

**ஏதத்ஸமஷ்ட்யுபஹிதம்**

**सफलं** = பிரதிபிம்பத்துடன் கூடியதுமான,

**ஸப²லம்**

**चैतन्यं** = சைதன்யத்தை,

**சைதன்யம்**

**हिरण्यगर्भ:** = ஹிரண்யகர்ப்பர் என்றும்,

**ஹிரண்யக³ர்ப⁴:**

**सूत्रात्मा** = ஸூத்ராத்மா என்றும்,

**ஸூத்ராத்மா**

**प्राण इत्यपि** = பிராணன் என்றும்,

**ப்ராண இத்யபி**

| | | |
|---|---|---|
| **पण्डिता:** | = | வித்வான்கள், |
| **பண்டி³தா:** | | |
| **जगु:** | = | சொல்லியுள்ளார்கள். |
| **ஜகு³:** | | |

இந்த எல்லா லிங்க சரீர ஸமஷ்டியை உபாதியாக உள்ள சைதன்யம் பிரதிபிம்பம் உள்பட ஹிரண்யகர்பர் என்றும் ஸூத்ராத்மா என்றும் பிராணன் என்றும் பண்டிதர்கள் சொல்கிறுர்கள். **(387)**

**हिरण्मये बुद्धिगर्भे प्रचकास्ति हिरण्यवत् ।**
**हिरण्यगर्भ इत्यस्य व्यपदेशस्ततो मतः ॥ ३८८ ॥**

**ஹிரண்மயே பு³த்³தி⁴க³ர்பே⁴ ப்ரசகாஸ்தி ஹிரண்யவத் ।**
**ஹிரண்யக³ர்ப⁴ இத்யஸ்ய வ்யபதே³ஶஸ்ததோ மத: ॥ 388 ॥**

| | | |
|---|---|---|
| **हिरण्मये** | = | தங்கமயமான, |
| **ஹிரண்மயே** | | |
| **बुद्धिगर्भे** | = | புத்தியின் நடுவில், |
| **பு³த்³தி⁴க³ர்பே⁴** | | |
| **हिरण्यवत्** | = | தங்கம்போல், |
| **ஹிரண்யவத்** | | |
| **प्रचकास्ति** | = | விளங்குகிறுன், |
| **ப்ரசகாஸ்தி** | | |
| **ततः** | = | ஆகையினுல், |
| **தத:** | | |
| **अस्य** | = | இவனுக்கு, |
| **அஸ்ய** | | |
| **हिरण्यगर्भ इति** | = | ஹிரண்யகர்ப்பன் என்று, |
| **ஹிரண்யக³ர்ப⁴ இதி** | | |
| **व्यपदेश:** | = | வியவஹாரம், |
| **வ்யபதே³ஶ:** | | |
| **मतः** | = | ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. |
| **மத:** | | |

தங்கம் மாதிரிப் பிரகாசிக்கிற புத்தியின் நடுவில் தங்கம் போல நன்கு பிரகாசிக்கிறது என்பதினுல் இவருக்கு ஹிரண்ய கர்பர் என்ற வியவஹாரம் ஏற்பட்டிருக்கிறது. **(388)**

**समस्तलिङ्गदेहेषु सूत्रवन्मणिपङ्क्तिषु ।**
**व्याप्य स्थितत्वात्सूत्रात्मा प्राणनात्प्राण उच्यते ॥ ३८९ ॥**

**ஸமஸ்தலிங்க³தே³ஹேஷு ஸூத்ரவன்மணிபங்க்திஷு ।**
**வ்யாப்ய ஸ்தி²தத்வாத்ஸூத்ராத்மா ப்ராணனாத்ப்ராண உச்யதே ॥ 389 ॥**

**मणिपङ्क्तिषु** = ரத்ன வரிசைகளில்,
**மணிபங்க்திஷு**
**सूत्रवत्** = நூல்போல்,
**ஸூத்ரவத்**
**समस्तलिङ्गदेहेषु** = எல்லாலிங்கசரீரங்களிலும்,
**ஸமஸ்தலிங்க³தே³ஹேஷு**
**व्याप्य** = வியாபித்துக்கொண்டு,
**வ்யாப்ய**
**स्थितत्वात्** = இருப்பதனுல்,
**ஸ்தி²தத்வாத்**
**सूत्रात्मा** = ஸூத்ராத்மாவாகவும்,
**ஸூத்ராத்மா**
**प्राणनात्** = ஜீவிக்கச்செய்வதால்,
**ப்ராணனுத்**
**प्राण:** = பிராணனுகவும்,
**ப்ராண:**
**उच्यते** = சொல்லப்படுகிறுர்.
**உச்யதே**

பல ரத்னங்கள் கோர்க்கப்பட்ட ரத்னமாலையில் நூலானது எல்லா ரத்னங்களுள்ளும் ஊடுருவி இருக்கிறது. இந்த நூல் போலவே ஹிரண்யகர்ப்பன் எல்லா லிங்க சரீரங்களுக்குள்ளும் ஊடுருவி இருப்பதால் இவனுக்கு ஸூத்ராத்மா என்ற பெயரும் ஜீவிக்கும்படி செய்வதால் பிராணன் என்ற பெயரும் இவனுக்கு ஏற்பட்டிருக்கிறது. **(389)**

(**அவதாரிகை**) இவ்விதம் ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான ஹிரண்ய கர்பரைப்பற்றிச் சொல்லி விட்டு, வியஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸஊன வர்ணிக்கிறுர்: -

**नैकधीविषयत्वेन लिङ्गं व्यष्टिर्भवत्यथ ॥ ३९० ॥**

**நைகதீ⁴விஷயத்வேன லிங்க³ம் வ்யஷ்டிர்ப⁴வத்யத² ॥ 390 ॥**

**नैकधीविषयत्वेन** = பல பாவஊகளுக்கு விஷயமாவதால்,
**நைகதீ⁴விஷயத்வேன**

**लिङ्गं** = லிங்க சரீரம்,
**லிங்க³ம்**
**व्यष्टिः भवति** = வியஷ்டியாக ஆகிறது.
**வ்யஷ்டி: ப⁴வதி**

எல்லா லிங்க சரீரங்களையும் சேர்த்து மொத்தமாகப் பார்க்கும் பொழுது ஸமஷ்டி எனக்கூறப்பட்டது. அது ஒன்று தான். ஒவ்வொரு லிங்க சரீரத்தையும் தனித்தனியாகப் பார்க்கும் பொழுது அது வியஷ்டியாகும் இது பல. (390)

**यदेतद् व्यष्ट्युपहितं चिदाभाससमन्वितम् ।**
**चैतन्यं तैजस इति निगदन्ति मनीषिणः ।**
**तेजोमयान्तःकरणोपाधित्वेनैष तैजसः ॥ ३९१ ॥**

**யதே³தத்³ வ்யஷ்ட்யுபஹிதம் சிதா³பா⁴ஸஸமன்விதம் ।**
**சைதன்யம் தைஜஸ இதி நிக³த³ந்தி மனீஷிண: ।**
**தேஜோமயாந்த:கரணோபாதி⁴த்வேனைஷ தைஜஸ: ॥ 391 ॥**

**व्यष्ट्युपहितं** = வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்தை உபாதியாகக்
**வ்யஷ்ட்யுபஹிதம்** கொண்ட,
**चिदाभाससमन्वितम्** = சித்ப்ரதிபிம்பத்துடன் கூடிய,
**சிதா³பா⁴ஸஸமன்விதம்**
**यत् चैतन्यं** = எந்த சைதன்யமோ,
**யத் சைதன்யம்**
**एतत्** = இதை,
**ஏதத்**
**तैजस इति** = தைஜஸன் என்று,
**தைஜஸ இதி**
**मनीषिणः** = வித்வான்கள்,
**மனீஷிண:**
**निगदन्ति** = சொல்கிறுர்கள்,
**நிக³த³ந்தி**
**तेजोमयान्तः** = ஒளி மயமான அந்தக்கரணத்தை உபாதியாகக்
**தேஜோமயாந்த:** கொண்டிருப்பதால்,
**एषः** = இவன்,
**ஏஷ:**
**तैजसः** = தைஜஸனுவான்.
**தைஜஸ:**

வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்துடன் கூடியதாய் சைதன்யத்தின் பிரதிபிம்பத்தோடு சேர்ந்ததாய் இருக்கும் சைதன்யத்தை தைஜஸன் என்று அறிவுள்ளவர்கள் சொல்கிறுர்கள். பிரகாச மயமான அந்தக்கரணம் இவனுக்கு உபாதியாக இருப்பதால் இவனுக்கு தைஜஸன் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது. **(391)**

## स्थूलात् सूक्ष्मतया व्यष्टिः अस्य सूक्ष्मवपुर्मतम् ।
## अस्य जागरसंस्कारमयत्वात् वपुरुच्यते ॥ ३९२ ॥

**ஸ்தூ²லாத் ஸூக்ஷ்மதயா வ்யஷ்டி꞉ அஸ்ய ஸூக்ஷ்மவபுர்மதம் ।**
**அஸ்ய ஜாக³ரஸம்ஸ்காரமயத்வாத் வபுருச்யதே ॥ 392 ॥**

**स्थूलात्** = ஸ்தூலத்தைக்காட்டிலும்,
**ஸ்தூ²லாத்**
**सूक्ष्मतया** = ஸூக்ஷ்மமாயிருப்பதால்,
**ஸூக்ஷ்மதயா**
**व्यष्टिः** = வியஷ்டி சரீரம்,
**வ்யஷ்டி꞉**
**अस्य** = இவனுடைய,
**அஸ்ய**
**सूक्ष्मवपुः** = ஸூக்ஷ்ம சரீரமாக,
**ஸூக்ஷ்மவபு꞉**
**मतम्** = கருதப்பட்டிருக்கிறது,
**மதம்**
**जागरसंस्कारमयत्वात्** = ஜாக்ரத்காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களின்
**ஜாக³ரஸம்ஸ்காரமயத்வாத்** ஸம்ஸ்காரங்கள் நிறைந்திருப்பதால்,
**अस्य** = இவனுடைய,
**அஸ்ய**
**वपुः** = சரீரமாக,
**வபு꞉**
**उच्यते** = சொல்லப்படுகிறது.
**உச்யதே**

இந்த வியஷ்டி சரீரம் ஸ்தூல சரீரத்தைவிட ஸூக்ஷ்மமாயிருப்பதிறுல் இது ஜீவனுடைய ஸூக்ஷ்ம சரீரம் என்று கருதப்படுகிறது. இந்த ஜீவனுக்கு ஜாக்கிரத் காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களின் ஸம்ஸ்காரங்கள் இதில் நிறைந்திருப்பதால் இது இவனுடைய சரீரம் என்று சொல்லப்படுகிறது. **(392)**

**स्वप्ने जागरकालीनवासनापरिकल्पितान् ।**
**तैजसो विषयान्भुङ्क्ते सूक्ष्मार्थान्सूक्ष्मवृत्तिभिः॥ ३९३ ॥**

**ஸ்வப்னே ஜாக³ரகாலீனவாஸனாபரிகல்பிதான்।**
**தைஜஸோ விஷயான்பு⁴ங்க்தே ஸூக்ஷ்மார்தா²ன்ஸூக்ஷ்மவ்ருத்திபி⁴:॥ 393 ॥**

**तैजसः** = தைஜஸன்,
**தைஜஸ:**

**स्वप्ने** = ஸ்வப்னகாலத்தில்,
**ஸ்வப்னே**

**सूक्ष्मवृत्तिभिः** = ஸூக்ஷ்மமான மனோவிருத்திகளால்,
**ஸூக்ஷ்மவ்ருத்திபி⁴:**

**जागरकालीन** = ஜாக்ரத் காலத்தில் ஏற்பட்ட,
**ஜாக³ரகாலீன**

**वासनापरिकल्पितान्** = ஸம்ஸ்காரங்களால் ஏற்பட்ட,
**வாஸனாபரிகல்பிதான்**

**सूक्ष्मार्थान्** = ஸூக்ஷ்மப் பொருளாகிற,
**ஸூக்ஷ்மார்தா²ன்**

**विषयान्** = விஷயங்களை,
**விஷயான்**

**भुंङ्क्ते** = அனுபவிக்கிறான்.
**பு⁴ங்க்தே**

ஜாக்கிரத் காலத்திலுள்ள வாஸனைகளால் உண்டாக்கப்பட்ட ஸூக்ஷ்ம பதார்த்தங்களாகிற விஷயங்களை ஸ்வப்ன காலத்தில் தைஜஸன் ஸூக்ஷ்மமான விருத்திகளால் அனுபவிக்கிறான். **(393)**

**(அவதாரிகை)** முன் ஸமஷ்டி காரண சரீரத்திற்கும் வியஷ்டி காரண சரீரத் திற்கும் வேற்றுமையில்லை யென்று சொன்னது போலவே, இந்த ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்திற்கும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரத்திற்கும் வாஸ்தவத்தில் பேதம் கிடையாது என்பதை சொல்கிறார்: -

**समष्टेरपि च व्यष्टेः सामान्येनैव पूर्ववत् ।**
**अभेद एव ज्ञातव्यो जात्येकत्वे कुतो भिदा ॥ ३९४ ॥**

**ஸமஷ்டேரபி ச வ்யஷ்டே: ஸாமான்யேனைவ பூர்வவத் ।**
**அபே⁴த³ ஏவ ஜ்ஞாதவ்யோ ஜாத்யேகத்வே குதோ பி⁴தா³ ॥ 394 ॥**

| | | |
|---|---|---|
| **समष्टेरपि** | = | ஸமஷ்டிக்கும், |
| **ஸமஷ்டேரபி** | | |
| **व्यष्टेश्च** | = | வியஷ்டிக்கும், |
| **வ்யஷ்டேஶ்ர** | | |
| **पूर्ववत्** | = | முன்போல, |
| **பூர்வவத்** | | |
| **सामान्येनैव** | = | ஸமானமாக இருக்கும் தன்மையாலேயே, |
| **ஸாமான்யேனைவ** | | |
| **अभेद एव** | = | அபேதம் தான், |
| **அபே⁴த³ ஏவ** | | |
| **ज्ञातव्यः** | = | அறியத்தக்கது, |
| **ஜ்ஞாதவ்ய:** | | |
| **जात्येकत्वे** | = | ஜாதி ஒன்றுக இருக்கும்பொழுது, |
| **ஜாத்யேகத்வே** | | |
| **कुतो भिदा** | = | எப்படி வேற்றுமை ஏற்படும்? |
| **குதோ பி⁴தா³** | | |

காரண சரீரம் போலவே ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரமும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரமும் ஸமானமாயிருப்பதால் ஸூக்ஷ்மத்தன்மை என்பது இரண்டிலும் ஒன்றுகவே இருப்பதால் இரண்டுக்கும் வேற்றுமை கிடையாது. இரண்டும் ஒன்று தான் இரண்டும் ஒரே இனத்தை சேர்ந்திருக்கையில் பேதம் எப்படி வரும்? **(394)**

**द्वयोरुपाध्योरेकत्वे तयोरप्यभिमानिनोः।**
**सूत्रात्मनस्तैजसस्याप्यभेदः पूर्ववन्मतः ॥ ३९५ ॥**

**த்³வயோருபாத்⁴யோரேகத்வே தயோரப்யபி⁴மானினோ:।**
**ஸூத்ராத்மனஸ்தைஜஸஸ்யாப்யபே⁴த³: பூர்வவன்மத: ॥ 395 ॥**

| | | |
|---|---|---|
| **द्वयोः उपाध्योः** | = | இரண்டு உபாதிகளுக்கும், |
| **த்³வயோ: உபாத்⁴யோ:** | | |
| **एकत्वे** | = | அபேதம் இருக்கும்பொழுது, |
| **ஏகத்வே** | | |
| **तयोः अभिमानिनोरपि** | = | அவைகளின் அபிமானிகளுக்கும் (அதாவது), |
| **தயோ: அபி⁴மானினோரபி** | | |
| **सूत्रात्मनः** | = | ஸூத்ராத்மாவுக்கும், |
| **ஸூத்ராத்மன:** | | |
| **तैजसस्यापि** | = | தைஜஸனுக்கும், |
| **தைஜஸஸ்யாபி** | | |

**पूर्ववत्** = முன்போல,

**பூர்வவத்**

**अभेदः** = அபேதமானது,

**அபே⁴த³ঃ**

**मतः** = அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

**மதঃ**

முன் சுலோகத்தில் கூறிய நியாயப்படி ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீரம், வியஷ்டி ஸூக்ஷ்ம சரீரம் என்ற இரு உபாதிகளும் ஒன்று தான் என்று தீர்மானமாகி விட்ட படியால் காரண சரீராபிமானிகள்போல ஸமஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான ஸூத்ராத்மாவும் வியஷ்டி ஸூக்ஷ்ம சரீராபிமானியான தைஜஸனும் ஒன்றுதான் இருவருக்கும் வேற்றுமை இல்லையென்பதும் ஸித்தமாகிறது. **(395)**

(**அவதாரிகை**) இதுவரை ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டியை சொல்லி விட்டு இனி ஸ்தூல ஸ்ருஷ்டியை எடுத்துச் சொல்ல ஆரம்பிக்கிறுர்: -

**एवं सूक्ष्मप्रपञ्चस्य प्रकारः शास्त्रसंमतः ।**
**अथ स्थूलप्रपञ्चस्य प्रकारः कथ्यते शृणु ॥ ३९६ ॥**

**ஏவம் ஸூக்ஷ்மப்ரபஞ்சஸ்ய ப்ரகாரঃ ஶாஸ்த்ரஸம்மதঃ ।**
**அத² ஸ்தூ²லப்ரபஞ்சஸ்ய ப்ரகாரঃ கத்²யதே ஶ்ருணு ॥ 396 ॥**

**एवं** = இவ்வாறு,

**ஏவம்**

**शास्त्रसंमतः** = சாஸ்திரங்களில் ஒப்புக்கொள்ளப்பட்ட,

**ஶாஸ்த்ரஸம்மதঃ**

**सूक्ष्मप्रपञ्चस्य** = ஸூக்ஷ்மபிரபஞ்சத்தின்,

**ஸூக்ஷ்மப்ரபஞ்சஸ்ய**

**प्रकारः** = உண்டாகும்விதம் (கூறப்பட்டது),

**ப்ரகாரঃ**

**अथ** = இனி,

**அத²**

**स्थूलप्रपञ्चस्य** = ஸ்தூல பிரபஞ்சம்,

**ஸ்தூ²லப்ரபஞ்சஸ்ய**

**प्रकारः** = ஏற்படும்விதம்,

**ப்ரகாரঃ**

**कथ्यते** = சொல்லப்படுகிறது,

**கத்²யதே**

**शृणु** = கேள்,
**ஶ்ருணு**

இவ்விதமாக ஸூக்ஷ்ம பிரபஞ்சம் ஏற்படும் முறை சாஸ்திரத்தில் ஒப்புக் கொள்ளப்பட்டபடி சொல்லப்பட்டது இனிமேல் ஸ்தூல பிரபஞ்சம் உண்டாகும் முறை சொல்லப்படுகிறது கேள். **(396)**

(**அவதாரிகை**) முன்ஞல் ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து பஞ்சீகிருதமான ஸ்தூல பூதங்கள் ஏற்படுகின்றன என்று 338 வது சுலோகத்தில் சுருக்கமாகச் சொல்லப்பட்டது அந்தப் பஞ்சீகரணம் என்ற முறை எப்படி என்பதை ஶ்ரீமத் ஆசார்யாரே இங்கு விவரிக்கிருர்: -

**तान्येव सूक्ष्मभूतानि व्योमादीनि परस्परम्**
**पञ्चीकृतानि स्थूलानि भवन्ति शृणु तत्क्रमम् ॥ ३९७ ॥**

**தான்யேவ ஸூக்ஷ்மபூ⁴தானி வ்யோமாதீ³னி பரஸ்பரம்**
**பஞ்சீக்ருதானி ஸ்தூ²லானி ப⁴வந்தி ஶ்ருணு தத்க்ரமம் ॥ 397 ॥**

**व्योमादीनि** = ஆகாசம் முதலான,
**வ்யோமாதீ³னி**
**तान्येव सूक्ष्मभूतानि** = அதே ஸூக்ஷ்ம பூதங்கள்,
**தான்யேவ ஸூக்ஷ்மபூ⁴தானி**
**परस्परम्** = ஒன்றுக்கொன்று (சேர்ந்து),
**பரஸ்பரம்**
**पञ्चीकृतानि** = பஞ்சீகரணமாக்கப்பட்டு,
**பஞ்சீக்ருதானி**
**स्थूलानि भवन्ति** = ஸ்தூல பூதங்களாக ஆகின்றன,
**ஸ்தூ²லானி ப⁴வந்தி**
**तत्क्रमम्** = அந்த முறையை,
**தத்க்ரமம்**
**शृणु** = கேள்.
**ஶ்ருணு**

அதே ஆகாசம் முதலான ஸூக்ஷ்ம பூதங்கள் ஒன்றே டொன்று சேர்ந்து பஞ்சீகிருதமாகி (ஐவகைப்பட்டு) ஸ்தூல பூதங்களாக ஆகின்றன அந்த முறையைக கேள். **(397)**

**खादीनां भूतमेकैकं सममेव द्विधा द्विधा ।**
**विभज्य भागं तत्राद्यं त्यक्त्वा भागं द्वितीयकम् ॥ ३९८ ॥**

**கா²தீ³ஞம் பூ⁴தமேகைகம் ஸமமேவ த்³விதா⁴ த்³விதா⁴ ।**
**விப⁴ஜ்ய பா⁴க³ம் தத்ராத்³யம் த்யக்த்வா பா⁴க³ம் த்³விதீயகம் ॥ 398 ॥**

**चतुर्धा सुविभज्याथ तमेकैकं विनिक्षिपेत् ।**
**चतुर्णां प्रथमे भागे क्रमेण स्वार्धमन्तरा ॥ ३९९ ॥**

**சதுர்தா⁴ ஸுவிப⁴ஜ்யாத² தமேகைகம் விநிக்ஷிபேத் ।**
**சதுர்ணாம் ப்ரத²மே பா⁴கே³ க்ரமேண ஸ்வார்த⁴மந்தரா ॥ 399 ॥**

**ततो व्योमादिभूतानां भागाः पञ्च भवन्ति ते ।**
**स्वस्वार्श्वभागेनान्येभ्यः प्राप्तं भागचतुष्टयम् ।**
**संयोज्य स्थूलतां यान्ति व्योमादीनि यथाक्रमम् ॥ ४०० ॥**

**ததோ வ்யோமாதி³பூ⁴தானாம் பா⁴கா³ꞏ பஞ்ச ப⁴வந்தி தே ।**
**ஸ்வஸ்வார்ஸ்வபா⁴கே³ஞன்யேப்⁴யꞏ ப்ராப்தம் பா⁴க³சதுஷ்டயம் ।**
**ஸம்யோஜ்ய ஸ்தூ²லதாம் யாந்தி வ்யோமாதீ³னி யதா²க்ரமம் ॥ 400 ॥**

| | | |
|---|---|---|
| **खादीनां**<br>**கா²தீ³ஞம்** | = | ஆகாசம் முதலியவைகளில், |
| **एकैकं भूतं**<br>**ஏகைகம் பூ⁴தம்** | = | ஒவ்வொரு பூதத்தையும், |
| **सममेव**<br>**ஸமமேவ** | = | ஸமமாகவே, |
| **द्विधा द्विधा**<br>**த்³விதா⁴ த்³விதா⁴** | = | இரண்டு இரண்டு பாகமாக, |
| **विभज्य**<br>**விப⁴ஜ்ய** | = | பிரித்து, |
| **तत्र**<br>**தத்ர** | = | அதில், |
| **आद्यं भागं**<br>**ஆத்³யம் பா⁴க³ம்** | = | முதல் பாகத்தை, |
| **त्यक्त्वा**<br>**தத்ராத்³யம்** | = | விட்டுவிட்டு, |
| **द्वितीयकम् भागं**<br>**த்³விதீயகம் பா⁴க³ம்** | = | இரண்டாவது பாகத்தை, |
| **चतुर्धा**<br>**சதுர்தா⁴** | = | நான்காக, |
| **सुविभज्य**<br>**ஸுவிப⁴ஜ்ய** | = | நன்கு பிரித்து, |

**अथ** = பிறகு,

**அத2**

**तं एकैकं** = அந்த ஒவ்வொன்றையும்,

**தம் ஏகைகம்**

**स्वार्धमन्तरा** = தன் பாகத்தைத்தவிற,

**ஸ்வார்த4மந்தரா**

**चतुर्णां** = (மற்ற) நான்கு பூதங்களுடைய,

**சதுர்ணாம்**

**प्रथमे भागे** = முதல் பாகத்தில்,

**ப்ரத2மே பா4கே3**

**क्रमेण** = கிரமமாக,

**க்ரமேண**

**विनिक्षिपेत्** = வைத்துவிடவேண்டும்,

**விநிக்ஷிபேத்**

**ततः** = அதனால்,

**ததஃ**

**व्योमादिभूतानां** = ஆகாசம் முதலான பூதங்களுக்கு,

**வ்யோமாதி3பூ4தானாம்**

**पञ्च भागाः** = ஐந்து பாகங்கள்,

**பஞ்ச பா4கா3ஃ**

**भवन्ति** = ஏற்படுகின்றன,

**ப4வந்தி**

**स्वस्वार्धभागेन** = தன் தன் பாதிபாகத்தோடு,

**ஸ்வஸ்வார்ஶ்வபா4கே3ன**

**अन्येभ्यः** = மற்றவைகளிலிருந்து,

**அன்யேப்4யஃ**

**प्राप्तं** = வந்த,

**ப்ராப்தம்**

**भागचतुष्टयम्** = நான்கு பாகங்களை,

**பா4க3 சதுஷ்டயம்**

**संयोज्य** = சேர்த்து,

**ஸம்யோஜ்ய**

**ते** = அந்த,

**தே**

**व्योमादीनि** = ஆகாசம் முதலியவைகள்,

**வ்யோமாதீ3னி**

**यथाक्रमम्** = கிரமமாக,

**யதா²க்ரமம்**

**स्थूलतां** = ஸ்தூலத்தன்மையை,

**ஸ்தூ²லதாம்**

**यान्ति** = அடைகின்றன.

**யாந்தி**

ஆகாசம் முதலானதுகளில் ஒவ்வொரு பூதமாக எடுத்துக் கொண்டு அதை சரிபாகமாகவே இரண்டு இரண்டாகப் பிரித்து விட்டு, அவ்விரண்டு பாகங்களில் முதலாவதை தனியாக வைத்து விட்டு, இரண்டாவது பாகத்தை நான்காகப் பிரித்து பிறகு அந்த நான்கு பாகங்களிலிருந்து ஒவ்வொன்றுக எடுத்து தனியாக வைக்கப் பட்டிருக்கும் முதலாவது பாதி பாகத்துடன், தன் பாதி நீங்கலாக, நன்குகலந்து விடவேண்டியது. அப்படிச் செய்வதினுல் ஆகாசம் முதலிய பூதங்கள் ஒவ்வொன்றி லுமே ஐந்து பாகங்கள் ஏற்பட்டு விடும். தன் தன் பாதிபாகத்துடன் மற்ற நான்கு பூதங்களிலிருந்து கிடைக்கும் நான்கு பாகங்களையும் நன்கு சேர்க்கும் போது ஆகாசம் முதலியவை கிரமமாக ஸ்தூலத்தன்மையை அடைகின்றன. உதாஹரணமாக ஆகாச பூதத்தை எடுத்துக் கொள்வோம். ஸூக்ஷ்மமான ஆகாசத்தை ஸமபாகமாக இரண்டாகப் பிரிக்க வேண்டும். ஒரு பாதியை தனியாக வைத்து விட்டு மற்றெரு பாதியை நான்கு அரைக்கால் பாகங்களாக பிரித்து ஒரு அரைக்கால் பங்கை வாயுவிலும் இரண்டாவதை தேஜஸ்ஸிலும் மூன்றுவதை ஜலத்திலும், நான்காவது அரைக்கால் பாகத்தை பிருதிவியிலும் சேர்த்து விடவேண்டும். இவ்வாறே மற்ற நான்கு பூதங்களிலும் செய்யவேண்டும். இதனுல் ஆகாசத்தில் அதனுடைய அம்சம் அரைப்பங்கும் மற்ற வாயு முதலான நான்கு பூதங்களின் அரைக்கால் அரைக்கால் பங்கும் சேர்ந்து ஒரு முழு ஆகாசம் ஆகிறது. இதுபோலவே ஒவ்வொரு பூதத்திலும் அததன் பங்கு அரையும் மற்ற நான்கு பூதங்களின் 4 அரைக்கால் அம்சங்களும் சேர்ந்து அரையும் உள்ளது இவ்வாறு ஒவ்வொரு ஸூக்ஷ்ம பூதத்திலும் மற்ற பூதங்களின் அம்சங்கள் சேருவதால் அவை ஸ்தூல பூதங்களாகின்றன. மற்ற பூதங்களின் அம்சங்கள் இருந்தபோதிலும் அரைப்பங்கு இருப்பதைக்கொண்டு அந்தந்தப் பெயர் ஏற்பட்டுள்ளது. **(398-400)**

(**அவதாரிகை**) சாந்தோக்ய உபநிஷத்தில் தேஜஸ், அப்பு, அன்னம் என்று மூன்று பூதங்கள் தான் கண்டிருக்கிறது அம்மூன்றுக்குள் தான் கலப்பும், த்ரிவ்ருத் கரணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க ஆகாசத்தையும் வாயுவை யும் சேர்த்துக் கொண்டு ஐந்து பூதங்களாக வைத்துக் கொண்டு பஞ்சீகரணம் என்று சொல்வது நியாயமாவென்று கேட்கக்கூடியதால், அதற்கு ஸமாதானத்தை இங்கே ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறுர். வேதம், பிரத்யக்ஷம், அனுமானம் ஆகிய மூன்று பிரமாணங்களும் இந்த பஞ்சீகரண விஷயமாய் இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டுகிறுர்: -

**अमुष्य पञ्चीकरणस्याप्रामाण्यं न शङ्क्यताम् ।**
**उपलक्षणमस्यापि तत् त्रिवृत्करणश्रुतिः ॥ ४०१ ॥**

**அமுஷ்ய பஞ்சீகரணஸ்யாப்ராமாண்யம் ந ஶங்க்யதாம் ।**
**உபலக்ஷணமஸ்யாபி தத் த்ரிவ்ருத்கரணஶ்ருதிஃ ॥ 401 ॥**

**अमुष्य** = இந்த,
**அமுஷ்ய**
**पञ्चीकरणस्य** = பஞ்சீகரணத்திற்கு,
**பஞ்சீகரணஸ்ய**
**अप्रामाण्यं** = பிரமாணமில்லாத்தன்மை,
**அப்ராமாண்யம்**
**न शङ्क्यताम्** = கேட்கப்படவேண்டாம்,
**ந ஶங்க்யதாம்**
**तत् त्रिवृत्करणश्रुतिः** = அந்த த்ரிவ்ருத்கரணச்ருதி,
**தத் த்ரிவ்ருத்கரணஶ்ருதிஃ**
**अस्यापि** = இந்த பஞ்சீகரணத்திற்கும்,
**அஸ்யாபி**
**उपलक्षणं** = உபலக்ஷணம்.
**உபலக்ஷணம்**

இந்த பஞ்சீகரணம் என்பதற்கு பிரமாணமில்லை என்று நினைக்கக்கூடாது. அந்த த்ரிவ்ருத்கரணத்தைச் சொல்லும் சுருதியே இந்த பஞ்சீகரணத்திற்கு உபலக்ஷணமாகும். இதையும் அங்கு சேர்த்துக் கொள்ளவேண்டும். **(401)**

**पञ्चानामपि भूतानां श्रूयतेऽन्यत्र संभवः ।**
**ततः प्रामाणिकं पञ्चीकरणं मन्यतां बुधैः ॥ ४०२ ॥**

**பஞ்சாநாமபி பூ⁴தாநாம் ஶ்ரூயதே(அ)ன்யத்ர ஸம்ப⁴வஃ ।**
**ததஃ ப்ராமாணிகம் பஞ்சீகரணம் மன்யதாம் பு³தை⁴ஃ ॥ 402 ॥**

**अन्यत्र** = வேறு இடத்தில்,
**அன்யத்ர**
**पञ्चानामपि भूतानां** = ஐந்து பூதங்களுக்கும்,
**பஞ்சாநாமபி பூ⁴தாநாம்**
**संभवः** = உத்பத்தி,
**ஸம்ப⁴வஃ**
**श्रूयते** = கேட்கப்படுகிறது,
**ஶ்ரூயதே**

**ततः** = ஆகையினுல்,

**தத:**

**बुधैः** = அறிவாளிகளால்,

**பு³தை⁴:**

**पञ्चीकरणं** = பஞ்சீகரணமானது,

**பஞ்சீகரணம்**

**प्रामाणिकं** = பிரமாண ஸித்தமாக,

**ப்ராமாணிகம்**

**मन्यतां** = எண்ணப்படட்டும்.

**மன்யதாம்**

சாந்தோக்ய உடநிஷத்தில் சொல்லப்படாமல் போனுலும் தைத்திரீயம் முதலிய உபநிஷத்துக்களில் ஐந்து பூதங்களுக்குமே உத்பத்தி சொல்லப்பட்டிருக் கிறது. ஆகையால் பஞ்சீகரணம் பிரமாண ஸித்தம் தான். **(402)**

(**அவதாரிகை**) பஞ்சீகரணத்தை மறுபடியும் பூர்வபக்ஷி ஆக்ஷேபிக்கிறுன்: -

**प्रत्यक्षादिविरोधः स्यात् अन्यथा क्रियते यदि ।**
**आकाशवाय्वोः धर्मस्तु वह्न्यादौ उपलभ्यते ॥ ४०३ ॥**

**ப்ரத்யக்ஷாதி³விரோத⁴: ஸ்யாத் அன்யதா² க்ரியதே யதி³ ।**
**ஆகாஶவாய்வோ: த⁴ர்மஸ்து வஹ்வயாதௌ³ உபலப்⁴யதே ॥ 403 ॥**

**यथा तथाऽऽकाशवाय्वोः नाग्न्यादेर्धर्म ईक्ष्यते ।**
**अतोऽप्रामाणिकमिति न किंचिदपि चिन्त्यताम् ॥ ४०४ ॥**

**யதா² ததா²(ஆ)காஶவாய்வோ: நாக்³ன்யாதே³ர்த⁴ர்ம ஈக்ஷ்யதே ।**
**அதோ(அ)ப்ராமாணிகமிதி ந கிஞ்சித³பி சிந்த்யதாம் ॥ 404 ॥**

**अन्यथा** = வேறு விதமாக,

**அன்யதா²**

**यदि क्रियते** = செய்யப்படுமானுல்,

**யதி³ க்ரியதே**

**प्रत्यक्षादिविरोधः स्यात्** = பிரத்யக்ஷம் முதலானவற்றிற்கு விரோதம்

**ப்ரத்யக்ஷாதி³விரோத⁴: ஸ்யாத்** ஏற்படும்,

**आकाशवाय्वोः** = ஆகாசத்தினுடையவும் வாயுவினுடையவும்,

**ஆகாஶவாய்வோ:**

**धर्मस्तु** = தர்மமோவெனில்,

**த⁴ர்மஸ்து**

| | | |
|---|---|---|
| **वह्नयादौ**<br>**வஹ்வயாதௌ³** | = | தேஜஸ் முதலியவற்றில், |
| **यथा उपलभ्यते**<br>**யதா² உபலப்⁴யதே** | = | எப்படி காணப்படுகிறதோ, |
| **तथा**<br>**ததா²** | = | அப்படி, |
| **आकाशवाय्वो:**<br>**ஆகாஶவாய்வோ:** | = | ஆகாசத்திலும், வாயுவிலும், |
| **अग्न्यादे**<br>**அக்³ன்யாதே³** | = | தேஜஸ் முதலியவற்றின், |
| **धर्म:**<br>**த⁴ர்ம:** | = | தர்மம், |
| **न ईक्ष्यते**<br>**ந ஈக்ஷ்யதே** | = | காணப்படுகிறதில்லை, |
| **अत:**<br>**அத:** | = | ஆகையால், |
| **अप्रामाणिकं**<br>**அப்ராமாணிகம்** | = | ப்ராமாணிகமல்ல, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **किंचिदपि**<br>**கிஞ்சித³பி** | = | கொஞ்சமும், |
| **न चिन्त्यताम्**<br>**ந சிந்த்யதாம்** | = | எண்ணவேண்டாம். |

வேறுவிதமாக அதாவது பஞ்சீகரணம் செய்தால் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படும் எப்படியெனில் ஆகாசம், வாயு இவைகளின் தர்மம் (இடம் தருவது, அசைவது என்பது) அக்னி முதலியவைகளில் காணப்படு கிறது போல் ஆகாசம். வாயு இவைகளில் அக்னி முதலானவைகளின் தர்மம் (உஷ்ண பிரகாசம், திரவமாயிருத்தல், வாஸனை இவைகள்) காணப்படவில்லை. இந்த காரணத்தைக்கொண்டு பஞ்சீகரணம் பிரமாணமற்ற தென்று கொஞ்சமேனும் நினைக்கக் கூடாது. **(403-404)**

**(அவதாரிகை)** ஸமாதானம் கூறுகிறார்: -

**खांशव्याप्तिश्च खव्याप्ति: विद्यते पावकादिषु ।**
**तेनोपलभ्यते शब्द: कारणस्यातिरेकत: ॥ ४०५ ॥**

காº²ம்ஶவ்யாப்திஶ்ச க²வ்யாப்தி: வித்³யதே பாவகாதி³ஷு ।
தேனோபலப்⁴யதே ஶப்³த³: காரணஸ்யாதிரேகத: ॥ 405 ॥

तथा नभस्वतो धर्मोऽप्यग्न्यादौ उपलभ्यते ।
न तथा विद्यते व्याप्तिः वन्ह्यादेः खनभस्वतोः ॥ ४०६ ॥

ததா² நப⁴ஸ்வதோ த⁴ர்மோ(அ)ப்யக்³ன்யாதௌ³ உபலப்⁴யதே ।
ந ததா² வித்³யதே வ்யாப்தி: வன்ஹ்யாதே³: க²னப⁴ஸ்வதோ: ॥ 406 ॥

सूक्ष्मत्वात् अंशकव्याप्तेः तद्धर्मो नोपलभ्यते ।
कारणस्यानुरूपेण कार्यं सर्वत्र दृश्यते ॥ ४०७ ॥

ஸூக்ஷ்மத்வாத் அம்ஶகவ்யாப்தே: தத்³த⁴ர்மோ நோபலப்⁴யதே ।
காரணஸ்யானுரூபேண கார்யம் ஸர்வத்ர த்³ருஶ்யதே ॥ 407 ॥

तस्मात् प्रामाण्यमेष्टव्यं बुधैः पञ्चीकृतेरपि ॥ ४०८ ॥

தஸ்மாத் ப்ராமாண்யமேஷ்டவ்யம் பு³தை⁴: பஞ்சீக்ருதேரபி ॥ 408 ॥

पावकादिषु = தேஜஸ் முதலியவற்றில்,
பாவகாதி³ஷு

खांशव्याप्तिः = ஆகாசத்தினுடைய அம்ச வியாப்தியும்,
கா²ம்ஶவ்யாப்திஶ்:

खव्याप्तिश्च = ஆகாசத்தின் வியாப்தியும்,
க²வ்யாப்திஶ்ச

विद्यते = இருக்கிறது,
வித்³யதே

तेन = அதனுல்,
தேன

अतिरेकतः = அதிகமாக,
அதிரேகத:

कारणस्य = காரணத்தின்,
காரணஸ்ய

शब्दः = சப்தம்,
ஶப்³த³:

उपलभ्यते = காணப்படுகிறது,
உபலப்⁴யதே

तथा = அவ்விதம்,
ததா²

नभस्वत: = வாயுவின்,
நப4ஸ்வத:

धर्मोऽपि = தர்மமும்,
த4ர்மோ(அ)பி

अग्न्यादौ = தேஜஸ் முதலியவற்றில்,
அக்3ன்யாதௌ3

उपलभ्यते = காணப்படுகிறது,
உபலப்4யதே

तथा = அதுபோல,
ததா2

खनभस्वतो: = ஆகாசத்திலுல் வாயுவிலும்,
க2நப4ஸ்வதோ:

वन्ह्यादे: = தேஜஸ் முதலியவற்றின்,
வன்ஹ்யாதே3:

व्याप्ति: = வியாப்தி,
வ்யாப்தி:

न विद्यते = இல்லை,
ந வித்3யதே

अंशकव्याप्ते: = சிறு அம்சமான அரைக்கால் பாகத்தின வியாப்தி,
அம்ஶகவ்யாப்தே:

सूक्ष्मत्वात् = ஸூக்ஷ்மமாக இருப்பதால்,
ஸூக்ஷ்மத்வாத்

तद्धर्म: = அவைகளின் தர்மம்,
தத்3த4ர்ம:

न उपलभ्यते = காணப்படுகிறதில்லை,
ந உபலப்4யதே

कारणस्य अनुरूपेण = காரணத்திற்கு அநுரூபமாகத்தான்,
காரணஸ்ய அனுரூபேண

सर्वत्र = எங்கும்,
ஸர்வத்ர

कार्यं = காரியம்,
கார்யம்

दृश्यते = காணப்படுகிறது,
த்3ருஶ்யதே

तस्मात् = ஆகையால்,
தஸ்மாத்

**पञ्चीकृतेरपि** = பஞ்சீகரணத்திற்கும்,
**பஞ்சீக்ருதேரபி**

**प्रामाण्यं** = ப்ராமாணியமானது,
**ப்ராமாண்யம்**

**बुधैः** = வித்வான்களால்,
**பு³தை⁴:**

**एष्टव्यं** = ஒப்புக்கொள்ளத்தக்கது.
**ஏஷ்டவ்யம்**

ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து தேஜஸ், தேஜஸ்ஸிலிருந்து ஜலம், ஜலத்திலிருந்து பிருதிவி என்ற கிரமத்தில் பஞ்சபூத ஸிருஷ்டி ஏற்பட்டிருக்கிறது. ஆகவே முன் உள்ள பூதங்கள் காரணமாகவும் பின் உள்ள பூதங்கள் காரியமாகவும் ஆகின்றன. காரண ஸ்வரூபத்திற்கே காரியத்தில் வியாப்தி உண்டு. பஞ்சீசரணப்ரக்ரியையால் தேஜஸ் முதலியவற்றில் ஆகாச வாயுக்களின் அம்சங்களுக்கும், காரணமாயிருப்பதால் ஆகாசவாயு ஸ்வரூபங்களுக்கும் வியாப்தி உண்டு. அதனுல் ஆகாச வாயுக்களின் தர்மங்கள் தேஜஸ் முதலியவற்றில் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. தேஜஸ் முதலியவை ஆகாச வாயுக்களுக்கு காரணமாக இல்லாததால் ஆகாச வாயுக்களில் தேஜஸ் முதலான பூதங்களின் வியாப்தி கிடையாது. பஞ்சீகரண ப்ரக்ரியையால் அம்சவ்யாப்தி மட்டும் தான் உண்டு. ஆகாசவாயுக்களில் தேஜஸ் முதலியவற்றின் சிறு அம்சம் அதாவது அரைக்கால் பாகம் இருந்த போதிலும் அது ஸூக்ஷ்மமானதால் ஆகாச வாயுக்களில் தேஜஸ் முதலியவற்றின் தர்மங்கள் ஸ்பஷ்டமாகத் தெரிவதில்லை காரண தர்மம் தான் காரியத்தில் காணப்படும். ஆகவே பிரத்யக்ஷ விரோதமில்லாததால் பஞ்சீகரணம் ப்ரமாணிகம் தான். **(405-408)**

(**அவதாரிகை**) இவ்விதம் பஞ்சீகரண பிரக்ரியை சாஸ்திர ஸம்மதம் தான் என்று காட்டிவிட்டு, பஞ்சீகிருதமான ஒவ்வொரு பூதத்திற்கும் ஏற்பட்ட குணங்களையும், அவைகளை கிரஹிக்கும் இந்திரியங்களையும், அவைகள் ஏன் அவைகளை கிரஹிக்கின்றன என்பதையும், அந்தந்த இந்திரியங்களை சக்தியுள்ளவைகளாகச் செய்கிற அதிஷ்டான தேவதைகள் யார் யார் என்றும் விஸ்தாரமாக வர்ணிக்கிறுர்:-

**अनेनोद्भुत गुणकं भूतं वक्ष्येऽवधारय ।**
**शब्दैकगुणं आकाशं शब्दस्पर्शगुणोऽनिलः ॥ ४०९ ॥**

**அனேனோத்³பு⁴த கு³ணகம் பூ⁴தம் வக்ஷ்யே(அ)வதா⁴ரய ।**
**ஶப்³தை³ககு³ணம் ஆகாஶம் ஶப்³த³ஸ்பர்ஶகு³ணோ(அ)னிலः ॥ 409 ॥**

**तेजः शब्दस्पर्शरूपैः गुणवत् कारणक्रमात् ।**
**आपः चतुर्गुणाः शब्दस्पर्शरूपरसैः क्रमात् ॥ ४१० ॥**

**தேஜः ஶப்³த³ஸ்பர்ஶரூபைः கு³ணவத் காரணக்ரமாத் ।**
**ஆபः சதுர்கு³ணாः ஶப்³த³ஸ்பர்ஶரூபரஸைः க்ரமாத் ॥ 410 ॥**

**एतैश्चतुर्भिर्गन्धेन सह पञ्चगुणा मही ।**

**ஏதைஶ்சதுர்பி⁴ர்க³ந்தே⁴ன ஸஹ பஞ்சகு³ணா மஹீ ।**

| | | |
|---|---|---|
| **अनेन**<br>**அனேன** | = | இந்த பஞ்சீகரணத்தால், |
| **उद्भुत गुणकं**<br>**உத்³பு⁴த கு³ணகம்** | = | ஸ்பஷ்டமாக உண்டான குனங்களுள்ள, |
| **भूतं**<br>**பூ⁴தம்** | = | பூதத்தைப்பற்றி, |
| **वक्ष्ये**<br>**வக்ஷ்யே** | = | சொல்கிறேன், |
| **अवधारय**<br>**அவதா⁴ரய** | = | கவனித்துககேள், |
| **शब्दैकगुणं**<br>**ஶப்³தை³ககு³ணம்** | = | சப்தம் என்ற ஒரே குணமுள்ளது, |
| **आकाशं**<br>**ஆகாஶம்** | = | ஆகாசம், |
| **अनिलः**<br>**அனிலः** | = | வாயு, |
| **शब्दस्पर्शगुणः**<br>**ஶப்³த³ஸ்பர்ஶகு³ணः** | = | சப்தம், ஸ்பர்சம் என்ற இருகுணங்களுள்ளது, |
| **कारणक्रमात्**<br>**காரணக்ரமாத்** | = | காரணரக்ரமத்திஞல், |
| **तेजः**<br>**தேஜः** | = | தேஜஸ், |
| **शब्दस्पर्शरूपैः**<br>**ஶப்³த³ஸ்பர்ஶரூபைः** | = | சப்தம், ஸ்பர்சம், ரூபம் இவைகளால், |
| **गुणवत्**<br>**கு³ணவத்** | = | (மூன்று) குணங்களுடன் கூடியது, |
| **क्रमात्**<br>**க்ரமாத்** | = | கிரமமாக, |
| **आपः**<br>**ஆபः** | = | ஜலம், |
| **शब्दस्पर्शरूपरसैः**<br>**ஶப்³த³ஸ்பர்ஶரூபரஸைः** | = | சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் இவைகளால், |
| **चतुर्गुणाः**<br>**சதுர்கு³ணாः** | = | மூன்று குணங்களுள்ளவை, |

| | | |
|---|---|---|
| **एतैः** ஏதை꞉ | = | இந்த, |
| **चतुर्भिः** சதுர்பி⁴꞉ | = | நான்கு குணங்களோடும், |
| **गन्धेन** க³ந்தே⁴ன | = | வாசனையோடும், |
| **सह** ஸஹ | = | கூட, |
| **मही** மஹீ | = | பூமி, |
| **पञ्चगुणा** பஞ்சகு³ணா | = | ஐந்து குணங்களுள்ளது. |

இந்த பஞ்சீகரணத்தினுல் ஸ்பஷ்டமாக உண்டான குணத்தோடு கூடிய பூதத்தைப்பற்றிச் சொல்கின்றேன். கவனமாய்க் கேள். சப்தமென்ற ஒரே குணமுள்ளது ஆகாசம். சப்தம், ஸ்பர்சம் என்ற இரண்டு குணங்களுடையது வாயு. காரணக் கிரமத்தையனுசரித்து சப்தம், ஸ்பர்சம், ரூபம் என்ற மூன்று குணங்களுடன் கூடியது தேஜஸ். சப்தம், ஸ்பர்சம், ரூபம் ரஸம் என்பவைகளால் ஜலம் நான்கு குணமுள்ளதாகிறது. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து குணங்களுள்ளதாக பிருத்வீ இருக்கிறது. **(409-411)**

## आकाशांशतया श्रोत्रं शब्दं गृह्णाति तद्गुणम् ॥ ४११ ॥

**ஆகாஶாம்ஶதயா ஶ்ரோத்ரம் ஶப்³த³ம் க்³ருஹ்ணாதி தத்³கு³ணம் ॥ 411 ॥**

## त्वक् मारुतांशकतया स्पर्शं गृह्णाति तद्गुणम् ।
## तेजोंशकतया चक्षुः रूपं गृह्णाति तद्गुणम् ॥ ४१२ ॥

**த்வக் மாருதாம்ஶகதயா ஸ்பர்ஶம் க்³ருஹ்ணாதி தத்³கு³ணம் ।**
**தேஜோம்ஶகதயா சக்ஷு꞉ ரூபம் க்³ருஹ்ணாதி தத்³கு³ணம் ॥ 412 ॥**

## अबंशकतया जिह्वा रसं गृह्णाति तद्गुणम् ।
## भूम्यंशकतया घ्राणं गन्धं गृह्णाति तद्गुणम् ॥ ४१३ ॥

**அப³ம்ஶகதயா ஜிஹ்வா ரஸம் க்³ருஹ்ணாதி தத்³கு³ணம் ।**
**பூ⁴ம்யம்ஶகதயா க்⁴ராணம் க³ந்த⁴ம் க்³ருஹ்ணாதி தத்³கு³ணம் ॥ 413 ॥**

| | | |
|---|---|---|
| **आकाशांशतया** ஆகாஶாம்ஶதயா | = | ஆகாசத்தின் அம்சமாக இருப்பதால், |
| **श्रोत्रं** | = | காது, |

**ஶ்ரோத்ரம்**

**तद्गुणम्** = அந்த ஆகாசத்தின் குணமான,

**தத்3கு3ணம்**

**शब्दं** = சப்தத்தை,

**ஶப்3த3ம்**

**गृह्णाति** = கிரஹிக்கிறது,

**க்3ருஹ்ணாதி**

**त्वक्** = த்வகிந்திரியம்,

**த்வக்**

**मारुतांशकतया** = வாயுவின் அம்சமானதால்,

**மாருதாம்ஶகதயா**

**तद्गुणम्** = அந்த வாயுவின் குணமான,

**தத்3கு3ணம்**

**स्पर्शं** = ஸ்பர்சத்தை,

**ஸ்பர்ஶம்**

**गृह्णाति** = அறிகிறது,

**க்3ருஹ்ணாதி**

**तेजोंशकतया** = தேஜஸ்ஸின் அம்சமாக இருப்பதால்,

**தேஜோம்ஶகதயா**

**चक्षुः** = கண்,

**சக்ஷுः**

**तद्गुणम्** = அந்த தேஜஸ்ஸின் குணமான,

**தத்3கு3ணம்**

**रूपं** = ரூபத்தை,

**ரூபம்**

**गृह्णाति** = அறிகிறது

**க்3ருஹ்ணாதி**

**अबंशकतया** = ஜலத்தின் அம்சமாக இருப்பதால்,

**அப3ம்ஶகதயா**

**जिह्वा** = நாக்கு,

**ஜிஹ்வா**

**तद्गुणम्** = அந்த ஜலத்தின் குணமான,

**தத்3கு3ணம்**

**रसं** = ரஸத்தை,

**ரஸம்**

**गृह्णाति** = கிரஹிக்கிறது,

**க்3ருஹ்ணாதி**

**भूम्यंशकतया** = பூமியின் அம்சமானதால்,
**பூ⁴ம்யம்ஶகதயா**
**घ्राणं** = கிராணேந்திரியம்,
**க்⁴ராணம்**
**तद्गुणम्** = அந்த பூமியின் குணமான,
**தத்³கு³ணம்**
**गन्धं** = வாஸனையை,
**க³ந்த⁴ம்**
**गृह्णाति** = கிரஹிக்கிறது,
**க்³ருஹ்ணாதி**

ஆகாச பூதத்திலிருந்து உண்டானது காது என்ற சுரோத்ரேந்திரியம். அதனுல் சுரோத்ரம் ஆகாசத்தின் குணமான சப்தத்தை அறிகிறது. வாயுவிலிருந்து உண்டா யிருப்பதால் த்வகிந்திரியம் வாயுவின் குணமான ஸ்பர்சத்தையும் தேஜஸ்ஸிலிரு ந்து உண்டான கண் தேஜோகுணமான ரூபத்தையும் ஜலத்திலிருந்து உண்டான ஜிஹ்வேந்திரியம் ஜலத்தின் குணமான ரஸத்தையும் பிருதிவியிலிருந்து உண்டான க்ராணேந்திரியம் பிருதிவியின் குணமான கந்தத்தையும் அறிகிறது. **(411-413)**

(**அவதாரிகை**) இவ்விதமாக ஞானேந்திரியங்களின் வியாபாரங்களை சொல்லி விட்டு, அதே மாதிரி கர்மேந்திரியங்களின் வியாபாரங்களையும் வரிசையாகச் சொல்கிறுர்: -

**करोति खांशकतया वाक् शब्दोच्चारणक्रियाम् ।**
**वाय्शकतया पादौ गमनादिक्रियापरौ ॥ ४१४ ॥**

**கரோதி கா²ம்ஶகதயா வாக்ஶப்³தோ³ச்சாரணக்ரியாம் ।**
**வாய்வம்ஶகதயா பாதௌ³ க³மநாதி³க்ரியாபரௌ ॥ 414 ॥**

**तेज शकतया पाणी वन्द्याद्यर्चनतत्परौ ।**
**जलांशकतया उपस्थो रेतोमूत्रविसर्गकृत् ॥ ४१५ ॥**

**தேஜோம்ஶகதயா பாணீ வஹ்ன்யாத்³யர்சனதத்பரௌ ।**
**ஜலாம்ஶகதயோபஸ்தோ² ரேதோமூத்ரவிஸர்க³க்ருத் ॥ 415 ॥**

**भूम्यंशकतया पायुः कठिनं मलमुत्सृजेत् ।**
**பூ⁴ம்யம்ஶகதயா பாயுः கடி²னம் மலமுத்ஸ்ருஜேத் ।**

**खांशकतया** = ஆகாசத்தின அம்சமானதால்,
**கா²ம்ஶகதயா**

கள், பருமன் முதயை பரிமாணம் நீலம் முதலான நிறம், அளவு, ஜாதி ஆசிரமம் முதலான வியவஹாரம் எல்லாம் சரீரத்திற்குத்தான் காணப்படுகின்றன. அந்த மாறுதல்களை யெல்லாம் ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருக்கிற ஆத்மாவிற்கு இவை கிடையாது. **(460)**

**अस्मिन्नात्मन्यनात्मत्वं अनात्मन्यात्मतां पुनः ।**
**विपरीततयाऽध्यस्य संसरन्ति विमोहतः ॥ ४६१ ॥**

**அஸ்மின்னுத்மன்யனுத்மத்வம் அனுத்மன்யாத்மதாம் புனः ।**
**விபரீததயா(அ)த்⁴யஸ்ய ஸம்ஸரந்தி விமோஹதः ॥ 461 ॥**

**अस्मिन् आत्मनि** = இந்த ஆத்மாவில்,
**அஸ்மின் ஆத்மனி**
**अनात्मत्वं** = அநாத்மாவாக இருக்கும் தன்மையையும்,
**அனுத்மத்வம்**
**अनात्मनि** = அநாத்மாவில்,
**அனுத்மனி**
**आत्मतां पुनः** = ஆத்மாவாக இருக்கும் தன்மையையும்,
**ஆத்மதாம் புனः**
**विपरीततः** = விபரீதமாக,
**விபரீததः**
**विमोहतः** = மோஹத்தால்,
**விமோஹதः**
**अध्यस्य** = ஆரோபித்து,
**அத்⁴யஸ்ய**
**संसरन्ति** = ஸ்மஸாரத்தில் உழலுகிறுர்கள்.
**ஸம்ஸரந்தி**

முன் சுலோகத்தில் சொல்லியபடி ஆத்மாவில் ஒருவித தர்மமும் இல்லாமலிருந்தும் அக்ஞான மயக்கத்தால் உள்ளது உள்ளபடி தெரிந்து கொள்ளாமல் விபரீதமாக ஆத்மாவை அநாத்மாவாகவும், அநாத்மாவை ஆத்மாவாகவும் எண்ணுவதுடன் அநாத்ம தர்மங்களை ஆத்மாவிலும் ஆத்ம தர்மங்களை அநாத்மாவிலும் இருப்பதாக நினைத்துக்கொண்டு அதனுல் வீணுக ஸம்ஸார ஸாகரத்தில் உழலுகிறுர்கள். **(461)**

**भ्रान्त्या मनुष्योऽहमहं द्विजोऽहं**
**तज्ज्ञोऽहमज्ञोऽहमतीव पापी ।**
**भ्रष्टोऽस्मि शिष्टोऽस्मि सुखी च दुःखी**
**त्येवं विमुह्यात्मनि कल्पयन्ति ॥ ४६२ ॥**

**ப்⁴ராந்த்யா மனுஷ்யோ(அ)ஹமஹம் த்³விஜோ(அ)ஹம்**
**தஜ்ஜ்ஞோ(அ)ஹமஜ்ஞோ(அ)ஹமதீவ பாபீ ।**
**ப்⁴ரஷ்டோ(அ)ஸ்மி ஶிஷ்டோ(அ)ஸ்மி ஸுகீ² ச து³:கீ²**
**த்யேவம் விமுஹ்யாத்மனி கல்பயந்தி ॥ 462 ॥**

| | | |
|---|---|---|
| **भ्रान्त्या** ப்⁴ராந்த்யா | = | விபரீத ஞானத்தால், |
| **विमुह्य** விமுஹ்ய | = | மயக்கமடைந்து, |
| **अहं** அஹம் | = | நான், |
| **मनुष्यः** மனுஷ்ய: | = | மனிதன், |
| **अहं द्विजः** அஹம் த்³விஜ: | = | நான் த்விஜன், |
| **अहं** அஹம் | = | நான், |
| **तज्ज्ञः** தஜ்ஜ்ஞ: | = | அதை அறிந்தவன், |
| **अहं** அஹம் | = | நான், |
| **अज्ञः** அஜ்ஞ: | = | அறியாதவன், |
| **अहं** அஹம் | = | நான், |
| **अतीव पापी** அதீவ பாபீ | = | மிகவும் பாபி, |
| **भ्रष्टोऽस्मि** ப்⁴ரஷ்டோ(அ)ஸ்மி | = | ப்ரஷ்டனாக இருக்கிறேன், |
| **शिष्टोऽस्मि** ஶிஷ்டோ(அ)ஸ்மி | = | சிஷ்டனாக இருக்கிறேன், |
| **सुखी च** ஸுகீ² ச | = | ஸுகியாகவுமிருக்கிறேன், |
| **दुःखी** து³:கீ² | = | துக்கமுள்ளவன், |
| **इत्येवं** இத்யேவம் | = | என்று இம்மாதிரியாக, |

**आत्मनि** = ஆத்மாவில்,

**ஆத்மனி**

**कल्पयन्ति** = ஆரோபம் செய்கிறுர்கள்.

**கல்பயந்தி**

ஆத்மாவை அநாத்மாவாசவும் அநாத்மாவை ஆத்மாவாகவும் காண்பது ப்ராந்தி, விபரீத ஞானம். இது மோஹத்தினுல் உண்மையை அறியாததால் ஏற்படு கிறது. விபரீத ஞானத்தால் ஆத்மாவை மனுஷ்யனுகவும், பிராமணனுகவும் அறிந்தவனுகவும், அறியாதவனுகவும் பாபியாகவும் ஸ்தாசார ஸம்பன்னனுகவும், ஆசார மில்லாதவனுகவும் ஸுகியாகவும் துக்கியாகவும் இன்னும் பற்பல விதமாகக் காண்கிறுர்கள். இவைகள் ஆத்மாவில் இல்லாவிட்டாலும் அறியாமையால் அதில் சுமத்துகிறுர்கள். **(462)**

**अनात्मनो जन्मजरामृतिक्षुधा तृष्णासुखक्लेशमयादिधर्मान् ।**
**विपर्ययेण ह्यतथाविधेऽस्मिन्नारोपयन्त्यात्मनि बुद्धिदोषात् ॥ ४६३ ॥**

**அனுத்மனே ஜன்மஜராம்ருதிக்ஷுதா⁴**
**த்ருஷ்ணுஸுக²க்லேஶமயாதி³த⁴ர்மான் ।**
**விபர்யயேண ஹ்யதததா²விதே⁴(அ)ஸ்மி**
**ந்ஞரோபயந்த்யாத்மனி பு³த்³தி⁴தோ³ஷாத் ॥ 463 ॥**

**अनात्मनः** = அநாத்மாவினுடைய,

**அனுத்மன:**

**जन्मजरामृतिक्षुधा** = பிறப்பு, மூப்பு, மரணம், பசி, தாகம்,

**तृष्णासुखक्लेशमयादिधर्मान्** ஸுகம், துன்பம், பயம் முதலான தர்மங்களை,

**अतथाविधे** = அப்படியில்லாத,

**அதததா²விதே⁴**

**अस्मिन् आत्मनि** = இந்த ஆத்மாவில்,

**அஸ்மின் ஆத்மனி**

**बुद्धिदोषात्** = அந்தக்கரண தோஷத்தால்,

**பு³த்³தி⁴தோ³ஷாத்**

**विपर्ययेण** = மாறுதலாக,

**விபர்யயேண**

**आरोपयन्ति** = ஏற்றுகிறுர்கள்.

**ஆரோபயந்தி**

பிறப்பு, ஜரை, மரணம், பசி, தாஹம், ஸுகம், துக்கம், பயம் முதலான தர்மங்கள் அனுத்மாக்களைச் சேர்ந்தவை. ஆத்மாவில் இவை கிடையவே கிடையாது

இப்படி இருந்தும் புத்தி தோஷத்தால் விபரீதமாக இவைகள் ஆத்மாவிலிருப்பதாக எண்ணுகிறார்கள். **(463)**

**भ्रान्त्या यत्र यदध्यासस्तत्कृतेन गुणेन वा ।**
**दोषेणाप्यणुमात्रेण स न संबध्यते क्वचित् ॥ ४६४ ॥**

**ப்⁴ராந்த்யா யத்ர யத³த்⁴யாஸஸ்தத்க்ருதேன கு³ணேன வா।**
**தோ³ஷேணாப்யணுமாத்ரேண ஸ ந ஸம்ப³த்⁴யதே க்வசித் ॥ 464 ॥**

**किं मरुन्मृगतृष्णाम्बुपूरेणार्द्रत्वमृच्छति ।**
**दृष्टिसंस्थितपीतेन शङ्खः पीतायते किमु ॥ ४६५ ॥**

**கிம் மருன்ம்ருக³த்ருஷ்ணாம்பு³பூரேணார்த்³ரத்வம்ருச்ச²தி।**
**த்³ருஷ்டிஸம்ஸ்தி²தபீதேன ஶங்க²: பீதாயதே கிமு ॥ 465 ॥**

**बालकल्पितनैल्येन व्योम किं मलिनायते ।**

**பா³லகல்பிதநைல்யேன வ்யோம கிம் மலினாயதே ।**

**यत्र** = எங்கு,
**யத்ர**
**भ्रान्त्या** = ப்ராந்தியால்,
**ப்⁴ராந்த்யா**
**यदध्यासः** = எதன் அத்யாஸம் ஏற்படுகிறதோ,
**யத³த்⁴யாஸ:**
**तत्कृतेन** = அதனால் ஏற்பட்ட,
**தத்க்ருதேன**
**गुणेन** = குணத்தோடும்,
**கு³ணேன**
**वा** = அல்லது,
**வா**
**दोषेणपि** = தோஷத்துடனும்,
**தோ³ஷேணபி**
**अणुमात्रेण** = கொஞ்சம்கூட,
**அணுமாத்ரேண**
**सः** = அது,
**ஸ:**
**क्वचित्** = ஒரு இடத்திலும்,
**க்வசித்**

| | | |
|---|---|---|
| **न संबध्यते**<br>**ந ஸம்ப³த்⁴யதே** | = | சேருவதில்லை. |
| **मरुः**<br>**மருঃ** | = | பாலைவனபூமி, |
| **मृगतृष्णाम्बुपूरेण**<br>**ம்ருக³த்ருஷ்ணாம்பு³பூரேண** | = | கானல் நீர் ப்ரவாஹத்தால், |
| **आर्द्रत्वं**<br>**ஆர்த்³ரத்வம்** | = | ஈரமாக இருக்கும் தன்மையை, |
| **किं ऋच्छति**<br>**கிம் ருச்ச²தி** | = | அடைகிறதா? |
| **दृष्टिसंस्थितपीतेन**<br>**த்³ருஷ்டிஸம்ஸ்தி²தபீதேன** | = | கண்ணில் இருக்கும் மஞ்சள் நிறத்தால், |
| **शङ्खः**<br>**ஶங்க²ঃ** | = | சங்கம், |
| **किमु पीतायते**<br>**கிமு பீதாயதே** | = | மஞ்சள் நிறமுள்ளதாகிவிடுகிறதா? |
| **बालकल्पितनैल्येन**<br>**பா³லகல்பிதனைல்யேன** | = | சிறுவனுல் பிராந்தியால் கல்பிக்கப்பட்ட நீல நிறத்தால், |
| **व्योम**<br>**வ்யோம** | = | ஆகாசம், |
| **किं मलिनायते**<br>**கிம் மலினுயதே** | = | அழுக்கடைந்ததாக ஆகுமா? |

பிராந்தியினால் எதனிடத்தில் எது வைக்கப்படுகிறதோ அதனுல் ஏற்படும் குணத்தினுலாவது தோஷத்தினுலாவது அது கொஞ்சம் கூட எப்பொழுதும் ஸம்பந்தப்படுவது கிடையாது. ப்ராந்தியால் ஒரு வஸ்துவை வேறொரு வஸ்துவாகப் பார்த்த போதிலும் அந்த வேறொரு வஸ்துவில் உள்ள குணமோ தோஷமோ ஒன்றும் அதிஷ்டான வஸ்துவில் ஒட்டுவதில்லை.

பாலைவன பூமியில் ஸூர்யகிரணத்தால் கானல் நீர் பிரவாஹமாக ஓடுவதைக் காண்கிறுன் நீர் இல்லாத விடத்தில் நீரைக் காண்பது பிராந்தி இவன் கண்ணுக்கு நீர் தோன்றினுலும், அந்த நீரால் அந்த பூமி நனையுமா? காமாலை வியாதி உள்ளவன் கண் பித்தத்தால் மஞ்சள் நிறமாக இருக்கும். அவன் கண்ணுக்கு வெளுப்பான சங்கமும் மஞ்சளாகத் தெரியும். ஆனுலும் உண்மையில் சங்கம் மஞ்சள் நிறமாக ஆகிவிடுமா? சிறுவன் பிராந்தியால் ஆகாசத்தில் நீல நிறம் இருப்பதாக எண்ணினுலும் ஆகாசம் நீலமாக ஆகிவிடுமா? ஆகவே பிராந்தியால் ஆரோபிதமான கானல் நீர் பாலைவன பூமியில் கொஞ்சம்கூட ஒட்டுவதில்லை. ஆரோபிதமான மஞ்சள் நிறம் சங்கத்தில் ஒட்டுவதில்லை. ஆகாசத்திலும் நீல நிறம் ஒட்டுவதில்லை. இதுபோலவே

பிராந்தியால் ஆத்மாவை அநாத்மாவாகவும், அநாத்மாவை ஆத்மாவாகவும் பார்த்த போதிலும் ஆத்மதர்மங்கள் அநாத்மாவிலும், அநாத்ம தர்மங்கள் ஆத்மாவிலும் ஒருக்காலும் வராது. **(464-465)**

(**அவதாரிகை**) இவ்வாறு குரு சொல்லிக்கொண்டு வருகையில் ஒரு பதார்த் தத்தை பிராந்தியால் வேறு பதார்த்தமாகப் பார்ப்பதானுல் அதற்கு சில அம்சங்கள் தேவைப்படுகின்றனவே அவையெல்லாம் ஆத்மாநாத்மப்ரமத்தில் இருக்கின்றனவா என்ற விஷயத்தில் சிஷ்யனுக்கு ஸந்தேகம் ஏற்படுகிறது. கிளிஞ்சஃல வெள்ளி யென்று நிஃனக்கும் போது கிளிஞ்சலென்று தெரியாமல் போனுலும் 'இது" என்று முன்னுல் ஏதோ தெரிகிறது. அது மாதிரி ஆத்மா நம் முன்னுல் 'இது' என்றுவது தெரிகிறதா? வெள்ளியென்று இங்கே நிஃனப்பது தவறுயிருந்தாலும் இதற்கு முன் வேறு எங்கேயாவது வாஸ்தவமான வெள்ளியைப் பார்த்திருந்தால்தானே இவ்விடத்தில் வெள்ளி என்ற பிராந்தி ஏற்படும்? வேறு எங்கேயாவது ஜகத் ஸத்யமாக இருந்து அனுபவிக்கப்பட்டிருக்கிறதா? தவிரவும், கிளிஞ்சலுக்கும் வெள் ளிக்கும் பளபளப்பு என்னும் ஸாதிருச்யம் இருப்பதினுல் தானே பிராந்தி ஏற்படு கிறது? அந்த ஸாதிருச்யஞானம் ஏற்படுவதற்கு இரண்டு பதார்த்தங்கஃளயும் முன்னுல் பார்த்திருக்க வேண்டாமா? ஆத்மாவைப் பார்த்ததே கிடையாதே. அப்படி யிருக்க ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் ஸாதிருச்ய ஞானம் எப்படி ஏற்பட முடியும்? அந்த ஞானமில்லாமல் பிராந்தி எப்படி ஏற்படும் மேலும் அநாத்மாவில் ஆத்மாத் யாஸம் எப்படி ஏற்படுகிறது? அதை எப்படி போக்கடிக்கிறது? அக்ஞானம் என்பது ஸமஷ்டி உபாதியாய் ஈசுவரனிடத்திலும் வியஷ்டி உபாதியாய் ஜீவனிடத் திலும் இருக்கும்போது ஜீவனுக்கு மாத்திரம் ஸம்ஸார பந்தம், ஈசுவரனுக்கு அது கிடையாது என்பது எப்படிப்பொருந்தும்? என்றெல்லாம் ஸந்தேஹ மேற்படுவதால் அவைகஃள நிவிருத்தி செய்து கொடுக்கும்படி சிஷ்யன் வினயத்துடன் குருவை பிரார்த்தித்துக் கேட்கிறுன்.: -

**शिष्य:**

**प्रत्यगात्मन्यविषये अनात्माध्याय: कथं प्रभो ॥ ४६६ ॥**

**ஶிஷ்ய:**

**ப்ரத்யகா³த்மன்யவிஷயே அனாத்மாத்⁴யாய: கத²ம் ப்ரபோ⁴ ॥ 466 ॥**

**प्रभो** = ஹே ப்ரபுவே,

**ப்ரபோ⁴**

**अविषये** = அறிவுக்கு கோசரமாக இல்லாத,

**அவிஷயே**

**प्रत्यगात्मनि** = ஆத்மாவில்,

**ப்ரத்யகா³த்மனி**

**अनात्माध्याय:** = அநாத்மாத்யாஸம்,

**அனுத்மாத்⁴யாய:**

**कथं** = எப்படி?

**கத²ம்**

பிரத்யக் ஆத்மா அறிவுக்கு விஷயமாகாது அது பற்றி கொஞ்சமும் அறிந்து கொள்ள முடியாது. அறியப்படாத இந்த ஆத்மாவில் அனாத்மாவின் அத்யாஸம் எப்படி? **(466)**

**पुरो दृष्टे हि विषयेऽध्यस्यन्ति विषयान्तरम् ।**
**तद्दृष्टं शुक्तिरज्ज्वादौ सादृश्याद्यनुबन्धतः॥ ४६७ ॥**

**புரோ த்³ருஷ்டே ஹி விஷயே(அ)த்⁴யஸ்யந்தி விஷயாந்தரம் ।**
**தத்³த்³ருஷ்டம் ஶுக்திரஜ்ஜ்வாதௌ³ ஸாத்³ருஶ்யாத்³யனுப³ந்த⁴த꞉ ॥ 467 ॥**

**पुरः** = தனக்கு முன்னால்,

**புர꞉**

**दृष्टे** = பார்க்கப்பட்ட,

**த்³ருஷ்டே**

**विषये हि** = விஷயத்திலல்லவா,

**விஷயே ஹி**

**विषयान्तरम्** = வேறொரு விஷயத்தை,

**விஷயாந்தரம்**

**अध्यस्यन्ति** = ஆரோபம் செய்கிறார்கள்,

**அத்⁴யஸ்யந்தி**

**दृष्टे** = பார்க்கப்பட்ட,

**த்³ருஷ்டே**

**शुक्तिरज्ज्वादौ** = கிளிஞ்சல், கயிறு முதலியவற்றில்,

**ஶுக்திரஜ்ஜ்வாதௌ³**

**सादृश्याद्यनुबन्धतः** = ஸாத்ருயம் முதலிய ஸம்பந்தத்தால்,

**ஸாத்³ருஶ்யாத்³யனுப³ந்த⁴த꞉**

**तत्** = அந்த அத்யாஸம் ஏற்படுகிறது.

**தத்**

தன் முன்னால் இருக்கும் வஸ்து கண்ணுக்குப் புலப்படா விட்டால் அதில் வேறொரு வஸ்துவின் ஆரோபம் ஏற்படுவதில்லை. இது கிளிஞ்சல், இது கயிறு என்று விசேஷமாகத் தெரியாவிட்டாலும் ஸாமாஸமாக ஏதோ ஒரு வஸ்து இருப்பது தெரியவேணும். அப்படித் தெரிந்த வஸ்துவில் தான் ஆரோபம் ஏற்படுகிறது. ஆத்மாவோ ஒரு விதத்திலும் யாருக்கும் தெரிவதில்லை. மேலும் பளபளப்பு முதலான வெள்ளியின் ஸாத்ருச்யம் கிளிஞ்சலிலும் நீளம் வளைவு முதலான பாம்பின் ஸாத்ருச்யம் கயிற்றிலும் தோன்றுவதால் தான் அத்யாஸம் ஏற்படுகிறது.

அநாத்மாவின் ஸாத்ருச்யம் சிறிதும் ஆத்மாவில் இல்லாததால் எப்படி ஆத்மாவில் அநாத்மாத்யாஸம் ஏற்படும்? **(467)**

**परत्र पूर्वदृष्टस्यावभासः स्मृतिलक्षणः।**
**अध्यासः स कथं स्वामिन् भवेदात्मन्यगोचरे ॥ ४६८ ॥**

**பரத்ர பூர்வத்³ருஷ்டஸ்யாவபா⁴ஸః ஸ்ம்ருதிலக்ஷணः।**
**அத்⁴யாஸः ஸ கத²ம் ஸ்வாமின் ப⁴வேதா³த்மன்யகோ³சரே ॥ 468 ॥**

| | | |
|---|---|---|
| **पूर्वदृष्टस्य** **பூர்வத்³ருஷ்டஸ்ய** | = | முன்னால் பார்க்கப்பட்ட வஸ்துவிற்கு, |
| **परत्र** **பரத்ர** | = | வேறென்றில், |
| **स्मृतिलक्षणः** **ஸ்ம்ருதிலக்ஷணः** | = | நினைவு போன்றதான, |
| **अवभासः** **அவபா⁴ஸः** | = | தோற்றம், |
| **अध्यासः** **அத்⁴யாஸः** | = | அத்யாஸமாகும், |
| **सः** **ஸः** | = | அந்த அத்யாஸம், |
| **स्वामिन्** **ஸ்வாமின்** | = | ஸ்வாமியே! |
| **अगोचरे** **அகோ³சரே** | = | அறிவிற்கு விஷயமாகாத, |
| **आत्मनि** **ஆத்மனி** | = | ஆத்மாவில், |
| **कथं भवेत्** **கத²ம் ப⁴வேத்** | = | எப்படி ஏற்படும்? |

தன் எதிரில் காணப்படும் வஸ்துவானது இதற்கு முன் தன்னால் பார்க்கப் பட்டதும் இப்பொழுது அருகிலில்லாததுமான வேறொரு வஸ்துவாகத் தோன்றுவது தான் அத்யாஸம் என்பது கிளிஞ்சல் தன்முன்னால் கிளிஞ்சலாகத் தோன்ற விட்டாலும் ஸாமான்யமாக இது என்று தெரியவருகிறது. இதற்கு முன்னால் கடைகளில் பார்க்கப்பட்டு இப்பொழுது அருகிலில்லாத வெள்ளியாக தன் முன்னால் தோன்றும் வஸ்துவைக் காண்கிறான். வெள்ளி அருகில் இல்லாததாலும் நேரில் பார்க்காததாலும் இது நினைவு போன்றது என்று சொன்னார். அருகிலில்லாத விஷயத்தை நினைப்பது தான் ஸ்ம்ருதியாகும். இங்கு அருகிலில்லாத வஸ்து மற்றொன்றில் தோன்றுவதால் இதை ஸ்மிருதி என்று கூறமுடியாது. இதனால் தான்

விஷயம் ஸந்நிஹிதமில்லை யென்பதை மட்டும் கொண்டு ஸ்மிருதி போன்றது என்று சொன்னார். முன் ஒரு இடத்தில் கண்ட பொருளையே இப்பொழுது வேறு இடத்தில் காண்பது ப்ரத்யபிஜ்ஞையாகும். அங்கு எதிரில் இருக்கும் விஷயத்தையே காண்கிறான். இங்கு அருகிலில்லாத வஸ்துவைக் காண்பதால் இது ப்ரத்யபிஜ்ஞையு மல்ல ஆகவே இது மித்யா ஞானம் தோற்றம் என்று சொன்னதாலேயே இது பொய் என்று ஏற்படுகிறது இது தான் அத்யாஸ லக்ஷணம் இப்பேற்பட்ட அத்யாஸம் ஒரு பொழுதும் அறியப்படாத ஆத்மாவில் எப்படி ஏற்படும்? **(468)**

## नानुभूतः कदाऽप्यात्माऽननुभूतस्य वस्तुनः ।
## सादृश्यं सिध्यति कथं अनात्मनि विलक्षणे ॥ ४६९ ॥

**நானுபூ⁴த꞉ கதா³(அ)ப்யாத்மா(அ)னனுபூ⁴தஸ்ய வஸ்துன꞉ ।**
**ஸாத்³ருஶ்யம் ஸித்⁴யதி கத²ம் அனாத்மனி விலக்ஷணே ॥ 469 ॥**

**आत्मा** = ஆத்மாவானது,
**ஆத்மா**
**कदापि** = ஒருபொழுதும்,
**கதா³பி**
**न अनुभूतः** = அனுபவிக்கப்பட்டதல்ல,
**ந அனுபூ⁴த꞉**
**अननुभूतस्य** = அனுபவிக்கப்படாத,
**அனனுபூ⁴தஸ்ய**
**वस्तुनः** = ஆத்ம வஸ்துவின்,
**வஸ்துன꞉**
**सादृश्यं** = ஸாத்ருச்யம்,
**ஸாத்³ருஶ்யம்**
**विलक्षणे** = விலக்ஷணமான,
**விலக்ஷணே**
**अनात्मनि** = அநாத்மாவில்,
**அனாத்மனி**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**सिध्यति** = ஸித்திக்கும்?
**ஸித்⁴யதி**

ஆத்மா ஒருபொழுதும் யாராலும் அனுபவிக்கப்பட்டதல்ல. அனுபவிக்கப் படாத ஆத்ம வஸ்துவிற்கு ஸாதிருச்யம் எப்படி? தவிறவும் ஆத்மாவைக் காட்டிலும் நேர்விருத்தமான லக்ஷணத்துடன் கூடிய அனாத்மாவில் ஆத்மாவின் ஸாதிருச்யம் எப்படியிருக்கமுடியும்? **(469)**

**अनात्मन्यात्मताध्यासः कथमेष समागतः।**
**निवृत्तिः कथमेतस्य केनोपायेन सिध्यति ॥ ४७० ॥**

**அனுத்மன்யாத்மதாத்⁴யாஸ: கத²மேஷ ஸமாக³த:।**
**நிவ்ருத்தி: கத²மேதஸ்ய கேனேபாயேன ஸித்⁴யதி ॥ 470 ॥**

**अनात्मनि** = அநாத்மாவில்,
**அனுத்மனி**
**एष** = இந்த ஆத்மாத்யாஸல்,
**ஏஷ**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**समागतः** = வந்தது?
**ஸமாக³த:**
**एतस्य** = இந்த அத்யாஸத்தின்,
**ஏதஸ்ய**
**निवृत्तिः** = நீக்கம்,
**நிவ்ருத்தி:**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**केन उपायेन** = எந்த உபாயத்தால்,
**கேன உபாயேன**
**सिध्यति** = ஸித்திக்கும்?
**ஸித்⁴யதி**

அனுத்மாவில் ஆத்மத்தன்மை விஷயமான இந்த அத்யாஸம் எப்படி வந்தது? எந்த உபாயத்தினுல் எப்படி இந்த அத்யாஸத்திற்கு நிவிருத்தியேற்படும்? **(470)**

**उपाधियोग उभयोः सम एवेशजीवयोः ।**
**जीवस्यैव कथं बन्धो नेश्वरस्यास्ति तत् कथम् ॥ ४७१ ॥**

**உபாதி⁴யோக³ உப⁴யோ: ஸம ஏவேஶஜீவயோ: ।**
**ஜீவஸ்யைவ கத²ம் ப³ந்தோ⁴ நேஶ்வரஸ்யாஸ்தி தத் கத²ம் ॥ 471 ॥**

**ईशजीवयोः उभयोः** = ஈசுவரன், ஜீவன் இருவர்களுக்கும்,
**ஈஶஜீவயோ: உப⁴யோ:**
**उपाधियोगे** = உபாதியின் ஸமபந்தம்,
**உபாதி⁴யோகே³**

**समे एव** = ஸமமாகவே இருக்கும்போது,

**ஸமே ஏவ**

**जीवस्यैव** = ஜீவனுக்கு மட்டும்,

**ஜீவஸ்யைவ**

**बन्धः** = பந்தம்,

**ப³ந்த⁴꞉**

**कथं** = எப்படி?

**கத²ம்**

**ईश्वरस्य** = ஈசுவரனுக்கு,

**ஈஶ்வரஸ்ய**

**तत् कथं नास्ति** = அது ஏன் இல்லை?

**தத் கத²ம் நாஸ்தி**

உபாதி ஸம்பந்தத்தால் தான் ஜீவசைதன்யத்துக்கு பந்தம் ஏற்பட்டிருப்பதாக கூறப்பட்டது. உபாதி ஸம்பந்தம் ஜீவனைப்போல் ஈசுவரனுக்கும் இருக்கிறது. ஜீவனுக்கு சிறிய உபாதி ஈசுவரனுக்குப் பெரிய உபாதி பந்தத்துக்குக் காரணமான உபாதி ஸம்பந்தம் ஜீவன் ஈசுவரன் இருவர்களுக்கும் ஸமமாயிருக்கும்பொழுது ஜீவனுக்கு மட்டும் தான் பந்தம் ஈசுவரனுக்கு பந்தமில்லை என்பது எப்படிப் பொருந்தும்? **(471)**

**एतत् सर्वं दयादृष्ट्या करामलकवत् स्फुटम् ।**
**प्रतिपादय सर्वत्र श्रीगुरो करुणानिधे ॥ ४७२ ॥**

**ஏதத் ஸர்வம் த³யாத்³ருஷ்ட்யா கராமலகவத் ஸ்பு²டம் ।**
**ப்ரதிபாத³ய ஸர்வத்ர ஶ்ரீகு³ரோ கருணாநிதே⁴ ॥ 472 ॥**

**करुणानिधे** = கருணையின் இருப்பிடமான,

**கருணாநிதே⁴**

**श्रीगुरो** = ஶ்ரீகுருவே,

**ஶ்ரீகு³ரோ**

**दयादृष्ट्या** = கருணாகடாக்ஷத்துடன்,

**த³யாத்³ருஷ்ட்யா**

**एतत् सर्वं** = இது எல்லாவற்றையும்,

**ஏதத் ஸர்வம்**

**करामलकवत्** = உள்ளங்கை நெல்லிக்கனிபோல்,

**கராமலகவத்**

**स्फुटम्** = தெளிவாக,

**ஸ்பு²டம்**

**सर्वत्र** = எல்லா அம்சத்திலும்,

**ஸர்வத்ர**

**प्रतिपादय** = விளக்கவேண்டும்.

**ப்ரதிபாத³ய**

ஹே குரோ, கருணாநிதே, இந்த ஸம்சயமெல்லாவற்றிற்கும் எல்லா அம்சங்களிலும், கையிலுள்ள நெல்லிக்கனி போலத் தெளிவாய், கிருபாகடாக்ஷத்துடன், விபரமாய் எடுத்துச் சொல்லுங்கள். **(472)**

(**அவதாரிகை**) இவ்விதம் பிரார்த்திக்கப்பட்டதும் குருவானவர் முதலில் 14 சுலோகங்களால் அத்யாஸத்தின் தன்மையையும் அதிலடங்கிய அம்சங்களையும் சொல்கிறுர்: -

**न तावत् अयं एकान्तेनात्मा इष्यते ।**
**अस्यात्मत्प्रत्ययार्थत्वात् अपरोक्षाच्च सर्वशः ॥ ४७३ ॥**

**ந தாவத் அயம் ஏகாந்தேனாத்மா இஷ்யதே ।**
**அஸ்யாத்மத்ப்ரத்யயார்த²த்வாத் அபரோக்ஷாச்ச ஸர்வஶ: ॥ 473 ॥**

**अस्य** = இந்த ஆத்மா,

**அஸ்ய**

**अस्यात्मत्प्रत्ययार्थत्वात्** = 'நான்' என்ற அறிவுக்கு விஷயமாயிருப்பதாலும்,

**அஸ்யாத்மத்ப்ரத்யயார்த²த்வாத்**

**सर्वशः** = எல்லா விதத்திலும்,

**ஸர்வஶ:**

**अपरोक्षाच्च** = நேரில் தெரிவதாயிருப்பதாலும்,

**அபரோக்ஷாச்ச**

**अयं आत्मा तावत्** = இந்த ஆத்மா,

**அயம் ஆத்மா தாவத்**

**एकान्तेन** = ஒரேடியாக,

**ஏகாந்தேன**

**अविषयः** = அறியமுடியாததாக,

**அவிஷய:**

**न इष्यते** = கருதப்படுகிறதில்லை.

**ந இஷ்யதே**

இந்த ஆத்மாவை ப்ரத்யக்ஷமாக நேரில் யாவரும் அறிந்து கொள்கின்றனர். " "நான்" என்ற சொல்லும் அறிவும் ஆத்மாவைத்தான் குறிக்கிறது. ஆகவே ஒரேயடியாக ஆத்மா அறியப்படாதது என்று கூறமுடியாது. **(473)**

**प्रसिद्धिरात्मनोऽस्त्येव न कस्यापि न दृश्यते।**
**प्रत्ययो नाहमस्मीति न ह्यस्ति प्रत्यगात्मनि॥ ४७४॥**

**ப்ரஸித்³தி⁴ராத்மனோ(அ)ஸ்த்யேவ ந கஸ்யாபி ந த்³ருஶ்யதே ।**
**ப்ரத்யயோ நாஹமஸ்மீதி ந ஹ்யஸ்தி ப்ரத்யகா³த்மனி ॥ 474 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मनः** ஆத்மனః | = | ஆத்மாவுக்கு, |
| **प्रसिद्धिः** ப்ரஸித்³தி⁴ | = | பிரஸித்தி, |
| **अस्त्येव** அஸ்த்யேவ | = | கட்டாயம் இருக்கிறது, |
| **कस्यापि** கஸ்யாபி | = | ஒருவருக்கும், |
| **न न दृश्यते** ந ந த்³ருஶ்யதே | = | அறியப்படாததாக இல்லை, |
| **प्रत्यगात्मनि** ப்ரத்யகா³த்மனி | = | ப்ரத்யகாத்ம விஷயமாக, |
| **नाहमस्मि** நாஹமஸ்மி | = | நான் இல்லை, |
| **इति** இதி | = | என்ற, |
| **प्रत्ययः** ப்ரத்யயః | = | எண்ணம், |
| **न ह्यस्ति** ந ஹ்யஸ்தி | = | இல்லையல்லவா! |

ஆத்மா இருக்கிறுர் என்ற பிரஸித்தி இருக்கவேயிருக்கிறது. யாருக்கும் ஆத்மா அறியப்படாமலில்லை. "நான் இல்லை" என்கிற எண்ணம் பிரத்யகாத்ம விஷயத்தில் யாருக்கும் கிடையாதல்லவா! **(474)**

**न कस्यापि स्वसद्भावे प्रमाणं अभिकाङ्क्ष्यते।**
**प्रमाणानां च प्रामाण्यं यन्मूलं किंनु बोधयेत्॥ ४७५॥**

**ந கஸ்யாபி ஸ்வஸத்³பா⁴வே ப்ரமாணம் அபி⁴காங்க்ஷ்யதே ।**
**ப்ரமாணுனும் ச ப்ராமாண்யம் யன்மூலம் கிம்நு போ³த⁴யேத் ॥ 475 ॥**

| | | |
|---|---|---|
| **कस्यापि** கஸ்யாபி | = | ஒருவனுக்கும், |

स्वसद्भावे = தான் இருக்கும் விஷயத்தில்,
ஸ்வஸத்³பா⁴வே
प्रमाणं = பிரமாணம்,
ப்ரமாணம்
न अभिकाङ्क्ष्यते = கோரப்படுவதில்லை,
ந அபி⁴காங்க்ஷ்யதே
प्रमाणानां = பிரமாணங்களுக்கு,
ப்ரமாணாநாம்
प्रामाण्यं = பிரமாணத் தன்மை,
ப்ராமாண்யம்
यन्मूलं = எதன் காரணமாக ஏற்படுகிறதோ (அதை),
யன்மூலம்
किंनु = எதுதான்,
கிம்நு
बोधयेत् = அறிவுறுத்தும்?
போ³த⁴யேத்

எவனுக்கும் தன்னுடைய இருப்பு விஷயத்தில் பிரமாணம் வேண்டப்படுவதில்லை. பிரமாணங்களுக்கெல்லாம் எதன் மூலமாக பிராமாண்யம் ஏற்படுகிறதோ, அதை எது தெரியப்படுத்தும்? **(475)**

(**அவதாரிகை**) "நான்" என்ற உணர்ச்சியிருப்பதினுல் அப்படி ஒரு பதார்த்தம் உண்டா என்ற ஸந்தேகத்திற்கு இடமில்லாமலிருக்கலாம். ஆனுலும் அந்த பதார்த்தத்தின் வாஸ்தவ ஸ்வரூபம் என்னவென்று தெரியவில்லையே என்று கேட்டால், அதற்கு ஸமாதானம் சொல்லுகிருர்: -

**मायाकार्यैस्तिरोभूतो नैष आत्मानुभूयते ।**
**मेघबृन्दैर्यथा भानुस्तथायमहमादिभिः ॥ ४७६ ॥**

**மாயாகார்யைஸ்திரோபூ⁴தோ நைஷ ஆத்மானுபூ⁴யதே ।**
**மேக⁴ப்³ருந்தை³ர்யதா² பா⁴னுஸ்ததா²யமஹமாதி³பி⁴: ॥ 476 ॥**

मायाकार्यैः = மாயையின் காரியங்களால்,
மாயாகார்யை:
तिरोभूतः = மறைக்கப்பட்டு,
திரோபூ⁴த:
एष आत्मा = இந்த ஆத்மா,
ஏஷ ஆத்மா

**नानुभूयते** = அனுபவிக்கப்படுகிறதில்லை,
**நானுபூ4யதே**

**मेघबृन्दैः** = மேகக்கூட்டங்களினுல்,
**மேக4ப்3ருந்தை3:**

**भानु** = ஸூரியன்,
**பா4னு**

**यथा** = எப்படியோ,
**யதா2**

**तथा** = அப்படி,
**ததா2**

**अयं** = இந்த ஆத்மா,
**அயம்**

**अहमादिभिः** = அஹங்காரம் முதலியவைகளால்
**அஹமாதி3பி4:** (மறைக்கப்பட்டுள்ளது)

மேகக் கூட்டங்களினுல் மறைக்கப்பட்டு சூரியன் நன்குகத் தெரிவதில்லை. அதேபோல மாயையின் காரியங்களான அஹங்காரம் முதலியவைகளால் மறைக் கப்பட்டு இந்த ஆத்மா அனுபவிக்கப்படுகிறதில்லை. **(476)**

**पुरस्थ एव विषये वस्तुन्यध्यस्यतामिति ।**
**नियमो न कृतः सद्भिर्भ्रान्तिरेवात्र कारणम् ॥ ४७७ ॥**

**புரஸ்த2 ஏவ விஷயே வஸ்துன்யத்4யஸ்யதாமிதி ।**
**நியமோ ந க்ருத: ஸத்3பி4ர்ப்4ராந்திரேவாத்ர காரணம் ॥ 477 ॥**

**पुरःस्थे** = முன்னுலுள்ள,
**புர:ஸ்தே2**

**विषये वस्तुनि एव** = அறிவிற்கு விஷயமான வஸ்துவில்தான்,
**விஷயே வஸ்துனி ஏவ**

**अध्यस्यतां** = ஆரோபம் ஏற்படும்,
**அத்4யஸ்யதாம்**

**इति** = என்று,
**இதி**

**नियमः** = கட்டுப்பாடு,
**நியம:**

**सद्भिः** = அறிந்த பெரியோர்களால்,
**ஸத்3பி4:**

| | | |
|---|---|---|
| **न कृतः**<br>**ந க்ருத:** | = | செய்யப்படவில்லை, |
| **अत्र**<br>**அத்ர** | = | இவ்விஷயத்தில், |
| **भ्रान्तिरेव**<br>**ப்⁴ராந்திரேவ** | = | ப்ரமம்தான், |
| **कारणम्**<br>**காரணம்** | = | காரணமாகும். |

முன்னுல் இருக்கும் விஷயமான வஸ்துவில்தான் அத்யாஸம் ஏற்படலாம் என்று ஸாதுக்களால் நியமம் செய்யப்படவில்லை. இவ்விஷயத்தில் பிராந்தியே காரணமாக இருக்கப் போதுமானது. **(477)**

**दृगाद्यविषये व्योम्नि नीलतादि यथाबुधाः।**
**अध्यस्यन्ति तथैवास्मिन्नात्मन्यपि मतिभ्रमात् ॥ ४७८ ॥**

**த்³ருகா³த்³யவிஷயே வ்யோம்னி நீலதாதி³ யதா²பு³தா⁴:।**
**அத்⁴யஸ்யந்தி ததை²வாஸ்மின்னாத்மன்யபி மதிப்⁴ரமாத் ॥ 478 ॥**

| | | |
|---|---|---|
| **दृगाद्यविषये**<br>**த்³ருகா³த்³யவிஷயே** | = | கண் முதலியவைகளுக்கு கோசரமாகாத, |
| **व्योम्नि**<br>**வ்யோம்னி** | = | ஆகாசத்தில், |
| **यथा**<br>**யதா²** | = | எப்படி, |
| **अबुधाः**<br>**அபு³தா⁴:** | = | அறிவில்லாதவர், |
| **नीलतादि**<br>**நீலதாதி³** | = | நீலமாயிருக்கும் தன்மை முதலியவற்றை, |
| **अध्यस्यन्ति**<br>**அத்⁴யஸ்யந்தி** | = | ஆரோபம் செய்கிறுர்களோ, |
| **तथैव**<br>**ததை²வ** | = | அப்படியே, |
| **अस्मिन् आत्मन्यपि**<br>**அஸ்மின் ஆத்மன்யபி** | = | இந்த ஆத்மாவிலும், |
| **मतिभ्रमात्**<br>**மதிப்⁴ரமாத்** | = | புத்தி பிரமத்தால் (ஆரோபம் செய்கிறுர்கள்) |

கண் முதலானவைகளால் அறியமுடியாத ஆகாசத்தில் எப்படி அறிவில்லாதவர்கள் நீலமாயிருக்கும் தன்மை முதலியதை அத்யாஸம் செய்கிறுர்களோ, அப்படியேதான் விஷயமாகத்தெரியாத இந்த ஆத்மாவிடத்தில் புத்திபிரமத்திஞல் அத்யாஸம் ஏற்படுகிறது. **(478)**

**अनात्मन्यात्मताध्यासे न सादृश्यं अपेक्ष्यते ।**
**पीतोऽयं शङ्ख इत्यादौ सादृश्यं किं अपेक्षितम् ॥ ४७९ ॥**

**அஞத்மன்யாத்மதாத்⁴யாஸே ந ஸாத்³ருஶ்யம் அபேக்ஷ்யதே ।**
**பீதோ(அ)யம் ஶங்க² இத்யாதௌ³ ஸாத்³ருஶ்யம் கிம் அபேக்ஷிதம் ॥ 479 ॥**

| | | |
|---|---|---|
| **अनात्मनि** அஞத்மனி | = | அநாத்மாவில், |
| **आत्मताध्यासे** ஆத்மதாத்⁴யாஸே | = | ஆத்மத்தன்மையின் அத்யாஸம் ஏற்படுவதில், |
| **सादृश्यं** ஸாத்³ருஶ்யம் | = | ஸாத்ருச்யமானது, |
| **न अपेक्ष्यते** ந அபேக்ஷ்யதே | = | தேவைப்படுவதில்ஜல, |
| **अयं** அயம் | = | இந்த, |
| **शंख:** ஶங்க²: | = | சங்கு, |
| **पीत:** பீத: | = | மஞ்சள் நிறமானது, |
| **इत्यादौ** இத்யாதௌ³ | = | இதுமுதலான இடத்தில், |
| **सादृश्यं** ஸாத்³ருஶ்யம் | = | ஸாத்ருச்யம், |
| **किंपेक्षितम्** கிம்பேக்ஷிதம் | = | தேவைப்பட்டு இருக்கிறதா? |

அஞத்மாவிடத்தில் ஆத்மத் தன்மையை அத்யாஸம் செய்வதில் ஸாதிருச்யம் தேவையில்ஜல "இந்த சங்கு மஞ்சளாயிருக்கிறது" இது முதலான இடங்களில் ஸாதிருச்யம் வேண்டப்படுகிறதா? இல்ஜலயே. **(479)**

**निरुपाधिभ्रमेष्वस्य नैवापेक्षा प्रदृश्यते ।**
**सोपाधिष्वेव तद्दृष्टं रज्जुसर्पभ्रमादिषु ॥ ४८० ॥**

**நிருபாதி⁴ப்⁴ரமேஷ்வஸ்ய நைவாபேக்ஷா ப்ரத்³ருஶ்யதே ।**
**ஸோபாதி⁴ஷ்வேவ தத்³த்³ருஷ்டம் ரஜ்ஜுஸர்பப்⁴ரமாதி³ஷு ॥ 480 ॥**

| | | |
|---|---|---|
| **निरुपाधिभ्रमेषु** | = | உபாதியில்லாமல் ஏற்படும் பிரமங்களில், |
| **நிருபாதி⁴ப்⁴ரமேஷு** | | |
| **अस्य** | = | இந்த ஸாத்ருச்யத்தின், |
| **அஸ்ய** | | |
| **अपेक्षा** | = | தேவை, |
| **அபேக்ஷா** | | |
| **नैव प्रदृश्यते** | = | காணப்படவேயில்லை, |
| **நைவ ப்ரத்³ருஶ்யதே** | | |
| **रज्जुसर्पभ्रमादिषु** | = | கயிற்றில் தோன்றும் பாம்பு முதலான, |
| **ரஜ்ஜுஸர்பப்⁴ரமாதி³ஷு** | | |
| **सोपाधिषु एव** | = | உபாதியுடன் கூடிய பிரமங்களில்தான், |
| **ஸோபாதி⁴ஷு ஏவ** | | |
| **तत्** | = | அந்த ஸாத்ருச்யம், |
| **தத்** | | |
| **दृष्टं** | = | காணப்பட்டு உள்ளது. |
| **த்³த்³ருஷ்டம்** | | |

உபாதியில்லாமலே பிரமம் ஏற்படும் ஸ்தலங்களில் ஸாதிருச்யத்தின் அபேக்ஷையே காணப்படுவதில்லை. கயிற்றில் ஸர்ப்ப பிரமம் முதலான, உபாதியுள்ள பிரம்மஸ்தலங்களில் தான் ஸாதிருச்யம் காணப்படுகிறது. **(480)**

**तथापि किंचित् वक्ष्यामि सादृश्यं शृणु तत्परः ।**
**ததா²பி கிஞ்சித் வக்ஷ்யாமி ஸாத்³ருஶ்யம் ஶ்ருணு தத்பரः ।**

| | | |
|---|---|---|
| **तथापि** | = | அப்படியிருந்தபோதிலும், |
| **ததா²பி** | | |
| **सादृश्यं** | = | ஸாத்ருச்யத்தை, |
| **ஸாத்³ருஶ்யம்** | | |
| **किंचित्** | = | கொஞ்சம், |
| **கிஞ்சித்** | | |
| **वक्ष्यामि** | = | சொல்கிறேன், |
| **வக்ஷ்யாமி** | | |
| **तत्परः** | = | அதிலேயே ஈடுபட்டவனாக, |
| **தத்பரः** | | |

**शृणु** = கேள்.
**ஶ்ருணு**

அத்யாஸத்திற்கு ஸாத்ருச்யம் கட்டாயம் வேண்டும் என்று நீ நிஜனப்பாயே யாகில் உன் அபிப்ராயப்படியே ஆத்மாத்யாஸத்திலும் ஸாத்ருச்யம் உள்ளது என்பதை கொஞ்சம் எடுத்துக் கூறுகிறேன் அதிலேயே கவனமாய் கேள்.

**अत्यन्तनिर्मलः सूक्ष्म आत्मायमतिभास्वरः ॥ ४८१ ॥**

**அத்யந்தநிர்மலː ஸூக்ஷ்ம ஆத்மாயமதிபா⁴ஸ்வரː ॥ 481 ॥**

**बुद्धिस्तथैव सत्त्वात्मा साभासा भास्वरामला ।**

**பு³த்³தி⁴ஸ்ததை²வ ஸத்த்வாத்மா ஸாபா⁴ஸா பா⁴ஸ்வராமலா ।**

**अयं आत्मा** = இந்த ஆத்மா,
**அயம் ஆத்மா**
**अत्यन्तनिर्मलः** = மிகவும் சுத்தமாக உள்ளது,
**அத்யந்தநிர்மலː**
**सूक्ष्म** = ஸூக்ஷ்மமானது,
**ஸூக்ஷ்ம**
**अतिभास्वरः** = மிகவும் பிரகாசமாக உள்ளது,
**அதிபா⁴ஸ்வரː**
**तथैव** = அப்படியே,
**ததை²வ**
**सत्त्वात्मा** = ஸத்வ குணத்தை ஸ்வரூபமாகக் கொண்டதும்,
**ஸத்த்வாத்மா**
**साभासा** = ஆத்ம பிரதிபிம்பத்துடன் கூடியதுமான,
**ஸாபா⁴ஸா**
**बुद्धिः** = புத்தியும்,
**பு³த்³தி⁴ː**
**भास्वरा** = பிரகாசமுள்ளதாயும்,
**பா⁴ஸ்வரா**
**अमला** = சுத்தமாயும் உள்ளது.
**அமலா**

இந்த ஆத்மா வெகு நிர்மலமாயிருப்பவர், ஸூக்ஷ்மமாயிருப்பவர், வெகு பிரகாசமுள்ளவர். அப்படியே ஸத்வ ஸ்வபாவமுள்ளதும், ஆத்மாவின் பிரதிபிம்பத் தோடுகூடியதுமான புத்தியும் பிரகாசமுள்ளது, நிர்மலமானது. **(481)**

**सांनिध्यात् आत्मवत् भाति सूर्यवत् स्फटिको यथा ॥ ४८२ ॥**

**ஸாம்நித்⁴யாதா³த்மவத்³பா⁴தி ஸூர்யவத்ஸ்ப²டிகோ யதா²॥ 482 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எப்படி, |
| **स्फटिकः** ஸ்ப²டிகः | = | ஸ்படிகம், |
| **सूर्यवत्** ஸூர்யவத் | = | ஸூரியன் போல், |
| **भाति** பா⁴தி | = | பிரகாசிக்கிறதோ அப்படியே (புத்தியும்), |
| **सांनिध्यात्** ஸாம்நித்⁴யாத் | = | அருகில் இருப்பதால், |
| **आत्मवत्** ஆத்மவத் | = | ஆத்மாபோல், |
| **भाति** பா⁴தி | = | விளங்குகிறது. |

எப்படி ஸ்படிகம் ஸூடைய ஸந்நிதியில் ஸூர்யன் போல பிரகாசிக்கிறதோ, அப்படியே புத்தியும் ஆத்மாவின் ஸந்நிதியில் இருப்பதால் ஆத்மாவைப்போல பிரகாசிக்கிறது. (482)

**आत्माभासा ततो बुद्धिः बुद्ध्याभासं ततो मनः ।**

**ஆத்மாபா⁴ஸா ததோ பு³த்³தி⁴ः பு³த்³த்⁴யாபா⁴ஸம் ததோ மனः ।**

**अक्षाणि मनआभासान्यक्षाभासमिदं वपुः ॥ ४८३ ॥**

**அக்ஷாணி மனஆபா⁴ஸான்யக்ஷாபா⁴ஸமித³ம் வபுः ॥ 483 ॥**

| | | |
|---|---|---|
| **ततः** ததः | = | ஆகையால், |
| **बुद्धिः** பு³த்³தி⁴ः | = | புத்திபானது, |
| **आत्माभासा** ஆத்மாபா⁴ஸா | = | ஆத்மாவினுல் பிரகாசிக்கிறது, |
| **ततः** ததः | = | பிறகு, |

**मनः** = மனது,

**மனஃ**

**बुद्धयाभासं** = புத்தியின் பிரகாசமுள்ளது,

**பு³த்³த்⁴யாபா⁴ஸம்**

**अक्षाणि** = இந்திரியங்கள்,

**அக்ஷாணி**

**मन आभासानि** = மனதால் பிரகாசிப்பவை,

**மன ஆபா⁴ஸானி**

**इदं वपुः** = இந்த சரீரம்,

**இத³ம் வபுஃ**

**अक्षाभासं** = இந்திரியங்களால் பிரகாசிப்பவை.

**அக்ஷாபா⁴ஸம்**

ஸ்படிகத்திற்கு இயற்கையாக ஒளியில்லாவிட்டாலும் ஸூர்யனிடமிருந்து ஒளியைப் பெற்று ஒளியுள்ளதுபோல் தோன்றுகிறது. இதுபோல் புத்தி ஆத்மாவின் பிரகாசத்தைப் பெற்று தானும் பிரகாசிக்கிறது. இந்த ஆத்ம பிரகாசம் முதலில் புத்தியிலும் புத்தியின் மூலம் மனஸிலும் மனதின் மூலம் இந்திரியங்களிலும் இந்திரியங்கள் மூலம் சரீரத்திலும் வந்து எல்லாம் பிரகாசிக்கின்றன ஆபாஸமென்கிற பதத்திற்கு பிரதிபிம்பம் என்ற பொருள் உள்ளபோதிலும் அவ்வார்த்தைக்கு "கொஞ்சம் பிரகாசம்" அதாவது "கடன்வாங்கி கொஞ்சமாய் பிரகாசிக்கும் தன்மையுள்ளது" என்பதே நேரான அர்த்தம். **(483)**

**अतः एव आत्मताबुद्धिः देहाक्षादौ अनात्मनि ।**
**मूढानां प्रतिबिम्बादौ बालानामिव दृश्यते ।**
**सादृश्यं विद्यतेः बुद्धौ आत्मनोऽध्यासकारणम् ॥ ४८४ ॥**

**அதஃ ஏவ ஆத்மதாபு³த்³தி⁴ஃ தே³ஹாக்ஷாதௌ³ அனாத்மனி ।**
**மூடா⁴னும் ப்ரதிபி³ம்பா³தௌ³ பா³லாநாமிவ த்³ருஶ்யதே ।**
**ஸாத்³ருஶ்யம் வித்³யதேஃ பு³த்³தௌ⁴ ஆத்மனோ(அ)த்⁴யாஸகாரணம் ॥ 484 ॥**

**अत एव** = ஆகையால்தான்,

**அத ஏவ**

**बालानां** = சிறுவர்களுக்கு,

**பா³லானும்**

**प्रतिबिम्बादौ इव** = பிரதிபிம்பம் முதலியவற்றில்போல,

**ப்ரதிபி³ம்பா³தௌ³ இவ**

**मूढानां** = அவிவேகிகளுக்கு,

**மூடா⁴னும்**

**अनात्मनि** = ஆத்மாவல்லாத,

**அனாத்மனி**

**देहाक्षादौ** = தேஹம், இந்திரியம் முதலியவற்றில்,

**தே³ஹாக்ஷாதௌ³**

**आत्मताबुद्धिः** = ஆத்மா என்ற புத்தி,

**ஆத்மதாபு³த்³தி⁴:**

**दृश्यते** = காணப்படுகிறது (ஆகவே),

**த்³ருஶ்யதே**

**अध्यास** = அத்யாஸத்திற்குக் காரணமான,

**அத்⁴யாஸ**

**आत्मनः** = ஆத்மாவின்,

**ஆத்மன:**

**सादृश्यं** = ஸாத்ருச்யம்,

**ஸாத்³ருஶ்யம்**

**बुद्धौ** = புத்தியில்,

**பு³த்³தௌ⁴**

**विद्यतेः** = இருக்கிறது.

**வித்³யதே:**

ஆகையினுல்தான் (ஆத்மாவின் பிரகாசத்தைப் பெற்று தேஹம் முதலியவைகளும் பிரகாசமுள்ளவைகளாகத்தோன்றுகிறபடியால்தான்) பாலர்களுக்கு பிரதிபிம்பம் முதலியதில் தான் என்ற புத்தி ஏற்படுவதுபோல மோஹத்தையடைந்த அவிவேகிகளுக்கு அநாத்மாவான தேகம் இந்திரியம் முதலானதில் ஆத்மா என்கிற புத்தி காணப்படுகிறது.

இவ்விதமாக அத்யாஸம் செய்வதற்குவேண்டிய காரணமான ஆத்ம ஸாதிருச்யம் புத்தியில் இருக்கிறது. **(484)**

**अनात्मन्यहमित्येव योऽयं अध्यास ईरितः ।**
**स्यात् उत्तरोत्तराध्यासे पूर्वपूर्वस्तु कारणम् ॥ ४८५ ॥**

**அனாத்மன்யஹமித்யேவ யோ(அ)யம் அத்⁴யாஸ ஈரித: ।**
**ஸ்யாத் உத்தரோத்தராத்⁴யாஸே பூர்வபூர்வஸ்து காரணம் ॥ 485 ॥**

**अनात्मनि** = ஆத்மாவல்லாததில்,

**அனாத்மனி**

**अहमित्येव** = நான் என்பதாகவே,

**அஹமித்யேவ**

**योयं अध्यासः** = எந்த இந்த அத்யாஸம்,

**யோயம் அத்⁴யாஸ꞉**

**ईरितः** = சொல்லப்பட்டதோ (இதில்),

**ஈரித꞉**

**उत्तरोत्तराध्यासे** = பின்பின்வரும் அத்யாஸத்தில்,

**உத்தரோத்தராத்⁴யாஸே**

**पूर्वपूर्वस्तु** = முன் முன் ஏற்பட்ட அத்யாஸம்,

**பூர்வபூர்வஸ்து**

**कारणम् स्यात्** = காரணம் ஆகும்.

**காரணம் ஸ்யாத்**

அனாத்மாவினிடத்தில் நான் என்று இப்பொழுது அத்யாஸம் ஏற்படுவதற்கு இதேமாதிரி இதற்கு முன் ஏற்பட்ட அத்யாஸம் காரணம் அந்த அத்யாஸத்திற்கு அதற்கு முன் ஏற்பட்ட அத்யாஸம் காரணம் இவ்வாறு அநாதிகாலமாக பின் பின் ஏற்படும் அத்யாஸத்திற்கு முன் முன் உள்ள அத்யாஸமே காரணமாகும். **(485)**

**सुप्तिमूर्च्छर्कोत्थितेष्वेव दृष्टः संसारलक्षणः ।**
**अनादिरेषाऽविद्या तत्संस्कारोऽपि च तादृशः ॥ ४८६ ॥**

**ஸுப்திமூர்ச்ச²ர்கோத்தி²தேஷ்வேவ த்³ருஷ்ட꞉ ஸம்ஸாரலக்ஷண꞉ ।**
**அநாதி³ரேஷா(அ)வித்³யா தத்ஸம்ஸ்காரோ(அ)பி ச தாத்³ருஶ꞉ ॥ 486 ॥**

**सुप्तिमूर्छोत्थितेषु एव** = தூக்கம் மூர்ச்சை இவற்றிலிருந்து

**ஸுப்திமூர்சோ²த்தி²தேஷு ஏவ** வெளிவந்தவர்களிடம்தான்,

**संसारलक्षणः** = ஸம்ஸாரரூபமான அத்யாஸம்,

**ஸம்ஸாரலக்ஷண꞉**

**दृष्टः** = காணப்பட்டிருக்கிறது,

**த்³ருஷ்ட꞉**

**एषा** = இந்த,

**ஏஷா**

**अविद्या** = அவித்யை,

**அவித்³யா**

**अनादिः** = ஆதியற்றது,

**அநாதி³꞉**

**तत्संस्कारोऽपि च** = அந்த அவித்யையயின் ஸம்ஸ்காரமும்,

**தத்ஸம்ஸ்காரோ(அ)பி ச**

**तादृशः** = அவ்விதமே (ஆதியற்றதே)

**தாத்³ருஶ꞉**

நல்ல தூக்கத்திலிருந்தும் மூர்ச்சையிலிருந்தும் எழுந்திருந்தவர்களிடத்தில் தான் ஸம்ஸார ரூபமான அத்யாஸம் காணப்படுகின்றது. இந்த அவித்யை ஆதியற்றது. அதன் ஸம்ஸ்காரமும் அப்படியே ஆதியற்றது. **(486)**

(**அவதாரிகை**) வியஷ்டி அக்ஞானமாகிற அவித்யையிலிருந்து ஸம்ஸாரம் எப்படி ஏற்படுகிறது என்பதை இனி விஸ்தரிக்கிறார்: -

**अध्यासबाधागमनस्य कारणं शृणु प्रवक्ष्यामि समाहितात्मा ।**
**यस्मादिदं प्राप्तमनर्थजातं जन्माप्ययव्याधिजरादिदुःखम् ॥ ४८७ ॥**

**அத்⁴யாஸபா³தா⁴க³மனஸ்ய காரணம் ஶ்ருணு ப்ரவக்ஷ்யாமி ஸமாஹிதாத்மா ।**
**யஸ்மாதி³த³ம் ப்ராப்தமனர்த²ஜாதம் ஜன்மாப்யயவ்யாதி⁴ஜராதி³து³:க²ம் ॥ 487 ॥**

**अध्यासबाधागमनस्य** = அத்யாஸமென்னும் துன்பம் வருவதன்,
**அத்⁴யாஸபா³தா⁴க³மனஸ்ய**
**कारणं** = காரணத்தை,
**காரணம்**
**प्रवक्ष्यामि** = சொல்கிறேன்,
**ப்ரவக்ஷ்யாமி**
**समाहितात्मा** = மிகுந்த கவனமுள்ள மனதுடன்,
**ஸமாஹிதாத்மா**
**शृणु** = கேள்,
**ஶ்ருணு**
**यस्मात्** = எதிலிருந்து,
**யஸ்மாத்**
**जन्माप्यय** = பிறவி, மரணம்,
**ஜன்மாப்யய**
**व्याधि** = பிணி.
**வ்யாதி⁴**
**जरादिदुःखम्** = மூப்பு, மனஸ்தாபம், துன்பம் ஆகிய,
**ஜராதி³து³:க²ம்**
**इदं** = இந்த,
**இத³ம்**
**अनर्थजातं** = அநர்த்த ஸமூஹம்,
**அனர்த²ஜாதம்**
**प्राप्तं** = வந்துள்ளதோ.
**ப்ராப்தம்**

எதிலிருந்து பிறப்பு, இறப்பு, வியாதி, ஜரை, மனஸ்தாபம், துன்பம் முதலிய துக்கமாகிற அனர்த்தக்கூட்டம் வந்திருக்கிறதோ, அந்த அத்யாஸமாகிற தொந்திரவு ஏற்பட்டதின் காரணத்தைச்சொல்கிறேன். கவனமான மனஸுடன் கேள். **(487)**

**आत्मोपाधेरविद्याया अस्ति शक्तिद्वयं महत् ।**
**विक्षेप आवृतिश्चेति याभ्यां संसार आत्मनः ॥ ४८८ ॥**

**ஆத்மோபாதே⁴ரவித்³யாயா அஸ்தி ஶக்தித்³வயம் மஹத் ।**
**விக்ஷேப ஆவ்ருதிஶ்சேதி யாப்⁴யாம் ஸம்ஸார ஆத்மனः ॥ 488 ॥**

**आत्मोपाधे** = ஆத்மாவின் உபாதியான,
**ஆத்மோபாதே⁴**
**अविद्यायाः** = அவித்யைக்கு,
**அவித்³யாயாः**
**विक्षेप** = விக்ஷேபமும்,
**விக்ஷேப**
**आवृतिश्च** = ஆவரணமும்,
**ஆவ்ருதிஶ்ச**
**इति** = என்ற,
**இதி**
**महत्** = பெரிய,
**மஹத்**
**शक्तिद्वयं** = இரண்டு சக்தி,
**ஶக்தித்³வயம்**
**अस्ति** = இருக்கிறது,
**அஸ்தி**
**याभ्यां** = எவைகளால்,
**யாப்⁴யாம்**
**आत्मनः** = ஆத்மாவுக்கு,
**ஆத்மனः**
**संसार** = பிறப்பு இறப்பு ரூபமான ஸம்ஸாரம்
**ஸம்ஸார** ஏற்படுகிறதோ.

ஆத்மாவிற்கு உபாதியாயிருக்கும் அவித்யைக்கு இரண்டு பெரிய சக்திகள் இருக்கின்றன. ஒன்று விக்ஷேபம் மற்றொன்று ஆவரணம். இவைகளினால்தான் ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் ஏற்படுகிறது. **(488)**

**आवृतिस्तमसः शक्तिस्तद्ध्यावरणकारणम् ।**
**मूलाविद्येति सा प्रोक्ता यया संमोहितं जगत् ॥ ४८९ ॥**

**ஆவ்ருதிஸ்தமஸः ஶக்திஸ்தத்³த்⁴யாவரணகாரணம் ।**
**மூலாவித்³யேதி ஸா ப்ரோக்தா யயா ஸம்மோஹிதம் ஜக³த் ॥ 489 ॥**

**आवृति:** = ஆவரணம்,
**ஆவ்ருதி:**
**तमस:** = தமோகுணத்தின்,
**தமஸः**
**शक्ति:** = சக்தி,
**ஶக்தி:**
**तत्** = அந்த தமோகுணம்,
**தத்**
**आवरणकारणं हि** = ஆவரணத்திற்குக் காரணமல்லவா,
**ஆவரணகாரணம் ஹி**
**यया** = எதனுல்,
**யயா**
**जगत्** = பிரபஞ்சம்,
**ஜக³த்**
**संमोहितं** = நன்கு மோஹத்தையடைந்திருக்கிறதோ,
**ஸம்மோஹிதம்**
**सा** = அது,
**ஸா**
**मूलाविद्या इति** = மூலாவித்யை என்று,
**மூலாவித்³யா இதி**
**प्रोक्ता** = சொல்லப்பட்டு உள்ளது.
**ப்ரோக்தா**

ஆவரணம் என்பது தமோ குணத்தின் சக்தி. அதுதான் (தமோ குணம்தான்) மறைப்பதற்குக் காரணம். எதனுல் உலகம் மோஹத்தையடைந்திருக்கிறதோ, அந்த ஆவரண சக்தி மூலாவித்யை - எல்லாவற்றிற்கும் வேர் மாதிரியுள்ள அக்ஞானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. **(489)**

**विवेकवानप्यतियौक्तिकोऽपि श्रुतात्मतत्त्वोऽपि च पण्डितोऽपि ।**
**शक्त्या यया संवृतबोधदृष्टि: आत्मानमात्मस्थमिमं न वेद ॥ ४९० ॥**

**விவேகவானப்யதியௌக்திகோ(அ)பி**
**ஶ்ருதாத்மதத்த்வோ(அ)பி ச பண்டி³தோ(அ)பி ।**
**ஶக்த்யா யயா ஸம்வ்ருதபோ³த⁴த்³ருஷ்டி:**
**ஆத்மானமாத்மஸ்த²மிமம் ந வேத³ ॥ 490 ॥**

**विवेकवानपि** = விவேகமுள்ளவனுக இருந்தாலும்,

**விவேகவானபி**

**अतियौक्तिकोऽपि** = மிகுந்த யுத்திசாலியாக இருந்தாலும்,

**அதியௌக்திகோ(அ)பி**

**श्रुतात्मतत्त्वोऽपि** = ஆத்மதத்வத்தைக் கேட்டுத் தெரிந்தவனு

**ஶ்ருதாத்மதத்த்வோ(அ)பி** யிருந்தாலும்,

**पण्डितोऽपि** = படித்தவனுயிருந்தாலும்,

**பண்டி³தோ(அ)பி**

**यया शक्त्या** = எந்த சக்தியால்,

**யயா ஶக்த்யா**

**संवृतबोधदृष्टिः** = மறைக்கப்பட்ட ஞானப்பார்வை உடையவனுக,

**ஸம்வ்ருதபோ³த⁴த்³ருஷ்டி:**

**आत्मस्थं** = தன்னிடமுள்ள,

**ஆத்மஸ்த²ம்**

**इमं आत्मानं** = இந்த ஆத்மாவை,

**இமம் ஆத்மானம்**

**न वेद** = அறியவில்லையோ.

**ந வேத³**

விவேகமுள்ளவனுயிருந்தாலும், யுக்தியில் வெகு ஸாமர்த்திய சாலியாயிருந்தாலும், ஆத்ம தத்வத்தைக்கேட்டு அறிந்தவனுயிருந்தாலும், வித்வானுயிருந்தாலும், இந்த ஆவரண சக்தியினுல் மறைக்கப்பட்ட ஞானமாகிற கண்ணுள்ளவனுய் தன்னிடத்திலேயே இருக்கும் இந்த ஆத்மாவை அறிந்துகொள்வதில்லை. **(490)**

**विक्षेपनाम्नी रजसस्तु शक्तिः प्रवृत्तिहेतुः पुरुषस्य नित्यम् ।**
**स्थूलादिलिङ्गान्तं अशेषमेतत् यया सदात्मन्यसदेव सूयते ॥ ४९१ ॥**

**விக்ஷேபநாம்னீ ரஜஸஸ்து ஶக்தி:**
**ப்ரவ்ருத்திஹேது: புருஷஸ்ய நித்யம் ।**
**ஸ்தூ²லாதி³லிங்கா³ந்தம் அஶேஷமேதத்**
**யயா ஸதா³த்மன்யஸதே³வ ஸூயதே ॥ 491 ॥**

**विक्षेपनाम्नी** = விக்ஷேபம் என்று பெயருள்ள,

**விக்ஷேபநாம்னீ**

| | | |
|---|---|---|
| **रजसः शक्तिस्तु** | = | ரஜோகுணத்தின் சக்தியோவெனில், |
| **ரஜஸ꞉ ஶக்திஸ்து** | | |
| **नित्यम्** | = | எப்பொழுதும், |
| **நித்யம்** | | |
| **पुरुषस्य** | = | புருஷனுடைய, |
| **புருஷஸ்ய** | | |
| **प्रवृत्तिहेतुः** | = | ப்ரவிருத்திக்குக்காரணம், |
| **ப்ரவ்ருத்திஹேது꞉** | | |
| **यया** | = | எதனுல், |
| **யயா** | | |
| **सदात्मनि** | = | ஸத்ரூபமான ஆத்மாவில், |
| **ஸதா³த்மனி** | | |
| **असदेव** | = | அஸத்தாகவே இருக்கும், |
| **அஸதே³வ** | | |
| **स्थूलादिलिङ्गान्तं** | = | ஸ்தூல சரீரம் முதல் ஸூக்ஷ்ம சரீரம் |
| **ஸ்தூ²லாதி³லிங்கா³ந்தம்** | | வரையிலான, |
| **एतत् अशेषं** | = | இது எல்லாம், |
| **ஏதத் அஶேஷம்** | | |
| **सूयते** | = | உண்டாகிறதோ. |
| **ஸூயதே** | | |

எதனுல் ஸத்தாகவிருக்கும் ஆத்மாவினிடத்தில் ஸ்தூல சரீரம் முதல் லிங்க சரீரம் முடிய இல்லாததான இவை யெல்லாம் உண்டாகிறதோ, மனிதனுக்கு எப்பொழுதும் பிரவிருத்திக்குக் காரணமாயிருக்கிற அந்த விக்ஷேபம் என்ற பெயருடைய சக்தியானது ரஜோ குணத்தின் சக்தியாகும். **(491)**

**निद्रा यथा पूरुषं अप्रमत्तं समावृणोतीयमपि प्रतीचम् ।**
**तथाऽऽवृणोत्यावृतिशक्तिः अन्तः विक्षेपशक्ति परिजृम्भयन्ती ॥ ४९२ ॥**

**நித்³ரா யதா² பூருஷம் அப்ரமத்தம் ஸமாவ்ருணோதீயமபி ப்ரதீசம் ।**
**ததா²(ஆ)வ்ருணோத்யாவ்ருதிஶக்தி꞉ அந்த꞉ விக்ஷேபஶக்தி பரிஜ்ரும்ப⁴யந்தீ ॥492॥**

| | | |
|---|---|---|
| **अप्रमत्तं** | = | கவனமுள்ள, |
| **அப்ரமத்தம்** | | |
| **पूरुषं** | = | புருஷனையும், |
| **பூருஷம்** | | |
| **निद्रा** | = | தூக்கம், |
| **நித்³ரா** | | |

| | | |
|---|---|---|
| **यथा** | = | எப்படி, |
| **யதா²** | | |
| **समावृणोती** | = | மறைக்கிறதோ, |
| **ஸமாவ்ருணோதீ** | | |
| **तथा** | = | அப்படி, |
| **ததா²** | | |
| **इयं** | = | இந்த, |
| **இயம்** | | |
| **अवृतिशक्तिरपि** | = | ஆவரணசக்தியும், |
| **அவ்ருதிஶக்திரபி** | | |
| **अन्तः** | = | உள்ளே, |
| **அந்த:** | | |
| **विक्षेपशक्तिं** | = | விக்ஷேபசக்தியை, |
| **விக்ஷேபஶக்திம்** | | |
| **परिजृम्भयन्ती** | = | வெளிப்படுத்திக்கொண்டு, |
| **பரிஜ்ரும்ப⁴யந்தீ** | | |
| **प्रतीचम्** | = | ஆத்மாவை, |
| **ப்ரதீசம்** | | |
| **आवृणोति** | = | மறைக்கிறது. |
| **ஆவ்ருணோதி** | | |

கவனத்தோடு கூடிய புருஷஉனயும் கூட தூக்கமானது எப்படி நன்கு மூடிக் கொள்கிறதோ, அப்படியே ஆவரணசக்தி பிரத்யக் ஆத்மாவை முடிக்கொள்கிறது. உள்ளிருந்து கொண்டு விக்ஷேப சக்தியை வெளிக்கிளப்பிவிடுகிறது. **(492)**

**शक्त्या महत्याऽऽवरणाभिधानया समावृते सति अमलस्वरूपे ।**
**पुमान् अनात्मन्यहमेष एवेत्यात्मत्वबुद्धिं विदधाति मोहात् ॥ ४९३ ॥**

**ஶக்த்யா மஹத்யா(ஆ)வரணாபி⁴தா⁴னயா**
**ஸமாவ்ருதே ஸதி அமலஸ்வரூபே ।**
**புமான் அனாத்மன்யஹமேஷ**
**ஏவேத்யாத்மத்வபு³த்³தி⁴ம் வித³தா⁴தி மோஹாத் ॥ 493 ॥**

| | | |
|---|---|---|
| **आवरणाभिधानया** | = | ஆவரணம் என்று பெயருள்ள, |
| **ஆவரணாபி⁴தா⁴னயா** | | |
| **महत्या** | = | பெரிய, |
| **மஹத்யா** | | |
| **शक्त्या** | = | சக்தியினால், |
| **ஶக்த்யா** | | |

| | | |
|---|---|---|
| **अमलस्वरूपे** | = | சுத்தஸ்வரூபமான, ஆத்மாவானது, |
| **அமலஸ்வரூபே** | | |
| **समावृते** | = | மறைக்கப்பட்ட பொழுது, |
| **ஸமாவ்ருதே** | | |
| **पुमान्** | = | புருஷன், |
| **புமான்** | | |
| **अनात्मनि** | = | ஆத்மாவல்லாததில், |
| **அனாத்மனி** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **एष एव** | = | இதுதான், |
| **ஏஷ ஏவ** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **मोहात्** | = | அவிவேகத்தால், |
| **மோஹாத்** | | |
| **आत्मत्वबुद्धिं** | = | ஆத்மா என்ற எண்ணத்தை, |
| **ஆத்மத்வபு³த்³தி⁴ம்** | | |
| **विदधाति** | = | செய்கிறன். |
| **வித³தா⁴தி** | | |

ஆவரணம் என்ற பெயருடைய பெரிய சக்தியினுல் நிர்மல ஸ்வரூபமான ஆத்மதத்வம் மூடப்பட்டபோது புருஷன் அனுத்மாவிடத்தில் "இதுதான் நான்" என்று ஆத்மா வென்கிற எண்ணத்தை மோஹத்தினுல் வைக்கிறன். **(493)**

**यथा प्रसुतिप्रतिभास देहे स्वात्मत्वधीरेष तथा ह्यनात्मनि ।**

**जन्माप्ययक्षुद्भयतृट्छ्रमादी नारोपयत्यात्मनि तस्य धर्मान् ॥ ४९४ ॥**

**யதா² ப்ரஸுதிப்ரதிபா⁴ஸ தே³ஹே**
**ஸ்வாத்மத்வதீ⁴ரேஷ ததா² ஹ்யனாத்மனி ।**
**ஜன்மாப்யயக்ஷுத்³ப⁴யத்ருட்ச்²ரமாதீ³**
**நாரோபயத்யாத்மனி தஸ்ய த⁴ர்மான் ॥ 494 ॥**

| | | |
|---|---|---|
| **प्रसुतिप्रतिभास देहे** | = | தூக்கத்தில் தோன்றும் ஸ்வப்ன சரீரத்தில், |
| **ப்ரஸுதிப்ரதிபா⁴ஸ தே³ஹே** | | |
| **यथा** | = | எப்படியோ, |
| **யதா²** | | |
| **तथा** | = | அப்படி, |
| **ததா²** | | |

**अनात्मनि** = ஆத்மாவல்லாததில்,

**அனுத்மனி**

**स्वात्मत्वधी:** = தன் ஆத்மா என்ற புத்தியுள்ளவனுன,

**ஸ்வாத்மத்வதீ⁴:**

**एष:** = இந்தப் புருஷன்,

**ஏஷ:**

**जन्माप्यय** = பிறவி மரணம்,

**ஜன்மாப்யய**

**क्षुद्भय** = பசி, பயம்,

**க்ஷுத்³ப⁴ய**

**तृट्छ्रमादीन्** = தாகம், சிரமம் முதலிய,

**த்ருட்ச²ரமாதீ³ன்**

**तस्य धर्मान्** = அந்த அநாத்மாவின் தர்மங்களை,

**தஸ்ய த⁴ர்மான்**

**आत्मनि** = ஆத்மாவில்,

**ஆத்மனி**

**आरोपयति** = ஆரோபம் செய்கிறுன்.

**ஆரோபயதி**

நல்ல தூக்கத்தில் தோன்றுகிற (ஸ்வப்ன) தேஹத்தில் எப்படி தன் ஆத்மா வென்கிற புத்தியுள்ளவனுக இருக்கிருனே, அப்படியே அனுத்மாவில் தன் ஆத்மா வென்கிற எண்ணமுள்ளவனுக இவன் அதன் (அனுத்மாவின்) தர்மங்களாகிய ஜனனம், மரணம், பசி, பயம், தாஹம், சிரமம் முதலியவைகளை ஆத்மாவினிடத்தில் ஏற்றிக்கொள்கிறுன். **(494)**

**विक्षेपशक्त्या परिचोद्यमान: करोति कर्माणि उभयात्मकानि ।**
**भुञ्जान एतत्फलमप्युपात्तं परिभ्रमत्येष भवाम्बुराशौ ॥ ४९५ ॥**

**விக்ஷேபஶக்த்யா பரிசோத்³யமான: கரோதி கர்மாணி உப⁴யாத்மகானி ।**
**பு⁴ஞ்ஜான ஏதத்ப²லமப்யுபாத்தம் பரிப்⁴ரமத்யேஷ ப⁴வாம்பு³ராஶௌ ॥ 495 ॥**

**विक्षेपशक्त्या** = விக்ஷேபசக்தியால்,

**விக்ஷேபஶக்த்யா**

**परिचोद्यमान:** = நன்கு தூண்டப்படுகிறவனுக,

**பரிசோத்³யமான:**

**एष:** = இந்த ஜீவன்,

**ஏஷ:**

**उभयात्मकानि** = (புண்யம் பாபம் என்று) இரண்டுவிதமான,

**உப⁴யாத்மகானி**

| | | |
|---|---|---|
| **कर्माणि** | = | கர்மாக்களை, |
| **கர்மாணி** | | |
| **करोति** | = | செய்கிறான், |
| **கரோதி** | | |
| **उपात्तं** | = | ஏற்பட்டதான, |
| **உபாத்தம்** | | |
| **एतत्फलमपि** | = | இதன்பலனையும், |
| **ஏதத்ப²லமபி** | | |
| **भुञ्जान** | = | அனுபவித்துக்கொண்டு, |
| **பு⁴ஞ்ஜான** | | |
| **भवाम्बुराशौ** | = | ஸம்ஸார ஸாசரத்தில், |
| **ப⁴வாம்பு³ராஶௌ** | | |
| **परिभ्रमति** | = | உழலுகிறான். |
| **பரிப்⁴ரமதி** | | |

விக்ஷேபசக்தியினால் ஏவப்பட்டவனாக புண்ணியம் பாபம் என்கிற இரண்டு விதமான கர்மாக்களையும் செய்கிறான். இதன் பலனாக ஏற்படுவதை அனுபவிக்கிறவனாக ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தில் உழலுகிறான். **(495)**

## अध्यासदोषात् समुपागतोऽयं संसारबन्धः प्रबलः प्रतीचः ।
## यद्योगतः क्लिश्यति गर्भवासजन्माप्ययक्लेशभयैरजस्रम् ॥ ४९६ ॥

**அத்⁴யாஸதோ³ஷாத் ஸமுபாக³தோ(அ)யம் ஸம்ஸாரப³ந்த⁴: ப்ரப³ல: ப்ரதீச: ।**
**யத்³யோக³த: க்லிஶ்யதி க³ர்ப⁴வாஸஜன்மாப்யயக்லேஶப⁴யைரஜஸ்ரம் ॥ 496 ॥**

| | | |
|---|---|---|
| **यद्योगतः** | = | எதன் சேர்க்கையினால், |
| **யத்³யோக³த:** | | |
| **अजस्रम्** | = | எப்பொழுதும், |
| **அஜஸ்ரம்** | | |
| **गर्भवास** | = | கர்ப்பத்தில் வாஸம், |
| **க³ர்ப⁴வாஸ** | | |
| **जन्माप्यय** | = | பிறவி மரணம், |
| **ஜன்மாப்யய** | | |
| **क्लेशभयैः** | = | கிலேசம், பயம் இவைகளால், |
| **க்லேஶப⁴யை:** | | |
| **क्लिश्यति** | = | துன்புறுகிறானே, |
| **க்லிஶ்யதி** | | |

**अयं** = இந்த,

**அயம்**

**प्रबल:** = உறுதியான,

**ப்ரப³லः**

**संसारबन्ध:** = ஸம்ஸாரபந்தம்,

**ஸம்ஸாரப³ந்த⁴ः**

**प्रतीच:** = ஆத்மாவிற்கு,

**ப்ரதீசः**

**अध्यासदोषात्** = அத்யாஸம் என்னும் தோஷத்தினுல்,

**அத்⁴யாஸதோ³ஷாத்**

**समुपागत:** = வந்துள்ளது.

**ஸமுபாக³தः**

எதனுடைய சேர்க்கையினுல் கர்ப்பத்தில் வாஸம், பிறப்பு, இறப்பு, கஷ்டம், பயம் இவைகளால் இடைவிடாமல் சிரமப்படுகிருனே, அந்த மிக பலமான ஸம்ஸார பந்தம் அத்யாஸமென்ற தோஷத்தினுல் பிரத்யக் ஆத்மாவிற்கு வந்திருக்கிறது. **(496)**

**अध्यासो नाम खल्वेष वस्तुनो योऽन्यथाग्रह: ।**
**स्वाभाविक भ्रान्तिमूलं संसृते: आदिकारणम् ॥ ४९७ ॥**

**அத்⁴யாஸோ நாம க²ல்வேஷ வஸ்துனோ யோ(அ)ன்யதா²க்³ரஹः ।**
**ஸ்வாபா⁴விக ப்⁴ராந்திமூலம் ஸம்ஸ்ருதேः ஆதி³காரணம் ॥ 497 ॥**

**वस्तुन:** = வஸ்துவைப் பற்றிய,

**வஸ்துனः**

**य:** = எந்த,

**யः**

**अन्यथाग्रह:** = மாறுதலான அறிவு உண்டோ,

**அன்யதா²க்³ரஹः**

**एष:** = இது,

**ஏஷः**

**अध्यासो नाम खलु** = அத்யாஸம் என்பது (இது),

**அத்⁴யாஸோ நாம க²லு**

**स्वाभाविक भ्रान्तिमूलं** = அவித்யையால் ஏற்பட்ட பிராந்தியை

**ஸ்வாபா⁴விக ப்⁴ராந்திமூலம்** மூலமாக உடையது,

**संसृते:** = ஸம்ஸாரத்திற்கு,

**ஸம்ஸ்ருதேः**

**आदिकारणम्** = முதல் காரணம்.
**ஆதி³காரணம்**

வஸ்துவை வேறு விதமாக கிரஹிப்பது என்ற இந்த அத்யாஸம் ஸ்வாபாவிகமான பிராந்தியை மூலமாயுடையது இது ஸம்ஸாரத்திற்கு ஆதிகாரணம் என்பது பிரஸித்தம். **(497)**

**सर्वानर्थस्य तद्बीजं योऽन्यथाग्रह आत्मनः।**
**ततः संसारसंपातः संततक्लेशलक्षणः ॥ ४९८ ॥**

**ஸர்வானர்த²ஸ்ய தத்³பீ³ஜம் யோ(அ)ன்யதா²க்³ரஹ ஆத்மனः।**
**ததः ஸம்ஸாரஸம்பாதः ஸந்ததக்லேஶலக்ஷணः ॥ 498 ॥**

**आत्मनः** = ஆத்மாவைப்பற்றி,
**ஆத்மனः**
**यः अन्यथाग्रहः** = மாறுதலான அறிவ்ய் யாதொன்று உண்டோ,
**யः அன்யதா²க்³ரஹः**
**तत्** = அது,
**தத்**
**सर्वानर्थस्य** = எல்லாத் துன்பத்திற்கும்,
**ஸர்வானர்த²ஸ்ய**
**बीजम्** = காரணம்,
**பீ³ஜம்**
**ततः** = அதிலிருந்து,
**ததः**
**संततक्लेशलक्षणः** = தொடர்ந்து எப்பொழுதும் கிலேசரூபமான,
**ஸந்ததக்லேஶலக்ஷணः**
**संसारसंपातः** = ஸம்ஸாரம் ஏற்படுதல்.
**ஸம்ஸாரஸம்பாதः**

ஆத்மாவை வேறு விதமாக எண்ணுவது தான் எல்லா அனர்த்தத்திற்கும் விதை. அதிலிருந்து தான் துடர்ந்து கிலேச ரூபமாயிருக்கும் ஸம்ஸாரத்தின் உற்பத்தி. **(498)**

**अध्यासादेव संसारो नष्टेऽध्यासे न दृश्यते ।**
**तदेतदुभयं स्पष्टं पश्य त्वं बद्धमुक्तयोः ॥ ४९९ ॥**

**அத்⁴யாஸாதே³வ ஸம்ஸாரோ நஷ்டே(அ)த்⁴யாஸே ந த்³ருஶ்யதே ।**
**ததே³தது³ப⁴யம் ஸ்பஷ்டம் பஶ்ய த்வம் ப³த்³த⁴முக்தயோः ॥ 499 ॥**

| | | |
|---|---|---|
| **अध्यासादेव** | = | அத்யாஸத்திஞல்தான், |
| **அத்⁴யாஸாதே³வ** | | |
| **संसार:** | = | ஜனனமரண ரூபமான ஸமஸாரம் (ஏற்படுகிறது), |
| **ஸம்ஸார:** | | |
| **अध्यासे** | = | அத்யாஸம், |
| **அத்⁴யாஸே** | | |
| **नष्टे** | = | நீங்கிவிட்டால், |
| **நஷ்டே** | | |
| **न दृश्यते** | = | காணப்படுகிறதில்ஊ, |
| **ந த்³ருஶ்யதே** | | |
| **तत् एतत्** | = | அந்த இந்த இரண்டும், |
| **தத் ஏதத்** | | |
| **बद्धमुक्तयो:** | = | அவித்யாபந்தததால் கட்டுப்பட்டவனிடததிலும் |
| **ப³த்³த⁴முக்தயோ:** | | பந்தத்திலிருந் விடுபட்டவனிடத்திலும், |
| **स्पष्टं** | = | நன்கு விளங்குவதை, |
| **ஸ்பஷ்டம்** | | |
| **त्वं** | = | நீ, |
| **த்வம்** | | |
| **पश्य** | = | பார். |
| **பஶ்ய** | | |

அத்யாஸத்திலிருந்து தான் ஜனன மரண ரூபமான ஸம்ஸாரம் ஏற்படுகிறது. அத்யாஸம் போய்விட்டால் ஸம்ஸாரம் காணப்படுகிறதில்ஊ. இவ்விரண்டு விஷயங்கஊயும் நீயே தெளிவாக பத்தனிடத்திலும் (கட்டுண்டவனிடத்திலும், முக்தனிடத்திலும (விடுபட்டவனிடத்திலும்) பார்த்துக் கொள்ளலாம். **(499)**

**बद्धं प्रवृत्तितो विद्धि मुक्तं विद्धि निवृत्तित:।**
**प्रवृत्तिरेव संसारो निवृत्तिर्मुक्तिरिष्यते ॥ ५०० ॥**

**ப³த்³த⁴ம் ப்ரவ்ருத்திதோ வித்³தி⁴ முக்தம் வித்³தி⁴ நிவ்ருத்தித:।**
**ப்ரவ்ருத்திரேவ ஸம்ஸாரோ நிவ்ருத்திர்முக்திரிஷ்யதே ॥ 500 ॥**

| | | |
|---|---|---|
| **प्रवृत्तित:** | = | ப்ரவிருத்தியின மூலம், |
| **ப்ரவ்ருத்தித:** | | |
| **बद्धं** | = | பந்தமுள்ளவஞக, |
| **ப³த்³த⁴ம்** | | |
| **विद्धि** | = | அறிந்துகொள், |
| **வித்³தி⁴** | | |

**निवृत्तितः** = நிவ்ருத்தியின் மூலம்,

**நிவ்ருத்தித:**

**मुक्तं** = விடுபட்டவனாக,

**முக்தம்**

**विद्धि** = அறிந்துகொள் (ஆகையால்),

**வித்³தி⁴**

**प्रवृत्तिरेव** = ப்ரவ்ருத்திதான்,

**ப்ரவ்ருத்திரேவ**

**संसारः** = ஸம்ஸாரமாகவும்,

**ஸம்ஸார:**

**निवृत्तिः** = நிவ்ருத்தி,

**நிவ்ருத்தி:**

**मुक्तिः** = முக்தியாகவும்,

**முக்தி:**

**इष्यते** = கருதப்படுகிறது.

**இஷ்யதே**

ஒருவனுக்கு உலக வியவஹாரங்களில் பிரவிருத்தியிருந்தால் அதிலிருந்து அவனை பந்தமுள்ளவன் என்று அறிந்து கொள். ஒருவனுக்கு பிரவிருத்தி இல்லாமல் நிவிருத்தியிருந்தால், அதிலிருந்து அவனை முக்தியடைந்தவன் என்று அறிந்து கொள். பிரவிருத்திதான் ஸம்ஸாரம், நிவிருத்தியே முக்தி என்று கருதப்படுகிறது. **(500)**

**आत्मनः सोऽयं अध्यासो मिथ्याज्ञानपुरस्सरः ।**
**असत्कल्पोऽपि संसारं तनुते रज्जुसर्पवत् ॥ ५०१ ॥**

**ஆத்மன: ஸோ(அ)யம் அத்⁴யாஸோ மித்²யாஜ்ஞானபுரஸ்ஸர: ।**
**அஸத்கல்போ(அ)பி ஸம்ஸாரம் தனுதே ரஜ்ஜுஸர்பவத் ॥ 501 ॥**

**मिथ्याज्ञानपुरस्सरः** = மித்யாஞானத்தை முன்னிட்டு வந்ததான,

**மித்²யாஜ்ஞானபுரஸ்ஸர:**

**सोऽयं** = அந்த இந்த,

**ஸோ(அ)யம்**

**आत्मनः अध्यासः** = ஆத்மாவின் அத்யாஸமானது,

**ஆத்மன: அத்⁴யாஸ:**

**असत्कल्पोऽपि** = அஸத்தைப் போன்றதாக இருந்தாலும்,

**அஸத்கல்போ(அ)பி**

**रज्जुसर्पवत्** = கயிற்றில் தோன்றும் பாம்புபோல்,

**ரஜ்ஜுஸர்பவத்**

| | | |
|---|---|---|
| **संसारं** **ஸம்ஸாரம்** | = | ஸம்ஸாரத்தை, |
| **तनुते** **தனுதே** | = | விஸ்தரிக்கிறது. |

ஆத்மாவிற்கு ஏற்படும் இந்த அத்யாஸம் என்பது பொய்யான அக்ஞானத்தை முன்னிட்டு ஏற்பட்டுள்ளது. இல்லாத பதார்த்தத்தைப் போலவே இருந்தபோதிலும் கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம் போல, இது ஸம்ஸாரத்தை உண்டு பண்ணுகிறது. **(501)**

(**அவதாரிகை**) ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் அக்ஞானம் உபாதியாயிருக்கையில் ஜீவன் மாத்திரம் ஏன் பந்தத்திற்கு உட்பட்டவனுகிறுன். ஈசுவரன் ஏன் உட்படுவதில்லை, என்ற கேள்விக்கு பதில் சொல்கிறுர்: -

**उपाधियोगसाम्येऽपि जीववत् परमात्मनः ।**
**उपाधिभेदान्नो बन्धः तत्कार्यमपि किंचन ॥ ५०२ ॥**

**உபாதி⁴யோக³ஸாம்யே(அ)பி ஜீவவத் பரமாத்மனः ।**
**உபாதி⁴பே⁴தா³ன்னோ ப³ந்த⁴ः தத்கார்யமபி கிஞ்சன ॥ 502 ॥**

| | | |
|---|---|---|
| **जीववत्** **ஜீவவத்** | = | ஜீவனுக்குப் போல, |
| **परमात्मनः** **பரமாத்மனः** | = | பரமாத்மாவுக்கு, |
| **उपाधियोगसाम्येऽपि** **உபாதி⁴யோக³ஸாம்யே(அ)பி** | = | உபாதியின் ஸம்பந்தம் ஸமமாக இருந்த போதிலும், |
| **उपाधिभेदात्** **உபாதி⁴பே⁴தா³த்** | = | உபாதியிலுள்ள வேற்றுமையால், |
| **बन्धः** **ப³ந்த⁴ः** | = | பந்தமும், |
| **तत्कार्यमपि** **தத்கார்யமபி** | = | அதன் காரியமும், |
| **किंचन** **கிஞ்சன** | = | கொஞ்சமும், |
| **नो** **நோ** | = | இல்லை. |

உபாதியின் ஸம்பந்தம் என்பது ஸமமாயிருந்தபோதிலும் உபாதிகளுக்குள் வித்யாஸமிருப்பதிஞல், ஜீவனுக்கு இருப்பது போல் பரமாத்மாவிற்கு பந்தமும் அதஞல் ஏற்படும் கார்யமும் கொஞ்சமும் கிடையாது. (502)

**अस्योपाधिः शुद्धसत्त्वप्रधाना**
**माया यत्र त्वस्य नास्त्यल्पभावः।**
**सत्वस्यैवोत्कृष्टता तेन बन्धो**
**नो विक्षेपस्तत्कृतो लेशमात्रः॥ ५०३ ॥**

**அஸ்யோபாதி⁴: ஶுத்³த⁴ஸத்த்வப்ரதா⁴ஞ**
**மாயா யத்ர த்வஸ்ய நாஸ்த்யல்பபா⁴வ:।**
**ஸத்வஸ்யைவோத்க்ருஷ்டதா தேன ப³ந்தோ⁴**
**நோ விக்ஷேபஸ்தத்க்ருதோ லேஶமாத்ர: ॥ 503 ॥**

**अस्य** = இந்த ஈசுவரனுடைய,
**அஸ்ய**
**उपाधिः** = உபாதியான,
**உபாதி⁴:**
**माया** = மாயையானது,
**மாயா**
**शुद्धसत्त्वप्रधाना** = சுத்தமான (ரஜஸ், தமஸ் கலப்பில்லாத)
**ஶுத்³த⁴ஸத்த்வப்ரதா⁴ஞ** ஸத்வகுணத்தை முக்யமாக உடையது,
**यत्र** = எந்த மாயையின் நிமித்தமாக,
**யத்ர**
**अस्य** = இந்த ஈசுவரனுக்கு,
**அஸ்ய**
**अल्पभावः** = சிறியதாக ஆகும் தன்மை,
**அல்பபா⁴வ:**
**नास्ति** = இல்லையோ (எதில்),
**நாஸ்தி**
**सत्वस्यैव** = ஸத்வகுணத்திற்கே,
**ஸத்வஸ்யைவ**
**उत्कृष्टता** = சிறப்புத்தன்மையோ,
**உத்க்ருஷ்டதா**
**तेन** = அதஞல்,
**தேன**
**बन्धः** = பந்தமும்,
**ப³ந்த⁴:**

तत्कृतः = அதனுல் ஏற்பட்ட,

தத்க்ருத:

विक्षेपः = விக்ஷேபமும்,

விக்ஷேப:

लेशमात्रः = கொஞ்சம்கூட,

லேஶமாத்ர:

नो = இல்லை.

நோ

இந்த ஈசுவரனுடைய உபாதியான மாயையானது சுத்தமான, ரஜஸ் தமோ குணங்களால் தாக்கப்படாத ஸத்வ குணமொன்றையே முக்யமாகக்கொண்டது. இந்த மாயையின் நிமித்தமாக ஈசுவரனுக்கு சிறிய தன்மை ஏற்படுகிறதில்லை. இதில் ஸத்வகுணமே மேல் நோக்கி இருப்பதால் ஈசுவரனுக்கு பந்தமோ அதன்மூலம் விக்ஷேபமோ சிறிதும் ஏற்படுவதில்லை. **(503)**

**सर्वज्ञोऽप्रतिबद्धबोधविभवस्तेनैव देवः स्वयं**
**मायां स्वामवलम्ब्य निश्चलतया स्वच्छन्दवृत्तिः प्रभुः।**
**सृष्टिस्थित्यदनप्रवेशयमनव्यापारमात्रेच्छया**
**कुर्वन्क्रीडति तद्रजस्तम उभे संस्तभ्य शक्त्या स्वया ॥ ५०४ ॥**

**ஸர்வஜ்ஞோ(அ)ப்ரதிப³த்³த⁴போ³த⁴விப⁴வஸ்தேனைவ தே³வ: ஸ்வயம்**
**மாயாம் ஸ்வாமவலம்ப்³ய நிஶ்சலதயா ஸ்வச்ச²ந்த³வ்ருத்தி: ப்ரபு⁴:।**
**ஸ்ருஷ்டிஸ்தி²த்யத³னப்ரவேஶயமநவ்யாபாரமாத்ரேச்ச²யா**
**குர்வன்க்ரீட³தி தத்³ரஜஸ்தம உபே⁴ ஸம்ஸ்தப்⁴ய ஶக்த்யா ஸ்வயா ॥ 504 ॥**

स्वच्छन्दवृत्तिः = தன் இஷ்டப்படி நடப்பவராயும்,

ஸ்வச்ச²ந்த³வ்ருத்தி:

प्रभुः = ப்ரபுவாயும்,

ப்ரபு⁴:

देवः = பிரகாசிப்பவராயும் உள்ள ஈசுவரன்,

தே³வ:

तेनैव = அந்த சுத்தஸத்வ ப்ரதானமான மாயை

தேனைவ என்னும் உபாதியினுலேயே,

सर्वज्ञः = எல்லாம் அறிந்தவராகவும்,

ஸர்வஜ்ஞ:

अप्रतिबद्धबोधविभवः = தடைபடாத ஞான மகிமையுள்ளவராயும்

அப்ரதிப³த்³த⁴போ³த⁴விப⁴வ: இருந்துகொண்டு,

| | | |
|---|---|---|
| **निश्चलतया**<br>**நிஶ்சலதயா** | = | அசைவற்ற தன்மையுடனேயே, |
| **स्वयं**<br>**ஸ்வயம்** | = | தானே, |
| **स्वां**<br>**ஸ்வாம்** | = | தன்னுடையதான, |
| **मायां**<br>**மாயாம்** | = | மாயையை, |
| **अवलम्ब्य**<br>**அவலம்ப்³ய** | = | ஆச்ரயித்துக்கொண்டு, |
| **अत्र**<br>**அத்ர** | = | இங்கு, |
| **इच्छया**<br>**இச்ச²யா** | = | தன் விருப்பப்படி, |
| **सृष्टिस्थित्यदन**<br>**ஸ்ருஷ்டிஸ்தி²த்யத³ன** | = | ஸிருஷ்டி, பரிபாலனம், ஸம்ஹாரம், |
| **प्रवेशयमनव्यापारं**<br>**ப்ரவேஶயமநவ்யாபாரம்** | = | பிரவேசம் அடக்கியாள்வது இந்த வியாபாரத்தை, |
| **कुर्वन्**<br>**குர்வன்** | = | செய்துகொண்டு, |
| **स्वया शक्त्या**<br>**ஸ்வயா ஶக்த்யா** | = | தனது சக்தியால், |
| **तत् रजः**<br>**தத் ரஜঃ** | = | அந்த ரஜோகுணம், |
| **तमः**<br>**தமঃ** | = | தமோ குணம், |
| **उभे**<br>**உபே⁴** | = | இரண்டையும், |
| **संस्तभ्य**<br>**ஸம்ஸ்தப்⁴ய** | = | அடக்கிக் கொண்டு, |
| **क्रीडति**<br>**க்ரீட³தி** | = | விளையாடுகிறுர். |

இந்த உபாதியினுலேயே ஈசுவரன் ஸர்வக்ஞராயும் தடைபடாத ஞான வைபவமுள்ளவராயும், தன் இஷ்டப்படி நடப்பவராயும் ப்ரபுவாயுமிருந்துகொண்டு அசைவற்ற தன்மையுடனேயே தானே தன்னுடைய மாயையை அவலம்பித்துக் கொண்டு ஜகத்தின் ஸ்ருஷ்டி. ஸ்திதி, லயம் அதில் பிரவேசம், அதன் நியமனம், ஆகிய செய்கையை தன் இச்சையினுலேயே செய்துகொண்டு, தன்னுடைய

சக்தியினுல் அந்த ரஜஸ் தமஸ் இரண்டையும் வேஸ்ல செய்யமுடியாமல் அடக்கிக்கொண்டு விஸளயாடுகிறுர். **(504)**

**तस्मात् आवृतिविक्षेपौ किंचित् कर्तुं न शक्नुतः ।**
**स्वयमेव स्वतन्त्रोऽसौ तत्प्रवृत्तिनिरोधयोः ॥ ५०५ ॥**

**தஸ்மாத் ஆவ்ருதிவிக்ஷேபௌ கிஞ்சித் கர்தும் ந ஶக்னுதः ।**
**ஸ்வயமேவ ஸ்வதந்த்ரோ(அ)ஸௌ தத்ப்ரவ்ருத்திநிரோத⁴யோः ॥ 505 ॥**

| | | |
|---|---|---|
| **तस्मात्** **தஸ்மாத்** | = | ஆகையால், |
| **आवृतिविक्षेपौ** **ஆவ்ருதிவிக்ஷேபௌ** | = | ஆவரணமும் விக்ஷேபமும், |
| **किंचित्** **கிஞ்சித்** | = | (ஈசுவரனிடம்) ஒன்றையும், |
| **कर्तुं** **கர்தும்** | = | செய்வதற்கு, |
| **न शक्नुतः** **ந ஶக்னுதः** | = | சக்தியுள்ளவைகளில்ஸ்ல, |
| **तत्प्रवृत्तिनिरोधयोः** **தத்ப்ரவ்ருத்திநிரோத⁴யோः** | = | அவைகஸள ப்ரவர்த்திக்கும்படி செய்வதிலும் தடுப்பதிலும், |
| **असौ** **அஸௌ** | = | அந்த ஈசுவரன், |
| **स्वयमेव** **ஸ்வயமேவ** | = | தானே, |
| **स्वतन्त्रः** **ஸ்வதந்த்ரः** | = | ஸ்வதந்தரர். |

ஆகையினுல் ஈசுவரனிடத்தில் ஆவரணம் விக்ஷேபம் என்கிற இரண்டும் ஒன்றும் செய்யமுடியவில்ஸ்ல. ஈசுவரன் அந்த ஆவரணம் விக்ஷேபம், இரண்டையும் பிரவர்த்திப்பதிலும் அடக்குவதிலும் தானே ஸ்வதந்திரமாயிருப்பவர். **(505)**

**तमेव साधुकर्मेति श्रुतिर्वक्ति महेशितुः।**
**निग्रहेऽनुग्रहे शक्तिः आवृतिक्षेपयोर्यतः ॥ ५०६ ॥**

**தமேவ ஸாது⁴கர்மேதி ஶ்ருதிர்வக்தி மஹேஶிதுः।**
**நிக்³ரஹே(அ)னுக்³ரஹே ஶக்திः ஆவ்ருதிக்ஷேபயோர்யதः ॥ 506 ॥**

| | | |
|---|---|---|
| **साधुकर्म इति** <br> **ஸாது⁴கர்ம இதி** | = | "இவர் தான் நல்ல கர்மாவையும் கெட்ட கர்மாவையும் செய்யும்படி செயகிறார்" என்ற, |
| **श्रुति:** <br> **ஶ்ருதி:** | = | வேதம், |
| **निग्रहे** <br> **நிக்³ரஹே** | = | நிக்ரஹத்திலும், |
| **अनुग्रहे** <br> **அனுக்³ரஹே** | = | அநுக்ரஹத்திலும், |
| **महेशितु:** <br> **மஹேஶிது:** | = | ஈசுவரனுடைய, |
| **तमेव** <br> **தமேவ** | = | அந்த ஸ்வாதந்த்ர்யத்தையே, |
| **वक्ति** <br> **வக்தி** | = | சொல்கிறது, |
| **यत:** <br> **யத:** | = | எந்த ஈசுவரனிடமிருந்து, |
| **आवृतिक्षेपयो:** <br> **ஆவ்ருதிக்ஷேபயோ:** | = | ஆவரண விக்ஷேபங்களுக்கு, |
| **शक्ति:** <br> **ஶக்தி:** | = | சக்தி ஏற்படுகிறதோ. |

**'एष होत्र साधु कर्म कारयति तं यमुनिनीषते।**
**एष ह्येवासाधु कर्म कारयति तं यमधो निनीषते ।'**

**'ஏஷ ஹோத்ர ஸாது⁴ கர்ம காரயதி தம் யமுனினீஷதே।**
**ஏஷ ஹ்யேவாஸாது⁴ கர்ம காரயதி தம் யமதோ⁴ நினீஷதே ।'**

என்ற சுருதி நிக்ரஹத்திலும் அநுக்ரஹத்திலும் ஈசுவரனுக்கு பூர்ணஸ்வாதந்தர்யம் இருப்பதாக சொல்கிறது. ஆவரண விக்ஷேபங்களுக்கு சக்தியும் ஈசுவரனிடமிருந்து தான் ஏற்படுகிறது. ஆவரணம், விக்ஷேபம் இரண்டிற்கும் சக்தியைக் கொடுத்து அவைகளை ஏவுவது ஈசுவரன்தான் ஆவரண விக்ஷேபங்களைக் கொடுத்து ஒருவனை நிக்ரஹம் செய்கிறுர். அவைகளை விலக்கி மற்றொருவனுக்கு அனுக்ரஹம் செய்கிறுர். இதில் அவருக்கு பூர்ண ஸ்வாதந்தர்யம் உண்டு என்று சுருதி சொல்கிறது. ஆவரண விக்ஷேபங்களுக்கே சக்தியைக் கொடுத்து அவைகளை ஏவுகின்ற ஈசுவரனை அவை எப்படி தன்வசப்படுத்தமுடியும்? ஆகையால் ஈசுவரனுக்கு ஆவரண விக்ஷேபங்கள் கிடையாது. **(506)**

**(அவதாரிகை)** ஜீவனுக்கு இவ்வித ஸ்வாதந்திரியம் இல்லாமல் ஸத்வம் குறைந்து ரஜஸ் தமஸ் மேலிட்டிருப்பதினுல் பந்தம் ஏற்படுகிறது என்பதைக் காட்டுகிருர்: -

**रजसस्तमसश्चैव प्राबल्यं सत्त्वहानतः।**
**जीवोपाधौ तथा जीवे तत्कार्यं बलवत्तरम् ॥ ५०७ ॥**

**ரஜஸஸ்தமஸஶ்சைவ ப்ராப³ல்யம் ஸத்த்வஹானத:।**
**ஜீவோபாதௌ⁴ ததா² ஜீவே தத்கார்யம் ப³லவத்தரம் ॥ 507 ॥**

**जीवोपाधौ** = ஜீவனுடைய உபாதியில்,
**ஜீவோபாதௌ⁴**
**सत्त्वहानतः** = ஸத்வ குணம் மங்கியிருப்பதால்,
**ஸத்த்வஹானத:**
**रजसः** = ரஜோகுணத்திற்கும்,
**ரஜஸ:**
**तमसश्चैव** = தமோகுணத்திற்கும்,
**தமஸஶ்சைவ**
**प्राबल्यं** = அதிக பலம் உள்ளது,
**ப்ராப³ல்யம்**
**तथा** = அப்படியே,
**ததா²**
**जीवे** = ஜீவனிடம்,
**ஜீவே**
**तत्कार्यं** = அந்த ரஜஸ்தமோ குணங்களின் காரியமும்,
**தத்கார்யம்**
**बलवत्तरम्** = மிகுந்த பலமுள்ளதாயிருக்கிறது.
**ப³லவத்தரம்**

ஜீவனுடைய உபாதியில் ஸத்வம் மங்கி, ரஜஸிற்கும் தமஸிற்கும் பிரபல மாயிருக்கும் தன்மையிருக்கிறது. அப்படியே அவர் ரஜோகுண தமோ குணங்களின் கார்யமும் ஜீவனிடத்தில் மிகவும் பலமாயிருக்கிறது. **(507)**

**तेन बन्धोऽस्य जीवस्य संसारोऽपि च तत्कृतः।**
**संप्राप्तः सर्वदा यत्र दुःखं भूयः स ईक्षते ॥ ५०८ ॥**

**தேன ப³ந்தோ⁴(அ)ஸ்ய ஜீவஸ்ய ஸம்ஸாரோ(அ)பி ச தத்க்ருத:।**
**ஸம்ப்ராப்த: ஸர்வதா³ யத்ர து³:க²ம் பூ⁴ய: ஸ ஈக்ஷதே ॥ 508 ॥**

**तेन** = அதனால்,

**தேன**

**अस्य जीवस्य** = இந்த ஜீவனுக்கு,

**அஸ்ய ஜீவஸ்ய**

**बन्धः** = பந்தமும்,

**ப³ந்த⁴:**

**तत्कृतः** = அதனால் ஏற்பட்ட,

**தத்க்ருத:**

**संसारोऽपि च** = ஸம்ஸாரமும்,

**ஸம்ஸாரோ(அ)பி ச**

**संप्राप्तः** = வந்துள்ளது,

**ஸம்ப்ராப்த:**

**यत्रः** = எதில்,

**யத்ர:**

**सः** = அவன்,

**ஸ:**

**सर्वदा** = எப்பொழுதும்,

**ஸர்வதா³**

**भूयः** = அதிகமாக,

**பூ⁴ய:**

**दुःखं** = துன்பத்தை,

**து³:க²ம்**

**ईक्षते** = காண்கிறானே.

**ஈக்ஷதே**

அதனால் இந்த ஜீவனுக்கு பந்தமும் அதனால் உண்டாகும் ஸம்ஸாரமும் ஏற்படுகிறது. இந்த ஸம்ஸாரத்தில் அவன் ஏராளமாக எப்பொழுதும் துக்கத்தை அனுபவிக்கிறான். **(508)**

**एतस्य संसृतेर्हेतुः अध्यासोऽर्थविपर्ययः ।**
**अभ्यासमूलं अज्ञानं आहुः आवृतिलक्षणम् ॥ ५०९ ॥**

**ஏதஸ்ய ஸம்ஸ்ருதேர்ஹேது: அத்⁴யாஸோ(அ)ர்த²விபர்யய: ।**
**அப்⁴யாஸமூலம் அஜ்ஞானம் ஆஹு: ஆவ்ருதிலக்ஷணம் ॥ 509 ॥**

**एतस्य** = இந்த,

**ஏதஸ்ய**

**संसृते:** = ஸம்ஸாரத்திற்கு,

**ஸம்ஸ்ருதே:**

**अर्थविपर्यय:** = பொருளை மாற்றியறிவது என்னும்,

**அர்த²விபர்யய:**

**अध्यास:** = அத்யாஸம்,

**அத்⁴யாஸ:**

**हेतु:** = காரணம்,

**ஹேது:**

**आवृतिलक्षणम्** = மறைத்தல் வடிவமான,

**ஆவ்ருதிலக்ஷணம்**

**अज्ञानं** = அக்ஞானத்தை,

**அஜ்ஞானம்**

**अभ्यासमूलं** = அத்யாஸத்திற்கு காரணமாக,

**அப்⁴யாஸமூலம்**

**आहु:** = சொல்கிறுர்கள்.

**ஆஹு:**

இந்த ஸம்ஸாரத்திற்குக் காரணம் விஷயத்தை மாற்றியறிவது என்னும் அத்யாஸம். அத்யாஸத்திற்குக் காரணம் மறைத்தலை லக்ஷணமாயுடைய அக்ஞானம் என்று சொல்கிறுர்கள். **(509)**

(**அவதாரிகை**) இவ்விதம் ஸம்ஸாரத்திற்கு மூலகாரணமாயிருக்கும் அக்ஞானத்தைக் கூறிவிட்டு இனி அந்த அக்ஞானத்தைப் போக்கடிக்கவேண்டுமாஞல் அதற்கு நேர் விரோதியான ஞானத்திஞல்தான் ஸாத்தியப்படும். கர்மாவிஞலேயோ வேறு எந்த ஸாதனத்திஞலேயோ முடியாது என்பதை வற்புறுத்திச் சொல்கிறுர்: -

**अज्ञानस्य निवृत्तिस्तु ज्ञानेनैव न कर्मणा ।**
**अविरोधितया कर्म नैवाज्ञानस्य बाधकम् ॥ ५१० ॥**

**அஜ்ஞானஸ்ய நிவ்ருத்திஸ்து ஜ்ஞானேனைவ ந கர்மணு ।**
**அவிரோதி⁴தயா கர்ம நைவாஜ்ஞானஸ்ய பா³த⁴கம் ॥ 510 ॥**

**ज्ञानेनैव** = ஞானத்தால்தான்,

**ஜ்ஞானேனைவ**

**अज्ञानस्य** = அக்ஞானத்திற்கு,

**அஜ்ஞானஸ்ய**

**निवृत्ति** = நாசம் ஏற்படுகிறது,

**நிவ்ருத்தி**

**कर्मणा** = கர்மாவினல்,

**கர்மணு**

**न** = ஏற்படாது,

**ந**

**अविरोधितया** = விரோதமில்லாததால்,

**அவிரோதி⁴தயா**

**कर्म** = கர்மா,

**கர்ம**

**नैवाज्ञानस्य बाधकम्** = அக்ஞானத்தை அழிப்பதாக ஆகாது.

**நைவாஜ்ஞானஸ்ய பா³த⁴கம்**

அக்ஞானத்தின் நிவிருத்தியோ ஞானத்தினல் தான் ஸாத்யம், கர்மாவால் ஸாத்யமில்லை. கர்மா அக்ஞானத்திற்கு விரோதியாயில்லாததினல் கர்மா அக்ஞானத்தை பாதிக்கக் கூடியதேயில்லை. **(510)**

**कर्मणा जायते जन्तुः कर्मणैव प्रलीयते ।**
**कर्मणः कार्यमेवैषा जन्ममृत्यु परम्परा ॥ ५११ ॥**

**கர்மணு ஜாயதே ஜந்து꞉ கர்மணைவ ப்ரலீயதே ।**
**கர்மண꞉ கார்யமேவைஷா ஜன்மம்ருத்யு பரம்பரா ॥ 511 ॥**

**नैतस्मात् कर्मणः कार्यं अन्यदस्ति विलक्षणम् ॥ ५१२ ॥**

**நைதஸ்மாத் கர்மண꞉ கார்யம் அன்யத³ஸ்தி விலக்ஷணம் ॥ 512 ॥**

**कर्मणा** = கர்மாவினல்,

**கர்மணு**

**जन्तुः** = பிராணி,

**ஜந்து꞉**

**जायते** = பிறக்கிறது,

**ஜாயதே**

**कर्मणैव** = கர்மாவினல் தான்,

**கர்மணைவ**

**प्रलीयते** = நாசமடைகிறது,

**ப்ரலீயதே**

**एषा** = இந்த,

**ஏஷா**

**जन्ममृत्यु परम्परा एव** = பிறவி, மரணம் இவற்றின் பரம்பரைதான்,

**ஜன்மம்ருத்யு பரம்பரா ஏவ**

| | | |
|---|---|---|
| **कर्मण: कार्यं** | = | கர்மாவின் காரியம், |
| **கர்மண꞉ கார்யம்** | | |
| **एतस्मात्** | = | இதைக்காட்டிலும், |
| **ஏதஸ்மாத்** | | |
| **विलक्षणम्** | = | விலக்ஷணமான, |
| **விலக்ஷணம்** | | |
| **अन्यत्** | = | வேறு, |
| **அன்யத்** | | |
| **कार्यं** | = | காரியம், |
| **கார்யம்** | | |
| **कर्मण:** | = | கர்மாவிற்கு, |
| **கர்மண꞉** | | |
| **नास्ति** | = | இல்லை. |
| **நாஸ்தி** | | |

கர்மாவினால் தான் ஜந்து பிறக்கிறது. கர்மாவினால் தான் இறக்கிறது. தொடர்ச்சியாக வரும் ஜனன மரணங்கள் தான் கர்மாவின் கார்யம். இதைத்தவிர விலக்ஷணமான வேறு காரியமொன்றும் கர்மாவிற்குக் கிடையாது. **(511-512)**

**अज्ञानकार्यं तत्कर्म यतोऽज्ञानेन वर्धते ।**
**यद्येन वर्धते तेन नाशस्तस्य न सिध्यति ॥ ५१३ ॥**

**அஜ்ஞானகார்யம் தத்கர்ம யதோ(அ)ஜ்ஞானேன வர்த⁴தே ।**
**யத்³யேன வர்த⁴தே தேன நாஶஸ்தஸ்ய ந ஸித்⁴யதி ॥ 513 ॥**

| | | |
|---|---|---|
| **यत:** | = | எதனால், |
| **யத꞉** | | |
| **अज्ञानेन** | = | அக்ஞானத்தால், |
| **அஜ்ஞானேன** | | |
| **वर्धते** | = | வளருகிறதோ (அதனால்), |
| **வர்த⁴தே** | | |
| **तत्कर्म** | = | அந்த கர்மா, |
| **தத்கர்ம** | | |
| **अज्ञानकार्यं** | = | அக்ஞானத்தின் காரியம், |
| **அஜ்ஞானகார்யம்** | | |
| **यत्** | = | எது, |
| **யத்** | | |

**येन** = எதனுல்,

**யேன**

**वर्धते** = வளருகிறதோ,

**வர்த⁴தே**

**तस्य** = அதற்கு,

**தஸ்ய**

**तेन** = அதனுல்,

**தேன**

**नाशः** = அழிவு,

**நாஶ:**

**न सिध्यति** = ஏற்படாது.

**ந ஸித்⁴யதி**

அந்த கர்மாவும் அக்ஞானத்திஞல் விருத்தியடைகிறபடியால், அது அக்ஞான த்தின் கார்யமேயாகும். எது எதனுல் விருத்தியடைகிறதோ, அதற்கு அதனுல் நாசம் ஏற்படாது. **(513)**

**येन यस्य सहावस्था निरोधाय न कल्पते ।**
**नाशकत्वं तदुभयोः को नु कल्पयितुं क्षमः ॥ ५१४ ॥**

**யேன யஸ்ய ஸஹாவஸ்தா² நிரோதா⁴ய ந கல்பதே ।**
**நாஶகத்வம் தது³ப⁴யோ: கோ நு கல்பயிதும் க்ஷம: ॥ 514 ॥**

**यस्य** = எதற்கு,

**யஸ்ய**

**येन** = எதனேடு,

**யேன**

**सहावस्था** = கூட இருப்பதை,

**ஸஹாவஸ்தா²**

**निरोधाय** = தடுப்பதற்கு,

**நிரோதா⁴ய**

**न कल्पते** = (ஒருவரும்) சக்தியுள்ளவனில்லையோ,

**ந கல்பதே**

**तदुभयोः** = அவ்விரண்டிற்கும்,

**தது³ப⁴யோ:**

**नाशकत्वं** = (ஒன்றுக்கொன்று) அழிக்கும் தன்மையை,

**நாஶகத்வம்**

| | | |
|---|---|---|
| **कल्पयितुं** | = | உண்டுபண்ணுவதற்கு, |
| **கல்பயிதும்** | | |
| **को नु** | = | எவன் தான், |
| **கோ நு** | | |
| **क्षमः** | = | சக்தியுள்ளவன்? |
| **க்ஷம:** | | |

ஒன்றுக்கொன்று பிரிக்கமுடியாதபடி இரண்டு வஸ்துக்கள் சேர்ந்தேயிருக்குமானல் அவற்றில் ஒன்று மற்றொன்றை எப்படி அழிக்கக்கூடும்? அழிக்கும் சக்தியை அதற்கு யார்தான் கொடுக்கமுடியும்? **(514)**

## सर्वं कर्माविरोध्येव यतोऽज्ञानस्य सर्वदा ।
## ततोऽज्ञानस्य विच्छित्तिः कर्मणा नैव सिध्यति ॥ ५१५ ॥

**ஸர்வம் கர்மாவிரோத்⁴யேவ யதோ(அ)ஜ்ஞானஸ்ய ஸர்வதா³ ।**
**ததோ(அ)ஜ்ஞானஸ்ய விச்சி²த்தி: கர்மணா நைவ ஸித்⁴யதி ॥ 515 ॥**

| | | |
|---|---|---|
| **यतः** | = | எதனல், |
| **யத:** | | |
| **सर्वं कर्म** | = | எல்லா கர்மாவும், |
| **ஸர்வம் கர்ம** | | |
| **सर्वदा** | = | எப்பொழுதும், |
| **ஸர்வதா³** | | |
| **अज्ञानस्य** | = | அக்ஞானத்திற்கு, |
| **அஜ்ஞானஸ்ய** | | |
| **अविरोधि एव** | = | விரோதியாகவே இல்லையோ, |
| **அவிரோதி⁴ ஏவ** | | |
| **ततः** | = | அதனல், |
| **தத:** | | |
| **कर्मणा** | = | கர்மாவினல், |
| **கர்மணா** | | |
| **अज्ञानस्य** | = | அக்ஞானத்தின், |
| **அஜ்ஞானஸ்ய** | | |
| **विच्छित्तिः** | = | நாசம், |
| **விச்சி²த்தி:** | | |
| **नैव सिध्यति** | = | ஏற்படவே ஏற்படாது. |
| **நைவ ஸித்⁴யதி** | | |

எல்லாக் கர்மாவுமே எப்பொழுதும் அக்ஞானத்திற்கு விரோதியாகவே இல்லை. ஆகையால் அக்ஞானத்தின் நிவிருத்தி கர்மாவினல் ஏற்படவே ஏற்படாது. **(515)**

**यस्य प्रध्वंसजनको यत्संयोगोऽस्ति तत्क्षणे ।**
**तयोरेव विरोधित्वं युक्तं भिन्नस्वभावयोः ॥ ५१६ ॥**

**யஸ்ய ப்ரத்⁴வம்ஸஜனகோ யத்ஸம்யோகோ³(அ)ஸ்தி தத்க்ஷணே ।**
**தயோரேவ விரோதி⁴த்வம் யுக்தம் பி⁴ன்னஸ்வபா⁴வயோ: ॥ 516 ॥**

**यत्संयोगः** = எதன் சேர்க்கை,
**யத்ஸம்யோக³:**
**तत्क्षणे** = அதே சமயத்தில்,
**தத்க்ஷணே**
**यस्य** = எதன்,
**யஸ்ய**
**प्रध्वंसजनकः** = அழிவை உண்டுபண்ணுகிறதாக,
**ப்ரத்⁴வம்ஸஜனக:**
**आस्ति** = இருக்கிறதோ,
**ஆஸ்தி**
**भिन्नस्वभावयोः** = வெவ்வேறு ஸ்வபாவமுள்ள,
**பி⁴ன்னஸ்வபா⁴வயோ:**
**तयोरेव** = அவ்விரண்டிற்கும் தான்,
**தயோரேவ**
**विरोधित्वं** = விரோதியாயிருக்கும் தன்மை,
**விரோதி⁴த்வம்**
**युक्तं** = நியாயம்.
**யுக்தம்**

எதனுடைய சேர்க்கை அதே க்ஷணத்தில் எதனுடைய நாசத்தை உண்டு பண்ணுகிறதோ, அவ்வித வேறுபட்ட ஸ்வபாவங்களோடு கூடிய இரண்டு பதார்த்த ங்களுக்குள் தான் விரோதியாயிருக்கும் தன்மை நியாயமாகும். **(516)**

**तमःप्रकाशयोः यद्वत् परस्परविरोधिता ।**
**अज्ञानज्ञानयोः तद्वत् उभयोरेव दृश्यते ॥ ५१७ ॥**

**தம:ப்ரகாஶயோ: யத்³வத் பரஸ்பரவிரோதி⁴தா ।**
**அஜ்ஞானஜ்ஞானயோ: தத்³வத் உப⁴யோரேவ த்³ருஶ்யதே ॥ 517 ॥**

**यद्वत्** = எப்படி,
**யத்³வத்**
**तमःप्रकाशयोः** = இருளுக்கும் வெளிச்சத்திற்கும்,
**தம:ப்ரகாஶயோ:**

**परस्परविरोधिता** = ஒன்றுக்கொன்று விரோதியாயிருக்கும் தன்மை உள்ளதோ,

**பரஸ்பரவிரோதி⁴தா**

**तद्वत्** = அதுபோலவே,

**தத்³வத்**

**अज्ञानज्ञानयोः** = அக்ஞானம் ஞானம் இவ்விரண்டிற்கும் தான்,

**அஜ்ஞானஜ்ஞானயோ:**

**दृश्यते** = (விரோதம்) காணப்படுகிறது.

**த்³ருஶ்யதே**

இருட்டிற்கும் வெளிச்சத்திற்கும் எப்படி பரஸ்பரம் விரோதியாயிருக்கும் தன்மையோ, அப்படியே அக்ஞானம், ஞானம் இவ்விரண்டிற்கும்தான் பரஸ்பரம் விரோதியாயிருக்கும் தன்மை காணப்படுகிறது. **(517)**

**न ज्ञानेन विनाऽज्ञाननाशः केनापि सिध्यति ।**
**तस्मात् अज्ञानविच्छित्त्यै ज्ञानं संपादयेत् सुधीः ॥ ५१८ ॥**

**ந ஜ்ஞானேன விஞ(அ)ஜ்ஞானநாஶ: கேஞபி ஸித்⁴யதி ।**
**தஸ்மாத் அஜ்ஞானவிச்சி²த்த்யை ஜ்ஞானம் ஸம்பாத³யேத் ஸுதீ⁴: ॥ 518 ॥**

**ज्ञानेन विना** = ஞானத்தைத்தவிற,

**ஜ்ஞானேன விஞ**

**केनापि** = வேறு எதனுலும்,

**கேஞபி**

**अज्ञाननाशः** = அக்ஞானத்தின் நாசம்,

**அஜ்ஞானநாஶ:**

**न सिध्यति** = ஏற்படாது,

**ந ஸித்⁴யதி**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**सुधीः** = நல்ல புத்தியுள்ளவன்,

**ஸுதீ⁴:**

**अज्ञानविच्छित्त्यै** = அக்ஞானத்தின் நாசத்திற்காக,

**அஜ்ஞானவிச்சி²த்த்யை**

**ज्ञानं** = ஞானத்தை,

**ஜ்ஞானம்**

**संपादयेत्** = ஸம்பாதிக்கவேண்டும்.

**ஸம்பாத³யேத்**

அந்த அக்ஞானத்திற்கு ஞானத்தைத் தவிற வேறு எதிஞலும் நாசம் ஏற்படாது. ஆகையால் அக்ஞானம் போவதற்கு நல்ல புத்தியுள்ளவன் ஞானத்தையே ஸம்பாதிக்க வேண்டும். **(518)**

(**அவதாரிகை**) ஸம்ஸார பந்தம் போவதற்கு அத்யாஸம் போக வேண்டுமென்றும், அத்யாஸம் போவதற்கு அக்ஞானம் போகவேண்டுமென்றும், அக்ஞானம் போவதற்கு ஞானம் ஒன்றுதான் ஸாதனமென்றும், இதுவரை ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லிவந்தார். இனி அந்த ஞானம் ஏற்படுவதற்கு என்ன வேண்டுமென்பதைச் சொல்லவாரம்பிக்கையிலேயே, ஆத்மஞானம் ஏற்படுவதற்கு ஆத்மாவை ஆத்மாவல்லாததிலிருந்து பிரித்து அறியவேண்டியது அவசியம் என்கிருர். அவ்விதம் பிரிப்பதில் என்ன சிரமம் என்று கேட்டால், ஆத்மாவின் தன்மை எவ்விதம், அஞத்மாவின் தன்மை எவ்விதம் என்று தெரிந்துகொள்ளாமல் அவ்விரண்டையும் பிரிப்பது மிகவும் சிரமம் என்றும், வேதாந்தமறியாதவர்கள் தன் யுக்தியிஞலேயே பிரித்துப்பார்க்க யத்தனிப்பவர்கள் பலவிதமாகத் தவறியிருக்கிருர்களென்றும் காட்டுவதற்கு அவசியம் ஏற்பட்டது. ஆகையால் இவ்விடத்தில் ஆத்மாவைப்பற்றி ஏற்பட்டிருக்கும் ஒவ்வொரு வாதமாக எடுத்துச் சொல்கிருர்: -

**आत्मानात्मविवेकेन ज्ञानं सिध्यति नान्यथा ।**
**युक्त्यात्मानात्मनोस्तस्मात्करणीयं विवेचनम् ।**
**अनात्मन्यात्मताबुद्धिग्रन्थिर्येन विदीर्यते ॥ ५१९ ॥**

**ஆத்மாஞத்மவிவேகேன ஜ்ஞானம் ஸித்⁴யதி நான்யதா² ।**
**யுக்த்யாத்மாஞத்மனேஸ்தஸ்மாத்கரணீயம் விவேசனம் ।**
**அஞத்மன்யாத்மதாபு³த்³தி⁴க்³ரந்தி²ர்யேன விதீ³ர்யதே ॥ 519 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मानात्मविवेकेन** ஆத்மாஞத்மவிவேகேன | = | ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரித்தறிவதஞல், |
| **ज्ञानं** ஜ்ஞானம் | = | ஞானம், |
| **सिध्यति** ஸித்⁴யதி | = | ஏற்படும், |
| **अन्यथा** அன்யதா² | = | வேறுவிதமாக, |
| **न** ந | = | ஏற்படாது, |
| **तस्मात्** தஸ்மாத் | = | ஆகையால், |
| **युक्त्या** யுக்த்யா | = | யுக்கியிஞல், |

| | | |
|---|---|---|
| **आत्मानात्मनोः** | = | ஆத்மா, அநாத்மா இவைகளின், |
| **ஆத்மானுத்மனேः** | | |
| **विवेचनम्** | = | பிரித்து அறிவது, |
| **விவேசனம்** | | |
| **करणीयं** | = | செய்யத்தக்கது, |
| **கரணீயம்** | | |
| **येन** | = | எதனுல், |
| **யேன** | | |
| **अनात्मनि** | = | அநாத்மாவில், |
| **அனுத்மனி** | | |
| **आत्मताबुद्धिग्रन्थिः** | = | ஆத்மா என்ற எண்ணமாகிற முடிச்சு, |
| **ஆத்மதாபு³த்³தி⁴க்³ரந்தி²ः** | | |
| **विदीर्यते** | = | அறுக்கப்படுமோ. |
| **விதீ³ர்யதே** | | |

ஆத்மா அனுத்மா இரண்டையும் பிரித்தறிவதினுல்தான் ஞானம் ஏற்படுகிறது. வேறுவிதமாய் ஏற்படாது. ஆகையால் யுக்தியைக்கொண்டு அந்த ஆத்மாவிற்கும் அனுத்மாவிற்கும் உள்ள வித்யாஸத்தைத் தெரிவிக்கும் விவேசனம் செய்ய வேண்டும். இந்த விவேசனத்தால், ஆத்மாவல்லாததை ஆத்மா என்று எண்ணுவ தாகிற முடிச்சு அறுந்துபோய்விடும். **(519)**

**आत्मानात्मविवेकार्थं विवादोऽयं निरूप्यते ।**
**येनात्मानात्मनोस्तत्त्वं विविक्तं प्रस्फुटायते ॥ ५२० ॥**

**ஆத்மானாத்மவிவேகார்த²ம் விவாதோ³(அ)யம் நிரூப்யதே ।**
**யேனுத்மானுத்மனேஸ்தத்த்வம் விவிக்தம் ப்ரஸ்பு²டாயதே ॥ 520 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मानात्मविवेकार्थं** | = | ஆத்மாவையும் அநாத்மாவையும் |
| **ஆத்மானுத்மவிவேகார்த²ம்** | | பிரித்துக்காட்டுவதற்காக, |
| **अयं विवादः** | = | இந்த விவாதம், |
| **அயம் விவாத³ः** | | |
| **निरूप्यते** | = | நிரூபணம் செய்யப்படுகிறது, |
| **நிரூப்யதே** | | |
| **येन** | = | எதனுல், |
| **யேன** | | |
| **आत्मानात्मविवेकार्थं** | = | ஆத்மா அநாத்மா இவ்விரண்டின் உண்மை |
| **ஆத்மானாத்மவிவேகார்த²ம்** | | ஸ்வரூபம், |
| **विविक्तं** | = | நன்கு பிரித்து, |
| **விவிக்தம்** | | |

**प्रस्फुटायते** = தெளிவாக்கப்படுமோ.
**ப்ரஸ்பு²டாயதே**

ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்துக் காட்டுவதற்காக, இந்த பலவித வாதம் நிரூபணம் செய்யப்படுகிறது. இந்த நிரூபணத்தினால் ஆத்மா அனாத்மா இரண்டின் வாஸ்தவமான தன்மை தனித்தனியே நன்கு தெளிவுபடுத்தப்படுகிறது. **(520)**

**मूढा अश्रुतवेदान्ताः स्वयं पण्डितमानिनः ।**
**ईशप्रसादरहिताः सद्गुरोश्च बहिर्मुखाः ।**
**विवदन्ति प्रकारं तं शृणु वक्ष्यामि सादरम् ॥ ५२१ ॥**

**மூடா⁴ அஶ்ருதவேதா³ந்தா: ஸ்வயம் பண்டி³தமானின: ।**
**ஈஶப்ரஸாத³ரஹிதா: ஸத்³கு³ரோஶ்ச ப³ஹிர்முகா²: ।**
**விவத³ந்தி ப்ரகாரம் தம் ஶ்ருணு வக்ஷ்யாமி ஸாத³ரம் ॥ 521 ॥**

**अश्रुतवेदान्ताः** = வேதத்தின் கடைசியிலுள்ள உபநிஷத்துக்களின்
**அஶ்ருதவேதா³ந்தா:** கருத்துக்களைக் கேட்டுத்தெரிந்து கொள்ளாத வர்களாயும்,
**स्वयं पण्डितमानिनः** = தானே கல்வியறிவுள்ளவன் என்று கர்வம்
**ஸ்வயம் பண்டி³தமானின:** கொண்டவர்களும்,
**ईशप्रसादरहिताः** = ஈசுவரனின் அருளைப்பெறாதவர்களும்,
**ஈஶப்ரஸாத³ரஹிதா:**
**सद्गुरोश्च बहिर्मुखाः** = நல்ல குருவை அண்டாமல் வெளிப்பார்வை
**ஸத்³கு³ரோஶ்ச ப³ஹிர்முகா²:** யுள்ளவர்களுமான,
**मूढाः** = மூடர்கள்,
**மூடா⁴:**
**विवदन्ति** = (ஆத்ம விஷயமாக) வியவஹாரம் செய்கிறார்கள்.
**விவத³ந்தி**
**तं प्रकारं** = அந்த விதத்தை,
**தம் ப்ரகாரம்**
**वक्ष्यामि** = சொல்கிறேன்,
**வக்ஷ்யாமி**
**सादरम्** = கவனமாக,
**ஸாத³ரம்**
**शृणु** = கேள்.
**ஶ்ருணு**

வேதாந்தத்தின் கருத்தைக் கேட்டுத்தெரிந்து கொள்ளாதவர்களாயும், தானாகவே தங்களை வித்வான் என்று எண்ணிக்கொள்பவர்களாயும், ஈசுவரனுடைய

அநுக்ரஹத்தைப் பெறுதவர்களாயும், நல்ல குருவினிடமிருந்து வெளியில் முகத்தைத் திருப்பினவர்களாயும், இருக்கிற மூடர்கள் பலவிதமாய் சொல்கிறுர்கள் (விவாதம் செய்து கொள்கிறுர்கள்) அந்த முறையை சொல்கிறேன். கவனமாய்க்கேள். (521)

**अत्यन्तपामरः कश्चित् पुत्र आत्मेति मन्यते ।**
**आत्मनीव स्वपुत्रेऽपि प्रबलप्रीतिदर्शनात् ॥ ५२२ ॥**

**அத்யந்தபாமரः கஶ்சித் புத்ர ஆத்மேதி மன்யதே ।**
**ஆத்மனீவ ஸ்த்ரபுத்ரே(அ)பி ப்ரப³லப்ரீதித³ர்ஶனத் ॥ 522 ॥**

**अत्यन्तपामरः** = மிகவும் பாமரனுன,
**அத்யந்தபாமரः**
**कश्चित्** = ஒருவன்,
**கஶ்சித்**
**आत्मनीव** = தன்னிடத்தில் போல்,
**ஆத்மனீவ**
**स्वपुत्रेऽपि** = தனது பிள்ளையிடத்திலும்,
**ஸ்வபுத்ரே(அ)பி**
**प्रबलप्रीतिदर्शनात्** = அதிகமான ப்ரீதி காணப்படுவதால்,
**ப்ரப³லப்ரீதித³ர்ஶனத்**
**पुत्रः** = புத்திரன்,
**புத்ரः**
**आत्मा इति** = ஆத்மா என்று,
**ஆத்மா இதி**
**मन्यते** = எண்ணுகிறுன்.
**மன்யதே**

மிகவும் பாமரனுயிருக்கும் ஒருவன், தன்னிடத்தில் போலவே தன் புத்திரனிடத்திலும் வெகு பலமான பிரீதி காணப்படுவதினுல், புத்திரனை ஆத்மா என்று எண்ணுகிறுன். (522)

**पुत्रे तु पुष्टे पुष्टोऽहं नष्टे नष्टोऽहमित्यतः।**
**अनुभूतिबलाच्चापि युक्तितोऽपि श्रुतेरपि ॥ ५२३ ॥**

**புத்ரே து புஷ்டே புஷ்டோ(அ)ஹம் நஷ்டே நஷ்டோ(அ)ஹமித்யதः ।**
**அனுபூ⁴திப³லாச்சாபி யுக்திதோ(அ)பி ஶ்ருதேரபி ॥ 523 ॥**

**पुत्रे पुष्टे** = பிள்ளை புஷ்டியுள்ளவனுனுல்,
**புத்ரே புஷ்டே**

| | | |
|---|---|---|
| **अहं पुष्टः** <br> **அஹம் புஷ்ட:** | = | நான் புஷ்டியுள்ளவன், |
| **नष्टे** <br> **நஷ்டே** | = | (பிள்ளை) நாசமடைந்தால், |
| **अहं** <br> **அஹம்** | = | நான், |
| **नष्ट** <br> **நஷ்ட** | = | நாசம் அடைந்து விட்டேன், |
| **इत्यतः** <br> **இத்யத:** | = | என்று எண்ணும் காரணத்தால், |
| **अनुभूतिबलाच्चापि** <br> **அனுபூ⁴திப³லாச்சாபி** | = | லோகாநுபவ பலத்தாலும், |
| **युक्तितोऽपि** <br> **யுக்திதோ(அ)பி** | = | யுக்தியினாலும், |
| **श्रुतेरपि** <br> **ஶ்ருதேரபி** | = | ச்ருதியினாலும், இவ்வாறு சொல்கிறான். |

"புத்திரன் புஷ்டியுடனிருந்தாலே நான் புஷ்டியுடன் இருக்கிறேன். அவன் நஷ்டமாய்ப்போனால் நானே நஷ்டமாய் போய்விட்டேன்" என்றிருப்பதினால் அனுபவத்தின் பலத்தை வைத்துக்கொண்டும், யுக்தியினாலும், வேத வாக்கியத்தைக் கொண்டும் இவ்விதம் சொல்கிறான். **(523)**

## आत्मा वै पुत्रनामासीत्येवं च वदति श्रुतिः ॥ ५२४ ॥

**ஆத்மா வை புத்ரநாமாஸீத்யேவம் ச வத³தி ஶ்ருதி:॥ 524 ॥**

| | | |
|---|---|---|
| **पुत्रनामा** <br> **புத்ரநாமா** | = | புத்திரன் என்று பெயருள்ள, |
| **आत्मा वै** <br> **ஆத்மா வை** | = | ஆத்மாவாகவே, |
| **असि** <br> **அஸி** | = | இருக்கிறாய், |
| **इत्येवं** <br> **இத்யேவம்** | = | என்று இவ்விதமாக, |
| **श्रुतिः** <br> **ஶ்ருதி:** | = | ச்ருதியானது, |
| **वदति** <br> **வத³தி** | = | சொல்கிறது. |

"புத்திரன் என்ற பெயருடன் நீயே ஆத்மாவாய் இருக்கிறாய்" என்று இவ்விதமாய் வேதம் சொல்கிறது. **(524)**

**दीपाद्दीपो यथा तद्वत्पितुः पुत्रः प्रजायते ।**
**पितुर्गुणानां तनये बीजाङ्कुरवदीक्षणात् ॥ ५२५ ॥**

**தீ³பாத்³தீ³போ யதா² தத்³வத்பிது꞉ புத்ர꞉ ப்ரஜாயதே ।**
**பிதுர்கு³ணானாம் தனயே பீ³ஜாங்குரவதீ³க்ஷணாத் ॥ 525 ॥**

**यथा** = எப்படி,
**யதா²**
**दीपात्** = ஒரு தீபத்திலிருந்து,
**தீ³பாத்**
**दीपः** = மற்றொரு தீபமோ,
**தீ³ப꞉**
**तद्वत्** = அதுபோலவே,
**தத்³வத்**
**पितुः** = தந்தையிடமிருந்து,
**பிது꞉**
**पुत्रः** = பிள்ளை,
**புத்ர꞉**
**प्रजायते** = உண்டாகிறான்,
**ப்ரஜாயதே**
**बीजाङ्कुरवत्** = விதையின் குணங்கள் முளையில் போல்,
**பீ³ஜாங்குரவத்**
**पितु** = தந்தையின்,
**பிது**
**गुणानां** = குணங்கள்,
**கு³ணானாம்**
**तनये** = பிள்ளையிடம்,
**தனயே**
**ईक्षणात्** = காண்பதாலும்.
**ஈக்ஷணாத்**

தீபத்திலிருந்து தீபம் ஏற்றுவதுபோலவே தகப்பனாரிடமிருந்து புத்திரன் பிறக்கிறான். விதையிலுள்ள குணங்கள் முளையில் ஏற்படுவதுபோல தகப்பனாரின் குணங்கள் புத்திரனிடம் காணப்படுவதால் என்று யுக்தியையும் பிரமாணமாய் சொல்கிறான். **(525)**

## अतोऽयं पुत्र आत्मेति मन्यते भ्रान्तिमत्तमः ।

**அதோ(அ)யம் புத்ர ஆத்மேதி மன்யதே ப்⁴ராந்திமத்தமః ।**

| | | |
|---|---|---|
| **अतः** அதः | = | ஆகையால், |
| **अयं पुत्रः** அயம் புத்ரः | = | இந்த புத்திரன், |
| **आत्मा** ஆத்மா | = | ஆத்மா, |
| **इति** இதி | = | என்று, |
| **भ्रान्तिमत्तमः** ப்⁴ராந்திமத்தமः | = | மிகவும் பிராந்தியுள்ளவன், |
| **मन्यते** மன்யதே | = | எண்ணுகிறுன். |

ஆகையால் (அனுபவம், வேதம், யுக்தி எல்லாமிருப்பதிஞல்) இந்த புத்திரன் ஆத்மா என்று மிகவும் பிராந்தியுள்ளவன் எண்ணுகிறுன்.

## तन्मतं दूषयत्यन्यः पुत्र आत्मा कथं त्विति ॥ ५२६ ॥

**தன்மதம் தூ³ஷயத்யன்யः புத்ர ஆத்மா கத²ம் த்விதி ॥ 526 ॥**

| | | |
|---|---|---|
| **तन्मतं** தன்மதம் | = | அவனுடைய மதத்தை, |
| **अन्यः** அன்யः | = | வேறு ஒருவன், |
| **पुत्रः** புத்ரः | = | புத்திரன், |
| **कथं तु आत्मा** கத²ம் து ஆத்மா | = | எப்படி ஆத்மாவாக முடியும், |
| **इति** இதி | = | என்று, |
| **दूषयति** தூ³ஷயதி | = | தூஷிக்கிறுன். |

இந்த அபிப்பிராயத்தை வேறெருவன் புத்திரன் எப்படி ஆத்மா ஆவான் என்று தூஷிக்கிறுன். **(526)**

**प्रीतिमात्रात् कथं पुत्र आत्मा भवितुमर्हति ।**
**अन्यत्रापीक्ष्यते प्रीतिः क्षेत्रपात्रधनादिषु ॥ ५२७ ॥**

**ப்ரீதிமாத்ராத் கத²ம் புத்ர ஆத்மா ப⁴விதுமர்ஹதி ।**
**அன்யத்ராபீக்ஷ்யதே ப்ரீதி: க்ஷேத்ரபாத்ரத⁴நாதி³ஷு ॥ 527 ॥**

**पुत्रात् विशिष्टा देहेऽस्मिन् प्राणिनां प्रीतिरिष्यते ।**
**प्रदीप्ते भवने पुत्रं त्यक्त्वा जन्तुः पलायते ॥ ५२८ ॥**

**புத்ராத் விஶிஷ்டா தே³ஹே(அ)ஸ்மின் ப்ராணினாம் ப்ரீதிரிஷ்யதே ।**
**ப்ரதீ³ப்தே ப⁴வனே புத்ரம் த்யக்த்வா ஜந்து: பலாயதே ॥ 528 ॥**

**तं विक्रीणाति देहार्थं प्रतिकूलं निहन्ति च ।**
**तस्मात् आत्मा तु तनयो न भवेच्च कदाचन ॥ ५२९ ॥**

**தம் விக்ரீணாதி தே³ஹார்த²ம் ப்ரதிகூலம் நிஹந்தி ச ।**
**தஸ்மாத் ஆத்மா து தனயோ ந ப⁴வேச்ச கதா³சன ॥ 529 ॥**

**प्रीतिमात्रात्** = ப்ரீதி இருப்பதனால் மட்டும்,
**ப்ரீதிமாத்ராத்**
**पुत्रः** = புத்திரன்,
**புத்ர:**
**आत्मा** = ஆத்மாவாக,
**ஆத்மா**
**भवितुं** = ஆவதற்கு,
**ப⁴விதும்**
**कथं** = எப்படி,
**கத²ம்**
**अर्हति** = தக்கவனாகிறான்?
**அர்ஹதி**
**अन्यत्रापी** = வேறு இடத்திலும்,
**அன்யத்ராபீ**
**क्षेत्रपात्रधनादिषु** = நிலம், பாத்திரம், பணம் முதலியவைகளில்,
**க்ஷேத்ரபாத்ரத⁴நாதி³ஷு**
**प्रीतिः** = ப்ரீதியானது,
**ப்ரீதி:**
**ईक्ष्यते** = காணப்படுகிறது,
**ஈக்ஷ்யதே**

| | | |
|---|---|---|
| **प्राणिनां**<br>**ப்ராணிநாம்** | = | பிராணிகளுக்கு, |
| **अस्मिन् देहे**<br>**அஸ்மின் தே³ஹே** | = | இந்த தேஹத்தில், |
| **पुत्रात्**<br>**புத்ராத்** | = | பிள்ளையைக் காட்டிலும், |
| **विशिष्टा**<br>**விஶிஷ்டா** | = | மேலான, |
| **प्रीतिः**<br>**ப்ரீதி:** | = | ப்ரீதி இருப்பதாக, |
| **इष्यते**<br>**இஷ்யதே** | = | கருதப்படுகிறது, |
| **भवने**<br>**ப⁴வனே** | = | வீடு, |
| **प्रदीप्ते**<br>**ப்ரதீ³ப்தே** | = | நெருப்பு பற்றி எரியும்பொழுது, |
| **जन्तुः**<br>**ஜந்து:** | = | பிராணி, |
| **पुत्रं**<br>**புத்ரம்** | = | பிள்ளையை, |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டு விட்டு, |
| **पलायते**<br>**பலாயதே** | = | ஓடுகிறான், |
| **देहार्थं**<br>**தே³ஹார்த²ம்** | = | தன் சரீர சுகத்திற்காக, |
| **तं**<br>**தம்** | = | அந்த புத்திரனை, |
| **विक्रीणाति**<br>**விக்ரீணாதி** | = | விற்றுவிடுகிறான், |
| **प्रतिकूलं**<br>**ப்ரதிகூலம்** | = | எதிரியாக உள்ள புத்திரனை, |
| **निहन्ति च**<br>**நிஹந்தி ச** | = | கொல்லவும் செய்கிறான், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |

**कदाचन** = ஒருபோதும்,

**கதா³சன**

**तनयः** = பிள்ளை,

**தனய:**

**आत्मा** = ஆத்மாவாக,

**ஆத்மா**

**न भवेत्** = ஆகமாட்டான்.

**ந ப⁴வேத்**

பிரீதிவைப்பதினுல் மாத்திரம் புத்திரன் எப்படி ஆத்மாவாக ஆகமுடியும்? நிலம், பண்டங்கள், பணம் முதலிய மற்றவைகளிலும் பிரீதி காணப்படுகிறது. தவிரவும் புத்திரனை விட அதிகமான பிரீதி பிராணிகளுக்கு இந்த சரீரத்தில் இருக்கிறது. வீடு தீப்பற்றி எரியும் போது புத்திரனையும் விட்டு விட்டு ஓடுகிறுன். தன் தேகத்தைக் காப்பாற்றும் பொருட்டு அந்த புத்திரனை விற்று விடுகிறுன். பிரதிகூலமாயிருந்தால் அவனை அடிக்கிறுன் (கொல்லுகிறுன்). ஆகையால் புத்திரன் ஒருநாளும் ஆத்மாவாக இருக்க முடியாது. **(527 - 529)**

**गुणरूपादिसादृश्यं दीपवत् न सुते पितुः ।**
**अव्यङ्गात् जायते व्यङ्गः सुगुणादपि दुर्गुणः ॥ ५३० ॥**

**கு³ணரூபாதி³ஸாத்³ருஶ்யம் தீ³பவத் ந ஸுதே பிது: ।**
**அவ்யங்கா³த் ஜாயதே வ்யங்க³: ஸுகு³ணாத³பி து³ர்கு³ண: ॥ 530 ॥**

**दीपवत्** = தீபம்போல்,

**தீ³பவத்**

**पितुः** = தந்தையின்,

**பிது:**

**गुणरूपादिसादृश्यं** = குணம், ரூபம் முதலியவற்றின் ஸாத்ருச்யம்,

**கு³ணரூபாதி³ஸாத்³ருஶ்யம்**

**सुते** = பிள்ளையிடம்,

**ஸுதே**

**न** = காணப்படுவதில்லை,

**ந**

**अव्यङ्गात्** = அங்கஹீனமில்லாதவனிடமிருந்து,

**அவ்யங்கா³த்**

**व्यङ्गः** = அங்கஹீனமுள்ளவனும்,

**வ்யங்க³:**

**सुगुणात्** = நற்குணங்கள் உள்ளவனிடமிருந்து,

**ஸுகு³ணாத்**

| | | |
|---|---|---|
| **दुर्गुणःअपि** துர்கு³ணःஅபி | = | கெட்ட குணங்கள் உள்ளவனும், |
| **जायते** ஜாயதே | = | பிறக்கிறான். |

தீபம் போல், பிதாவின் குணம் ரூபம் முதலானதுகளின் ஸாதிருச்யம் புத்திரனிடம் இருப்பதில்லை. அங்கஹீனமில்லாதவனிடமிருந்து அங்கஹீனமுள்ளவன் பிறக்கிறான். நல்ல குணமுள்ளவனிடமிருந்து கெட்ட குணமுள்ளவனும் பிறக்கிறான். **(530)**

## आभासमात्रास्ताः सर्वा युक्तयोऽप्युक्तयोऽपि च ॥ ५३० ॥

**ஆபா⁴ஸமாத்ராஸ்தாঃ ஸர்வா யுக்தயோ(அ)ப்யுக்தயோ(அ)பி ச ॥ 530 ॥**

| | | |
|---|---|---|
| **ताः** தாঃ | = | அந்த, |
| **सर्वा** ஸர்வா | = | எல்லா, |
| **युक्तय:** யுக்தய: | = | யுக்திகளும். |
| **उक्तयोपि च** உக்தயோபி ச | = | வசனங்களும், |
| **आभासमात्रास्ता:** ஆபா⁴ஸமாத்ராஸ்தாঃ | = | ஆபாஸங்களேதான். |

முன் சொன்ன அந்த எல்லா யுக்திகளும் வெறும் ஆபாஸங்களே (யுக்தியாகத்தோன்றுபவை, வாஸ்தவத்தில் யுக்திகள் இல்லை). அப்படியே தான் அந்த சுருதிவாக்கியங்களும் ஆபாஸங்கள். **(530)**

## पुत्रस्य पितृवत् गेहे सर्वकार्येषु वस्तुषु ।
## स्वामित्वद्योतनाय अस्मिन् आत्मत्वं उपचर्यते ॥ ५३१ ॥

**புத்ரஸ்ய பித்ருவத் கே³ஹே ஸர்வகார்யேஷு வஸ்துஷு ।**
**ஸ்வாமித்வத்³யோதனாய அஸ்மின் ஆத்மத்வம் உபசர்யதே ॥ 531 ॥**

| | | |
|---|---|---|
| **गेहे** கே³ஹே | = | வீட்டில், |
| **पितृवत्** பித்ருவத் | = | தகப்பனுருக்குப்போல், |

| | | |
|---|---|---|
| **पुत्रस्य** | = | புத்திரனுக்கும், |
| **புத்ரஸ்ய** | | |
| **सर्वकार्येषु** | = | எல்லா காரியங்களிலு , |
| **ஸர்வகார்யேஷு** | | |
| **वस्तुषु** | = | பொருள்களிலும், |
| **வஸ்துஷு** | | |
| **स्वामित्वद्योतनाय** | = | யஜமானத்தன்மையை குறிப்பிடுவதற்காக, |
| **ஸ்வாமித்வத்³யோதனய** | | |
| **अस्मिन्** | = | இந்த புத்ரனிடத்தில், |
| **அஸ்மின்** | | |
| **आत्मत्वं** | = | ஆத்மாவாக இருக்கும் தன்மை, |
| **ஆத்மத்வம்** | | |
| **उपचर्यते** | = | உபசாரமாகக் கூறப்படுகிறது. |
| **உபசர்யதே** | | |

வீட்டில் பிதாவைப்போலவே புத்திரனுக்கும் எல்லா கார்யங்களிலும் பதார்த்த ங்களிலும் சொந்தக்காரன் என்ற தன்மையுண்டென்று காட்டுவதற்காக இவனிடத்தில் ஆத்மாவாயிருக்கும் தன்மை உபசாரமாகச் சொல்லப்படுகிறது. **(531)**

**श्रुत्या तु मुख्यया वृत्त्या पुत्र आत्मेति नोच्यते ।**
**औपचारिकं आत्मत्वं पुत्रे तस्मात् न मुख्यतः ॥ ५३२ ॥**

**ஶ்ருத்யா து முக்²யயா வ்ருத்த்யா புத்ர ஆத்மேதி நோச்யதே ।**
**ஔபசாரிகம் ஆத்மத்வம் புத்ரே தஸ்மாத் ந முக்²யத꞉ ॥ 532 ॥**

| | | |
|---|---|---|
| **श्रुत्या तु** | = | வேதத்தாலோவெனில், |
| **ஶ்ருத்யா து** | | |
| **मुख्यया वृत्त्या** | = | முக்கிய விருத்தியால் (நேர் அர்த்தத்தில்), |
| **முக்²யயா வ்ருத்த்யா** | | |
| **पुत्रः** | = | பிள்ளை, |
| **புத்ர꞉** | | |
| **आत्मा इति** | = | ஆத்மாவென்று, |
| **ஆத்மா இதி** | | |
| **नोच्यते** | = | சொல்லப்படுகிறதில்லை, |
| **நோச்யதே** | | |
| **तस्मात्** | = | ஆகையால், |
| **தஸ்மாத்** | | |

**पुत्रे** = புத்திரனிடத்தில்,

**புத்ரே**

**आत्मत्वं** = ஆத்மத்தன்மை,

**ஆத்மத்வம்**

**औपचारिकं** = உபசாரத்தால் ஏற்பட்டது,

**ஔபசாரிகம்**

**न मुख्यतः** = முக்யமாக இல்லை.

**ந முக்²யத:**

வேதத்தினாலோ முக்யமான விருத்தியினால் (நேர் அர்த்தமாக) புத்திரன் ஆத்மாவென்று சொல்லப்படவில்லை. ஆகையால் புத்திரனிடத்தில் சொல்லப்பட்ட ஆத்மத் தன்மை உபசாரமாக ஏற்பட்டதே தவிர முக்கியமாக இல்லை. **(532)**

**(அவதாரிகை)** இவ்விதம் மிகவும் பாமரனாயிருப்பவனுடைய அபிப்பிராயத் தைக் கண்டித்து விட்டு சார்வாகன் சொல்கிறான்.

**अहंपदप्रत्ययार्थो देह एव न चेतरः ।**
**प्रत्यक्षः सर्वजन्तूनां देहोऽहमिति निश्चयः ॥ ५३३ ॥**

**அஹம்பத³ப்ரத்யயார்தோ² தே³ஹ ஏவ ந சேதர: ।**
**ப்ரத்யக்ஷ: ஸர்வஜந்தூனாம் தே³ஹோ(அ)ஹமிதி நிஸ்சய: ॥ 533 ॥**

**अहंपदप्रत्ययार्थः** = அஹம் (நான்) என்ற சொல்லிற்கும்

**அஹம்பத³ப்ரத்யயார்த²:** எண்ணத்திற்கும் விஷயம்,

**देह एव** = தேஹம்தான்,

**தே³ஹ ஏவ**

**न च इतरः** = வேறு ஒன்றும் இல்லை,

**ந ச இதர:**

**सर्वजन्तूनां** = எல்லா பிராணிகளுக்கும்,

**ஸர்வஜந்தூனாம்**

**अहं देहः** = நான் சரீரம்,

**அஹம் தே³ஹ:**

**इति** = என்ற,

**இதி**

**निश्चयः** = உறுதி,

**நிஸ்சய:**

**प्रत्यक्षः** = பிரத்யக்ஷமாக உள்ளது.

**ப்ரத்யக்ஷ:**

"அஹம்" (நான்) என்கிற பதத்திற்கும் எண்ணத்திற்கும் பொருள் தேகம்தான், வேறு இல்லை. ஸகல பிராணிகளுக்கும் நான் தேகம் என்கிற தீர்மானம் பிரத்யக்ஷமாயிருக்கிறது. **(533)**

**एष पुरुषोऽन्नरसमयः इत्यपि च श्रुतिः ।**
**पुरुषत्वं वदत्यस्य स्वात्मा हि पुरुषः ततः ॥ ५३४ ॥**
**आत्मायं देह एवेति चार्वाकेण विनिश्चितम् ।**

**ஏஷ புருஷோ(அ)ன்னரஸமய: இத்யபி ச ஶ்ருதி: ।**
**புருஷத்வம் வத³த்யஸ்ய ஸ்வாத்மா ஹி புருஷ: தத: ॥ 534 ॥**
**ஆத்மாயம் தே³ஹ ஏவேதி சார்வாகேண விநிஶ்சிதம் ।**

**एष पुरुषः** = இந்த புருஷன்,
**ஏஷ புருஷ:**

**अन्नरसमयः** = அன்னரஸத்தின் விகாரம்,
**அன்னரஸமய:**

**इति** = என்று,
**இதி**

**श्रुतिरपि च** = வேதமும்,
**ஶ்ருதிரபி ச**

**अस्य** = இந்த சரீரத்திற்கு,
**அஸ்ய**

**पुरुषत्वं** = புருஷத்தன்மையை,
**புருஷத்வம்**

**वदति** = சொல்கிறது,
**வத³தி**

**पुरुषः** = புருஷன்,
**புருஷ:**

**स्वात्मा हि** = தனது ஆத்மா அல்லவா!
**ஸ்வாத்மா ஹி**

**ततः** = ஆகையால்,
**தத:**

**अयं देह एव** = இந்த சரீரம்தான்,
**அயம் தே³ஹ ஏவ**

**आत्मा** = ஆத்மா,
**ஆத்மா**

**इति** = என்று,
**இதி**

**चार्वाकेण** = சாருவாகனுல்,

**சார்வாகேண**

**विनिश्चितम्** = நன்கு தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**விநிஶ்சிதம்**

“இந்த புருஷன் அன்ன ரஸத்தின் விகாரம்" என்று வேதமும் இந்த தேகத்திற்கு புருஷத்தன்மையைச் சொல்கிறது. புருஷன் என்பது தன் ஆத்மாதானே? ஆகையால் இந்த சரீரம்தான் ஆத்மாவென்று சார்வாகனுல் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. **(534)**

**(அவதாரிகை)** இந்த கொள்கையை வேறெருவன் கண்டித்து இந்திரியங்கள் தான் ஆத்மாவென்று சொல்கிறன்: -

**तन्मतं दूषयत्यन्योऽसहमानः पृथग्जनः ॥ ५३५ ॥**
**देह आत्मा कथं नु स्यात् परतन्त्रो ह्यचेतनः ।**
**इन्द्रियैश्चाल्यमानोऽयं चेष्टते न स्वतः क्वचित् ॥ ५३६ ॥**

**தன்மதம் தூ³ஷயத்யன்யோ(அ)ஸஹமான: ப்ருத²க்³ஜனஃ ॥ 535 ॥**
**தே³ஹ ஆத்மா கத²ம் நு ஸ்யாத் பரதந்த்ரோ ஹ்யசேதனஃ ।**
**இந்த்³ரியைஶ்சால்யமானோ(அ)யம் சேஷ்டதே ந ஸ்வதஃ க்வசித் ॥ 536 ॥**

**तन्मतं** = அவனுடைய கொள்கையை,

**தன்மதம்**

**असहमानः** = பொறுக்காத,

**அஸஹமான:**

**अन्यः** = வேறு,

**அன்யஃ**

**पृथग्जनः** = பாமர மனிதன்,

**ப்ருத²க்³ஜனஃ**

**दूषयति** = தூஷிக்கிறன்,

**தூ³ஷயதி**

**परतन्त्रः** = பிறருக்குக் கட்டுப்பட்டதும்,

**பரதந்த்ரஃ**

**अचेतनः** = ஜடமாயுமுள்ள,

**அசேதனஃ**

**देहः** = சரீரம்,

**தே³ஹஃ**

**कथं नु आत्मा स्यात्** = எப்படி ஆத்மாவாக முடியும்?

**கத²ம் நு ஆத்மா ஸ்யாத்**

**इन्द्रियैः** = இந்திரியங்களால்,

**இந்த்³ரியை:**

**चाल्यमानः** = அசைக்கப்படுகிற,

**சால்யமானः**

**अयं** = இந்த தேஹம்,

**அயம்**

**क्वचित्** = ஒரு காலத்திலும்,

**க்வசித்**

**स्वतः** = தானாக,

**ஸ்வத:**

**न चेष्टते** = அசைகிறதில்லை.

**ந சேஷ்டதே**

அந்த சார்வாகனுடைய கொள்கையை பொறுக்கமாட்டாதவனாய் வேறு ஒருவன் அதை தூஷிக்கிறான். பரதந்திரமாய் அறிவற்றிருக்கும் தேகம் எப்படி ஆத்மா வாகும்? இந்திரியங்களினால் அசைக்கப்பட்டால் தான் இது அசைகிறது. ஒருக்காலும் தானாக அசைகிறதில்லை. **(536)**

**आश्रयः चक्षुरादीनां गृहवत् गृहमेधिनाम् ।**
**बाल्यादिनानावस्थावान् शुक्लशोणितसंभवः ॥ ५३७ ॥**
**अतः कदाऽपि देहस्य नात्मत्वं उपपद्यते ॥ ५३८ ॥**

**ஆஶ்ரய: சக்ஷுராதீ³னாம் க்³ருஹவத் க்³ருஹமேதி⁴னாம் ।**
**பா³ல்யாதி³னானாவஸ்தா²வான் ஶுக்லஶோணிதஸம்ப⁴வ: ॥ 537 ॥**
**அத: கதா³(அ)பி தே³ஹஸ்ய நாத்மத்வம் உபபத்³யதே ॥ 538 ॥**

**गृहमेधिनाम्** = கிருஹஸ்தர்களுக்கு,

**க்³ருஹமேதி⁴னாம்**

**गृहवत्** = வீட்டைப்போல்,

**க்³ருஹவத்**

**चक्षुरादीनां** = கண் முதலானவைகளுக்கு,

**சக்ஷுராதீ³னாம்**

**आश्रयः** = (தேஹம்) இருப்பிடம்,

**ஆஶ்ரய:**

**बाल्यादिनानावस्थावान्** = பால்யம் முதலான பலவித அவஸ்தைகளுடன் கூடியது,

**பா³ல்யாதி³னானாவஸ்தா²வான்**

**शुक्लशोणितसंभवः** = சுக்லம், சோணிதம் இவைகளிலிருந்து உண்டானது,

**ஶுக்லஶோணிதஸம்ப⁴வ:**

**अत:** = ஆகையால்,

**அத꞉**

**कदापि** = ஒருக்காலும்,

**கதா³பி**

**देहस्य** = சரீரத்திற்கு,

**தே³ஹஸ்ய**

**आत्मत्वं** = ஆத்மத்தன்மை,

**ஆத்மத்வம்**

**न उपपद्यते** = பொருந்தாது.

**ந உபபத்³யதே**

மேலும் இந்த தேஹம், கிருஹஸ்தர்களுக்கு வீட்டைப் போல, கண் முதலான இந்திரியங்களுக்குத் தங்குமிடமாயுள்ளது. பால்யம் முதலான பலவித பருவங்களோடு கூடியது. ரேதஸ், ரக்தம் இவைகளிலிருந்து உண்டானது. ஆகையால் தேகத்திற்கு ஆத்மத்தன்மை ஒருக்காலும் பொருந்தாது. **(537-538)**

**बधिरोऽहं च काणोऽहं मूक इत्यनुभूतित: ।**
**इन्द्रियाणि भवन्त्यात्मा येषामस्त्यर्थवेदनम् ॥ ५३९ ॥**

**ப³தி⁴ரோ(அ)ஹம் ச காணோ(அ)ஹம் மூக இத்யனுபூ⁴தித꞉ ।**
**இந்த்³ரியாணி ப⁴வந்த்யாத்மா யேஷாமஸ்த்யர்த²வேத³னம் ॥ 539 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**बधिर:** = செவிடன்,

**ப³தி⁴ர꞉**

**काण:** = ஒற்றைக்கண்ணன்,

**காண꞉**

**अहं** = நான்,

**அஹம்**

**मूक:** = ஊமை,

**மூக꞉**

**इति** = என்ற,

**இதி**

**अनुभूतित:** = அனுபவத்தால்,

**அனுபூ⁴தித꞉**

**येषां** = எவைகளுக்கு,

**யேஷாம்**

**अर्थवेदनम्** = வஸ்துக்களின் அறிவு,

**அர்த²வேத³னம்**

**अस्ति** = இருக்கிறதோ,

**அஸ்தி**

**इन्द्रियाणि** = (அந்த) இந்திரியங்கள்,

**இந்த்³ரியாணி**

**आत्मा भवन्ति** = ஆத்மாவாக ஆகின்றன.

**ஆத்மா ப⁴வந்தி**

"நான் செவிடு, நான் ஒற்றைக்கண்ணன், நான் ஊமை," என்ற அனுபவத்திளுல், இந்திரியங்களுக்கு விஷயங்களின் அறிவு ஏற்படுகிறதாகத் தெரிகிறது ஆகையால் இந்திரியங்கள் தான் ஆத்மாவாகும். **(539)**

**इन्द्रियाणां चेतनत्वं देहे प्राणाः प्रजापतिम् ।**
**एतमेत्येत्यूचुः इति श्रुत्यैव प्रतिपाद्यते ॥ ५४० ॥**

**இந்த்³ரியாணும் சேதனத்வம் தே³ஹே ப்ராணு: ப்ரஜாபதிம் ।**
**ஏதமேத்யேத்யூசு: இதி ஶ்ருத்யைவ ப்ரதிபாத்³யதே ॥ 540 ॥**

**देहे** = சரீரத்தில்,

**தே³ஹே**

**प्राणाः** = இந்திரியங்கள்,

**ப்ராணு:**

**एतं** = இந்த,

**ஏதம்**

**प्रजापतिम्** = பிரஜாபதியை,

**ப்ரஜாபதிம்**

**एत्य** = அடைந்து,

**ஏத்ய**

**इति** = இவ்வாறு,

**இதி**

**ऊचुः** = சொல்லிற்று,

**ஊசு:**

**इति** = என்று,

**இதி**

**श्रुत्यैव** = வேதத்தாலேயே,

**ஶ்ருத்யைவ**

**इन्द्रियाणां** = இந்திரியங்களுக்கு,
**இந்த்³ரியாணும்**
**चेतनत्वं** = சேதனமாயிருக்கும் தன்மை,
**சேதனத்வம்**
**प्रतिपाद्यते** = விளக்கப்படுகிறது.
**ப்ரதிபாத்³யதே**

"தேகத்தில் பிராணன்கள் (இந்திரியங்கள்) இந்த பிரஜாபதியை அடைந்து இவ்விதம் சொன்னுர்கள்" என்று இந்திரியங்களுக்கு அறிவுள்ள தன்மையுண்டென்பது வேதத்திலுலேயே பிரதிபாதிக்கப்படுகிறது. **(540)**

**यतः तस्मात् इन्द्रियाणां युक्तं आत्मत्वमित्यमुम् ।**
**निश्चयं दूषयत्यन्योऽसहमानः पृथग्जनः ॥ ५४० ॥**

**யத꞉ தஸ்மாத் இந்த்³ரியாணும் யுக்தம் ஆத்மத்வமித்யமும் ।**
**நிஸ்சயம் தூ³ஷயத்யன்யோ(அ)ஸஹமான꞉ ப்ருத²க்³ஜன꞉ ॥ 540 ॥**

**यतः** = எதனுல் (இப்படியோ),
**யத꞉**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**इन्द्रियाणां** = இந்திரியங்களுக்கு,
**இந்த்³ரியாணும்**
**आत्मत्वं** = ஆத்மாவாக இருக்கும் தன்மை,
**ஆத்மத்வம்**
**युक्तं** = நியாயமானது,
**யுக்தம்**
**इति** = என்ற,
**இதி**
**अमुं निश्चयं** = இந்த தீர்மானத்தை,
**அமும் நிஸ்சயம்**
**असहमानः** = பொறுக்காத,
**அஸஹமான꞉**
**अन्यः** = வேறொரு,
**அன்ய꞉**
**पृथग्जनः** = பாமரமனிதன்,
**ப்ருத²க்³ஜன꞉**

दूषयति = தூஷிக்கிறுன்.
தூ³ஷயதி

இப்படியிருக்கும் காரணத்திஞல் இந்திரியங்களுக்குத் தான் ஆத்மத்தன்மை நியாயமாகும். இவ்விதம் சொல்லும் இந்த தீர்மானத்தை ஸஹிக்காதவஞய் வேறு ஒருவன் இந்தக் கொள்கையும் பிசகு என்று தூஷித்து இந்திரியங்கஊ வேஊ செய்யும்படிச் செய்யும் பிராணன் தான் ஆத்மாவென்று சொல்கிறுன். **(541)**

**इन्द्रियाणि कथं न्वात्मा करणानि कुठारवत् ।**
**करणस्य कुठारादेः चेतनत्वं न हीक्ष्यते ॥ ५४२ ॥**

**இந்த்³ரியாணி கத²ம் ந்வாத்மா கரணானி குடா²ரவத்।**
**கரணஸ்ய குடா²ராதே³: சேதனத்வம் ந ஹீக்ஷ்யதே ॥ 542 ॥**

कुठारवत् = கோடாலிபோல்,
குடா²ரவத்
करणानि = கருவிகளாயிருக்கும்,
கரஞனி
इन्द्रियाणि = இந்திரியங்கள்,
இந்த்³ரியாணி
कथं नु आत्मा = எப்படி ஆத்மாவாக இருக்கமுடியும்?
கத²ம் நு ஆத்மா
करणस्य = கருவியான,
கரணஸ்ய
कुठारादेः = கோடாலி முதலியவற்றிற்கு,
குடா²ராதே³:
चेतनत्वं = சேதனத்தன்மை,
சேதனத்வம்
न हि ईक्ष्यते = காணப்படுகிறதில்ஊயே!
ந ஹி ஈக்ஷ்யதே

கோடாலியைப் போல் கருவியாக இருக்கும் இந்திரியங்கள் எப்படி ஆத்மா வாகும். கோடாலி முதலிய கருவிகளுக்கு சேதனத்தனமை காணப்படவில்ஊயே? **(542)**

**श्रुत्याऽधिदेवतामेव इन्द्रियेषूपचर्यते ।**
**न तु साक्षात् इन्द्रियाणां चेतनत्वं उदीर्यते ॥ ५४३ ॥**

**ஶ்ருத்யா(அ)தி⁴தே³வதாமேவ இந்த்³ரியேஷூபசர்யதே ।**
**ந து ஸாக்ஷாத் இந்த்³ரியாஞம் சேதனத்வம் உதீ³ர்யதே ॥ 543 ॥**

**श्रुत्या** = வேதத்தால்,
**ஶ்ருத்யா**
**अधिदेवतामेव** = அதிதேவதையைத்தான்,
**அதி⁴தே³வதாவ**
**इन्द्रियेषू** = இந்திரியங்களில்,
**இந்த்³ரியேஷூ**
**उपचर्यते** = உபசாரமாகக் கூறப்படுகிறது,
**உபசர்யதே**
**इन्द्रियाणां** = இந்திரியங்களுக்கு,
**இந்த்³ரியாணும்**
**साक्षात् चेतनत्वं** = நேராக சேதனத்தன்மை,
**ஸாக்ஷாத் சேதனத்வம்**
**न तु उदीर्यते** = சொல்லப்படவே இல்லை.
**ந து உதீ³ர்யதே**

ஒவ்வொரு இந்திரியத்திற்கும் அதிதேவதை உண்டு அவர்கள் சேதனர்கள். அந்த தேவதைகள் பேசினர்கள் என்பதைத்தான் உபசாரமாக இந்திரியங்கள் பேசின என்று வேதம் கூறுகிறது. இந்திரியங்களுக்கு நேரிடையாக சைதன்யம் உண்டு என்று வேதம் சொல்லவில்லை. **(543)**

**अचेतनस्य दीपादेः अर्थाभा सकता यथा ।**
**तथैव चक्षुरादीनां जडानामपि सिध्यति ॥ ५४४ ॥**

**அசேதனஸ்ய தீ³பாதே³: அர்தா²பா⁴ ஸகதா யதா² ।**
**ததை²வ சக்ஷுராதீ³ணும் ஜடா³நாமபி ஸித்⁴யதி ॥ 544 ॥**

**यथा** = எப்படி,
**யதா²**
**अचेतनस्य** = ஜடமான,
**அசேதனஸ்ய**
**दीपादेः** = தீபம் முதலியவற்றிற்கு,
**தீ³பாதே³:**
**अर्थाभा सकता** = வஸ்துக்களை பிரகாசப்படுத்தும் சக்தி உள்ளதோ,
**அர்தா²பா⁴ ஸகதா**
**तथैव** = அப்படியே,
**ததை²வ**
**जडानां** = ஜடமான,
**ஜடா³ணும்**

| | | |
|---|---|---|
| **चक्षुरादीनामपि**<br>**சக்ஷுராதீ³நாமபி** | = | கண் முதலியவற்றிற்கும், |
| **सिध्यति**<br>**ஸித்⁴யதி** | = | (பிரகாசப் படுத்தும் தன்மை) ஸித்திக்கிறது. |

அசேதனமாயிருக்கிற தீபம் முதலியவற்றிற்கு எப்படி பதார்த்தத்தை விளக்கக் கூடிய தன்மையிருக்கிறதோ, அப்படியே அசேதனமான இந்திரியங்களாகிய கண் முதலானவைகளுக்கும் பதார்த்தத்தை விளக்கக்கூடிய தன்மை இருக்கிறது. **(544)**

## इन्द्रियाणां चेष्टयिता प्राणो यः पञ्चवृत्तिकः ।
## सर्वावस्थासु अवस्थावान् सोऽयं आत्मत्वं अर्हति ।

**இந்த்³ரியாணாம் சேஷ்டயிதா ப்ராணோ யः பஞ்சவ்ருத்திகः ।**
**ஸர்வாவஸ்தா²ஸு அவஸ்தா²வான் ஸோ(அ)யம் ஆத்மத்வம் அர்ஹதி ।**

| | | |
|---|---|---|
| **यः**<br>**யः** | = | எவன், |
| **इन्द्रियाणां चेष्टयिता**<br>**இந்த்³ரியாணாம் சேஷ்டயிதா** | = | இந்திரியங்களை வேலை செய்யும்படி செய்கிறதாயும், |
| **पञ्चवृत्तिकः**<br>**பஞ்சவ்ருத்திகः** | = | காரியங்களால் ஐந்துவித நிலைகளுள்ளதாயும், |
| **सर्वावस्थासु**<br>**ஸர்வாவஸ்தா²ஸு** | = | எல்லா அவஸ்தைகளிலும், |
| **अवस्थावान्**<br>**அவஸ்தா²வான்** | = | செயல் உள்ளதாயும் இருக்கிறதோ, |
| **सोः अयं प्राणः**<br>**ஸோः அயம் ப்ராணः** | = | அந்த இந்த பிராணன், |
| **आत्मत्वं अर्हति**<br>**ஆத்மத்வம் அர்ஹதி** | = | ஆத்மத்தன்மைக்குத் தகுதியுள்ளவன். |

இந்திரியங்களை வேலை செய்யும்படி செய்கிறதாயும் ஐந்துவித (பிராணன், அபானன், வியானன், உதானன, ஸமானன்) கார்யங்களுடையதாயும் எல்லா நிலையிலும் இருப்பதாயும் உள்ள இந்த பிராணன்தான் ஆத்மததனமைக்கு உரித்தது.

## अहं क्षुधावान् तृष्णावान् इत्याद्यनुभवादपि ॥ ५४५ ॥

**அஹம் க்ஷுதா⁴வான் த்ருஷ்ணாவான் இத்யாத்³யனுப⁴வாத³பி ॥ 545 ॥**

**श्रुत्या अन्योऽन्तर आत्मा प्राणमय इतीर्यते यस्मात् ।**
**तस्मात् प्राणस्यात्मत्वं युक्तं नो करणसंज्ञानां क्वापि ॥ ५४६ ॥**

**ஶ்ருத்யா அன்யோ(அ)ந்தர ஆத்மா ப்ராணமய இதீர்யதே யஸ்மாத் ।**
**தஸ்மாத் ப்ராணஸ்யாத்மத்வம் யுக்தம் நோ கரணஸஞ்ஜ்ஞானும் க்வாபி ॥546॥**

**अहं** = நான்,
**அஹம்**

**क्षुधावान्** = பசி உள்ளவன்,
**க்ஷுதா⁴வான்**

**तृष्णावान्** = தாஹமுள்ளவன்,
**த்ருஷ்ணாவான்**

**इत्याद्यनुभवादपि** = இது முதலான அனுபவத்தாலும்,
**இத்யாத்³யனுப⁴வாத³பி**

**यस्मात्** = எதனுல்,
**யஸ்மாத்**

**श्रुत्या** = வேதத்தால்,
**ஶ்ருத்யா**

**अन्योऽन्तर आत्मा प्राणमय** = உள்ளே வேறு ஆத்மா, பிராணமயன்,
**அன்யோ(அ)ந்தர ஆத்மா ப்ராணமய**

**इती ईर्यते** = என்று சொல்லப்படுகிறதோ,
**இதீ ஈர்யதே**

**तस्मात्** = அதனுலும்,
**தஸ்மாத்**

**प्राणस्य** = பிராணனுக்கு,
**ப்ராணஸ்ய**

**आत्मत्वं** = ஆத்மத்தன்மை,
**ஆத்மத்வம்**

**युक्तं** = யுக்தமானது,
**யுக்தம்**

**करणसंज्ञानां** = கருவி என்ற பெயருள்ள இந்திரியங்களுக்கு,
**கரணஸஞ்ஜ்ஞானும்**

**क्वापि** = ஒருக்காலும்,
**க்வாபி**

**नो** = யுத்தமில்லை.
**நோ**

"நான் பசியுள்ளவன், நான் தாஹமுள்ளவன்" இது முதலான அனுபவம் இருப்பதினுலும், வேதத்தில் "உள்ளே பிராணமயன் என்று வேறு ஆத்மா" என்று சொல்லப்பட்டிருக்கிற காரணத்தினுலும், பிராணனுக்குத்தான் ஆத்மத்தன்மை உசித மாகும். கருவியென்று பெயருள்ள இந்திரியங்களுக்கு எவ்விதத்திலும் உசிதமாகாது. **(545-546)**

**(அவதாரிகை)** இந்தக் கொள்கையும் பிசகு, மனம்தான் ஆத்மாவென்று இன்னொருவர் வாதிக்கிருர்: -

**इति निश्चयमेतस्य दूषयत्यपरो जडः ।**
**भवत्यात्मा कथं प्राणो वायुरेवैष आन्तरः ॥ ५४७ ॥**

**இதி நிஶ்சயமேதஸ்ய தூ3ஷயத்யபரோ ஜட3: ।**
**ப4வத்யாத்மா கத2ம் ப்ராணோ வாயுரேவைஷ ஆந்தர: ॥ 547 ॥**

**इति** = என்ற,
**இதி**
**एतस्य** = இவனுடைய,
**ஏதஸ்ய**
**निश्चयं** = தீர்மானத்தை,
**நிஶ்சயம்**
**जडः** = அறிவில்லாத,
**ஜட3:**
**अपरः** = வேறு ஒருவன்,
**அபர:**
**दूषयति** = தூஷிக்கிறுன்,
**தூ3ஷயதி**
**प्राणः** = பிராணன்,
**ப்ராண:**
**कथं** = எப்படி,
**கத2ம்**
**आत्मा भवति** = ஆத்மாவாகும்?
**ஆத்மா ப4வதி**
**एषः** = இந்த பிராணன்,
**ஏஷ:**
**आन्तरो वायुरेव** = உள்ளே இருக்கும் வாயுதானே!
**ஆந்தரோ வாயுரேவ**

இவனுடைய இந்தத் தீர்மானத்தை அறிவற்ற இன்னொருவன் தூஷிக்கிறன் பிராணன் என்கிறது உள்ளேயிருக்கும் வாயுதானே, அது எப்படி ஆத்மாவாகும்? **(547)**

**बहिर्यात्यन्तरायाति भस्त्रिकावायुवत् मुहुः ।**
**न हितं वाऽहितं वा स्वं अन्यत् वा वेद किंचन ॥ ५४८ ॥**

**ப³ஹிர்யாத்யந்தராயாதி ப⁴ஸ்த்ரிகாவாயுவத் முஹு: ।**
**ந ஹிதம் வா(அ)ஹிதம் வா ஸ்வம் அன்யத் வா வேத³ கிஞ்சன ॥ 548 ॥**

**भस्त्रिकावायुवत्** = துருத்தியிலுள்ள காற்றுப்போல,
**ப⁴ஸ்த்ரிகாவாயுவத்**
**मुहुः** = அடிக்கடி,
**முஹு:**
**बहिः** = வெளியே,
**ப³ஹி:**
**याति** = செல்கிறது,
**யாதி**
**अन्तः** = உள்ளே,
**அந்த:**
**आयाति** = வருகிறது,
**ஆயாதி**
**हितं वा** = நன்மையையோ,
**ஹிதம் வா**
**अहितं वा** = தீங்கையோ,
**அஹிதம் வா**
**स्वं** = தன்னையோ,
**ஸ்வம்**
**अन्यत् वा** = வேறு வஸ்துவையோ,
**அன்யத் வா**
**किंचन** = ஒன்றையும்,
**கிஞ்சன**
**न वेद** = அறிகிறதில்லை.
**ந வேத³**

துருத்தியிலுள்ள காற்றுமாதிரி அடிக்கடி வெளியில் போகிறது, உள்ளே வருகிறது. ஹிதத்தையோ, அஹிதத்தையோ தன்னையோ, வேறு எதையோ, அறிவதில்லை. **(548)**

**जडस्वभावः चपलः कर्मयुक्तश्च सर्वदा ।**
**प्राणस्य भानं मनसि स्थिते सुप्ते न दृश्यते ॥ ५४९ ॥**

**ஜட³ஸ்வபா⁴வः சபலः கர்மயுக்தஶ்ச ஸர்வதா³ ।**
**ப்ராணஸ்ய பா⁴னம் மனஸி ஸ்தி²தே ஸுப்தே ந த்³ருஶ்யதே ॥ 549 ॥**

(பிராணன்)

**जडस्वभावः** = ஜடத்தன்மையள்ளது,
**ஜட³ஸ்வபா⁴வः**
**सर्वदा** = எப்பொழுதும்,
**ஸர்வதா³**
**चपलः** = சலிக்கிறதாயும்,
**சபலः**
**कर्मयुक्तश्च** = செய்கையோடு கூடியதாயும் உள்ளது,
**கர்மயுக்தஶ்ச**
**मनसि स्थिते** = மனம் இருக்கும் பொழுது,
**மனஸி ஸ்தி²தே**
**प्राणस्य भानं** = பிராணனின் தோற்றம் உள்ளது,
**ப்ராணஸ்ய பா⁴னம்**
**सुप्ते** = (மனம்) தூங்கினபொழுது,
**ஸுப்தே**
**न दृश्यते** = காணப்படவில்லை.
**ந த்³ருஶ்யதே**

அந்தப் பிராணன் ஜடஸ்வபாவத்தையுடையது. எப்பொழுதும் அலைந்துகொண்டிருக்கும். எக்காலத்திலும் வேலை செய்துகொண்டேயிருக்கும். பிராணன் இருக்கிறதென்று தெரிவதே மனஸ் இருக்கும்போதுதான். தூங்கும்போது அது காணப்படவில்லை. **(549)**

**मनस्तु सर्वं जानाति सर्ववेदनकारणम् ।**
**यत् तस्मात् मन एवात्मा प्राणस्तु न कदाचन ॥ ५५० ॥**

**மனஸ்து ஸர்வம் ஜாநாதி ஸர்வவேத³னகாரணம் ।**
**யத் தஸ்மாத் மன ஏவாத்மா ப்ராணஸ்து ந கதா³சன ॥ 550 ॥**

**यत्** = எந்த காரணத்தால்,
**யத்**
**सर्ववेदनकारणम्** = எல்லாவற்றையும் அறிவதற்குக் காரணமான,
**ஸர்வவேத³னகாரணம்**

| | | |
|---|---|---|
| **मनस्तु**<br>**மனஸ்து** | = | மனமோவெனில், |
| **सर्वं**<br>**ஸர்வம்** | = | எல்லாவற்றையும், |
| **जानाति**<br>**ஜாநாதி** | = | அறிகிறதோ, |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையால், |
| **मन एव आत्मा**<br>**மன ஏவ ஆத்மா** | = | மனம்தான் ஆத்மா, |
| **प्राणस्तु**<br>**ப்ராணஸ்து** | = | பிராணனேவெனில், |
| **कदाचन**<br>**கதா³சன** | = | ஒருக்காலும், |
| **न**<br>**ந** | = | ஆத்மாவல்ல. |

மனஸோ எல்லாவற்றையும் அறியக் காரணமாயிருந்து கொண்டு எல்லாவற்றையும் அறிகிறது என்பதினால் மனஸ் தான் ஆத்மா. ஒருபொழுதும் பிராணன் ஆத்மாவல்ல. **(550)**

## संकल्पवान् अहं चिन्तावान् अहं च विकल्पवान् ।
## इत्याद्यनुभवात् अन्योऽन्तर आत्मा मनोमयः ॥ ५५१ ॥

**ஸங்கல்பவான் அஹம் சிந்தாவான் அஹம் ச விகல்பவான் ।**
**இத்யாத்³யனுப⁴வாத் அன்யோ(அ)ந்தர ஆத்மா மனோமய: ॥ 551 ॥**

## इत्यादिश्रुतिमद्भावात् युक्ता मनस आत्मता ।

**இத்யாதி³ஶ்ருதிமத்³பா⁴வாத் யுக்தா மனஸ ஆத்மதா ।**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **संकल्पवान्**<br>**ஸங்கல்பவான்** | = | ஸங்கல்பத்தோடு கூடியவன், |
| **चिन्तावान्**<br>**சிந்தாவான்** | = | சிந்தையோடு கூடியவன், |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |

**विकल्पवान् च** = விகல்பத்தோடும் கூடியவன்,

**விகல்பவான் ச**

**इत्याद्यनुभवात्** = இது முதலான அனுபவத்தாலும்,

**இத்யாத்³யனுப⁴வாத்**

**अन्योऽन्तर आत्मा मनोमयः** = உள்ளே வேறு ஆத்மா மநோமயன்,

**அன்யோ(அ)ந்தர ஆத்மா மனோமய:**

**इत्यादिश्रुतिमद्भावात्** = இது முதலான சுருதி வாக்யம் இருப்பதாலும்,

**இத்யாதி³ஶ்ருதிமத்³பா⁴வாத்**

**मनसः** = மனதிற்கு,

**மனஸ:**

**आत्मता** = ஆத்மத்தன்மை,

**ஆத்மதா**

**युक्ता** = யுக்தமானது.

**யுக்தா**

"நான் ஸங்கல்பமுடையவன், நான் சிந்தையுடையவன், நான் விகல்பமுடையவன்" இது முதலிய அனுபவத்தினுலும் "உள்ளே மனேமயன் என்று வேறு ஆத்மா" இது முதலிய வேதவாக்கியங்கள் இருப்பதினுலும், மனஸிற்குத் தான் ஆத்மாவாக விருக்கும் தன்மை யுக்தமாகும். **(551)**

**(அவதாரிகை)** இதுவும் பிசகு, புத்திதான் ஆத்மாவென்று இன்னெருவன் சொல்கிறுன்: -

## इति निश्चयमेतस्य दूषयत्यपरो जडः ॥ ५५२ ॥

**இதி நிஶ்சயமேதஸ்ய தூ³ஷயத்யபரோ ஜட³: ॥ 552 ॥**

**इति** = என்ற,

**இதி**

**एतस्य** = இவனுடைய,

**ஏதஸ்ய**

**निश्चयं** = தீர்மானத்தை,

**நிஶ்சயம்**

**जडः** = அறிவில்லாத,

**ஜட³:**

**प्रपरः** = வேறு ஒருவன்,

**ப்ரபர:**

**दूषयति** = தூஷிக்கிறுன்.

**தூ³ஷயதி**

இவனுடைய இந்தத் தீர்மானத்தை அறிவில்லாத மற்ரெருவன் தூஷிக்கிறுன். **(551-552)**

**कथं मनस आत्मत्वं करणस्य दृगादिवत् ।**
**कर्तृप्रयोज्यं करणं न स्वयं तु प्रवर्तते ॥ ५५३ ॥**

**கத²ம் மனஸ ஆத்மத்வம் கரணஸ்ய த்³ருகா³தி³வத் ।**
**கர்த்ருப்ரயோஜ்யம் கரணம் ந ஸ்வயம் து ப்ரவர்ததே ॥ 553 ॥**

**दृगादिवत्** = கண் முதலியதுபோல்,
**த்³ருகா³தி³வத்**
**करणस्य** = கருவியாக உள்ள,
**கரணஸ்ய**
**मनस:** = மனதிற்கு,
**மனஸ:**
**आत्मत्वं** = ஆத்மத்தன்மை,
**ஆத்மத்வம்**
**कथं** = எப்படிப்பொருந்தும்?
**கத²ம்**
**कर्तृप्रयोज्यं** = செய்கிறவனுல் ஏவத்தக்க,
**கர்த்ருப்ரயோஜ்யம்**
**करणं** = கருவியானது,
**கரணம்**
**स्वयं तु** = தானுகவே,
**ஸ்வயம் து**
**न प्रवर्तते** = செயல்படாது.
**ந ப்ரவர்ததே**

கண் முதலியவை போல கருவியாயிருக்கும் மனஸிற்கு ஆத்மத் தன்மை எப்படியிருக்கம்? கருவியென்பது செய்கிறவனுல் பிரயோகப்படுத்தப்படுவதே தவிர அதுவாக தானே பிரவிருத்திப்பதில்ல. **(553)**

**मन:प्रयोक्ता य: कर्ता तस्यैवात्मत्वं अर्हति ।**
**आत्मा स्वतन्त्र: पुरुषो न प्रयोज्य: कदाचन ॥ ५५४ ॥**

**மனःப்ரயோக்தா யः கர்தா தஸ்யைவாத்மத்வம் அர்ஹதி ।**
**ஆத்மா ஸ்வதந்த்ரः புருஷோ ந ப்ரயோஜ்யः கதா³சன ॥ 554 ॥**

**मन:प्रयोक्ता** = மனதை ஏவுகிற,
**மனःப்ரயோக்தா**

| | | |
|---|---|---|
| **कर्ता**<br>**கர்தா** | = | செய்கிறவன், |
| **यः**<br>**யः** | = | எவனோ, |
| **तस्यैव**<br>**தஸ்யைவ** | = | அவனுக்குத்தான், |
| **आत्मत्वं**<br>**ஆத்மத்வம்** | = | ஆத்மத்தன்மை, |
| **अर्हति**<br>**அர்ஹதி** | = | உசிதமானது, |
| **आत्मा**<br>**ஆத்மா** | = | ஆத்மாவானவன், |
| **स्वतन्त्रः**<br>**ஸ்வதந்த்ரः** | = | ஸ்வதந்திரனான, |
| **पुरुषः**<br>**புருஷः** | = | புருஷன், |
| **कदाचन**<br>**கதா³சன** | = | ஒருக்காலும், |
| **न प्रयोज्यः**<br>**ந ப்ரயோஜ்யः** | = | (பிறவற்றால்) ஏவத்தக்கவனில்லை. |

மனஸை ஏவுகிற கர்த்தா (செய்கிறவன்) யாரோ, அவனுக்குத்தான் ஆத்மா வாயிருக்கும் தன்மை பொருந்தும். ஆத்மா என்பவன் ஸ்வதந்திரமான புருஷனாகத் தான் இருப்பான். ஒருக்காலும் ஏவப்படுகிறவனாகமாட்டான். **(554)**

**अहं कर्ताऽस्मि अहं भोक्ता सुखीत्यनुभवादपि ।**
**बुद्धिरात्मा भवत्येव बुद्धिधर्मो हंकृतिः ॥ ५५५ ॥**

**அஹம் கர்தா(அ)ஸ்மி அஹம் போ⁴க்தா ஸுகீ²த்யனுப⁴வாத³பி ।**
**பு³த்³தி⁴ராத்மா ப⁴வத்யேவ பு³த்³தி⁴த⁴ர்மோ ஹங்க்ருதிः ॥ 555 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **कर्ता**<br>**கர்தா** | = | செய்கிறவனாக, |
| **अस्मि**<br>**அஸ்மி** | = | இருக்கிறேன், |

| | | |
|---|---|---|
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **भोक्ता** | = | அனுபவிக்கிறவன், |
| **போ⁴க்தா** | | |
| **सुखी** | = | ஸுகமுள்ளவன், |
| **ஸுகீ²** | | |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **अनुभवादपि** | = | அனுபவத்திஞலும், |
| **அனுப⁴வாத³பி** | | |
| **बुद्धिः एव** | = | புத்தி தான், |
| **பு³த்³தி⁴: ஏவ** | | |
| **आत्मा भवति** | = | ஆத்மாவாக ஆகிறது, |
| **ஆத்மா ப⁴வதி** | | |
| **अहंकृतिः** | = | அஹங்காரம், |
| **அஹங்க்ருதி:** | | |
| **बुद्धिधर्मो हि** | = | புத்தியின் தர்மமல்லவா! |
| **பு³த்³தி⁴த⁴ர்மோ ஹி** | | |

"நான் செய்கிறவஞயிருக்கிறேன். நான் அனுபவிக்கிறவன். நான் ஸுகத்தோடு கூடியவன்" என்ற அனுபவத்திஞலும் புத்திதான் ஆத்மா என்று ஏற்படுகிறது. "நான்" என்கிற எண்ணம் புத்தியின் தர்மமே. **(555)**

**अन्योऽन्तर आत्मा विज्ञानमय इत्यब्रवीच्च निगमः ।**
**मनसोऽपि च भिन्नं विज्ञानमयं कर्तुरूपं आत्मानम् ॥ ५५६ ॥**

**அன்யோ(அ)ந்தர ஆத்மா விஜ்ஞானமய இத்யப்³ரவீச்ச நிக³ம: ।**
**மனஸோ(அ)பி ச பி⁴ன்னம் விஜ்ஞானமயம் கர்துரூபம் ஆத்மானம் ॥ 556 ॥**

| | | |
|---|---|---|
| **अन्योऽन्तर आत्मा विज्ञानमयः** | = | உள்ளே வேறு ஆத்மா விஞானமயன, |
| **அன்யோ(அ)ந்தர ஆத்மா விஜ்ஞானமய:** | | |
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **निगमश्च** | = | வேதமும், |
| **நிக³மஶ்ச** | | |
| **मनसोऽपि च** | = | மனதைக்காட்டிலும் வேறுனதாயும், |
| **மனஸோ(அ)பி ச** | | |

**कर्तुरूपं** = செய்கிற ஸ்வரூப முள்ளதுமான,
**கர்துரூபம்**

**विज्ञानमयं** = விஞ்ஞானமயனே,
**விஜ்ஞானமயம்**

**आत्मानं** = ஆத்மாவாக,
**ஆத்மானம்**

**अब्रवीत्** = சொல்லியது.
**அப்³ரவீத்**

"உள்ளே விக்ஞானமயன் என்று வேறு ஆத்மா" என்று வேதம் மனஸிலிருந்தும் வேறுபட்டதாக கர்த்தா (செய்கிறவன்) என்ற ஸ்வரூபமுள்ள விக்ஞானமயனே (புத்தியை) ஆத்மாவாகச் சொல்கிறது. **(556)**

## विज्ञानं यज्ञं तनुते कर्माणि तनुतेऽपि च ।

**விஜ்ஞானம் யஜ்ஞம் தனுதே கர்மாணி தனுதே(அ)பி ச ।**

## इत्यस्य कर्तृता श्रुत्या मुखतः प्रतिपाद्यते ।
## तस्माद्युक्तात्मता बुद्धेरिति बौद्धेन निश्चितम् ॥ ५५७ ॥

**இத்யஸ்ய கர்த்ருதா ஶ்ருத்யா முக²த: ப்ரதிபாத்³யதே ।**
**தஸ்மாத்³யுக்தாத்மதா பு³த்³தே⁴ரிதி பௌ³த்³தே⁴ன நிஶ்சிதம் ॥ 557 ॥**

**विज्ञानं** = விஞ்ஞானம்,
**விஜ்ஞானம்**

**यज्ञं** = யாகத்தை,
**யஜ்ஞம்**

**तनुते** = செய்கிறது,
**தனுதே**

**कर्माणि च** = கர்மாக்களேயும்,
**கர்மாணி ச**

**तनुते** = செய்கிறது,
**தனுதே**

**इति** = என்று,
**இதி**

**श्रुत्या:** = சுருதியால்,
**ஶ்ருத்யா:**

**अस्य** = இந்த விஞ்ஞானமயனுக்கு,
**அஸ்ய**

**कर्तृता** = செய்கிற தன்மையானது,

**கர்த்ருதா**

**मुखत:** = நேராகவே,

**முக²த:**

**प्रतिपाद्यते** = விளக்கப்படுகிறது,

**ப்ரதிபாத்³யதே**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**बुद्धे:** = புத்திக்கு,

**பு³த்³தே⁴**

**आत्मता** = ஆத்மத்தன்மையானது,

**ஆத்மதா**

**युक्ता** = உசிதமானது,

**யுக்தா**

**इति** = என்று,

**இதி**

**बौद्धेन** = பௌத்தரால்,

**பௌ³த்³தே⁴ன**

**निश्चितम्** = தீர்மானிக்கப்பட்டு உள்ளது.

**நிஶ்சிதம்**

"விக்ஞானம் யக்ஞத்தைச் செய்கிறது, கர்மாக்களையும் செய்கிறது" என்று வேதத்திலேயே விக்ஞானத்திற்கு (புத்திக்கு) செய்கிறவன் என்ற தன்மை வாய் விட்டு பிரதி பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் புத்திக்குத்தான் ஆத்மாவாயிருக் கும் தன்மை நியாயமாகும் என்று புத்தியைப் பற்றிச் சொல்லும் வாதியினால் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

[இந்த சுலோகத்தில் வேத வாக்கியத்தையும் பிரமாணமாய்ச் சொல்லியிருப்ப தினால் இதில் கண்ட "பௌத்தன்" என்ற பதத்திற்கு "பௌத்த மதத்தைச் சேர்ந்தவன்" என்று அர்த்தம் செய்வது உசிதமாகாது. அந்த மதவாதி வேதத்தின் பிராமாண்யத் தையே மறுக்கிறவன், அவனைத்தான் குறிப்பிடுகிறதென்று வைத்துக்கொண்டால், நான் சொல்வது உங்களுக்கு முக்யப்பிரமாணமான வேதப்படிக்கும் நியாயமாயிருக் கிறதென்று அவன் சொல்வதாக வைத்துக்கொள்ள வேண்டும்.] **(557)**

**(அவதாரிகை)** புத்திதான் ஆத்மா என்ற இந்தக் கொள்கையை பூர்வமீமாம் ஸகர்களில் பிராபாகரர் என்ற பிரிவைச் சேர்ந்தவர்களும், தார்க்கிகர்களும், கண்டித்து அக்ஞானம்தான் ஆத்மா என்று சொல்கிறார்கள் என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிறார்: -

**प्राभाकरस्तार्किकश्च तावुभावप्यमर्षया ।**
**तन्निश्चयं दूषयतो बुद्धिरात्मा कथं न्विति ॥ ५५८ ॥**

**ப்ராபா4கரஸ்தார்கிகஶ்ச தாவுபா4வப்யமர்ஷயா ।**
**தந்நிஶ்சயம் தூ3ஷயதோ பு3த்3தி4ராத்மா கத2ம் ந்விதி ॥ 558 ॥**

**प्राभाकरः** = ப்ராபாகரனும்,
**ப்ராபா4கர:**

**तार्किकश्च** = தார்கிகனும்,
**தார்கிகஶ்ச**

**उभावपि** = அவ்வருவர்களும்,
**உபா4வபி**

**अमर्षया** = பொறுத்துகொள்ளாமல்,
**அமர்ஷயா**

**बुद्धिः** = புத்தி,
**பு3த்3தி4:**

**कथं नु आत्मा** = எப்படி ஆத்மாவாகும்,
**கத2ம் நு ஆத்மா**

**इति** = என்று,
**இதி**

**तन्निश्चयं** = அவனுடைய தீர்மானத்தை,
**தந்நிஶ்சயம்**

**दूषयतः** = தூஷிக்கிறுர்கள்.
**தூ3ஷயத:**

பிராபாகரனும் தார்க்கிகனும் ஆகிய அவ்விரண்டு பேர்களும் அந்த தீர்மான த்தை ஸஹிக்காமல் புத்தி ஆத்மாவாக எப்படியிருக்கமுடியும என்று கண்டிக்கிறுர் கள். **(558)**

**बुद्धेरज्ञानकार्यत्वाद्विनाशित्वात्प्रतिक्षणम् ।**
**बुद्ध्यादीनां च सर्वेषामज्ञाने लयदर्शनात् ॥ ५५९ ॥**

**பு3த்3தே4ரஜ்ஞானகார்யத்வாத்3விநாஶித்வாத்ப்ரதிக்ஷணம் ।**
**பு3த்3த்4யாதீ3னும் ச ஸர்வேஷாமஜ்ஞானே லயத3ர்ஶனுத் ॥ 559 ॥**

**अज्ञोऽहमित्यनुभवादास्त्रीबालादिगोचरात् ।**
**भवत्यज्ञानमेवात्मा न तु बुद्धिः कदाचन ॥ ५६० ॥**

**அஜ்ஞோ(அ)ஹமித்யனுப4வாதா3ஸ்த்ரீபா3லாதி3கோ3சராத் ।**
**ப4வத்யஜ்ஞானமேவாத்மா ந து பு3த்3தி4: கதா3சன ॥ 560 ॥**

| | | |
|---|---|---|
| **बुद्धेः** | = | புத்தி, |
| **பு³த்³தே⁴:** | | |
| **अज्ञानकार्यत्वात्** | = | அக்ஞானத்திலிருந்து உண்டாகியிருப்பதாலும், |
| **அஜ்ஞானகார்யத்வாத்** | | |
| **प्रतिक्षण** | = | ஒவ்வொரு நிமிஷமும், |
| **ப்ரதிக்ஷண** | | |
| **विनाशित्वात्** | = | நாசமடைவதாலும், |
| **விநாஶித்வாத்** | | |
| **बुद्ध्यादीनां** | = | புத்தி முதலான, |
| **பு³த்³த்⁴யாதீ³னும்** | | |
| **सर्वेषा च** | = | எல்லாவற்றிற்கும், |
| **ஸர்வேஷா ச** | | |
| **अज्ञाने** | = | அக்ஞானத்தில், |
| **அஜ்ஞானே** | | |
| **लयदर्शनात्** | = | லயம் (நாசம்) காணப்படுவதாலும், |
| **லயத³ர்ஶனத்** | | |
| **आ स्त्रीबालादिगोचरात्** | = | ஸ்திரீ, சிறுவன் முதலியவர் வரை ஏற்படும், |
| **ஆ ஸ்த்ரீபா³லாதி³கோ³சராத்** | | |
| **अहं अज्ज:** | = | நான் அறியாதவன், |
| **அஹம் அஜ்ஜ:** | | |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **अनुभवात्** | = | அநுபவத்தாலும், |
| **அனுப⁴வாத்** | | |
| **अज्जानमेव** | = | அக்ஞானம்தான், |
| **அஜ்ஜானமேவ** | | |
| **आत्मा** | = | ஆத்மா, |
| **ஆத்மா** | | |
| **भवति** | = | ஆகிறது, |
| **ப⁴வதி** | | |
| **बुद्धि:** | = | புத்தி, |
| **பு³த்³தி⁴:** | | |
| **कदाचन** | = | ஒருக்காலும், |
| **கதா³சன** | | |
| **न तु** | = | ஆத்மாவல்ல. |
| **ந து** | | |

புத்தி என்பது அக்ஞானத்தின் காரியமாயிருப்பதினுலும், ஒவ்வொரு க்ஷண மும் நாசத்தையடைவதினுலும், புத்தி முதலிய யாவற்றும் அக்ஞானத்தில் லயம டைவதினுலும், ஸ்திரீ பாலன் முதலியவர் வரை யாவருக்கும் "நான் அக்ஞான முள்ளவன்" என்ற அனுபவமிருந்துவருவதினுலும் அக்ஞானம்தான் ஆத்மாவாகும். ஒருநாளும் புத்தி ஆத்மாவாகாது. **(559-560)**

## विज्ञानमयात् अन्यं तु आनन्दमयं परं तथाऽऽत्मानम् ।
## अन्योऽन्तर आत्माऽऽनन्दमय इति वदति वेदोऽपि ॥ ५६१ ॥

**விஜ்ஞானமயாத் அன்யம் து ஆனந்த³மயம் பரம் ததா²(ஆ)த்மானம் ।**
**அன்யோ(அ)ந்தர ஆத்மா(ஆ)நந்த³மய இதி வத³தி வேதோ³(அ)பி ॥ 561 ॥**

**अन्योऽन्तर आत्मा आनन्दमयः** = உள்ளே வேறு ஆத்மா ஆனந்தமயன்,
**அன்யோ(அ)ந்தர ஆத்மா ஆனந்த³மயः**
**इति** = என்று,
**இதி**
**वेदोपि** = வேதமும்,
**வேதோ³பி**
**तथा** = அவ்விதமே,
**ததா²**
**विज्ञानमयात्** = விஞ்ஞானமயனைக்காட்டிலும்,
**விஜ்ஞானமயாத்**
**अन्यं** = வேறான,
**அன்யம்**
**परं** = மேலான,
**பரம்**
**आनन्दमयं** = ஆனந்தமயனை,
**ஆனந்த³மயம்**
**आत्मानं** = ஆத்மாவாக,
**ஆத்மானம்**
**वदति** = சொல்கிறது.
**வத³தி**

அப்படியே வேதமும் "உள்ளே ஆனந்தமயன் என்று வேறு ஆத்மா என்று விக்ஞான மயனைத் தவிர வேறாக மேலாக ஆனந்தமயனென்ற ஆத்மாவைச் சொல்கிறது. **(561)**

**दुःखप्रत्ययशून्यत्वात् आनन्दमयता मता ।**
**अज्ञाने सकलं सुप्तौ बुद्ध्यादि प्रविलीयते ॥ ५६२ ॥**

**து³:க²ப்ரத்யயஶூன்யத்வாத் ஆனந்த³மயதா மதா ।**
**அஜ்ஞானே ஸகலம் ஸுப்தௌ பு³த்³த்⁴யாதி³ ப்ரவிலீயதே ॥ 562 ॥**

**दुःखिनोऽपि सुषुप्त्यादौ आनन्दमयता ततः ।**

**து³:கி²னோ(அ)பி ஸுஷுப்த்யாதௌ³ ஆனந்த³மயதா தத: ।**

**दुःखप्रत्ययशून्यत्वात्** = துன்ப உணர்ச்சி இல்லாததால்,
**து³:க²ப்ரத்யயஶூன்யத்வாத்**
**आनन्दमयता** = ஆனந்தமயத் தன்மை,
**ஆனந்த³மயதா**
**मता** = கருதப்பட்டுள்ளது,
**மதா**
**सुप्तौ** = தூக்கத்தில்,
**ஸுப்தௌ**
**बुद्ध्यादि सकलं** = புத்தி முதலானவை எல்லாம்,
**பு³த்³த்⁴யாதி³ ஸகலம்**
**अज्ञाने** = அக்ஞானத்தில்,
**அஜ்ஞானே**
**प्रविलीयते** = லயம் அடைகிறது,
**ப்ரவிலீயதே**
**ततः** = அதனுல்,
**தத:**
**दुःखिनोपि** = துன்பமுள்ளவனுக்கும்,
**து³:கி²னோபி**
**सुषुप्त्यादौ** = தூக்கம் முதலான நிலையில்,
**ஸுஷுப்த்யாதௌ³**
**आनन्दमयता** = ஆனந்த மயத்தன்மை உள்ளது.
**ஆனந்த³மயதா**

அக்ஞானத்திற்கு துக்கமென்ற உணர்ச்சியில்லாததினுல் ஆனந்தமயத்தன்மை கருதப்படுகிறது. அக்ஞானத்தில் புத்தி முதலியது எல்லாம் தூக்க காலத்தில் நன்கு லயத்தை அடைந்துவிடுகிறது. அதினுல்தான் துக்கத்தோடு கூடினவனுக்குக்கூட நல்ல தூக்கம் மூர்ச்சை முதலிய நிலையில் ஆனந்தமயத் தன்மை ஏற்படுகிறது. **(562)**

**सुप्तौ किंचित् न जानामीत्यनुभूतिश्च दृश्यते ॥ ५६३ ॥**

**ஸுப்தௌ கிஞ்சித் ந ஜாநாமீத்யனுபூ⁴திஶ்ச த்³ருஶ்யதே ॥ 563 ॥**

**यत एवं अतो युक्ता ज्ञानस्यात्मता ध्रुवम् ।**

**யத ஏவம் அதோ யுக்தா ஜ்ஞானஸ்யாத்மதா த்⁴ருவம் ।**

**किंचित्** = ஒன்றையும்,
**கிஞ்சித்**

**न जानामी** = அறியவில்லை,
**ந ஜாநாமீ**

**इति** = என்று,
**இதி**

**सुप्तौ** = தூக்கத்தில்,
**ஸுப்தௌ**

**अनुभूतिश्च** = அனுபவமும்,
**அனுபூ⁴திஶ்ச**

**दृश्यते** = காணப்படுகிறது,
**த்³ருஶ்யதே**

**यतः** = எதனால்,
**யதஃ**

**एवं** = இவ்வாறு உள்ளதோ,
**ஏவம்**

**अतः** = ஆகையால்,
**அதஃ**

**अज्ञानस्य** = அக்ஞானத்திற்கு,
**அஜ்ஞானஸ்ய**

**आत्मता** = ஆத்மத்தன்மையானது,
**ஆத்மதா**

**ध्रुवम्** = நிச்சயமாக,
**த்⁴ருவம்**

**युक्ता** = நியாயமானது,
**யுக்தா**

நல்ல தூக்கத்தில் "நான் எதையும் அறியவில்லை" என்கிற அனுபவமும் காணப்படுகிறது. இவ்விதமிருப்பதால், அக்ஞானத்திற்குத்தான் ஆத்மத்தன்மை நிச்சயமாய்ப் பொருந்தும். **(563)**

(**அவதாரிகை**) மீமாம்ஸகர்களில் வேறொரு பிரிவைச் சேர்ந்த குமாரிலபட்ட ருடைய சிஷ்யர்களான பாட்டர்கள் இந்தக் கொள்கையையும் கண்டித்து ஆத்மா அக்ஞானம் மாத்திரமல்ல, ஞானம் அக்ஞானம் இரண்டும் சேர்ந்தது என்கிறார்கள்: -

**इति तनिश्चयं भाट्टा दूषयन्ति स्वयुक्तिभिः ॥ ५६४ ॥**

**இதி தநிஸ்சயம் பா⁴ட்டா தூ³ஷயந்தி ஸ்வயுக்திபி⁴: ॥ 564 ॥**

**इति** = இவ்வாறான,
**இதி**
**तनिश्चयं** = அவர்களின் தீர்மானத்தை,
**தநிஸ்சயம்**
**भाट्टा** = பாட்டர்கள்,
**பா⁴ட்டா**
**स्वयुक्तिभिः** = தங்களின் யுக்திகளால்,
**ஸ்வயுக்திபி⁴:**
**दूषयन्ति** = தூஷிக்கிறார்கள்.
**தூ³ஷயந்தி**

இவ்விதமுள்ள அவர்களின் தீர்மானத்தை தங்கள் யுக்திகளைக் கொண்டு பாட்டர்கள் தூஷிக்கிறார்கள். **(564)**

**कथं अज्ञानमेवात्मा ज्ञानं चाप्युपलभ्यते ।**
**ज्ञानाभावे कथं विद्युः अज्ञोऽहमिति चाज्ञताम् ॥ ५६५ ॥**

**கத²ம் அஜ்ஞானமேவாத்மா ஜ்ஞானம் சாப்யுபலப்⁴யதே ।**
**ஜ்ஞாநாபா⁴வே கத²ம் வித்³யு: அஜ்ஞோ(அ)ஹமிதி சாஜ்ஞதாம் ॥ 565 ॥**

**कथं** = எப்படி,
**கத²ம்**
**अज्ञानमेव** = அக்ஞானம் மட்டும்,
**அஜ்ஞானமேவ**
**आत्मा** = ஆத்மாவாகும்?
**ஆத்மா**
**ज्ञानं चापि** = ஞானமும்,
**ஜ்ஞானம் சாபி**
**उपलभ्यते** = காணப்படுகிறதே!
**உபலப்⁴யதே**
**ज्ञानाभावे** = ஞானமில்லாவிட்டால்,
**ஜ்ஞாநாபா⁴வே**

| | | |
|---|---|---|
| **अहं अज्ञः**<br>**அஹம் அஜ்ஞ:** | = | நான் அறியாதவன், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अज्ञतां**<br>**அஜ்ஞதாம்** | = | அறியாத்தன்மையை, |
| **कथं विद्युः**<br>**கத²ம் வித்³யு:** | = | எப்படி அறிவார்கள்? |

அக்ஞானம் மாத்திரம் எப்படி ஆத்மாவாகும்? ஞானமும் காணப்படுகிறதே! ஞானம் இல்லாமல் போனால் "நான் அறியாதவன்" என்று அறியாத்தன்மையை எப்படி அறிய முடியும்? **(565)**

**अस्वाप्सं सुखमेवाहं न जानाम्यत्र किंचन ।**
**इत्यज्ञानमपि ज्ञानं प्रबुद्धेषु प्रदृश्यते ॥ ५६६ ॥**

**அஸ்வாப்ஸம் ஸுக²மேவாஹம் ந ஜானாம்யத்ர கிஞ்சன ।**
**இத்யஜ்ஞானமபி ஜ்ஞானம் ப்ரபு³த்³தே⁴ஷு ப்ரத்³ருஶ்யதே ॥ 566 ॥**

| | | |
|---|---|---|
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **सुखमेव**<br>**ஸுக²மேவ** | = | சுகமாகவே, |
| **अस्वाप्सं**<br>**அஸ்வாப்ஸம்** | = | தூங்கினேன், |
| **अत्र**<br>**அத்ர** | = | இங்கு, |
| **किंचन**<br>**கிஞ்சன** | = | ஒன்றையும், |
| **न जानापि**<br>**ந ஜானாபி** | = | அறியவில்லை, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अज्ञानं**<br>**அஜ்ஞானம்** | = | அக்ஞானமும், |
| **अज्ञानमपि**<br>**அஜ்ஞானமபி** | = | ஞானமும், |

| | | |
|---|---|---|
| प्रबुद्धेषु<br>ப்ரபு³த்³தே⁴ஷு | = | விழித்துக்கொண்டவர்களிடம் |
| प्रदृश्यते<br>ப்ரத்³ருஶ்யதே | = | காணப்படுகிறது. |

"நான் ஸுகமாகவே தூங்கினேன். அப்பொழுது நான் எதையும் அறியவில்லை" என்று அக்ஞானம் ஞானம், இரண்டும் விழித்துக்கொண்டவர்களிடம் காணப்படுகிறது. (566)

**प्रज्ञानघन एवानन्दमय इत्यपि श्रुतिः ।**
**प्रब्रवीत्युभयात्मत्वं आत्मनः स्वयमेव हि ॥ ५६७ ॥**

**ப்ரஜ்ஞானக⁴ன ஏவானந்த³மய இத்யபி ஶ்ருதி꞉ ।**
**ப்ரப்³ரவீத்யுப⁴யாத்மத்வம் ஆத்மன꞉ ஸ்வயமேவ ஹி ॥ 567 ॥**

| | | |
|---|---|---|
| प्रज्ञानघन एव<br>ப்ரஜ்ஞானக⁴ன ஏவ | = | ஞானம் நிறைந்தவன் தான், |
| आनन्दमयः<br>ஆனந்த³மய꞉ | = | ஆனந்தமயன், |
| इति<br>இதி | = | என்று, |
| श्रुतिरपि<br>ஶ்ருதிரபி | = | வேதமும், |
| स्वयमेव<br>ஸ்வயமேவ | = | தானாகவே, |
| आत्मनः<br>ஆத்மன꞉ | = | ஆத்மாவிற்கு, |
| उभयात्मत्वं<br>உப⁴யாத்மத்வம் | = | இருவித ஸ்வபாவத்தை, |
| प्रब्रवीति हि<br>ப்ரப்³ரவீதி ஹி | = | சொல்கிறதல்லவா! |

ஆனந்தமயன் ஞானகனனே என்று வேதமும் நேராகவே அத்மாவிற்கு அக்ஞானம், ஞானம் இரண்டு ஸ்வபாவத் தன்மையும் உண்டென்று சொல்கிற தல்லவா! (567)

**आत्मातः चिज्जडतनुः खद्योत इव संमतः ।**
**न केवलज्ञानमयो घटकुड्यादिवत् जडः ।**

**ஆத்மாத꞉ சிஜ்ஜட³தனு꞉ க²த்³யோத இவ ஸம்மத꞉ ।**
**ந கேவலஜ்ஞானமயோ க⁴டகுட்³யாதி³வத் ஜட³꞉ ।**

**अत:** = ஆகையால்,

**அத꞉**
**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**
**खद्योत इव** = மின்மினிப் பூச்சிபோல,

**க²த்³யோத இவ**
**चिज्जडतनु:** = ஞானம் அக்ஞானம் என்று இரு ஸ்வபாவமுள்ள

**சிஜ்ஜட³தனு꞉** தாக,
**संमत:** = ஒப்புக்கொள்ளப்பட்டது,

**ஸம்மத꞉**
**घटकुड्यादिवत्** = குடம், சுவறு முதலியவைபோல,

**க⁴டகுட்³யாதி³வத்**
**जड:** = ஜடமாகவும்,

**ஜட³꞉**
**केवलज्ञानमय:** = அக்ஞான ஸ்வரூபம் மட்டுமுள்ளதகவும்,

**கேவலஜ்ஞானமய꞉**
**न** = இல்லை.

**ந**

ஆகையால் ஆத்மா மினுமினுப் பூச்சியைப்போல (அது எப்படி பிரகாசமுள்ள தாயும் பிரகாசமில்லாததாயும் இருக்கின்றதோ அதைப்போல) ஞானம் அக்ஞானம் இரண்டையும் ஸ்வபாவமாகவுள்ளது. குடம், சுவர் முதலியன போல ஜடமாய் வெறும் அக்ஞானமயம் அல்ல.

**(அவதாரிகை)** இதுவும் பிசகு, சூன்யம்தான் ஆத்மா என்று இன்னொருவன் சொல்கிறன்: -

**इति निश्चयमेतेषां दूषयत्यपरो जड: ॥ ५६८ ॥**

**இதி நிஶ்சயமேதேஷாம் தூ³ஷயத்யபரோ ஜட³꞉ ॥ 568 ॥**

**इति** = என்ற,

**இதி**
**एतेषां** = இவர்களின்,

**ஏதேஷாம்**

| | | |
|---|---|---|
| **निश्चय** <br> **நிஶ்சய** | = | தீர்மானத்தை, |
| **जडः** <br> **ஜட³ः** | = | அறிவில்லாத, |
| **अपरः** <br> **அபரः** | = | வேறு ஒருவன், |
| **दूषयति** <br> **தூ³ஷயதி** | = | தூஷிக்கிறன். |

பாட்டர்களாகிய இவர்களின் இந்தத் தீர்மானத்தை அறிவற்ற இன்னெருவன் தூஷிக்கிறன். **(568)**

**ज्ञानाज्ञानमयस्त्वात्मा कथं भवितुमर्हति ।**
**परस्परविरुद्धत्वात् तेजस्तिमिरवत् तयोः ॥ ५६९ ॥**

**ஜ்ஞாஞஜ்ஞானமயஸ்த்வாத்மா கத²ம் ப⁴விதுமர்ஹதி ।**
**பரஸ்பரவிருத்³த⁴த்வாத் தேஜஸ்திமிரவத் தயோः ॥ 569 ॥**

| | | |
|---|---|---|
| **तेजस्तिमिरवत्** <br> **தேஜஸ்திமிரவத்** | = | ஒளியும் இருட்டும்போல, |
| **तयोः** <br> **தயோः** | = | அந்த ஞானம் அக்ஞானம் இரண்டும், |
| **परस्परविरुद्धत्वात्** <br> **பரஸ்பரவிருத்³த⁴த்வாத்** | = | ஒன்றுக்கொன்று விரோதமுள்ளதாதலால், |
| **आत्मा** <br> **ஆத்மா** | = | ஆத்மாவானது, |
| **कथं** <br> **கத²ம்** | = | எப்படி, |
| **ज्ञानाज्ञानमयः** <br> **ஜ்ஞாஞஜ்ஞானமய:** | = | ஞானம் அக்ஞானம் இரண்டு ஸ்வரூபமுள்ளதாக, |
| **भवितुं** <br> **ப⁴விதும்** | = | ஆவதற்கு, |
| **अर्हति** <br> **அர்ஹதி** | = | தகுந்ததாகிறது? |

வெளிச்சமும் இருட்டும் போல அந்த ஞானம், அக்ஞானம் இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதத் தன்மையுடையவைகளாய் இருப்பதால், ஆத்மா ஞான மயனுயும் அக்ஞானமயனுயும் இருப்பது எப்படி நியாயமாகும்? **(569)**

**सामानाधिकरण्यं वा संयोगो वा समाश्रयः ।**
**तमःप्रकाशवत् ज्ञानाज्ञानयोः न हि सिध्यति ॥ ५७० ॥**

**ஸாமாஞதி⁴கரண்யம் வா ஸம்யோகோ³ வா ஸமாஶ்ரயː ।**
**தமːப்ரகாஶவத் ஜ்ஞானாஜ்ஞானயோː ந ஹி ஸித்⁴யதி ॥ 570 ॥**

**तमःप्रकाशवत्** = இருளுக்கும் ஒளிக்கும்போல,
**தமːப்ரகாஶவத்**
**ज्ञानाज्ञानयोः** = ஞானம், அக்ஞானம் இரண்டிற்கும்,
**ஜ்ஞாஞஜ்ஞானயோː**
**सामानाधिकरण्यं वा** = ஒரே பதார்த்தத்தைக் குறிக்கும் தன்மையாவது,
**ஸாமாஞதி⁴கரண்யம் வா**
**संयोगो वा** = சேர்க்கையாவது,
**ஸம்யோகோ³ வா**
**समाश्रयः** = ஒரே ஆச்ரயத்துடன் இருப்பதாவது,
**ஸமாஶ்ரயː**
**न हि सिध्यति** = ஏற்படாது.
**ந ஹி ஸித்⁴யதி**

ஒரே பதார்த்தத்தைக் குறிக்கும் தன்மையாவது, ஒன்றேடொன்று சேர்ந்திருப்பதாவது, இரண்டும் ஒரே ஆசிரயத்துடன் இருப்பதாவது, இருட்டுக்கும் பிரகாசத்திற்கும் எப்படி ஸாத்தியமில்லையோ அதைப்போலவே, ஞானத்திற்கும் அக்ஞானத்திற்கும் இவை எவ்வகையிலும் ஸாத்யப்படாது. **(570)**

**अज्ञानं अपि विज्ञानं बुद्धिर्वाऽपि च तद्गुणाः ।**
**सुषुप्तौ नोपलभ्यन्ते यत्किंचिदपि वापरम् ॥ ५७१ ॥**
**அஜ்ஞானம் அபி விஜ்ஞானம் பு³த்³தி⁴ர்வா(அ)பி ச தத்³கு³ணாː ।**
**ஸுஷுப்தௌ நோபலப்⁴யந்தே யத்கிஞ்சித³பி வாபரம் ॥ 571 ॥**

**मात्रादिलक्षणं किं तु शून्यमेवोपलभ्यते ।**
**மாத்ராதி³லக்ஷணம் கிம் து ஶூன்யமேவோபலப்⁴யதே ।**

**सुषुप्तौ** = நல்ல தூக்கத்தில்,
**ஸுஷுப்தௌ**
**अज्ञानमपि** = அக்ஞானமும்,
**அஜ்ஞானமபி**
**विज्ञानं** = விக்ஞானமும்,
**விஜ்ஞானம்**

| | | |
|---|---|---|
| बुद्धिर्वाऽपि च | = | புத்தியுமோ, |
| பு³த்³தி⁴ர்வா(அ)பி ச | | |
| तद्गुणाः | = | அதன் குணங்களோ, |
| தத்³கு³ணா: | | |
| मात्रादिलक्षणं | = | ப்ரமாதா, ப்ரமேயம், ப்ரமை என்ற ஸ்வருபமோ, |
| மாத்ராதி³லக்ஷணம் | | |
| यत्किंचिदपि वा अपरं | = | வேறு ஏதாவதோ, |
| யத்கிஞ்சித³பி வா அபரம் | | |
| नोपलभ्यन्ते | = | காணப்படவில்லை, |
| நோபலப்⁴யந்தே | | |
| किं तु शून्यमेव | = | ஆனால் சூன்யம்தான், |
| கிம் து ஶூன்யமேவ | | |
| उपलभ्यते | = | காணப்படுகிறது. |
| உபலப்⁴யதே | | |

நல்ல தூக்கத்தில் அக்ஞானமோ, ஞானமோ, புத்தியோ, அதன் குணங்களோ, பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் பதார்த்தம் என்ற இவையோ வேறு எதுவோ, காணப்படவில்லை, சூன்யம்தான் காணப்படுகிறது.

**सुषुप्तौ नान्यदस्त्येव नाहमप्यासमित्यनु ॥ ५७२ ॥**

**ஸுஷுப்தௌ நான்யத³ஸ்த்யேவ நாஹமப்யாஸமித்யனு ॥ 572 ॥**

**सुप्तोत्थितजनैः सर्वैः शून्यमेवानुस्मर्थते ।**
**यत् ततः शून्यमेवात्मा न ज्ञानाज्ञानलक्षणः ॥ ५७३ ॥**

**ஸுப்தோத்தி²தஜனை: ஸர்வை: ஶூன்யமேவானுஸ்மர்த²தே ।**
**யத் தத: ஶூன்யமேவாத்மா ந ஜ்ஞானாஜ்ஞானலக்ஷண: ॥ 573 ॥**

| | | |
|---|---|---|
| यत् | = | எதனால், |
| யத் | | |
| सुषुप्तौ | = | நல்ல தூக்கத்தில், |
| ஸுஷுப்தௌ | | |
| अन्यत् | = | வேறு பொருள், |
| அன்யத் | | |
| नास्त्येव | = | இல்லவே இல்லை, |
| நாஸ்த்யேவ | | |
| अहमपि | = | நானும், |
| அஹமபி | | |

**नासं** = இல்லை,

**நாஸம்**

**इति** = என்று,

**இதி**

**अनु** = பின்னால்,

**அனு**

**सर्वैः** = எல்லா,

**ஸர்வை:**

**सुप्तोत्थितजनैः** = தூங்கி எழுந்திருந்த ஜனங்களாலும்,

**ஸுப்தோத்தி²தஜனை:**

**शून्यमेव** = சூன்யம் தான்,

**ஶூன்யமேவ**

**अनुस्मर्थते** = நினைத்துக்கொள்ளப்படுகிறதோ,

**அனுஸ்மர்த²தே**

**ततः** = ஆகையால்,

**தத:**

**शून्यमेव** = சூன்யம் தான்,

**ஶூன்யமேவ**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**ज्ञानाज्ञानलक्षणः** = ஞானம் அக்ஞானம் இரண்டும் சேர்ந்தஸ்வரூபம்,

**ஜ்ஞானாஜ்ஞானலக்ஷண:**

**न** = ஆத்மாவல்ல.

**ந**

“நல்ல தூக்கத்தில் வேறு எதுவும் இல்லவேயில்லை. நானும் கூட இல்லை" என்று பின்னால் தூங்கி எழுந்திருந்த ஜனங்கள் எல்லோராலும் சூன்யம்தான் ஞாபகப் படுத்தப்படுகிறது. இவ்விதமிருப்பதினால் சூன்யம்தான் ஆத்மா, ஞானம், அக்ஞானம் இரண்டும் சேர்ந்த ஸ்வரூபம் ஆத்ம அல்ல. **(573)**

**वेदेनापि असदेवेदमग्र आसीत् इति स्फुटम् ।**
**निरुच्यते यतस्तस्मात् शून्यस्यैवात्मता मता ॥ ५७४ ॥**

**வேதே³னாபி அஸதே³வேத³மக்³ர ஆஸீத் இதி ஸ்பு²டம் ।**
**நிருச்யதே யதஸ்தஸ்மாத் ஶூன்யஸ்யைவாத்மதா மதா ॥ 574 ॥**

**यतः** = எதனால்,

**யத:**

| | | |
|---|---|---|
| इदं | = | இந்த பிரபஞ்சம், |
| இத³ம் | | |
| अग्रे | = | ஸிருஷ்டிக்கு முன்னால், |
| அக்³ரே | | |
| असदेव | = | இல்லாததாகவே, |
| அஸதே³வ | | |
| आसीत् | = | இருந்தது, |
| ஆஸீத் | | |
| इति | = | என்று, |
| இதி | | |
| स्फुटम् | = | தெளிவாக, |
| ஸ்பு²டம் | | |
| वेदेनापि | = | வேதத்தாலும், |
| வேதே³னாபி | | |
| निरुच्यते | = | விளக்கப்படுகிறதோ, |
| நிருச்யதே | | |
| तस्मात् | = | ஆகையால், |
| தஸ்மாத் | | |
| शून्यस्यैव | = | சூன்யத்திற்குத்தான், |
| ஶூன்யஸ்யைவ | | |
| आत्मता | = | ஆத்மத்தன்மை, |
| ஆத்மதா | | |
| मता | = | ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. |
| மதா | | |

"இந்த ஜகத் ஸ்ருஷ்டிக்கு முன்னால் இல்லாததாகவேயிருந்தது" என்று வேதத்தினாலேயும் தெளிவாக விளக்கப்பட்டிருப்பதால் சூன்யத்திற்குத்தான் ஆத்மத் தன்மை ஒப்புக்கொள்ளவேண்டும். **(574)**

**असन्नेव घटः पूर्वं जायमानः प्रदृश्यते ।**
**न हि कुम्भः पुरैवान्तः स्थित्वोदेति बहिर्मुखः ॥ ५७५ ॥**

**அஸன்னேவ க⁴டः பூர்வம் ஜாயமானः ப்ரத்³ருஶ்யதே ।**
**ந ஹி கும்ப⁴ः புரைவாந்தः ஸ்தி²த்வோதே³தி ப³ஹிர்முக²ः ॥ 575 ॥**

| | | |
|---|---|---|
| पूर्वं | = | முன்னால், |
| பூர்வம் | | |

| | | |
|---|---|---|
| **असन्** | = | இல்லாத, |
| **அஸன்** | | |
| **घट एव** | = | குடம்தான், |
| **க⁴ட ஏவ** | | |
| **जायमानः** | = | உண்டாகிறதாக, |
| **ஜாயமாநः** | | |
| **प्रदृश्यते** | = | காணப்படுகிறது, |
| **ப்ரத்³ருஶ்யதே** | | |
| **कुम्भः** | = | குடம், |
| **கும்ப⁴ः** | | |
| **पुरव** | = | முன்னாலேயே, |
| **புரவ** | | |
| **अन्तः स्थित्वा** | = | உள்ளே இருந்து கொண்டு, |
| **அந்தः ஸ்தி²த்வா** | | |
| **बहिर्मुखः** | = | வெளிப்படுவதாக, |
| **ப³ஹிர்முக²ः** | | |
| **नहि उदेति** | = | கிளம்புகிறதில்லை. |
| **நஹி உதே³தி** | | |

முன்னால் இல்லாத குடம்தான் உண்டாவதாகக் காணப்படுகிறது. முன்னமேயே உள்ளே இருந்துகொண்டு குடம் வெளியில் கிளம்புகிறதில்லையே! **(575)**

**यत्तस्मादसतः सर्वं सदिदं समजायत ।**

**ततः सर्वात्मना शून्यस्यैवात्मत्वं समर्हति ॥ ५७६ ॥**

**யத்தஸ்மாத³ஸதः ஸர்வம் ஸதி³த³ம் ஸமஜாயத ।**
**ததः ஸர்வாத்மனா ஶூன்யஸ்யைவாத்மத்வம் ஸமர்ஹதி ॥ 576 ॥**

| | | |
|---|---|---|
| **यत्** | = | எந்த காரணத்தால், |
| **யத்** | | |
| **सत्** | = | ஸத்தான, |
| **ஸத்** | | |
| **इदं सर्वं** | = | இது எல்லாம், |
| **இத³ம் ஸர்வம்** | | |
| **तस्मात्** | = | அந்த, |
| **தஸ்மாத்** | | |
| **असतः** | = | அஸத்திலிருந்து, |
| **அஸதः** | | |

| | | |
|---|---|---|
| **समजायत** **ஸமஜாயத** | = | உண்டானதோ, |
| **ततः** **தத:** | = | அந்தக் காரணத்தால், |
| **सर्वात्मना** **ஸர்வாத்மனு** | = | எல்லாவிதத்திலும், |
| **शून्यस्यैव** **ஶூன்யஸ்யைவ** | = | சூன்யத்திற்குத்தான், |
| **आत्मत्वं** **ஆத்மத்வம்** | = | ஆத்மத்தன்மை, |
| **समर्हति** **ஸமர்ஹதி** | = | தகுந்ததாகிறது. |

இல்லாமலிருந்த அந்த சூன்யத்திலிருந்து இருக்கிற இது எல்லாம் உண்டாயிற்று என்ற காரணத்தினுல் எவ்வகையாகப் பார்த்தாலும், சூன்யத்திற்குத்தான் ஆத்மாவாயிருக்கும் தன்மை பொருத்தமாயிருக்கிறது. **(576)**

(**அவதாரிகை**) இவ்விதமாக ஒவ்வொரு மதவாதிகளின் அபிப்பிராயத்தையும் சொல்லி அவர்களுக்குள்ளேயே ஒருவர் அபிப்பிராயத்தை மற்றவர் கண்டிப்பதாக எடுத்துக்காட்டியதிலிருந்து, எல்லாக் கொள்கைகளுமே தவறுதான் என்று ஏற்படுகிற தென்பதை ஸ்ரீமத் ஆசார்யார் தெளிவுபடுத்துகிருர்: -

**इत्येवं पण्डितंमन्यैः परस्परविरोधिभिः।**
**तत्तन्मतानुरूपाल्पश्रुतियुक्त्यनुभूतिभिः ॥ ५७७ ॥**

**இத்யேவம் பண்டி³தம்மன்யை: பரஸ்பரவிரோதி⁴பி⁴: ।**
**தத்தன்மதானுரூபால்பஶ்ருதியுக்த்யனுபூ⁴திபி⁴: ॥ 577 ॥**

**निर्णीतमतजातानि खण्डितान्येव पण्डितैः।**
**श्रुतिभिश्चाप्यनुभवैर्बाधकैः प्रतिवादिनाम् ॥ ५७८ ॥**

**நிர்ணீதமதஜாதானி க²ண்டி³தான்யேவ பண்டி³தை: ।**
**ஶ்ருதிபி⁴ஶ்சாப்யனுப⁴வைர்பா³த⁴கை: ப்ரதிவாதி³னாம் ॥ 578 ॥**

| | | |
|---|---|---|
| **इत्येवं** **இத்யேவம்** | = | என்று இவ்விதமாக, |
| **परस्परविरोधिभिः** **பரஸ்பரவிரோதி⁴பி⁴:** | = | ஒருவருக்கொருவர் எதிரிகளான, |
| **पण्डितंमन्यैः** **பண்டி³தம்மன்யை:** | = | தங்களைப் பண்டிதர்கள் என்று எண்ணிக்கொள்பவர்களால், |

**तत्तन्मतानुरूप** = அந்தந்த மதத்திற்கு ஒற்றுமையான,

**தத்தன்மதானுருப**

**अल्प** = கொஞ்சமான,

**அல்ப**

**श्रुतियुक्त्यनुभूतिभि:** = வேதம், யுக்தி, அநுபவம் இவைகளால்,

**ஶ்ருதியுக்த்யனுபூ⁴திபி⁴:**

**निर्णीतमतजातानि** = தீர்மானிக்கப்பட்ட மதஸமூஹங்கள்,

**நிர்ணீதமதஜாதானி**

**पण्डितै:** = பண்டிதர்களால்,

**பண்டி³தை:**

**प्रतिवादिनाम्** = எதிர்வாதிகளுக்கு,

**ப்ரதிவாதி³னும்**

**बाधकै:** = பாதகமான,

**பா³த⁴கை:**

**श्रुतिभिश्च** = ச்ருதிகளாலும்,

**ஶ்ருதிபி⁴ஶ்ச**

**अनुभवैरपि** = அநுபவங்களாலும்,

**அனுப⁴வைரபி**

**खण्डितान्येव** = கண்டிக்கப்பட்டவைகள்தான்.

**க²ண்டி³தான்யேவ**

இவ்விதமாக ஒருவருக்கொருவர் விரோதிகளாயிருந்து கொண்டு தாங்களாகவே தங்களை பண்டிதர்களாக எண்ணிக் கொண்டிருப்பவர்களால் அவரவர் அபிப்பிராயத்திற்கு அனுகுணமாக அல்பமான வேத வாக்கியங்களையும், யுக்திகளையும் அனுபவங்களையும் காட்டி தீர்மானிக்கப்பட்டிருக்கிற இந்த மதக் கூட்டங்களெல்லாம் வாஸ்தவமாக பண்டிதர்களாயிருப்பவர்களால் பிரதிவாதிகளுக்கு பாதகமாயுள்ள வேதவாக்கியங்களாலும் அனுபவத்தினுலும் கண்டிக்கப்பட்டவைகளேயாகும்.

**(577-578)**

**यतस्तस्मात्तु पुत्रादेः शून्यान्तस्य विशेषतः ।**
**सुसाधितं अनात्मत्वं श्रुतियुक्त्यनुभूतिभिः ॥ ५७९ ॥**

**யதஸ்தஸ்மாத்து புத்ராதே³: ஶூன்யாந்தஸ்ய விஶேஷத: ।**
**ஸுஸாதி⁴தம் அனாத்மத்வம் ஶ்ருதியுக்த்யனுபூ⁴திபி⁴: ॥ 579 ॥**

**यत: तस्मात्** = எதனுல், (கண்டிக்கப்பட்டவைகளோ) ஆகையால்,

**யத: தஸ்மாத்**

**पुत्रादे:** = புத்திரன் முதல்,

**புத்ராதே³:**

| | | |
|---|---|---|
| **शून्यान्तस्य**<br>**ஶூன்யாந்தஸ்ய** | = | சூன்யம் முடிய உள்ளவற்றிற்கு, |
| **विशेषतः**<br>**விஶேஷத꞉** | = | விசேக்ஷித்து, |
| **शून्यान्तस्य**<br>**ஶூன்யாந்தஸ்ய** | = | வேதம், யுக்தி, அனுபவம் இவைகளால், |
| **अनात्मत्वं**<br>**அனாத்மத்வம்** | = | ஆத்மாவல்லாத தன்மை, |
| **सुसाधितं**<br>**ஸுஸாதி⁴தம்** | = | நன்குஸாதிக்கப்பட்டது. |

இவ்விதமிருப்பதால் புத்திரன் முதல் சூன்யம் முடிய உள்ளவைகளுக்கும் தனித்தனியே சுருதி, யுக்தி, அனுபவம் இவைகளைக்கொண்டு அனாத்மத் (ஆத்மா வற்ற) தன்மை நன்றாக ஸாதிக்கப்பட்டுவிட்டது. **(579)**

**न हि प्रमाणान्तरबाधितस्य**
**याथार्थ्य अङ्गीक्रियते महद्भिः ।**
**पुत्रादिशून्यान्तं अनात्मतत्त्वं**
**इत्येव विस्पष्ट अतः सुजातम् ॥ ५८० ॥**

**ந ஹி ப்ரமாணாந்தரபா³தி⁴தஸ்ய**
**யாதா²ர்த்²ய அங்கீ³க்ரியதே மஹத்³பி⁴꞉ ।**
**புத்ராதி³ஶூன்யாந்தம் அனாத்மதத்த்வம்**
**இத்யேவ விஸ்பஷ்ட அத꞉ ஸுஜாதம் ॥ 580 ॥**

| | | |
|---|---|---|
| **प्रमाणान्तरबाधितस्य**<br>**ப்ரமாணாந்தரபா³தி⁴தஸ்ய** | = | வேறு பிரமாணங்களால் பாதிக்கப்பட்டதற்கு, |
| **याथार्थ्यं**<br>**யாதா²ர்த்²யம்** | = | உண்மைத்தன்மை, |
| **महद्भिः**<br>**மஹத்³பி⁴꞉** | = | பெரியோர்களால், |
| **नहि अङ्गीक्रियते**<br>**நஹி அங்கீ³க்ரியதே** | = | ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லையல்லவா! |
| **अतः**<br>**அத꞉** | = | ஆகையால், |
| **पुत्रादिशून्यान्तं**<br>**புத்ராதி³ஶூன்யாந்தம்** | = | புத்திரன் முதல் சூன்யம் முடிய உள்ளது, |

**अनात्मतत्त्वं इत्येव** = ஆத்மாவல்லாத ஸ்வரூபம் என்றே,
**அனாத்மதத்த்வம் இத்யேவ**

**विस्पष्टं** = மிகத்தெளிவாக,
**விஸ்பஷ்டம்**

**सुजातम्** = நன்கு ஏற்பட்டது.
**ஸுஜாதம்**

வேறு பிரமாணத்தினால் பாதிக்கப்படுகிற விஷயத்திற்கு வாஸ்தவமாயிருக் கும் தன்மை பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்படுவது கிடையாது என்பது பிரஸித் தம். ஆகையால் புத்திரன் முதல் சூன்யம் வரையிலுள்ளவைகளுக்கு அனாத்மத் தன்மைதான் (ஆத்மாவாக இருக்க முடியாத தன்மைதான்) என்பது வெகு ஸ்பஷ்ட மாக நன்கு ஏற்படுகிறது. **(580)**

(**அவதாரிகை**) குரு உபதேசம் செய்துகொண்டு போன முறையில் ஒவ்வொரு மதத்தையும் சொல்லி அது பிசகென்று அடுத்த மதஸ்தர் எப்படிச் சொல்கிறார் என்பதையும் படிப்படியாகவே எடுத்துச் சொல்லிக்கொண்டு வந்தார். ஆனால் கடைசியாக சூன்ய வாதத்தை சொன்னாரே தவிர அதற்கு மேலாக எவ்வித மதத்தை யும் சொல்லாததினால் சூன்யவாதம் எவ்விதம் பிசகு என்று எடுத்துக்காட்டவில்லை. அப்படியிருந்தும் சூன்யவாதம் உள்பட முன் சொன்ன வாதங்கள் எல்லாம் பிசகு என்று குரு முடித்துவிட்டார். அதினால் சூன்யவாதம் எப்படிப் பிசகு என்று சிஷ்யன் கேள்வி கேட்பதற்கு அவசியம் ஏற்பட்டது. அதுவிஷயமாய் தனக்குள்ள ஸந்தேகத் தை நிவிருத்தி செய்து கொடுக்கும்படி குருவை பிரார்த்திக்கிறான்: -

**शिष्यः -**

**सुषुप्तिकाले सकले विलीने**
**शून्यं विना नात्यदिहोपलभ्यते ।**
**शून्यं त्वनात्मा न ततः परं को-**
**ऽप्यात्माभिधानस्त्वनुभूयते ऽर्थः ॥ ५८१ ॥**

**ஶிஷ்ய**: -

**ஸுஷுப்திகாலே ஸகலே விலீனே**
**ஶூன்யம் வினா நாத்யதி³ஹோபலப்⁴யதே ।**
**ஶூன்யம் த்வனாத்மா ந தத**: **பரம் கோ-**
**(அ)ப்யாத்மாபி⁴தா⁴னஸ்த்வனுபூ⁴யதே (அ)ர்த²**: **॥ 581 ॥**

**सुषुप्तिकाले** = நல்ல தூக்க சமயத்தில்,
**ஸுஷுப்திகாலே**

**सकले विलीने** = எல்லாம் மறைந்தபின்,
**ஸகலே விலீனே**
**इह** = இங்கு,
**இஹ**
**शून्यं विना** = சூன்யத்தைத் தவிற,
**ஶூன்யம் விஞ**
**अन्यत्** = வேறு வஸ்து,
**அன்யத்**
**नोपलभ्यते** = அறியப்படவில்ஜல,
**நோபலப்⁴யதே**
**शून्यं तु** = சூன்யமோவெனில்,
**ஶூன்யம் து**
**अनात्मा** = ஆத்மா அல்ல,
**அஞத்மா**
**ततः परं** = அதைக்காட்டிலும் வேருக,
**தத꞉ பரம்**
**आत्माभिधानः** = ஆத்மா என்று பெயருள்ள,
**ஆத்மாபி⁴தா⁴ன꞉**
**कोपि अर्थः** = ஒரு பொருளும்,
**கோபி அர்த²꞉**
**न तु अनुभूयते** = அனுபவிக்கப்படவில்ஜலயே!
**ந து அனுபூ⁴யதே**

நல்ல தூக்க ஸமயத்தில் எல்லாம் லயமடைந்திருக்கும் போது சூன்யத்தை விட இங்கு வேறு எதுவும் காணப்படுகிறதில்ஜல. சூன்யமோ அஞத்மா என்று நீங்கள் சொல்லி விட்டீர்கள் அதற்கு வேருக ஆத்மா வென்று பெயரிடக்கூடியதாக எவ்வித பதார்த்தமும் அனுபவிக்கப்படவில்ஜலயே! **(581)**

**यद्यस्ति चात्मा किमु नोपलभ्यते**
**सुप्तौ यथा तिष्ठति किं प्रमाणम् ।**
**किलक्षणोऽसौ स कथं न बाध्यते**
**प्रवाध्यमानेषु अहमादिषु स्वयम् ॥ ५८२ ॥**

**யத்³யஸ்தி சாத்மா கிமு நோபலப்⁴யதே**
**ஸுப்தௌ யதா² திஷ்ட²தி கிம் ப்ரமாணம் ।**
**கிலக்ஷணோ(அ)ஸௌ ஸ கத²ம் ந பா³த்⁴யதே**
**ப்ரவாத்⁴யமானேஷு அஹமாதி³ஷு ஸ்வயம் ॥ 582 ॥**

**आत्मा** = ஆத்மவஸ்து,

**ஆத்மா**

**यदि अस्ति** = இருக்கிறதானல்,

**யதி3 அஸ்தி**

**किमु न उपलभ्यते** = ஏன் அறியப்படவில்லை?

**கிமு ந உபலப்4யதே**

**सुप्तौ** = தூக்கத்தில்,

**ஸுப்தௌ**

**यथा तिष्ठति** = எப்படி இருக்கிறதோ (அதற்கு),

**யதா2 திஷ்ட2தி**

**किं प्रमाणम्** = என்ன பிரமாணம்?

**கிம் ப்ரமாணம்**

**असौ** = அந்த ஆத்மா,

**அஸௌ**

**किलक्षण:** = என்ன லக்ஷணமுள்ளது?

**கிலக்ஷண:**

**अहमादिषु** = அஹங்காரம் முதலியவைகள்,

**அஹமாதி3ஷு**

**स्वयं** = தானக,

**ஸ்வயம்**

**प्रवाध्यमानेषु** = பாதிக்கப்படும்பொழுது,

**ப்ரவாத்4யமானேஷு**

**स:** = அந்த ஆத்மா,

**ஸ:**

**कथं न बाध्यते** = எப்படி பாதிக்கப்படுகிறதில்லை?

**கத2ம் ந பா3த்4யதே**

ஆத்மா இருக்கிறதேயானல் ஏன் தெரியவில்லை? தூக்கத்தில் இருக்கிறதென்பதற்கு பிரமாணம் என்ன? என்ன லக்ஷணத்தையுடையது இந்த ஆத்மா? அஹங்காரம் முதலியதெல்லாம் பாதிக்கப்படுகிறபோது இதுமாத்திரம் என்ன காரணத்தினல் பாதிக்கப்படவில்லை? **(582)**

**एतत् संशयजातं मे हृदयग्रन्थिलक्षणम् ।**
**छिन्धि युक्तिमहाखड्गधारया कृपया गुरो ॥ ५८३ ॥**

**ஏதத் ஸம்ஶயஜாதம் மே ஹ்ருத3யக்3ரந்தி2லக்ஷணம் ।**
**சி2ந்தி4 யுக்திமஹாக2ட்3க3தா4ரயா க்ருபயா கு3ரோ ॥ 583 ॥**

**गुरो** = ஹே குரோ,
**கு³ரோ**
**कृपया** = தயவினால்,
**க்ருபயா**
**युक्ति** = யுக்தி என்னும்,
**யுக்தி**
**महाखड्गधारया** = பெரிய கத்தியின் நுனியால்,
**மஹாக²ட்³க³தா⁴ரயா**
**हृदय** = மனதின் முடிச்சுரூபமான,
**ஹ்ருத³ய**
**मे** = என்னுடைய,
**மே**
**एतत्** = இந்த,
**ஏதத்**
**संशयजातं** = ஸந்தேஹக் கூட்டத்தை,
**ஸம்ஶயஜாதம்**
**छिन्धि** = அறுக்கவேணும்.
**சி²ந்தி⁴**

என்னுடைய ஹ்ருதயத்தில் முடிச்சுப்போலிருக்கும் இந்த ஸம்சய ஸமூஹத்தை யுக்தியாகிற பெரிய வாளினால், ஹே குரோ, கிருபையுடன் வெட்டிவிடுங்கள். **(583)**

**श्रीगुरुः -**

**अतिसूक्ष्मतरः प्रश्नस्तवायं सदृशो मतः।**
**सूक्ष्मार्थदर्शनं सूक्ष्मबुद्धिष्वेव प्रदृश्यते ॥ ५८४ ॥**

**ஶ்ரீகு³ரு: -**

**அதிஸூக்ஷ்மதர: ப்ரஶ்னஸ்தவாயம் ஸத்³ருஶோ மத:।**
**ஸூக்ஷ்மார்த²த³ர்ஶனம் ஸூக்ஷ்மபு³த்³தி⁴ஷ்வேவ ப்ரத்³ருஶ்யதே ॥ 584 ॥**

**अतिसूक्ष्मतरः** = மிகவும் ஸூக்ஷ்மமான,
**அதிஸூக்ஷ்மதர:**
**अयं प्रश्नः** = இந்த கேள்வி,
**அயம் ப்ரஶ்ன:**
**तव** = உனக்கு,
**தவ**

| | | |
|---|---|---|
| **सदृशः**<br>**ஸத்³ருஶ:** | = | தகுந்ததாக, |
| **मतः**<br>**மத:** | = | கருதப்பட்டுள்ளது, |
| **सूक्ष्मार्थदर्शनं**<br>**ஸூக்ஷ்மார்த²த³ர்ஶனம்** | = | ஸூஷ்மமான விஷயங்களைப் பார்ப்பது, |
| **सूक्ष्मबुद्धिषु एव**<br>**ஸூக்ஷ்மபு³த்³தி⁴ஷு ஏவ** | = | ஸூக்ஷ்மபுத்தி உள்ளவர்களிடம் தான், |
| **प्रदृश्यते**<br>**ப்ரத்³ருஶ்யதே** | = | காணப்படுகிறது. |

உன்னுடைய கேள்வி மிக மிக ஸூக்ஷ்மமானது, உனக்குத் தகுந்தபடியாகத் தெரிகிறது. ஸூக்ஷ்மமான புத்தியுள்ளவர்களிடத்தில்தான் ஸூக்ஷ்மமான விஷயங்களின் அறிவு காணப்படுகிறது. **(584)**

**शृणु वक्ष्यामि सकलं यद्यत् पृष्टं त्वयाऽधुना ।**
**रहस्यं परमं सूक्ष्मं ज्ञातव्यं च मुमुक्षुभिः ॥ ५८५ ॥**

**ஶ்ருணு வக்ஷ்யாமி ஸகலம் யத்³யத் ப்ருஷ்டம் த்வயா(அ)து⁴னா ।**
**ரஹஸ்யம் பரமம் ஸூக்ஷ்மம் ஜ்ஞாதவ்யம் ச முமுக்ஷுபி⁴: ॥ 585 ॥**

| | | |
|---|---|---|
| **रहस्यं**<br>**ரஹஸ்யம்** | = | ரஹஸ்யமானதும், |
| **परमं**<br>**பரமம்** | = | சிறந்ததும், |
| **सूक्ष्मं**<br>**ஸூக்ஷ்மம்** | = | ஸூக்ஷ்மமானதும், |
| **मुमुक्षुभिः**<br>**முமுக்ஷுபி⁴:** | = | மோக்ஷமடைய விரும்புபவர்களால், |
| **ज्ञातव्यं च**<br>**ஜ்ஞாதவ்யம் ச** | = | அறியத்தக்கதுமான, |
| **यत् यत्**<br>**யத் யத்** | = | எதுவெல்லம், |
| **अधुना**<br>**அது⁴னா** | = | இப்பொழுது, |
| **त्वया**<br>**த்வயா** | = | உன்னால், |

| | | |
|---|---|---|
| **पृष्टं**<br>**ப்ருஷ்டம்** | = | கேட்கப்பட்டதோ, |
| **सकलं**<br>**ஸகலம்** | = | எல்லாவற்றையும், |
| **वक्ष्यामि**<br>**வக்ஷ்யாமி** | = | சொல்கிறேன், |
| **शृणु**<br>**ஶ்ருணு** | = | கேள். |

எது எதெல்லாம் உன்னால் இப்பொழுது கேட்கப்பட்டதோ அதையெல்லாம் சொல்கிறேன் - கேள். அது ரஹஸ்யமானது. மிகவும் மேலானது, ஸூக்ஷ்மமானது, முமுக்ஷுக்களால் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியது. **(585)**

**बुद्ध्यादि सकलं सुप्तौ अनुलीनं स्वकारणे ।**
**अव्यक्ते वटवत् बीजे तिष्ठत्यविकृतात्मना ॥ ५८६ ॥**

**பு³த்³த⁴யாதி³ ஸகலம் ஸுப்தௌ அனுலீனம் ஸ்வகாரணே ।**
**அவ்யக்தே வடவத் பீ³ஜே திஷ்ட²த்யவிக்ருதாத்மனா ॥ 586 ॥**

| | | |
|---|---|---|
| **सुप्तौ**<br>**ஸுப்தௌ** | = | தூங்கும்பொழுது, |
| **बुद्ध्यादि**<br>**பு³த்³த⁴யாதி³** | = | புத்தி முதலான, |
| **सकलं**<br>**ஸகலம்** | = | எல்லாம், |
| **बीजे**<br>**பீ³ஜே** | = | விதையில், |
| **वटवत्**<br>**வடவத்** | = | ஆலமரம்போல, |
| **स्वकारणे**<br>**ஸ்வகாரணே** | = | தனக்குக்காரணமான, |
| **अव्यक्ते**<br>**அவ்யக்தே** | = | அவ்யக்தத்தில், |
| **अनुलीनं**<br>**அனுலீனம்** | = | மறைந்ததாய், |
| **अविकृतात्मना**<br>**அவிக்ருதாத்மனா** | = | விகாரமடையாத ஸ்வரூபமாக, |

**तिष्ठति** = இருக்கிறது.

**திஷ்ட²தி**

தூங்கும்போது புத்தி முதலியதெல்லாம் தன் காரணமாகிய அவ்யக்தத்தில் அடங்கி, ஆலமரம் விதையில் இருப்பது போல, மாறுதலடையாத ஸ்வரூபத்துடன் இருந்து வருகிறது. **(586)**

**तिष्ठत्येव स्वरूपेण न तु शून्यायते जगत् ।**
**कचित् अंकुररूपेण क्वचित् बीजात्मना वटः ।**
**कार्यकारणरूपेण यथा तिष्ठत्यदस्तथा ॥ ५८७ ॥**

**திஷ்ட²த்யேவ ஸ்வரூபேண ந து ஶூந்யாயதே ஜக³த் ।**
**கசித் அங்குரரூபேண க்வசித் பீ³ஜாத்மனா வட꞉ ।**
**கார்யகாரணரூபேண யதா² திஷ்ட²த்யத³ஸ்ததா² ॥ 587 ॥**

**जगत्** = பிரபஞ்சம்,

**ஜக³த்**

**स्वरूपेण** = ஸ்வரூபத்துடன்,

**ஸ்வரூபேண**

**तिष्ठत्येव** = கட்டாயம இருக்கிறது,

**திஷ்ட²த்யேவ**

**न तु शून्यायते** = சூன்யமாக ஆகிறதில்லை,

**ந து ஶூந்யாயதே**

**यथा** = எப்படி,

**யதா²**

**वटः** = ஆலமரம்,

**வட꞉**

**क्वचित्** = ஓரு சமயம்,

**க்வசித்**

**बीजात्मना** = முளைரூபமாயும்,

**பீ³ஜாத்மனா**

**क्वचित्** = ஓரு சமயம்,

**க்வசித்**

**बीजात्मना** = விதை ரூபமாயும்,

**பீ³ஜாத்மனா**

**कार्यकारणरूपेण** = காரியமாகவும் காரணமாகவும்,

**கார்யகாரணரூபேண**

| | | |
|---|---|---|
| **तिष्ठति**<br>**திஷ்ட²தி** | = | இருக்கிறதோ, |
| **तथा**<br>**ததா²** | = | அப்படியே, |
| **अदः**<br>**அத³:** | = | அந்த ஜகத்தும் இருக்கிறது. |

ஸ்வரூபத்துடன் ஜகத் இருக்கவே இருக்கிறது. சூன்யமாக ஆகிவிடுகிற தில்லை. ஆலமரம் ஒருஸமயம் முளை ரூபமாயும் ஒருஸமயம் விதை ரூபமாயும், அதாவது கார்ய ரூபமாயும் காரண ரூபமாயும், எப்படி இருக்கிறதோ, அப்படியே இந்த ஜகத்தும் இருக்கிறது. **(587)**

**अव्याकृतात्मनावस्थां जगतो वदति श्रुतिः।**
**सुषुप्त्यादिषु तद्धेदं तर्ह्यव्याकृतमित्यसौ ॥ ५८८ ॥**

**அவ்யாக்ருதாத்மனாவஸ்தா²ம் ஜக³தோ வத³தி ஶ்ருதி:।**
**ஸுஷுப்த்யாதி³ஷு தத்³பே⁴த³ம் தர்ஹ்யவ்யாக்ருதமித்யஸௌ ॥ 588 ॥**

| | | |
|---|---|---|
| **सुषुप्त्यादिषु**<br>**ஸுஷுப்த்யாதி³ஷு** | = | தூக்கம் முதலிய அவஸ்தைகளில், |
| **जगतः**<br>**ஜக³த:** | = | பிரபஞ்சத்திற்கு, |
| **अव्याकृतात्मना**<br>**அவ்யாக்ருதாத்மனா** | = | அவ்யாக்ருதஸ்வரூபமாக, |
| **अवस्थां**<br>**அவஸ்தா²ம்** | = | இருக்கும் நிலையை, |
| **तर्हि**<br>**தர்ஹி** | = | அப்பொழுது, |
| **तत् इदं**<br>**தத் இத³ம்** | = | அந்த இந்த ஜகத், |
| **अव्याकृतं ह**<br>**அவ்யாக்ருதம் ஹ** | = | அவ்யாக்ருதமாக வல்லவா (இருந்தது), |
| **इति**<br>**இதி** | = | என்ற, |
| **श्रुतिरपि**<br>**ஶ்ருதிரபி** | = | வேதமும், |
| **वदति**<br>**வத³தி** | = | சொல்கிறது. |

ஜகத் ஸுஷுப்தி (பிரளயம்) முதலிய காலங்களில் அவியாகிருத ஸ்வரூப த்துடன் இருக்கும் நிலையை "அப்பொழுது இது அவ்யாகிருதமாயிருந்தது" என்று சுருதியும் சொல்கிறது. **(588)**

**इममर्थं अविज्ञाय निर्णीतं श्रुतियुक्तिभिः ।**
**जगतो दर्शनं शून्यं इति प्राहुः अतद्विदुः ॥ ५८९ ॥**

**இமமர்த²ம் அவிஜ்ஞாய நிர்ணீதம் ஶ்ருதியுக்திபி⁴: ।**
**ஜக³தோ த³ர்ஶனம் ஶூன்யம் இதி ப்ராஹு: அதத்³விது³: ॥ 589 ॥**

**श्रुतियुक्तिभिः** = சுருதியாலும் யுக்திகளாலும்,
**ஶ்ருதியுக்திபி⁴:**
**निर्णीतं** = தீர்மானிக்கப்பட்ட,
**நிர்ணீதம்**
**इमं अर्थं** = இந்த விஷயத்தை,
**இமம் அர்த²ம்**
**अविज्ञाय** = அறிந்துகொள்ளாமல்,
**அவிஜ்ஞாய**
**जगतो दर्शनं** = பிரபஞ்சத்தின் தத்வம்,
**ஜக³தோ த³ர்ஶனம்**
**शून्यं** = சூன்யம்,
**ஶூன்யம்**
**इति** = என்று,
**இதி**
**अतद्विदुः** = அதை அறியாதவர்கள்,
**அதத்³விது³:**
**प्राहुः** = சொல்கிறுர்கள்.
**இதி**

சுருதியினுலும் யுக்தியினுலும் தீர்மானிக்கப்பட்டிருக்கிற இந்த விஷயத்தை அறிந்துகொள்ளாமல் "ஜகத்தின் தத்வம் சூன்யம்" என்று அதை யறியாதவர்கள் சொல்கிறுர்கள். **(589)**

**नासतः सत उत्पत्तिः श्रूयते न च दृश्यते ।**
**उदेति नरश्रृङ्गात्किं खपुष्पात्किं भविष्यति ॥ ५९० ॥**

**நாஸத: ஸத உத்பத்தி: ஶ்ரூயதே ந ச த்³ருஶ்யதே ।**
**உதே³தி நரஶ்ர்ருங்கா³த்கிம் க²புஷ்பாத்கிம் ப⁴விஷ்யதி ॥ 590 ॥**

**असतः** = இல்லாததிலிருந்து,

**அஸத꞉**

**सतः** = இருக்கும் பொருளுக்கு,

**ஸத꞉**

**उत्पत्तिः** = உத்பத்தி,

**உத்பத்தி꞉**

**न श्रूयते** = கேட்கப்படுகிறதில்லை,

**ந ஶ்ரூயதே**

**न च दृश्यते** = காணப்படுகிறதுமில்லை,

**ந ச த்³ருஶ்யதே**

**नरश्रृङ्गात्** = மனிதன் மொம்பிலிருந்து,

**நரஶ்ர்ருங்கா³த்**

**किं उदेति** = எது உண்டாகிறது?

**கிம் உதே³தி**

**खपुष्पात्** = ஆகாயமலரிலிருந்து,

**க²புஷ்பாத்**

**किं भविष्यति** = என்ன உண்டாகும்?

**கிம் ப⁴விஷ்யதி**

இல்லாத பதார்த்தத்திலிருந்து இருக்கிற பதார்த்தம் உண்டாவதாக கேள்விப் படுவதும் கிடையாது, பார்க்கப்படுவதும் கிடையாது. இல்லாத மனிதக்கொம்பிலிருந்து எது உண்டாகும்? இல்லாத ஆகாச புஷ்பத்திலிருந்து எது உண்டாகும்? **(590)**

**प्रभवति न हि कुम्भोऽविद्यमानो मृदश्चेत्**
**प्रभवतु सिकताया वाथवा वारिणो वा ।**
**न हि भवति च ताभ्यां सर्वथा क्वापि तस्मात्**
**यत उदयति योऽर्थोऽस्त्यत्र तस्य स्वभावः॥ ५९१ ॥**

**ப்ரப⁴வதி ந ஹி கும்போ⁴(அ)வித்³யமானோ ம்ருத³ஶ்சேத்**
**ப்ரப⁴வது ஸிகதாயா வாத²வா வாரிணோ வா ।**
**ந ஹி ப⁴வதி ச தாப்⁴யாம் ஸர்வதா² க்வாபி தஸ்மாத்**
**யத உத³யதி யோ(அ)ர்தோ²(அ)ஸ்த்யத்ர தஸ்ய ஸ்வபா⁴வ꞉ ॥ 591 ॥**

**अविद्यमानः** = இல்லாத,

**அவித்³யமான꞉**

**कुम्भः** = குடம்,

**கும்ப⁴꞉**

| | | |
|---|---|---|
| **मृद:** <br> **ம்ருத³:** | = | மண்ணிலிருந்து, |
| **न हि प्रभवति** <br> **ந ஹி ப்ரப⁴வதி** | = | உண்டாகிறதில்லையல்லவா, |
| **चेत्** <br> **சேத்** | = | உண்டாகுமானால், |
| **सिकताया वा** <br> **ஸிகதாயா வா** | = | மணலிலிருந்தோ, |
| **अथवा** <br> **அத²வா** | = | அல்லது, |
| **वारिणो वा** <br> **வாரிணோ வா** | = | தண்ணீரிலிருந்தோ, |
| **प्रभवतु** <br> **ப்ரப⁴வது** | = | உண்டாகட்டும், |
| **क्वापि** <br> **க்வாபி** | = | ஒருக்காலும், |
| **सर्वथा** <br> **ஸர்வதா²** | = | எவ்விதத்திலும், |
| **ताभ्यां** <br> **தாப்⁴யாம்** | = | அந்த மணல், ஜலம் இவற்றிலிருந்து, |
| **न हि भवति** <br> **ந ஹி ப⁴வதி** | = | உண்டாகிறதில்லை, |
| **तस्मात्** <br> **தஸ்மாத்** | = | ஆகையால், |
| **य: अर्थ:** <br> **ய: அர்த²:** | = | எந்த பொருள், |
| **यत:** <br> **யத:** | = | எதிலிருந்து, |
| **उदयति** <br> **உத³யதி** | = | உண்டாகிறதோ, |
| **तस्य** <br> **தஸ்ய** | = | அதன், |
| **स्वभाव:** <br> **ஸ்வபா⁴வ:** | = | ஸ்வபாவம், |
| **अत्र** <br> **அத்ர** | = | இங்கு, |

**अस्ति** = இருக்கிறது.

**அஸ்தி**

இல்லவேயில்லாத குடமானது மண்ணிலிருந்து உண்டாகாது. அவ்விதம் உண்டாகுமேயானுல், மணலிலிருந்தோ அல்லது ஜலத்திலிருந்தோ உண்டாகட்டுமே? அவ்விரண்டிலிருந்தும் (மணலிலிருந்தோ, ஜலத்திலிருந்தோ) எவ்விதத்திலும் எப்பொழுதும் உண்டாவதே கிடையாது ஆகையால் எந்த பதார்த்தம் எதிலிருந்து வெளிவருகிறதோ அதில் அதன் ஸ்வபாவம் இருந்தே தீரும். **(591)**

## अन्यथा विपरीतं स्यात्कार्यकारणलक्षणम् ।
## नियतं सर्वशास्त्रेषु सर्वलोकेषु सर्वतः ॥ ५९२ ॥

**அன்யதா² விபரீதம் ஸ்யாத்கார்யகாரணலக்ஷணம் ।**
**நியதம் ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வலோகேஷு ஸர்வத꞉ ॥ 592 ॥**

**अन्यथा** = அப்படியில்லாவிடில்,

**அன்யதா²**

**सर्वशास्त्रेषु** = எல்லா சாஸ்திரங்களிலும்,

**ஸர்வஶாஸ்த்ரேஷு**

**सर्वलोकेषु** = எல்லா உலக விவஹாரங்களிலும்,

**ஸர்வலோகேஷு**

**सर्वतः** = எல்லா விதத்திலும்,

**ஸர்வத꞉**

**नियतं** = உறுதிப்பாடு அமைந்த,

**நியதம்**

**कार्यकारणलक्षणं** = கார்யம் காரணம் இவற்றின் லக்ஷணம்,

**கார்யகாரணலக்ஷணம்**

**विपरीतं स्यात्** = விபரீதமாகிவிடும்.

**விபரீதம் ஸ்யாத்**

அப்படியில்லையானுல், எல்லா சாஸ்திரங்களிலும், எல்லா உலக வியவஹாரங்களிலும், தீர்மானமாயுள்ள கார்யம் காரணம் இவைகளின் லக்ஷணம் விபரீதமாகிவிடும். **(592)**

## कथमसतः सज्जा येतेति श्रुत्या निषिध्यते तस्मात् ।
## असतः सज्जननं नो घटते मिथ्यैव शुन्यशब्दार्थः ॥ ५९३ ॥

**கத²மஸத꞉ ஸஜ்ஜா யேதேதி ஶ்ருத்யா நிஷித்⁴யதே தஸ்மாத் ।**
**அஸத꞉ ஸஜ்ஜனனம் நோ க⁴டதே மித்²யைவ ஶூன்யஶப்³தா³ர்த²꞉ ॥ 593 ॥**

**असतः** = இல்லாததிலிருந்து,

**அஸத:**

**सत्** = இருப்பது,

**ஸத்**

**कथं** = எப்படி,

**கத²ம்**

**जायेत** = உண்டாகும்,

**ஜாயேத**

**इति** = என்று,

**இதி**

**श्रुत्या** = வேதத்தால்,

**ஶ்ருத்யா**

**निषिध्यते** = நிஷேதிக்கப்படுகிறது,

**நிஷித்⁴யதே**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**असतः** = அஸத்திலிருந்து,

**அஸத:**

**सज्जननं** = ஸத் உண்டாவது,

**ஸஜ்ஜனனம்**

**नो घटते** = பொருந்தாது,

**நோ க⁴டதே**

**शुन्यशब्दार्थः** = சூன்யபதத்தின் பொருள்,

**ஶூன்யஶப்³தா³ர்த²:**

**मिथ्यैव** = பொய்தான்.

**மித்²யைவ**

"இருக்கிற பதார்த்தம் இல்லாததிலிருந்து எப்படி உண்டாகும்?" என்று வேதத்திலேயே தடுக்கப்பட்டிருக்கிறது, ஆகையால் இல்லாததிலிருந்து இருப்பதின் உத்பத்தி பொருந்தாது. சூன்யம் என்கிற சப்தத்தின் பொருள் பொய்தான். **(593)**

**अव्यक्त शब्दिते प्राज्ञे सत्यात्मनि अत्र जाग्रति ।**
**कथं सिध्यति शून्यत्वं तस्य भ्रान्तशिरोमणे ॥ ५९४ ॥**

**அவ்யக்த ஶப்³தி³தே ப்ராஜ்ஞே ஸத்யாத்மனி அத்ர ஜாக்³ரதி ।**
**கத²ம் ஸித்⁴யதி ஶூன்யத்வம் தஸ்ய ப்⁴ராந்தஶிரோமணே ॥ 594 ॥**

| | | |
|---|---|---|
| **न्तशिरोमणे**<br>**ப்⁴ராந்தஶிரோமணே** | = | ப்ராந்தர்களுள் தலைசிறந்தவனே, |
| **अव्यक्त शब्दिते**<br>**அவ்யக்த ஶப்³தி³தே** | = | அவ்யக்தம் என்று பெயருள்ள, |
| **प्राज्ञे**<br>**ப்ராஜ்ஞே** | = | ப்ராக்ஞுனன், |
| **आत्मनि**<br>**ஆத்மனி** | = | ஆத்மா, |
| **अत्र**<br>**அத்ர** | = | இங்கு, |
| **जाग्रति सति**<br>**ஜாக்³ரதி ஸதி** | = | விழித்துக் கொண்டிருக்கும் பொழுது, |
| **तस्य**<br>**தஸ்ய** | = | அவனுக்கு, |
| **शून्यत्वं**<br>**ஶூன்யத்வம்** | = | இல்லாத்தன்மை, |
| **कथं सिध्यति**<br>**கத²ம் ஸித்⁴யதி** | = | எப்படி ஏற்படும்? |

ஏ ப்ராந்தர்களுக்குள் தலைசிறந்தவனே, அவ்யக்தம் என்ற பெயருடைய பிராக்ஞுனை ஆத்மா இங்கே விழித்துக்கொண்டிருக்கும்போது, அவனுக்கு சூன்யத் தன்மை எப்படி ஸித்திக்கும்? **(594)**

[இங்கே 'பிராந்த சிரோமணியே' என்பது சூன்யவாதியைப் பார்த்தே தவிர, சிஷ்யனைப் பார்த்து என்று நினைத்துவிடக்கூடாது]

**सुषुप्तौ शून्यमेवेति केन पुंसा तवेरितम् ।**
**हेतुनाऽनुमितं केन कथं ज्ञातं त्वयोच्यताम् ।**
**इति पृष्टो मूढतमो वदिष्यति किमुत्तरम् ॥ ५९५ ॥**

**ஸுஷுப்தௌ ஶூன்யமேவேதி கேன பும்ஸா தவேரிதம் ।**
**ஹேதுனு(அ)னுமிதம் கேன கத²ம் ஜ்ஞாதம் த்வயோச்யதாம் ।**
**இதி ப்ருஷ்டோ மூட⁴தமோ வதி³ஷ்யதி கிமுத்தரம் ॥ 595 ॥**

| | | |
|---|---|---|
| **सुषुप्तौ**<br>**ஸுஷுப்தௌ** | = | நல்ல தூக்கத்தில், |
| **शून्यमेवेति**<br>**ஶூன்யமேவேதி** | = | சூன்யம் தான் என்று, |

| | | |
|---|---|---|
| **केन पुंसा**<br>**கேன பும்ஸா** | = | எந்த மனிதனால், |
| **तव**<br>**தவ** | = | உனக்கு, |
| **ईरितम्**<br>**ஈரிதம்** | = | சொல்லப்பட்டது? |
| **केन हेतुना**<br>**கேன ஹேதுனா** | = | எந்தக்காரணத்தால், |
| **अनुमितं**<br>**அனுமிதம்** | = | ஊஹிக்கப்பட்டது, |
| **त्वया**<br>**த்வயா** | = | உன்னால், |
| **कथं**<br>**கத²ம்** | = | எப்படி, |
| **ज्ञातं**<br>**ஜ்ஞாதம்** | = | அறிந்துகொள்ளப்பட்டது? |
| **उच्यतां**<br>**உச்யதாம்** | = | சொல்லப்படட்டும், |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **पृष्टः**<br>**ப்ருஷ்ட:** | = | கேட்கப்பட்ட, |
| **मूढतमः**<br>**மூட⁴தம:** | = | மூடர்களுள் மேலானவன், |
| **किं उत्तरं**<br>**கிம் உத்தரம்** | = | என்ன பதிலை, |
| **वदिष्यति**<br>**வதி³ஷ்யதி** | = | சொல்லப் போகிறான். |

"ஸுஷுப்தியில் சூன்யம் தான் இருக்கிறதென்று எந்தப் புருஷனால் உனக்குச் சொல்லப்பட்டது? அல்லது எந்த காரணத்தைக்கொண்டு அனுமானம் செய்தாய்? உன்னால் இவ்விஷயம் எப்படி அறியப்பட்டது? சொல்" என்று கேட்டால் இந்த மூட சிரேஷ்டன் என்ன பதில் சொல்வான்? **(595)**

**नैवानुरूपकं लिङ्ग वक्ता वा नास्ति कश्चन ।**
**सुषुप्तिस्थितशून्यस्य बोद्धा को न्वात्मनः परः ॥ ५९६ ॥**

**நைவானுரூபகம் லிங்க³ வக்தா வா நாஸ்தி கஶ்சன ।**
**ஸுஷுப்திஸ்தி²தஶூன்யஸ்ய போ³த்³தா⁴ கோ ந்வாத்மனः பரः ॥ 596 ॥**

**सुषुप्तिस्थितशून्यस्य** = ஸுஷுப்தியில் உள்ள சூன்யத்திற்கு,
**ஸுஷுப்திஸ்தி²தஶூன்யஸ்ய**
**अनुरूपकं** = தகுந்ததான,
**அனுரூபகம்**
**लिङ्गं** = அடையாளம்,
**லிங்க³ம்**
**नैव** = இல்லவேயில்லை,
**நைவ**
**वक्ता वा** = சொல்கிறவனோ,
**வக்தா வா**
**कश्चन** = ஒருவனும்,
**கஶ்சன**
**नास्ति** = இல்லை,
**நாஸ்தி**
**बोद्धा** = இதை அறிகிறவன்,
**போ³த்³தா⁴**
**आत्मन:** = ஆத்மாவைக் காட்டிலும்,
**ஆத்மனः**
**पर: कोनु** = வேறு யார்?
**பரः கோனு**

ஸுஷுப்தியில் இருக்கும் சூன்யத்தை நிரூபணம் செய்வதற்கு லிங்கம் (அடையாளம்) இல்லவே இல்லை. அதைச் சொல்லக்கூடியவனும் யாரும் கிடையாது. இந்த சூன்யத்தை அறிகிறவன் ஆத்மாவைத்தவிர வேறு யார்? **(596)**

**स्वेनानुभूतं स्वयमेव वक्ति स्वसुप्तिकाले स्थितशून्यभावम् ।**
**तत्र स्वसत्तामनवेक्ष्य मूढः स्वस्यापि शून्यत्वमयं ब्रवीति ॥ ५९७ ॥**

**ஸ்வேனானுபூ⁴தம் ஸ்வயமேவ வக்தி**
**ஸ்வஸுப்திகாலே ஸ்தி²தஶூன்யபா⁴வம் ।**
**தத்ர ஸ்வஸத்தாமனவேக்ஷ்ய மூட⁴ः**
**ஸ்வஸ்யாபி ஶூன்யத்வமயம் ப்³ரவீதி ॥ 597 ॥**

**स्वेन** = தன்னால்,
**ஸ்வேன**

| | | |
|---|---|---|
| **अनुभूतं** | = | அனுபவிக்கப்பட்ட, |
| **அனுபூ⁴தம்** | | |
| **स्वसुप्तिकाले** | = | தன்னுடைய தூக்க ஸமயத்தில், |
| **ஸ்வஸுப்திகாலே** | | |
| **स्थितशून्यभावम्** | = | இருந்த சூன்யத்தன்மையை, |
| **ஸ்தி²தஶூன்யபா⁴வம்** | | |
| **स्वयमेव** | = | தானே, |
| **ஸ்வயமேவ** | | |
| **वक्ति** | = | சொல்கிறன், |
| **வக்தி** | | |
| **तत्र** | = | அங்கே, |
| **தத்ர** | | |
| **स्वसत्तां** | = | தன் இருப்பை, |
| **ஸ்வஸத்தாம்** | | |
| **अनवेक्ष्य** | = | கவனிக்காமல், |
| **அனவேக்ஷ்ய** | | |
| **अयं मूढः** | = | இந்த மூடன், |
| **அயம் மூட⁴:** | | |
| **स्वस्यापि** | = | தனக்கும், |
| **ஸ்வஸ்யாபி** | | |
| **शून्यत्वं** | = | சூன்யத் தன்மையை, |
| **ஶூன்யத்வம்** | | |
| **ब्रवीति** | = | சொல்கிறன். |
| **ப்³ரவீதி** | | |

தன்னுடைய தூக்க ஸமயத்தில் தன்னலேயே அனுபவிக்கப்பட்ட அப்பொழுது இருந்த சூன்யத்தன்மையை தானே சொல்கிறன். அப்பொழுது தன்னுடைய இருப்பை கவனிக்காமல் இந்த மூடன் தனக்குக்கூட சூன்யத்தன்மையை சொல்கிறன். **(597)**

**अवेद्यमानः स्वयमन्यलोकैः सौषुप्तिकं धर्ममवैति साक्षात् ।**
**बुद्ध्याद्यभावस्य च योऽत्र बोद्धा स एष आत्मा खलु निर्विकारः ॥ ५९८ ॥**

**அவேத்³யமான: ஸ்வயமன்யலோகை:**
**ஸௌஷுப்திகம் த⁴ர்மமவைதி ஸாக்ஷாத் ।**
**பு³த்³த்⁴யாத்³யபா⁴வஸ்ய ச யோ(அ)த்ர போ³த்³தா⁴**
**ஸ ஏஷ ஆத்மா க²லு நிர்விகார: ॥ 598 ॥**

| | | |
|---|---|---|
| **यः** <br> **யः** | = | எவன், |
| **अन्यलोकैः** <br> **அன்யலோகைः** | = | பிறவற்றல், |
| **अवेद्यमानः** <br> **அவேத்³யமானः** | = | அறியப்படாதவனுய், |
| **स्वयं** <br> **ஸ்வயம்** | = | தானே, |
| **साक्षात्** <br> **ஸாக்ஷாத்** | = | நேராக, |
| **सौषुप्तिकं धर्मं** <br> **ஸௌஷுப்திகம் த⁴ர்மம்** | = | ஸுஷுப்தியிலுள்ள விஷயத்தை, |
| **अवैति** <br> **அவைதி** | = | அறிகிருனே (எவன்), |
| **अत्र** <br> **அத்ர** | = | இங்கே, |
| **बुद्ध्याद्यभावस्य च** <br> **பு³த்³த்⁴யாத்³யபா⁴வஸ்ய ச** | = | புத்தி முதலியவைகளின் இல்லாமையையும், |
| **बोद्धा** <br> **போ³த்³தா⁴** | = | அறிகிறவனே, |
| **सः एषः** <br> **ஸः ஏஷः** | = | அந்த இவன், |
| **निर्विकारः** <br> **நிர்விகாரः** | = | விகாரமில்லாத, |
| **आत्मा खलु** <br> **ஆத்மா க²லு** | = | ஆத்மா அல்லவா! |

எவன் வேறு யாராலும் அறியப்படாமல் தானே நேரில் ஸுஷுப்தியின் நிலையை அறிகிருனே, இந்த ஸுஷுப்தியில் புத்தி முதலியவற்றின் இல்லாமையை யும் எவன் அறிகிருனே, அந்த மாறுதலற்றவன்தான் இந்த ஆத்மா அல்லவா? **(598)**

**यस्येदं सकलं विभाति महसा तस्य स्वयंज्योतिषः**
**सूर्यस्येव किमस्ति भासकमिह प्रज्ञादि सर्वं जडम् ।**
**न ह्यर्कस्य विभासकं क्षितितले दृष्टं तथैवात्मनो**
**नान्यः कोऽप्यनुभासकोऽनुभविता नातः परः कश्चन ॥ ५९९ ॥**

**யஸ்யேத³ம் ஸகலம் விபா⁴தி மஹஸா தஸ்ய ஸ்வயஞ்ஜ்யோதிஷ:**
**ஸூர்யஸ்யேவ கிமஸ்தி பா⁴ஸகமிஹ ப்ரஜ்ஞாதி³ ஸர்வம் ஜட³ம் ।**
**ந ஹ்யர்கஸ்ய விபா⁴ஸகம் க்ஷிதிதலே த்³ருஷ்டம் ததை²வாத்மனோ**
**நான்ய: கோ(அ)ப்யனுபா⁴ஸகோ(அ)னுப⁴விதா நாத: பர: கஶ்சன ॥ 599 ॥**

**यस्य** = எதனுடைய,
**யஸ்ய**
**महसा** = தேஜஸ்ஸால்,
**மஹஸா**
**इदं सकलं** = இந்த பிரபஞ்சம் எல்லாம்,
**இத³ம் ஸகலம்**
**विभाति** = விளங்குகிறதோ,
**விபா⁴தி**
**सूर्यस्येव** = ஸூர்யனைப்போல்,
**ஸூர்யஸ்யேவ**
**स्वयंज्योतिष:** = தானே பிரகாசிக்கிற,
**ஸ்வயஞ்ஜ்யோதிஷ:**
**तस्य** = அந்த வஸ்துவை,
**தஸ்ய**
**भासकं** = விளக்கக்கூடியது,
**பா⁴ஸகம்**
**इह** = இங்கு,
**இஹ**
**किमस्ति** = என்ன இருக்கிறது?
**கிமஸ்தி**
**प्रज्ञादि** = புத்தி முதலானது,
**ப்ரஜ்ஞாதி³**
**सर्वं** = எல்லாம்,
**ஸர்வம்**
**जडम्** = ஜடமானது,
**ஜட³ம்**
**अर्कस्य विभासकं** = ஸூரியனை பிரகாசப்படுத்துகிற வஸ்து,
**அர்கஸ்ய விபா⁴ஸகம்**
**क्षितितले** = பூதலத்தில்,
**க்ஷிதிதலே**
**नहि दृष्टं** = பார்க்கப்பட்டதில்லையல்லவா?
**நஹி த்³ருஷ்டம்**

| | | |
|---|---|---|
| **तथैव** | = | அப்படியே, |
| **ததை²வ** | | |
| **आत्मनः** | = | ஆத்மாவை, |
| **ஆத்மனঃ** | | |
| **अनुभासकः** | = | விளங்கவைக்கிற, |
| **அனுபா⁴ஸகঃ** | | |
| **अन्यः कोपि** | = | வேறு ஒன்றும், |
| **அன்யঃ கோபி** | | |
| **न** | = | இல்லை, |
| **ந** | | |
| **अतः** | = | இந்த ஆத்மாவைக்காட்டிலும், |
| **அதঃ** | | |
| **परः** | = | வேறு, |
| **பரঃ** | | |
| **अनुभविता** | = | அனுபவிக்கிறவன், |
| **அனுப⁴விதா** | | |
| **कश्चन** | = | ஒருவரும், |
| **கஶ்சன** | | |
| **न** | = | இல்லை. |
| **ந** | | |

எதனுடைய தேஜஸினால் இந்த பிரபஞ்சமெல்லாம் பிரகாசிக்கிறதோ, ஸூர்யனைப்போல் ஸ்வயம் பிரகாசமான அந்த வஸ்துவை, பிரகாசப்படுத்தக்கூடியது இங்கு வேறு உண்டா? புத்தி முதலானது எல்லாம் ஜடம். ஸூர்யனை பிரகாசப்படுத்தக் கூடியதாக பூமியில் எதுவும் காணப்படவில்லை. அப்படியே, ஆத்மாவை பிரகாசப்ப டுத்தக்கூடிய வேறு எதுவும் கிடையாது. அதைத்தவிர அனுபவிப்பவனும் வேறு கிடையாது. **(599)**

**येनानुभूयते सर्वं जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।**
**विज्ञातारमिमं को नु कथं वेदितुमर्हति ॥ ६०० ॥**

**யேனானுபூ⁴யதே ஸர்வம் ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு ।**
**விஜ்ஞாதாரமிமம் கோ நு கத²ம் வேதி³துமர்ஹதி ॥ 600 ॥**

| | | |
|---|---|---|
| **येन** | = | எவரால், |
| **யேன** | | |
| **जाग्रत्स्वप्नसुषुप्तिषु** | = | ஜாக்ரத் ஸ்வப்னம், ஸுஷுப்தி இவைகளில், |
| **ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு** | | |

| | | |
|---|---|---|
| **सर्वं** | = | எல்லாம், |
| **ஸர்வம்** | | |
| **अनुभूयते** | = | அனுபவிக்கப்படுகிறதோ, |
| **அனுபூ⁴யதே** | | |
| **इमं** | = | இந்த, |
| **இமம்** | | |
| **विज्ञातारं** | = | அறிகிறவரை, |
| **விஜ்ஞாதாரம்** | | |
| **को नु** | = | எவன் தான், |
| **கோ நு** | | |
| **कथं** | = | எப்படி, |
| **கத²ம்** | | |
| **वेदितुं** | = | அறிவதற்கு, |
| **வேதி³தும்** | | |
| **अर्हति** | = | தக்கவனுகிறன்? |
| **அர்ஹதி** | | |

எவரால் ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, இந்த நிலைகளில் எல்லாம் அனுபவிக்கப்படுகிறதோ, இந்த அறிவுள்ளவரை யார்தான் எப்படித்தான் அறியமுடியும்?

**(600)**

**सर्वस्य दाहको वह्निर्वह्नेर्नान्योऽस्ति दाहकः।**
**यथा तथात्मनो ज्ञातुर्ज्ञाता कोऽपि न दृश्यते ॥ ६०१ ॥**

**ஸர்வஸ்ய தா³ஹகோ வஹ்நிர்வஹ்னேர்னான்யோ(அ)ஸ்தி தா³ஹக꞉ ।**
**யதா² ததா²த்மனோ ஜ்ஞாதுர்ஜ்ஞாதா கோ(அ)பி ந த்³ருஶ்யதே ॥ 601 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** | = | எப்படி, |
| **யதா²** | | |
| **वह्निः** | = | நெருப்பு, |
| **வஹ்நி** | | |
| **सर्वस्य दाहकः** | = | எல்லாவற்றையும் எரிக்கிறதாக உள்ளது, |
| **ஸர்வஸ்ய தா³ஹக꞉** | | |
| **वन्हेः** | = | நெருப்பை, |
| **வன்ஹ்னே꞉** | | |
| **दाहकः** | = | எரிக்கிறதாக, |
| **தா³ஹக꞉** | | |
| **अन्यः** | = | வேறு வஸ்து, |
| **அன்ய꞉** | | |

| | | |
|---|---|---|
| **नास्ति** | = | இல்லையோ, |
| **நாஸ்தி** | | |
| **तथा** | = | அப்படியே, |
| **ததா²** | | |
| **ज्ञातुः** | = | அறிகிற, |
| **ஜ்ஞாது:** | | |
| **आत्मनो ज्ञाता** | = | ஆத்மாவை அறிகிறவன், |
| **ஆத்மனோ ஜ்ஞாதா** | | |
| **कोपि** | = | ஒருவனும், |
| **கோபி** | | |
| **न दृश्यते** | = | காணப்படவில்லை. |
| **ந த்³ருஶ்யதே** | | |

எப்படி எல்லாவற்றையும் எரிப்பது அக்னி, அக்னியை எரிக்கக்கூடியதாக வேறு எதுவும் கிடையாதோ, அப்படியே எல்லாவற்றையும் அறிகிற ஆத்மாவை அறிகிறவனாக உள்ளவன் யாரும் காணப்படவில்லை. **(601)**

**उपलभ्येत केनायं ह्युपलब्धा स्वयं ततः ।**
**उपलब्ध्यन्तराभावान्नायमात्मोपलभ्यते ॥ ६०२ ॥**

**உபலப்⁴யேத கேனாயம் ஹ்யுபலப்³தா⁴ ஸ்வயம் தத: ।**
**உபலப்³த்⁴யந்தராபா⁴வான்னாயமாத்மோபலப்⁴யதே ॥ 602 ॥**

| | | |
|---|---|---|
| **स्वयं** | = | தானே, |
| **ஸ்வயம்** | | |
| **उपलब्धा** | = | அறிகிறவனான, |
| **உபலப்³தா⁴** | | |
| **अयं** | = | இந்த ஆத்மா, |
| **அயம்** | | |
| **केन** | = | யாரால், |
| **கேன** | | |
| **उपलभ्येत** | = | அறியப்படுவான்? |
| **உபலப்⁴யேத** | | |
| **ततः** | = | ஆகையால், |
| **தத:** | | |
| **उपलब्ध्यन्तराभावात्** | = | வேறு அறிகிறவன் இல்லாததால், |
| **உபலப்³த்⁴யந்தராபா⁴வாத்** | | |

**अयं आत्मा** = இந்த ஆத்மா,

**அயம் ஆத்மா**

**नोपलभ्यते** = அறியப்படவில்லை,

**நோபலப்⁴யதே**

தானே அறிகிறவனுயிருந்து கொண்டிருக்கிற இவர் யாரால் அறியப்பட முடியும்? ஆகையால் அறிகிறவன் வேறு இல்லாததினுல் இந்த ஆத்மா அறியப்படு கிறதில்லை. **(602)**

**बुद्ध्यादिवेद्यविलयादयमेक एव**
**सुप्तौ न पश्यति श्रुणोति न वेत्ति किंचित् ।**
**सौषुप्तिकस्य तमसः स्वयमेव साक्षी**
**भूत्वात्र तिष्ठति सुखेन च निर्विकल्पः ॥ ६०३ ॥**

**பு³த்³த்⁴யாதி³வேத்³யவிலயாத³யமேக ஏவ**
**ஸுப்தௌ ந பஶ்யதி ஶ்ருணோதி ந வேத்தி கிஞ்சித் ।**
**ஸௌஷுப்திகஸ்ய தமஸঃ ஸ்வயமேவ ஸாக்ஷீ**
**பூ⁴த்வாத்ர திஷ்ட²தி ஸுகே²ன ச நிர்விகல்பঃ ॥ 603 ॥**

**सुप्तौ** = தூக்கத்தில்,

**ஸுப்தௌ**

**बुद्ध्यादिवेद्यविलयात्** = புத்தி முதலான அறியப்படும் வஸதுக்கள்

**பு³த்³த்⁴யாதி³வேத்³யவிலயாத்** மறைந்துவிட்டதால்,

**अयं** = இந்த ஆத்மா,

**அயம்**

**एक एव** = ஒருவனுகவே இருந்துகொண்டு,

**ஏக ஏவ**

**किंचित्** = ஒன்றையும்,

**கிஞ்சித்**

**न पश्यति** = பார்க்கிறதில்லை,

**ந பஶ்யதி**

**न श्रुणोति** = கேட்கிறதில்லை,

**ந ஶ்ருணோதி**

**न वेत्ति** = அறிகிறதில்லை,

**ந வேத்தி**

**सौषुप्तिकस्य** = ஸுஷுப்தியிலுள்ள,

**ஸௌஷுப்திகஸ்ய**

| | | |
|---|---|---|
| **तमस:**<br>**தமஸః** | = | அக்ஞானத்தை, |
| **स्वयमेव**<br>**ஸ்வயமேவ** | = | தானே, |
| **साक्षी भूत्वा**<br>**ஸாக்ஷீ பூ⁴த்வா** | = | நேரில் பார்க்கிறவனாக இருந்து கொண்டு, |
| **अत्र**<br>**அத்ர** | = | இந்த தூக்கத்தில், |
| **निर्विकल्प:**<br>**நிர்விகல்பஃ** | = | விகல்பமில்லாதவனாக, |
| **सुखेन च**<br>**ஸுகே²ன ச** | = | ஸுகமாகவும், |
| **तिष्ठति**<br>**திஷ்ட²தி** | = | இருக்கிறான். |

தூக்கத்தில் புத்தி முதலான அறியப்படும் வஸ்துக்கள் லயமாகிவிட்டபடியால் இவர் ஒருவரே இருக்கிறார். எதையும் பார்ப்பதில்லை, கேட்பதும் இல்லை, அறிவதும் இல்லை, ஸுஷுப்தி காலத்திலுள்ள அக்ஞானத்தை தானே ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டு, ஸுகமாய் எவ்வித விகல்பமு மன்னியில் இருக்கிறார். **(603)**

**सुषुप्तावात्मसद्भावे प्रमाणं पण्डितोत्तमा:।**
**विदु: स्वप्रत्यभिज्ञानं आबालवृद्धसंमतम् ॥ ६०४ ॥**

**ஸுஷுப்தாவாத்மஸத்³பா⁴வே ப்ரமாணம் பண்டி³தோத்தமாஃ।**
**விது³ஃ ஸ்வப்ரத்யபி⁴ஜ்ஞானம் ஆபா³லவ்ருத்³த⁴ஸம்மதம் ॥ 604 ॥**

| | | |
|---|---|---|
| **सुषुप्तौ**<br>**ஸுஷுப்தௌ** | = | ஸுஷுப்தியில், |
| **आत्मसद्भावे**<br>**ஆத்மஸத்³பா⁴வே** | = | ஆத்மா இருக்கும் விஷயத்தில், |
| **पण्डितोत्तमा:**<br>**பண்டி³தோத்தமாஃ** | = | சிறந்த பண்டிதர்கள், |
| **आबालवृद्धसंमतम्**<br>**ஆபா³லவ்ருத்³த⁴ஸம்மதம்** | = | பாலர் முதல் விருத்தர் வரை யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட, |
| **स्वप्रत्यभिज्ञानं**<br>**ஸ்வப்ரத்யபி⁴ஜ்ஞானம்** | = | தனது அனுபவத்தின் ஞாபகத்தை, |
| **प्रमाणं**<br>**ப்ரமாணம்** | = | பிரமாணமாக, |

**विदुः** = அறிகிருர்கள்.
**விது³:**

ஸுஷுப்தியில் ஆத்மா இருக்கிருர் என்ற விஷயத்தில், பாலர் விருத்தர் உள்பட எல்லாராலும, ஒப்புக்கொள்ளப்படும் தன் ஞாபகத்தை பிரமாணமாக பண்டித சிரேஷ்டர்கள் அறிந்திருக்கிருர்கள். **(604)**

**प्रत्यभिज्ञायमानत्वं लिङ्गं अत्रानुमापकम् ।**
**स्मर्यमाणस्य सद्भावे सुखमस्वाप्समित्ययम् ॥ ६०५ ॥**

**ப்ரத்யபி⁴ஜ்ஞாயமானத்வம் லிங்க³ம் அத்ரானுமாபகம் ।**
**ஸ்மர்யமாணஸ்ய ஸத்³பா⁴வே ஸுக²மஸ்வாப்ஸமித்யயம் ॥ 605 ॥**

**अत्र** = இங்கு,
**அத்ர**
**सुखमस्वाप्सं** = நான் நன்ருகத் தூங்கினேன்,
**ஸுக²மஸ்வாப்ஸம்**
**इति** = என்று,
**இதி**
**स्मर्यमाणस्य** = நினைக்கப்படுகிற ஆத்மாவின்,
**ஸ்மர்யமாணஸ்ய**
**सद्भावे** = இருப்பில்,
**ஸத்³பா⁴வே**
**प्रत्यभिज्ञायमानत्वं** = நினைக்கப்படும் தன்மை,
**ப்ரத்யபி⁴ஜ்ஞாயமானத்வம்**
**अनुमापकं** = அனுமிதியை உண்டு பண்ணும்,
**அனுமாபகம்**
**लिङ्गं** = ஹேதுவாக ஆகிறது.
**லிங்க³ம்**

காலையில் விழித்துக்கொண்டபின் "இரவில் நான் ஸுகமாகத்தூங்கினேன்" என்று நினைவு படுத்திக் கொள்கிருன். முன்ஞல் இருந்ததைத்தான் பின்னர் நினைவு படுத்திக்கொள்ள முடியும். நினைக்கப்படும் தன்மை ஆத்மாவில் இருப்பதால், ஆத்மா உள்ளது என்பதை அநுமானத்தால் ஊகிப்பதற்கு நினைக்கப்படும் தன்மை ஹேதுவாக ஆகிறது. **(605)**

**पुराऽनुभूतो नो चेत्तु स्मृतेरनुदयो भवेत् ।**
**इत्यादितर्कयुक्तिश्च सद्भावे मानमात्मनः ॥ ६०६ ॥**

**புரா(அ)னுபூ⁴தோ நோ சேத்து ஸ்ம்ருதேரனுத³யோ ப⁴வேத் ।**
**இத்யாதி³தர்கயுக்திஶ்ச ஸத்³பா⁴வே மானமாத்மன꞉ ॥ 606 ॥**

**पुरा** = முன்னால்,
**புரா**
**अनुभूतो नो चेत्तु** = அனுபவிக்கப்படாவிட்டால்,
**அனுபூ⁴தோ நோ சேத்து**
**स्मृतेः** = நினைவின்,
**ஸ்ம்ருதே꞉**
**अनुदयो भवेत्** = உத்பத்தி ஏற்படாது,
**அனுத³யோ ப⁴வேத்**
**इत्यादितर्कयुक्तिश्च** = இது முதலான தர்க்க யுக்தியும்,
**இத்யாதி³தர்கயுக்திஶ்ச**
**आत्मनः सद्भावे** = ஆத்மா இருக்கும் விஷயத்தில்,
**ஆத்மன꞉ ஸத்³பா⁴வே**
**मानं** = ப்ரமாணம்.
**மானம்**

முன்னால் அனுபவிக்கப்படாமலிருந்தால் ஞாபகமே ஏற்படாது. இது முதலான தர்க்க யுக்தியும் ஆத்மா ஸுஷுப்தியில் இருக்கிறது என்பதற்கு பிரமாணம். **(606)**

**यत्रात्मनोऽकामयितृत्वबुद्धिः स्वनानवेक्षाऽपि च तत् सुषुप्तम् ।**
**इत्यात्मसद्भाव उदीर्यतेऽत्र श्रुत्याऽपि तस्मात् श्रुतिरत्र मानम् ॥ ६०७ ॥**

**யத்ராத்மனோ(அ)காமயித்ருத்வபு³த்³தி⁴꞉**
**ஸ்வனானவேக்ஷா(அ)பி ச தத் ஸுஷுப்தம் ।**
**இத்யாத்மஸத்³பா⁴வ உதீ³ர்யதே(அ)த்ர**
**ஶ்ருத்யா(அ)பி தஸ்மாத் ஶ்ருதிரத்ர மானம் ॥ 607 ॥**

**यत्र** = எங்கு,
**யத்ர**
**आत्मनः** = ஆத்மாவிற்கு,
**ஆத்மன꞉**
**अकामयितृत्वबुद्धिः** = ஆசைப்படுகிற எண்ணமில்லாமையும்,
**அகாமயித்ருத்வபு³த்³தி⁴꞉**
**स्वनानवेक्षाऽपि च** = ஸ்வப்னம் காணாதிருத்தலும் உள்ளதோ,
**ஸ்வனானவேக்ஷா(அ)பி ச**
**तत् सुषुप्तम्** = அது ஸுஷுப்தி,
**தத் ஸுஷுப்தம்**

| | | |
|---|---|---|
| **इति** | = | என்று, |
| **இதி** | | |
| **अत्र** | = | இவ்விஷயத்தில், |
| **அத்ர** | | |
| **श्रुत्या** | = | வேதத்தால், |
| **ஶ்ருத்யா** | | |
| **आत्मसद्भाव:** | = | ஆத்மாவின் இருப்பு, |
| **ஆத்மஸத்³பா⁴வ:** | | |
| **उदीर्यते** | = | சொல்லப்படுகிறது, |
| **உதீ³ர்யதே** | | |
| **तस्मात्** | = | ஆதலால், |
| **தஸ்மாத்** | | |
| **अत्र** | = | இதில், |
| **அத்ர** | | |
| **श्रुतिरपि** | = | வேதமும், |
| **ஶ்ருதிரபி** | | |
| **मानं** | = | ப்ரமாணம். |
| **மானம்** | | |

"எங்கே ஆத்மாவிற்கு ஆசைப்படுகிற எண்ணமில்லையோ எங்கே ஸ்வப்னத்தைப் பார்க்கவில்லையோ, அது ஸுஷுப்தி" என்று மாண்டுக்ய சுருதியினுல் ஆத்மாவின் இருப்பு சொல்லப்படுகிறது. ஆகையால் இவ்விஷயத்தில் சுருதியும் பிரமாணம். **(607)**

**अकामयितृता स्वप्नाद्दर्शनं घटते कथम् ।**
**अविद्यमानस्य तत आत्मास्तित्वं प्रतीयते ॥ ६०८ ॥**

**அகாமயித்ருதா ஸ்வப்நாத்³த³ர்ஶனம் க⁴டதே கத²ம் ।**
**அவித்³யமானஸ்ய தத ஆத்மாஸ்தித்வம் ப்ரதீயதே ॥ 608 ॥**

| | | |
|---|---|---|
| **अविद्यमानस्य** | = | இல்லாதவனுக்கு, |
| **அவித்³யமானஸ்ய** | | |
| **अकामयितृता** | = | ஆசைப்படாமல் இருக்கிற தன்மையும், |
| **அகாமயித்ருதா** | | |
| **स्वप्नाद्दर्शनं** | = | ஸ்வப்னம் காணுமையும், |
| **ஸ்வப்நாத்³த³ர்ஶனம்** | | |
| **कथं घटते** | = | எப்படிப்பொருந்துகிறது, |
| **கத²ம் க⁴டதே** | | |

**ततः** = ஆகையால்,

**ததஃ**

**आत्मास्तित्वं** = ஆத்மாவின் இருப்பு,

**ஆத்மாஸ்தித்வம்**

**प्रतीयते** = அறியப்படுகிறது.

**ப்ரதீயதே**

ஆசைப்படாமலிருக்கும் தன்மையும் ஸ்வப்னம் பார்க்காமலிருப்பதும், இல்லாதவனுக்கு எப்படி முடியும்? ஆகையால் ஆத்மாவின் இருப்பு நன்கு தெரிகிறது. **(608)**

(**அவதாரிகை**) இவ்விதமாக சுருதி, யுக்தி, பிரத்யக்ஷம் என்கிற பிரமாணங்களினால் ஆத்மா என்று ஒருவர் உண்டு, அவர் சரீராதிகளுக்கு வேறுபட்டவர், மற்ற விஷயங்களைப்போல அறியப்படும் பதார்த்தமில்லை, அவரே ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்கிற மூன்று நிலைகளிலும் அறிகிறவர் என்று நிரூபித்துவிட்டு, இனி அவர் ஸத், சித், ஆனந்த ஸ்வரூபர் என்பதை நிர்வசனம் செய்கிறார்: -

**एतैः प्रमाणैरस्तीति ज्ञातः साक्षितया बुधैः ।**
**आत्माऽयं केवलः शुद्धः सच्चिदानन्दलक्षणः ॥ ६०९ ॥**

**ஏதைஃ ப்ரமாணைரஸ்தீதி ஜ்ஞாதஃ ஸாக்ஷிதயா பு³தை⁴ஃ ।**
**ஆத்மா(அ)யம் கேவலஃ ஶுத்³த⁴ஃ ஸச்சிதா³னந்த³லக்ஷணஃ ॥ 609 ॥**

**एतैः प्रमाणै** = இந்த பிரமாணங்களால்,

**ஏதைஃ ப்ரமாணை**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**साक्षितया** = ஸாக்ஷியாக,

**ஸாக்ஷிதயா**

**अस्ति** = இருக்கிறார்,

**அஸ்தி**

**इति** = என்று,

**இதி**

**बुधैः** = வித்வான்களால்,

**பு³தை⁴ஃ**

**ज्ञातः** = அறியப்பட்டிருக்கிறார்,

**ஜ்ஞாதஃ**

**अयं** = இந்த ஆத்மா,

**அயம்**

| | | |
|---|---|---|
| **केवल:** | = | தனியாக இருப்பவர், |
| **கேவல:** | | |
| **शुद्ध:** | = | தோஷமில்லாதவர், |
| **ஶுத்³த⁴:** | | |
| **सच्चिदानन्दलक्षण:** | = | ஸத்சித் ஆனந்த ஸ்வரூபமாயிருப்பவர். |
| **ஸச்சிதா³னந்த³லக்ஷண:** | | |

இந்த பிரமாணங்களினுல் ஆத்மா ஸாக்ஷியாக (ஒன்றிலும் ஸம்பந்தப் படாமல் எல்லாவற்றையும் அறிபவராக) இருக்கிருர் என்று அறிவாளிகளால் அறியப் பட்டிருக்கிறது. இந்த ஆத்மா தனித்தது, சுத்தமானது, இருப்பு ஞானம் ஆனந்தம் இவைகஊ லக்ஷணமாகவுடையது. **(609)**

**सत्वचित्वानन्दतादि लक्षणं प्रत्यगात्मन: ।**

**ஸத்வசித்வானந்த³தாதி³ லக்ஷணம் ப்ரத்யகா³த்மன: ।**

| | | |
|---|---|---|
| **सत्वचित्वानन्दतादि** | = | இருக்கும் தன்மை, அறிவுத்தன்மை, |
| **ஸத்வசித்வானந்த³தாதி³** | | ஆனந்தத்தன்மை இது முதலியவை, |
| **प्रत्यगात्मन:** | = | பிரத்யகாத்மாவின், |
| **ப்ரத்யகா³த்மன:** | | |
| **लक्षणं** | = | லக்ஷணம். |
| **லக்ஷணம்** | | |

இருக்கும் தன்மை, அறிவுத்தன்மை, ஆனந்தத்தன்மை முதலியது பிரத்யக் (உள்ளிருக்கும்) ஆத்மாவின் லக்ஷணம்.

**(அவதாரிகை)** இம்மூன்று தன்மைகளும் ஆத்மாவிற்கு எதனுல் சொல்லப்படு கிறதென்று முதலில் சுருக்கமாகச் சொல்லிவிட்டு பிறகு தனித்தனியே எடுத்துக் கொண்டு விஸ்தாரமாகச் சொல்கிருர்: -

**कालत्रयेऽप्यबाध्यत्वं सत्वं नित्यस्वरूपत: ॥ ६१० ॥**

**காலத்ரயே(அ)ப்யபா³த்⁴யத்வம் ஸத்வம் நித்யஸ்வரூபத: ॥ 610 ॥**

**शुद्धचैतन्यरूपत्वं चित्वं ज्ञानस्वरूपत: ।**
**अखण्डसुखरूपत्वात् आनन्दत्वं इतीर्यते ॥ ६११ ॥**

**ஶுத்³த⁴சைதன்யரூபத்வம் சித்வம் ஜ்ஞானஸ்வரூபத: ।**
**அக²ண்ட³ஸுக²ரூபத்வாத் ஆனந்த³த்வம் இதீர்யதே ॥ 611 ॥**

| | | |
|---|---|---|
| **नित्यस्वरूपत:** <br> **நித்யஸ்வரூபத:** | = | அழிவற்ற ஸ்வரூபமானதால், |
| **कालत्रयेपि** <br> **காலத்ரயேபி** | = | முக்காலங்களிலும், |
| **अबाध्यत्वं** <br> **அபா³த்⁴யத்வம்** | = | பாதிக்கப்படாத தன்மையாகிற, |
| **सत्वं** <br> **ஸத்வம்** | = | ஸத்வம், |
| **ज्ञानस्वरूपत:** <br> **ஜ்ஞானஸ்வரூபத:** | = | ஞானஸ்வரூபமாயிருப்பதால், |
| **शुद्धचैतन्यरूपत्वं** <br> **ஶுத்³த⁴சைதன்யரூபத்வம்** | = | கேவலசைதன்ய ரூபமாகிற, |
| **चित्वं** <br> **சித்வம்** | = | சித்வம், |
| **अखण्डसुखरूपत्वात्** <br> **அக²ண்ட³ஸுக²ரூபத்வாத்** | = | பூர்ணமான ஸுசரூபமாயிருப்பதால், |
| **आनन्दत्वं** <br> **ஆனந்த³த்வம்** | = | ஆனந்தக்தன்மை, |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **ईर्यते** <br> **ஈர்யதே** | = | சொல்லப்படுகிறது. |

ஆத்மாவிற்கு ஸத்த்வம் (இருக்கும் தன்மை) என்பது நித்யமான ஸ்வரூப மாயிருப்பதால் சென்ற காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களிலும் கூட பாதிக்க முடியாத தன்மை.

சித்த்வம் (சித்தாக இருக்கும் தன்மை) என்பது ஞான ஸ்வரூபமாயிருப்பதால் சுத்த சைதன்யஸ்வரூபத்தன்மை.

பரிபூர்ணமான ஸுகஸ்வரூபமாயிருப்பதால், ஆனந்தத்தன்மை என்று சொல் லப்படுகிறது. **(610-611)**

**(அவதாரிகை)** மேல் 6 சுலோகங்களில் ஸத்தாயிருக்கும் தன்மையை விளக்குகிறுர்: -

**अनुस्यूताऽऽत्मनः सत्ता जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।**
**अहमस्मीत्यतो नित्यो भवत्यात्माऽयमव्ययः ॥ ६१२ ॥**

**அனுஸ்யூதா(ஆ)த்மன꞉ ஸத்தா ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு ।**
**அஹமஸ்மீத்யதோ நித்யோ ப⁴வத்யாத்மா(அ)யமவ்யய꞉ ॥ 612 ॥**

**जाग्रत्स्वप्नसुषुप्तिषु** = விழிப்பு, கனவு, நல்ல தூக்கம் இவைகளில்,
**ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திஷு**
**अहं अस्मि** = நான் இருக்கிறேன்,
**அஹம் அஸ்மி**
**इति** = என்று,
**இதி**
**आत्मनः सताः** = ஆத்மாவின் இருப்பு,
**ஆத்மன꞉ ஸதா꞉**
**अनुस्यूता** = தொடர்ந்து இருக்கிறது,
**அனுஸ்யூதா**
**अतः** = ஆகையால்,
**அத꞉**
**अव्ययः** = குறைவில்லாத,
**அவ்யய꞉**
**अयं आत्मा** = இந்த ஆத்மா,
**அயம் ஆத்மா**
**नित्यः** = அழிவற்றவராக,
**நித்ய꞉**
**भवति** = ஆகிறார்.
**ப⁴வதி**

விழிப்பு, கனவு, நல்ல தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் "நான் இருக்கிறேன்" என்று ஆத்மாவின் இருப்பு (ஸத்தை) துடர்ந்தேயிருந்து வருகிறது. ஆகையினால் இந்த ஆத்மா நித்யர், குறைவற்றவர். **(612)**

**सर्वदाऽप्यासं इत्येवाभिन्नप्रत्यय ईक्ष्यते ।**
**कदापि नासं नेत्यस्मादात्मनो नित्यता मता ॥ ६१३ ॥**

**ஸர்வதா³(அ)ப்யாஸம் இத்யேவாபி⁴ன்னப்ரத்யய ஈக்ஷ்யதே ।**
**கதா³பி நாஸம் நேத்யஸ்மாதா³த்மனோ நித்யதா மதா ॥ 613 ॥**

**सर्वदापि** = எப்பொழுதும்,
**ஸர்வதா³பி**
**आसं** = நான் இருந்தேன்,
**ஆஸம்**

| | | |
|---|---|---|
| इत्येव<br>இத்யேவ | = | என்றே, |
| अभिन्नप्रत्ययः<br>அபி⁴ன்னப்ரத்யய: | = | மாறுபடாத ஒரே எண்ணம், |
| ईक्ष्यते<br>ஈக்ஷ்யதே | = | காணப்படுகிறது, |
| न आसं<br>ந ஆஸம் | = | நான் இருந்ததில்லை, |
| इति<br>இதி | = | என்ற, (எண்ணம்), |
| कदापि<br>கதா³பி | = | ஒருபோதும், |
| न<br>ந | = | காணப்படுகிறதில்லை, |
| अस्मात्<br>அஸ்மாத் | = | இந்தக்காரணத்தால், |
| आत्मनः<br>ஆத்மன: | = | ஆத்மாவிற்கு, |
| नित्यता<br>நித்யதா | = | நித்யமாயிருக்கும் தன்மை, |
| मता<br>மதா | = | கருதப்பட்டிருக்கிறது. |

"எப்பொழுதும்கூட நான் இருந்திருக்கிறேன்" என்றே வேறுபடாத எண்ணம் காணப்படுகிறது 'நான் இருந்ததில்லை' என்ற எண்ணம் ஒருபொழுதும் காணப்படு கிறதில்லை இந்த காரணத்தினால் ஆத்மாவிற்கு நித்யமாயிருக்கும் தன்மை எண்ணப் படுகிறது. **(613)**

**आयातासु गतासु शैशवमुखावस्थासु जाग्रन्मुखा-**
**स्वन्यास्वप्यखिलासु वृत्तिषु धियो दुष्टास्त्रदुष्टास्वपि ।**
**गङ्गाभङ्गपरम्परासु जलवत् सत्ताऽनुवृत्ताऽऽत्मनः**
**तिष्ठत्येव सदा स्थिराऽहमहमित्येकात्मना साक्षिणः ॥ ६१४ ॥**

**ஆயாதாஸு க³தாஸு ஶைஶவமுகா²வஸ்தா²ஸு ஜாக்³ரன்முகா²-**
**ஸ்வந்யாஸ்வப்யகி²லாஸு வ்ருத்திஷு தி⁴யோ து³ஷ்டாஸ்த்ரது³ஷ்டாஸ்வபி ।**
**க³ங்கா³ப⁴ங்க³பரம்பராஸு ஜலவத் ஸத்தா(அ)னுவ்ருத்தா(ஆ)த்மன:**
**திஷ்ட²த்யேவ ஸதா³ ஸ்தி²ரா(அ)ஹமஹமித்யேகாத்மனா ஸாக்ஷிண: ॥ 614 ॥**

| | | |
|---|---|---|
| **शैशवमुखावस्थासु** | = | பால்யம் முதலிய அவஸ்த்தைகளும், |
| **ஶைஶவமுகா²வஸ்தா²ஸு** | | |
| **जाग्रन्मुखासु** | = | ஜாக்ரத் முதலியவைகளும், |
| **ஜாக்³ரன்முகா²ஸு** | | |
| **अन्यासु** | = | மற்றும், |
| **அந்யாஸு** | | |
| **दुष्टासु** | = | கெட்டதும், |
| **து³ஷ்டாஸு** | | |
| **अदुष्टासु** | = | நல்லதுமான, |
| **அது³ஷ்டாஸு** | | |
| **अखिलासु** | = | எல்லா, |
| **அகி²லாஸு** | | |
| **धियः** | = | மனதின், |
| **தி⁴ய:** | | |
| **वृत्तिप्वपि** | = | விருத்திகளும், |
| **வ்ருத்திப்வபி** | | |
| **आयातासु** | = | வந்த போதிலும், |
| **ஆயாதாஸு** | | |
| **रातासु अपि** | = | சென்ற போதிலும், |
| **ராதாஸு அபி** | | |
| **गङ्गाभङ्गपरम्परासु** | = | கங்கையின அலைகளின் வரிசைகளில், |
| **க³ங்கா³ப⁴ங்க³பரம்பராஸு** | | |
| **जलवत्** | = | ஜலம் போல, |
| **ஜலவத்** | | |
| **साक्षिणः** | = | ஸாக்ஷியான, |
| **ஸாக்ஷிண:** | | |
| **आत्मनः** | = | ஆத்மாவின், |
| **ஆத்மன:** | | |
| **सत्ता** | = | ஸத்தையானது, |
| **ஸத்தா** | | |
| **अहमहमिति** | = | நான் நான் என்று, |
| **அஹமஹமிதி** | | |
| **स्थिरा** | = | மாறுமல், |
| **ஸ்தி²ரா** | | |
| **सदा** | = | எப்பொழுதும், |
| **ஸதா³** | | |

| | | |
|---|---|---|
| **एकात्मना** <br> **ஏகாத்மனா** | = | ஒரே ஸ்வரூபமாக, |
| **अनुवृत्ता** <br> **அனுவ்ருத்தா** | = | தொடர்ந்து, |
| **तिष्ठत्येव** <br> **திஷ்ட²த்யேவ** | = | இருந்தே வருகிறது. |

பால்யம் முதலிய அவஸ்தைகளும், ஜாக்ரத் முதலிய அவஸ்தைகளும் மற்றும் நல்லதும் கெட்டதுமான புத்தியின் எல்லா விருத்திகளும மாறிமாறி வந்தாலும் போனாலும் கங்கையின் அலைவரிசைகளில் தண்ணீர்போல ஸாக்ஷியான ஆத்மாவின் ஸத்தையானது "நான், நான்" என்று மாறாமல் எப்பொழுதும் ஒரே ஸ்வரூபமாகத் தொடர்ந்து இருக்கிறது. **(614)**

**प्रतिपदमहमादयो विभिन्नाः क्षणपरिणामितया विकारिणस्ते।**
**न परिणतिरमुष्य निष्कलत्वात् अयं आविकार्यत एव नित्य आत्मा ॥ ६१५ ॥**

**ப்ரதிபத³மஹமாத³யோ விபி⁴ன்னாஃ க்ஷணபரிணாமிதயா விகாரிணஸ்தே।**
**ந பரிணதிரமுஷ்ய நிஷ்கலத்வாத் அயம் ஆவிகார்யத ஏவ நித்ய ஆத்மா ॥ 615 ॥**

| | | |
|---|---|---|
| **प्रतिपदं** <br> **ப்ரதிபத³ம்** | = | ஒவ்வொரு அடியிலும், |
| **अहमादयः** <br> **அஹமாத³யஃ** | = | அஹங்காரம் முதலியவைகள், |
| **विभिन्नाः** <br> **விபி⁴ன்னாஃ** | = | வெவ்வேறானவை, |
| **क्षणपरिणामितया** <br> **க்ஷணபரிணாமிதயா** | = | ஒவ்வொருக்ஷணமும் மாறுதலுடன் கூடியதாக இருப்பதால், |
| **ते** <br> **தே** | = | அவைகள், |
| **विकारिण:** <br> **விகாரிண:** | = | விகாரமுள்ளவை, |
| **निष्कलत्वात्** <br> **நிஷ்கலத்வாத்** | = | அவயவமில்லாததால், |
| **अमुष्य** <br> **அமுஷ்ய** | = | இந்த ஆத்மாவிற்கு, |
| **परिणति:** <br> **பரிணதி:** | = | பரிணாமம், |

| | | |
|---|---|---|
| न<br>ந | = | இல்லை, |
| अयं<br>அயம் | = | இந்த ஆத்மா, |
| आविकारी<br>ஆவிகாரீ | = | விகாரமில்லாதது, |
| अत एव<br>அத ஏவ | = | ஆதலாலேயே, |
| आत्मा नित्य<br>ஆத்மா நித்ய | = | ஆத்மா நித்யமானது |

அஹங்காரம் முதலியவை ஒவ்வொரு அடியிலும் வேறு பட்டுக்கொண்டு க்ஷணத்தில் மாறிவிடும் ஸ்வபாவமுள்ளதால் அவை விகாரத்தையடையும் தன்மை யுடையவை. இந்த ஆத்மாவிற்கு கலைகள் (அவயவங்கள்) கிடையாததினால் மாறுதல் கிடையாது. இவர் விகாரமற்றவர். அதினாலேயே ஆத்மா நித்யர்தான். **(615)**

**यः स्वप्नमद्राक्षमहं सुखं यो**
**ऽस्वाप्सं स एवास्म्यथ जागरूकः।**
**इत्येवमच्छिन्नतयानुभूयते**
**सत्तात्मनो नास्ति हि संशयोऽत्र ॥ ६१६ ॥**

**யः ஸ்வப்னமத்³ராக்ஷமஹம் ஸுக²ம் யோ**
**(அ)ஸ்வாப்ஸம் ஸ ஏவாஸ்ம்யத² ஜாக³ரூகः।**
**இத்யேவமச்சி²ன்னதயானுபூ⁴யதே**
**ஸத்தாத்மனோ நாஸ்தி ஹி ஸம்ஶயோ(அ)த்ர ॥ 616 ॥**

| | | |
|---|---|---|
| यः अहं<br>யः அஹம் | = | எந்த நான், |
| स्वप्नं<br>ஸ்வப்னம் | = | ஸ்வப்னத்தை, |
| अद्राक्षं<br>அத்³ராக்ஷம் | = | பார்த்தேனோ, |
| यः<br>யः | = | எந்த நான், |
| सुखं<br>ஸுக²ம் | = | ஸுகமாக, |
| अस्वाप्सं<br>அஸ்வாப்ஸம் | = | தூங்கினேனோ, |

**स एव** = அந்த நானே,
**ஸ ஏவ**
**अथ** = பிறகு,
**அத²**
**जागरूकः** = விழித்துக்கொண்டிருக்கிறவனாக,
**ஜாக³ரூகஃ**
**अस्मि** = இருக்கிறேன்,
**அஸ்மி**
**इत्येवं** = என்று இவ்விதமாக,
**இத்யேவம்**
**आत्मनः सत्ता** = ஆத்மாவின் ஸத்தையானது,
**ஆத்மனஃ ஸத்தா**
**अच्छिन्नतया** = விடாமல் தொடர்ந்து,
**அச்சி²ன்னதயா**
**अनुभूयते** = அனுபவிக்கப்படுகிறது,
**அனுபூ⁴யதே**
**अत्र** = இவ்விஷயத்தில்,
**அத்ர**
**संशयः** = ஸந்தேஹம்,
**ஸம்ஶயஃ**
**नास्ति हि** = இல்லை.
**நாஸ்தி ஹி**

“எந்த நான் ஸ்வப்னத்தைக் கண்டேனோ, எந்த நான் ஸுகமாகத் தூங்கினேனோ, அந்த நானே இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறேன்” என்று இவ்விதமாக விட்டுப் போகாமல் ஆத்மாவின் ஸத்தை அனுபவிக்கப்படுகிறது, இதில் ஸந்தேஹமேயில்லை என்பது பிரஸித்தம். **(616)**

**(அவதாரிகை)** பிரச்னோபநிஷத் முதலியவிடங்களில் ஆத்மா 16 கலைகளுள்ளவன் என்று சொல்லியிருக்கிறதே, இங்கே கலைகள் கிடையாதென்று சொல்கிறீர்களே என்று ஸந்தேகம் ஏற்படக் கூடியதால், அங்கு சொல்லப்பட்டிருக்கும் ஆத்மா சுத்த சைதன்யமில்லையென்பதைக் காட்டுகிறார்: -

## श्रुत्युक्ताः षोडशकलाश्चिदाभासस्य नात्मनः।

**ஶ்ருத்யுக்தாஃ ஷோட³ஶகலாஶ்சிதா³பா⁴ஸஸ்ய நாத்மனஃ।**

**श्रुत्युक्ताः** = உபநிஷத்தில சொல்லப்பட்ட,
**ஶ்ருத்யுக்தாஃ**

**षोडशकला:** = பதினாறு கலைகள்,

**ஷோட³ஶகலா:**

**चिदाभासस्य** = சிதாபாஸனுக்கு,

**சிதா³பா⁴ஸஸ்ய**

**न आत्मन:** = ஆத்மாவிற்கு அல்ல.

**ந ஆத்மனঃ**

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் 16 கலைகள் சைதன்யத்தின் பிரதிபிம்பமான ஜீவனுக்கே தவிர, ஆத்மாவிற்கு இல்லை.

**निष्कलत्वात् नास्य लयः तस्मात् नित्यत्वं आत्मनः ॥ ६१७ ॥**

**நிஷ்கலத்வாத் நாஸ்ய லயঃ தஸ்மாத் நித்யத்வம் ஆத்மனঃ ॥ 617 ॥**

**अस्य** = இந்த ஆத்மாவுக்கு,

**அஸ்ய**

**निष्कलत्वात्** = அவயவங்கள் இல்லாததால்,

**நிஷ்கலத்வாத்**

**न लय:** = நாசம்கிடையாது,

**ந லயঃ**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**आत्मन:** = ஆத்மாவிற்கு,

**ஆத்மனঃ**

**नित्यत्वं** = நித்யத்தன்மை.

**நித்யத்வம்**

அவயவங்களில்லாத காரணத்தினால் இவருக்கு லயமும் கிடையாது. ஆகையால் ஆத்மாவிற்கு நித்யமாயிருக்கும் தன்மை ஸித்தம். **(617)**

(**அவதாரிகை**) இனி ஆத்மா சித், அதாவது ஞானஸ்வரூபர், என்று 5 சுலோகங்களில் விளக்குகிறார்: -

**जडप्रकाशकः सूर्यः प्रकाशात्मैव नो जडः ।**
**बुद्ध्यादिभासकः तस्मात् चित्स्वरूपः तथा मतः ॥ ६१८ ॥**

**ஜட³ப்ரகாஶகঃ ஸூர்யঃ ப்ரகாஶாத்மைவ நோ ஜட³ঃ ।**
**பு³த்³த்⁴யாதி³பா⁴ஸகঃ தஸ்மாத் சித்ஸ்வரூபঃ ததா² மதঃ ॥ 618 ॥**

| | | |
|---|---|---|
| **जडप्रकाशक:** | = | ஜடவஸ்துக்களை பிரகாசிக்கச் செய்கிற, |
| **ஜட³ப்ரகாஶக:** | | |
| **सूर्य:** | = | ஸூரியன், |
| **ஸூர்ய:** | | |
| **प्रकाशात्मैव** | = | பிரகாச ஸ்வரூபம் தான், |
| **ப்ரகாஶாத்மைவ** | | |
| **नो जड:** | = | ஜடப்பொருள் அல்ல, |
| **நோ ஜட³:** | | |
| **तथा** | = | அப்படியே, |
| **ததா²** | | |
| **बुद्ध्यादिभासक:** | = | புத்தி முதலியவைகளை பிரகாசிக்கச் செய்யும் |
| **பு³த்³த்⁴யாதி³பா⁴ஸக:** | | ஆத்மா, |
| **तस्मात्** | = | அந்த காரணத்தால், |
| **தஸ்மாத்** | | |
| **चित्स्वरूप:** | = | ஞானஸ்வரூபனாக, |
| **சித்ஸ்வரூப:** | | |
| **मत:** | = | கருதப்பட்டிருக்கிறான். |
| **மத:** | | |

ஜடமான பதார்த்தங்களை பிரகாசிக்கும்படிச் செய்யும் ஸூர்யன் பிரகாச ஸ்வரூபனேதான், ஜடமல்ல. அப்படியே ஜடமான புத்தி முதலியதை பிரகாசிக்கச் செய்யும் ஆத்மா அதே காரணத்தினால் ஞானஸ்வரூபனென்று தீர்மானிக்கப்படுகிறது. **(618)**

**कुड्यादेस्तु जडस्य नैव घटते भानं स्वत: सर्वदा**
**सूर्यादिप्रभया विना क्वचिदपि प्रत्यक्षमेतत् तथा।**
**बुद्ध्यादेरपि न स्वतोऽस्त्यणुरपि स्फूर्ति: विनैवात्मना**
**सोऽयं केवलचिन्मय: श्रुतिमतो भानुर्यथा रुङ्मय: ॥ ६१९ ॥**

**குட்³யாதே³ஸ்து ஜட³ஸ்ய நைவ க⁴டதே பா⁴னம் ஸ்வத: ஸர்வதா³**
**ஸூர்யாதி³ப்ரப⁴யா வினா க்வசித³பி ப்ரத்யக்ஷமேதத் ததா² ।**
**பு³த்³த்⁴யாதே³ரபி ந ஸ்வதோ(அ)ஸ்த்யணுரபி ஸ்பூ²ர்தி: வினைவாத்மனா**
**ஸோ(அ)யம் கேவலசின்மய: ஶ்ருதிமதோ பா⁴னுர்யதா² ருங்மய: ॥ 619 ॥**

| | | |
|---|---|---|
| **जडस्य** | = | ஜடமான, |
| **ஜட³ஸ்ய** | | |
| **कुड्यादेस्तु** | = | சுவர் முதலியவற்றிற்கு, |
| **குட்³யாதே³ஸ்து** | | |

| | | |
|---|---|---|
| **सूर्यादिप्रभया**<br>**ஸூர்யாதி3ப்ரப4யா** | = | ஸூர்யன முதலியவைகளின் ஒளி<br>இல்லாமல், |
| **सर्वदा**<br>**ஸர்வதா3** | = | எப்பொழுதும், |
| **क्वचिदपि**<br>**க்வசித3பி** | = | ஒரு இடத்திலும், |
| **स्वत:**<br>**ஸ்வத:** | = | தானகவே, |
| **भानं**<br>**பா4னம்** | = | பிரகாசிப்பது, |
| **नैव घटते**<br>**நைவ க4டதே** | = | ஏற்படாது, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இது, |
| **प्रत्यक्षं**<br>**ப்ரத்யக்ஷம்** | = | நேரில் கண்டவிஷயம், |
| **तथा**<br>**ததா2** | = | அப்படியே, |
| **बुद्ध्यादेरपि**<br>**பு3த்3த்4யாதே3ரபி** | = | புத்தி முதலியவற்றிற்கும், |
| **विनैव आत्मना**<br>**வினைவ ஆத்மனு** | = | ஆத்மா இல்லாமல், |
| **स्वत:**<br>**ஸ்வத:** | = | தானகவே, |
| **अणुरपि**<br>**அணுரபி** | = | கொஞ்சம் கூட, |
| **स्फूर्ति:**<br>**ஸ்பூ2ர்தி:** | = | பிரகாசம், |
| **नास्ति**<br>**நாஸ்தி** | = | இல்லை, |
| **यथा**<br>**யதா2** | = | எப்படி, |
| **भानु:**<br>**பா4னு:** | = | ஸூர்யன், |
| **रुङ्मय:**<br>**ருங்மய** | = | பிரகாசமயனே (அப்படியே), |

| | | |
|---|---|---|
| सः अयं<br>ஸः அயம் | = | அந்த இந்த ஆத்மாவும், |
| केवलचिन्मयः<br>கேவலசின்மயः | = | சைதன்யத்தை மட்டும் ஸ்வரூபமாகக் கொண்டவனுக, |
| श्रुतिमतः<br>ஶ்ருதிமதः | = | வேதங்களால் கருதப்பட்டிருக்கிறுன். |

ஜடமாயிருக்கும் சுவர் முதலியதிற்கோ எக்காலத்திலும், எவ்விடத்திலும், ஸூர்யன் முதலானதின் பிரகாசமில்லாமல், தாஞகவே பிரகாசம் என்பது ஏற்படவே ஏற்படாது. இது எல்லாருக்கும் பிரத்யக்ஷமாய் நேரில் தெரிந்த விஷயம். அப்படியே புத்தி முதலானதிற்கும், ஆத்மா இல்லாமல் தாஞகவே பிரகாசமென்பது கொஞ்சம் கூடக் கிடையாது. எப்படி ஸூர்யன் பிரகாசமயனாகவேயிருக்கிருரோ, அப்படியே இந்த ஆத்மாவும் தனித்த ஞானமயன் என்று வேதம் மதிக்கிறது. **(619)**

**स्वभासने वाऽन्यपदार्थमासने**
**नार्कः प्रकाशान्तरमीषदिच्छति ।**
**स्वबोधने वाऽप्यहमादिबोधने**
**तथैव चिद्धातुः अयं परात्मा ॥ ६२० ॥**

**ஸ்வபா⁴ஸனே வா(அ)ன்யபதா³ர்த²மாஸனே**
**நார்கः ப்ரகாஶாந்தரமீஷதி³ச்ச²தி ।**
**ஸ்வபோ³த⁴னே வா(அ)ப்யஹமாதி³போ³த⁴னே**
**ததை²வ சித்³தா⁴துः அயம் பராத்மா ॥ 620 ॥**

| | | |
|---|---|---|
| अर्कः<br>அர்கः | = | ஸூர்யன், |
| स्वभासने<br>ஸ்வபா⁴ஸனே | = | தன்ஊன பிரகாசப்படுத்துவதிலோ, |
| अन्यपदार्थमासने वा<br>அன்யபதா³ர்த²மாஸனே வா | = | வேறு பொருள்கஊ பிரகாசப்படுத்துவதிலோ, |
| प्रकाशान्तरं<br>ப்ரகாஶாந்தரம் | = | வேறு ஒளியை, |
| ईषत्<br>ஈஷத் | = | கொஞ்சம் கூட, |
| न इच्छति<br>ந இச்ச²தி | = | அபேக்ஷிக்கிறதில்ஊ, |
| चिद्धातुः<br>சித்³தா⁴துः | = | சைதன்ய ஸ்வரூபஞன, |

| | | |
|---|---|---|
| **अयं परात्मापि** | = | இந்த பரமாத்மாவும், |
| **அயம் பராத்மாபி** | | |
| **स्वबोधने** | = | தான் பிரகாசிப்பதிலோ, |
| **ஸ்வபோ³த⁴னே** | | |
| **अहमादिबोधने वा** | = | அஹங்காரம் முதலியவைகளை பிரகாசப்படுத்து |
| **அஹமாதி³போ³த⁴னே வா** | | வதிலோ, |
| **तथैव** | = | அப்படியே தான், (ஒன்றையும் |
| **ததை²வ** | | எதிர்பார்ப்பதில்லை.) |

தன்னை பிரகாசப்படுத்துவதிலோ வேறு பதார்த்தத்தை பிரகாசப்படுத்துவதிலோ, ஸூர்யன் வேறு பிரகாசத்தை கொஞ்சமேனும் அபேக்ஷிக்கிறதில்லை. அப்படியே இந்த ஞானஸ்வரூபனுன பரமாத்மாவும் தன்னைத் தெரியப்படுத்துவதிலோ அஹங்காரம் முதலியதைத் தெரியும்படி செய்வதிலோ வேறு ஞானத்தை அபேக்ஷிக்கிறதில்லை. **(620)**

**अन्यप्रकाशं न किमप्यपेक्ष्य**
**यतोऽयमाभाति निजात्मनैव ।**
**ततः स्वयंज्योतिरयं चिदात्मा**
**न ह्यात्मभाने परदीप्त्यपेक्षा ॥ ६२१ ॥**

**அன்யப்ரகாஶம் ந கிமப்யபேக்ஷ்ய**
**யதோ(அ)யமாபா⁴தி நிஜாத்மனைவ ।**
**தத꞉ ஸ்வயஞ்ஜ்யோதிரயம் சிதா³த்மா**
**ந ஹ்யாத்மபா⁴னே பரதீ³ப்த்யபேக்ஷா ॥ 621 ॥**

| | | |
|---|---|---|
| **यतः** | = | எந்தக்காரணத்தால், |
| **யத꞉** | | |
| **अयं** | = | இந்த ஆத்மா, |
| **அயம்** | | |
| **अन्यप्रकाशं** | = | வேறு பிரகாசத்தை, |
| **அன்யப்ரகாஶம்** | | |
| **किमपि** | = | கொஞ்சமும், |
| **கிமபி** | | |
| **न अपेक्ष्य** | = | எதிர்பார்க்காமல், |
| **ந அபேக்ஷ்ய** | | |
| **निजात्मनैव** | = | தன் ஸ்வரூபத்தினுலேயே, |
| **நிஜாத்மனைவ** | | |

| | | |
|---|---|---|
| **आभाति** | = | பிரகாசிக்கிருரோ, |
| **ஆபா⁴தி** | | |
| **ततः** | = | ஆகையால், |
| **தத:** | | |
| **अयं** | = | இந்த, |
| **அயம்** | | |
| **चिदात्मा** | = | ஞானரூபியான ஆத்மா, |
| **சிதா³த்மா** | | |
| **स्वयंज्योतिः** | = | தானுகவே பிரகாசிக்கிறவர், |
| **ஸ்வயஞ்ஜ்யோதி:** | | |
| **आत्मभाने** | = | ஆத்மா பிரகாசிப்பதில், |
| **ஆத்மபா⁴னே** | | |
| **परदीप्त्यपेक्षा** | = | வேறு பிரகாசத்தின் அபேக்ஷை, |
| **பரதீ³ப்த்யபேக்ஷா** | | |
| **नहि** | = | இல்லையல்லவா! |
| **நஹி** | | |

வேறு பிரகாசத்தை கொஞ்சமும் அபேக்ஷிக்காமல் தன் ஸ்வரூபத்திஞலேயே இவர் பிரகாசிக்கிருர் என்ற காரணத்திஞல், இந்த ஞான ஸ்வரூபஞன ஆத்மா ஸ்வயம் ஜ்யோதிஸ் (தானே பிரகாசிப்பவர்). தானே பிரகாசிக்கும்போது, வேறு பிரகாசத்தின் அபேக்ஷை கிடையாதல்லவா? **(621)**

**यं न प्रकाशयति किंचिदिनोऽपि चन्द्रः**
**नो विद्युतः किमुत वह्निरयं मिताभः ।**
**यं भान्तमेतमनुभाति जगत्समस्तं**
**सोऽयं स्वयं स्फुरति सर्वदशासु चात्मा ॥ ६२२ ॥**

**யம் ந ப்ரகாஶயதி கிஞ்சிதி³னோ(அ)பி சந்த்³ர:**
**நோ வித்³யுத: கிமுத வஹ்நிரயம் மிதாப⁴: ।**
**யம் பா⁴ந்தமேதமனுபா⁴தி ஜக³த்ஸமஸ்தம்**
**ஸோ(அ)யம் ஸ்வயம் ஸ்பு²ரதி ஸர்வத³ஶாஸு சாத்மா ॥ 622 ॥**

| | | |
|---|---|---|
| **यं** | = | எந்த ஆத்மாவை, |
| **யம்** | | |
| **इनः** | = | ஸூரியனும், |
| **இன:** | | |
| **चन्द्रोपि** | = | சந்திரனும், |
| **சந்த்³ரோபி** | | |

| | | |
|---|---|---|
| **किंचित्** | = | கொஞ்சம் கூட, |
| **கிஞ்சித்** | | |
| **न प्रकाशयति** | = | பிரகாசப்படுத்தாதோ, |
| **ந ப்ரகாஶயதி** | | |
| **विद्युतः** | = | மின்னல்கள், |
| **வித்³யுத:** | | |
| **नो** | = | பிரசாசப்படுத்தாதோ, |
| **நோ** | | |
| **अयं वह्निः** | = | இந்த அக்னி, |
| **அயம் வஹ்னி:** | | |
| **मिताभः** | = | கொஞ்சமான ஒளியுள்ளவன், |
| **மிதாப⁴:** | | |
| **किमुत** | = | இவன் பிரகாசப்படுத்தமாட்டான் என்பது |
| **கிமுத** | | பற்றி சொல்லவேண்டுமா? |
| **भान्तं** | = | பிரகாசிக்கிற, |
| **பா⁴ந்தம்** | | |
| **यं एतं** | = | எந்த இந்த ஆத்மாவை, |
| **யம் ஏதம்** | | |
| **समस्तं जगत्** | = | எல்லா பிரபஞ்சமும், |
| **ஸமஸ்தம் ஜக³த்** | | |
| **अनुभाति** | = | அனுஸரித்து பிரகாசிக்கிறதோ, |
| **அனுபா⁴தி** | | |
| **सोऽयं आत्मा** | = | அந்த இந்த ஆத்மா, |
| **ஸோ(அ)யம் ஆத்மா** | | |
| **सर्वदशासु** | = | எல்லா நிஜலகளிலும், |
| **ஸர்வத³ஶாஸு** | | |
| **स्वयं** | = | தானே, |
| **ஸ்வயம்** | | |
| **स्फुरति** | = | பிரகாசிக்கிறுன். |
| **ஸ்பு²ரதி** | | |

எவரை ஸூர்யன் கொஞ்சமேனும் பிரகாசப்படுத்தாதோ, அப்படியே சந்திரனும், மின்னல்களும் பிரகாசப்படுத்தாதோ, மிகவும் குறைந்த பிரகாசத்துடன் கூடிய இந்த அக்னி பிரகாசப்படுத்தாதென்று சொல்லவேண்டுமா? பிரகாசிக்கிற எந்த இவரை அனுஸரித்து எல்லா உலகமும் பிரகாசிக்கிறதோ, அந்த ஆத்மா எல்லா நிஜலகளிலும் தானே பிரகாசித்துக்கொண்டிருக்கிறுர். **(622)**

**(அவதாரிகை)** மேலால் 9 சுலோகங்களால் ஆத்மா ஆனந்த ஸ்வரூபர் என்பதை விவரிக்கிறார்: -

**आत्मनः सुखरूपत्वादानन्दत्वं स्वलक्षणम् ।**
**परप्रेमास्पदत्वेन सुखरूपत्वमात्मनः ॥ ६२३ ॥**

**ஆத்மனः ஸுக²ரூபத்வாதா³னந்த³த்வம் ஸ்வலக்ஷணம் ।**
**பரப்ரேமாஸ்பத³த்வேன ஸுக²ரூபத்வமாத்மனः ॥ 623 ॥**

**आत्मनः सुखरूपत्वात्** = ஆத்மா ஸுகரூபமாக இருப்பதால்,
**ஆத்மனः ஸுக²ரூபத்வாத்**
**आनन्दत्वं** = ஆநந்தத்தன்மை,
**ஆனந்த³த்வம்**
**स्वलक्षणम्** = ஸ்வரூபலக்ஷணமாகிறது,
**ஸ்வலக்ஷணம்**
**आत्मनः** = ஆத்மா,
**ஆத்மனः**
**परप्रेमास्पदत्वेन** = மேலான பிரீதுக்கு விஷயமாக
**பரப்ரேமாஸ்பத³த்வேன** இருப்பதால்,
**सुखरूपत्वं** = ஸுகரூபமாக இருக்கும் தன்மை இருக்கிறது.
**ஸுக²ரூபத்வம்**

ஆத்மா ஸுக ஸ்வரூபமாயிருப்பதினால் ஆனந்தத்தன்மை ஆத்மாவிற்கு லக்ஷணமாகிறது. ஆத்மா மேலான பிரீதிக்கு விஷயமாயிருத்தலால், அதற்கு ஸுக ஸ்வரூபத்தன்மை. **(623)**

**सुखहेतुषु सर्वेषां प्रीतिः सावधिरीक्ष्यते ।**
**कदाऽपि नावधिः प्रीतेः स्वात्मनि प्राणिनां क्वचित् ॥ ६२४ ॥**

**ஸுக²ஹேதுஷு ஸர்வேஷாம் ப்ரீதிः ஸாவதி⁴ரீக்ஷ்யதே ।**
**கதா³(அ)பி நாவதி⁴ः ப்ரீதேः ஸ்வாத்மனி ப்ராணினாம் க்வசித் ॥ 624 ॥**

**सर्वेषां** = எல்லோருக்கும்,
**ஸர்வேஷாம்**
**सुखहेतुषु** = ஸுகத்திற்கு ஸாதனமான வஸ்துக்களில்,
**ஸுக²ஹேதுஷு**
**प्रीतिः** = ப்ரீதியானது,
**ப்ரீதிः**

**सावधिः** = எல்லையுள்ளதாக,

**ஸாவதி⁴:**

**ईक्ष्यते** = காணப்படுகிறது,

**ஈக்ஷ்யதே**

**प्राणिनां** = பிராணிகளுக்கு,

**ப்ராணிநாம்**

**कदापि** = ஒருபோதும்,

**கதா³பி**

**क्वचित्** = ஒரு இடத்திலும்,

**க்வசித்**

**स्वात्मनि** = தனது ஆத்மாவில் உள்ள,

**ஸ்வாத்மனி**

**प्रीतेः** = ப்ரீதிக்கு,

**ப்ரீதே:**

**अवधिः** = எல்லை,

**அவதி⁴:**

**न** = இல்லை.

**ந**

எல்லாருக்குமே ஸுகத்திற்கு ஸாதனமாயிருக்கும் பதார்த்தங்களில் உள்ள பிரீதி எல்லையுள்ளதாகவே காணப்படுகிறது. பிராணிகளுக்கு தன்னிடத்திலுள்ள பிரீதிக்கு மாத்திரம் எப்பொழுதாவது எங்கேயாவது எல்லையென்பது கிடையாது. **(624)**

**क्षीणेन्द्रियस्य जीर्णस्य संप्राप्तोन्क्रमणस्य वा ।**
**अस्ति जीवितुमेवाशा स्वात्मा प्रियतमो यतः ॥ ६२५ ॥**

**க்ஷீணேந்த்³ரியஸ்ய ஜீர்ணஸ்ய ஸம்ப்ராப்தோன்க்ரமணஸ்ய வா ।**
**அஸ்தி ஜீவிதுமேவாஶா ஸ்வாத்மா ப்ரியதமோ யத: ॥ 625 ॥**

**यतः** = எதனால்,

**யத:**

**स्वात्मा** = தனது ஆத்மா,

**ஸ்வாத்மா**

**प्रियतमः** = மிகுந்த பிரியமானதோ (அதனால்),

**ப்ரியதம:**

**क्षीणेन्द्रियस्य** = இந்திரிய பலம் குறைந்தவனுக்கோ,

**க்ஷீணேந்த்³ரியஸ்ய**

**जीर्णस्य** = ஜரையடைந்தவனுக்கோ,

**ஜீர்ணஸ்ய**

**संप्राप्तोन्क्रमणस्य वा** = பிராணன் வெளியே போகும் நிலையை

**ஸம்ப்ராப்தோன்க்ரமணஸ்ய வா** அடைந்தவனுக்கோ,

**जीवितुमेव** = வாழ்வதற்குத்தான்,

**ஜீவிதுமேவ**

**आशा** = ஆசை,

**ஆஶா**

**अस्ति** = இருக்கிறது

**அஸ்தி**

தன் ஆத்மா மிகவும் பிரியமாய் இருப்பதினால்தான், இந்திரியங்கள் சக்தி குறைந்து, ஜீர்ணமாகி, மரணம் நெருங்கியிருப்பவனுக்கும் ஜீவித்து இருக்கவேண்டுமென்ற ஆசை இருந்துகொண்டேயிருக்கிறது. **(625)**

**आत्मान्तः परमप्रेमास्पदः सर्वशरीरिणाम् ।**
**यस्य शेपतया सर्वमुपादेयत्वमृच्छति ॥ ६२६ ॥**

**ஆத்மாந்த: பரமப்ரேமாஸ்பத³: ஸர்வஶரீரிணாம் ।**
**யஸ்ய ஶேபதயா ஸர்வமுபாதே³யத்வம்ருச்ச²தி ॥ 626 ॥**

**अत:** = ஆகையால்,

**அத:**

**सर्वशरीरिणाम्** = சரீரமுள்ளவர்கள் எல்லோருக்கும்,

**ஸர்வஶரீரிணாம்**

**आत्मा** = ஆத்மா,

**ஆத்மா**

**परमप्रेमास्पद:** = மேலான ப்ரீதிக்கு விஷயமாக இருக்கிறது,

**பரமப்ரேமாஸ்பத³:**

**यस्य** = எந்த ஆத்மாவிற்கு,

**யஸ்ய**

**शेपतया** = அங்கமாயிருப்பதால்,

**ஶேபதயா**

**सर्वं** = எல்லாம்,

**ஸர்வம்**

**उपादेयत्वं** = வேண்டப்படும் தன்மையை,

**உபாதே³யத்வம்**

**ऋच्छति** = அடைகிறது.

**ருச்ச²தி**

ஆகையினால் சரீரமுள்ளவர்கள் எல்லோருக்கும் ஆத்மா தான் மேலான பிரீதிக்குப் பாத்திரம். அதற்கு அங்கமாய் இருக்கும் தன்மையினால்தான் எல்லாம் வேண்டப்படும் தன்மையை (எடுத்துக்கொள்ளக்கூடிய தன்மையை) அடைகிறது. **(626)**

**एष एव प्रियतमः पुत्रादपि धनादपि ।**
**अन्यस्मादपि सर्वस्मादात्माऽयं परमान्तरः ॥ ६२७ ॥**

**ஏஷ ஏவ ப்ரியதமః புத்ராத³பி த⁴நாத³பி ।**
**அன்யஸ்மாத³பி ஸர்வஸ்மாதா³த்மா(அ)யம் பரமாந்தரః ॥ 627 ॥**

**एष एव** = இந்த ஆத்மா தான்,

**ஏஷ ஏவ**

**पुत्रादपि** = புத்திரனைக் காட்டிலும்,

**புத்ராத³பி**

**धनादपि** = பணத்தைக்காட்டிலும்,

**த⁴நாத³பி**

**अन्यस्मात्** = மற்ற,

**அன்யஸ்மாத்**

**सर्वस्मादपि** = எல்லாவற்றைக்காட்டிலும்,

**ஸர்வஸ்மாத³பி**

**प्रियतमः** = மிகவும் பிரியமானது,

**ப்ரியதமః**

**अयं आत्मा** = இந்த ஆத்மா,

**அயம் ஆத்மா**

**परमान्तरः** = எல்லாவற்றிற்கும் உள்ளே இருப்பது.

**பரமாந்தரః**

இந்த ஆத்மாதான் புத்திரனையும்விட, செல்வத்தையும்விட மேலான பிரிய மான பதார்த்தம் வேறு எல்லாவற்றையும்விட பிரியமானது. இந்த ஆத்மா மிகவும் உள்ளேயுள்ளது. **(627)**

**प्रियत्वेन मतं यत्तु तत्सदा न प्रियं नृणाम् ।**
**विपत्तावपि संपत्तौ यथाऽऽत्मा न तथाऽपरः ॥ ६२८ ॥**

**ப்ரியத்வேன மதம் யத்து தத்ஸதா³ ந ப்ரியம் ந்ருணாம் ।**
**விபத்தாவபி ஸம்பத்தௌ யதா²(ஆ)த்மா ந ததா²(அ)பரః ॥ 628 ॥**

| | | |
|---|---|---|
| **यत्** | = | எந்த வஸ்து, |
| யத் | | |
| **नृणां** | = | மனிதர்களுக்கு, |
| ந்ருணாம் | | |
| **प्रियत्वेन** | = | பிரியமாக, |
| ப்ரியத்வேன | | |
| **मतं** | = | கருதப்பட்டிருக்கிறதோ, |
| மதம் | | |
| **तत्** | = | அது, |
| தத் | | |
| **सदा** | = | எப்பொழுதும், |
| ஸதா³ | | |
| **न प्रियं** | = | பிரியமாக இருப்பதில்லை, |
| ந ப்ரியம் | | |
| **विपत्तौ** | = | ஆபத்திலும், |
| விபத்தௌ | | |
| **संपत्तावपि** | = | ஸம்பத்திலும், |
| ஸம்பத்தாவபி | | |
| **आत्मा** | = | ஆத்மா, |
| ஆத்மா | | |
| **यथा** | = | எப்படி பிரியமோ, |
| யதா² | | |
| **तथा** | = | அப்படி, |
| ததா² | | |
| **अपर:** | = | வேறு வஸ்து, |
| அபரꞏ | | |
| **न** | = | பிரியமில்லை. |
| ந | | |

எந்த பதார்த்தம் பிரியமென்று எண்ணப்படுகிறதோ அது மனிதர்களுக்கு எப்பொழுதும் பிரியமாக இல்லை. ஆத்மா எப்படி ஆபத்துக்காலத்திலும் ஸம்பத்துக் காலத்திலும் பிரியமாகவே இருக்கிறதோ, அப்படி வேறு பதார்த்தம் இருப்பதில்லை.

**(628)**

**आत्मा खलु प्रियतमो सुभृतां यदर्था**
**भार्यात्मजाप्तगृहवित्तमुखाः पदार्थाः ।**
**वाणिज्यकर्षणगवावनराज सेवा-**
**भैषज्यकप्रभृतयो विविधाः क्रियाश्च ॥ ६२९ ॥**

**ஆத்மா க²லு ப்ரியதமோ ѕ ஸுப்⁴ருதாம் யத³ர்தா²**
**பா⁴ர்யாத்மஜாப்தக்³ருஹவித்தமுகா²: பதா³ர்தா²: ।**
**வாணிஜ்யகர்ஷணக³வாவனராஜ ஸேவா-**
**பை⁴ஷஜ்யகப்ரப்⁴ருதயோ விவிதா⁴: க்ரியாஶ்ச ॥ 629 ॥**

| | | |
|---|---|---|
| **भार्यात्मजाप्त**<br>**பா⁴ர்யாத்மஜாப்த** | = | மனைவி, புத்திரன், நண்பன், |
| **गृहवित्तमुखाः**<br>**க்³ருஹவித்தமுகா²:** | = | வீடு, பணம் முதலான, |
| **पदार्थाः**<br>**பதா³ர்தா²:** | = | பொருள்களும், |
| **वाणिज्य**<br>**வாணிஜ்ய** | = | வியாபாரம், |
| **कर्षण**<br>**கர்ஷண** | = | உழவு, |
| **गवावन**<br>**க³வாவன** | = | கோஸம்ரக்ஷணம், |
| **राजसेवा**<br>**ராஜஸேவா** | = | ராஜஸேவை, |
| **भैषज्यकप्रभृतयः**<br>**பை⁴ஷஜ்யகப்ரப்⁴ருதய:** | = | வைத்யம் முதலான, |
| **विविधाः**<br>**விவிதா⁴:** | = | பலவிதமான, |
| **क्रियाश्च**<br>**க்ரியாஶ்ச** | = | செய்கைகளும், |
| **यदर्थाः**<br>**யத³ர்தா²** | = | எந்த ஆத்மாவுக்காக உள்ளவையோ (அந்த), |
| **आत्मा खलु**<br>**ஆத்மா க²லு** | = | ஆத்மா அல்லவா, |
| **असुभृतां**<br>**அஸுப்⁴ருதாம்** | | பிராணிகளுக்கு, |

**प्रियतमः** = மிகவும் பிரியமானது.
**ப்ரியதமஃ**

பார்யை, புத்திரன், மித்ரன், வீடு, பணம் முதலான பதார்த்தங்களும், வியாபாரம், உழுதல், கோஸம்ரக்ஷணம், ராஜஸேவை, வைத்தியம் முதலான பலவித செய்கைகளும் எதினுடைய பிரயோஜனத்திற்காகவோ, அந்த ஆத்மா பிராணனை தரிக்கும் யாவருக்கும் உத்தமமான பிரியமான வஸ்துவல்லவா? **(629)**

## प्रवृत्तिश्च निवृत्तिश्च यच्च यावच्च चेष्टितम् ।
## आत्मार्थमेव नान्यार्थं नातः प्रियतमः परः ॥ ६३० ॥

**ப்ரவ்ருத்திஸ்ச நிவ்ருத்திஸ்ச யச்ச யாவச்ச சேஷ்டிதம் ।**
**ஆத்மார்த²மேவ நான்யார்த²ம் நாதஃ ப்ரியதமஃ பரஃ ॥ 630 ॥**

**प्रवृत्तिश्च** = ப்ரவ்ருத்தியும்,
**ப்ரவ்ருத்திஸ்ச**
**निवृत्तिश्च** = நிவ்ருத்தியும்,
**நிவ்ருத்திஸ்ச**
**यच्च यावच्च चेष्टितम्** = எல்லா செய்கையும்,
**யச்ச யாவச்ச சேஷ்டிதம்**
**आत्मार्थमेव** = தனக்காகவே தான்,
**ஆத்மார்த²மேவ**
**न अन्यार्थं** = பிறருக்காகஅல்ல,
**ந அன்யார்த²ம்**
**अतः** = இந்த ஆத்மாவைக்காட்டிலும்,
**அதஃ**
**परः** = மேலான,
**பரஃ**
**प्रियतमः** = மிகவும் பிரியமானது,
**ப்ரியதமஃ**
**न** = இல்லை.
**ந**

காரியத்தைச் செய்வதும், செய்யாமலிருப்பதும், மற்றும் எல்லாச்செய்கையும் ஆத்மாவிற்காகத்தான் வேறு எதற்காகவும் இல்லை. இதைவிட மேலான பிரியமானது வேறு எதுவும் கிடையாது. **(630)**

**तस्मादात्मा केवलानन्दरूपो**
**यः सर्वस्माद्वस्तुनः प्रेष्ठ उक्तः ।**
**यो वा अस्मान्मन्यतेऽन्यं प्रियं यं**
**सोऽयं तस्माच्छोकमेवानुभुङ्क्ते ॥ ६३१ ॥**

**தஸ்மாதா³த்மா கேவலானந்த³ரூபோ**
**யः ஸர்வஸ்மாத்³வஸ்துனः ப்ரேஷ்ட² உக்தः ।**
**யோ வா அஸ்மான்மன்யதே(அ)ன்யம் ப்ரியம் யம்**
**ஸோ(அ)யம் தஸ்மாச்சோ²கமேவானுபு⁴ங்க்தே ॥ 631 ॥**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**

**यः** = எது,
**யः**

**सर्वस्मात् वस्तुनः** = எல்லா வஸ்துவைக்காட்டிலும்,
**ஸர்வஸ்மாத் வஸ்துனः**

**प्रेष्ठः** = மிகவும் பிரியமாக,
**ப்ரேஷ்ட²:**

**उक्तः** = சொல்லப்பட்டதோ,
**உக்தः**

**आत्मा** = இந்த ஆத்மா,
**ஆத்மா**

**केवलानन्दरूपः** = சுத்த ஆனந்தஸ்வரூபம்,
**கேவலானந்த³ரூபः**

**यो वा** = எவன் ஒருவன்,
**யோ வா**

**अस्मात्** = இந்த ஆத்மாவைக்காட்டிலும்,
**அஸ்மாத்**

**अन्यं** = வேறான,
**அன்யம்**

**यं** = எதை,
**யம்**

**प्रियं** = பிரியமாக,
**ப்ரியம்**

**मन्यते** = எண்ணுகிறானோ,
**மன்யதே**

| | | |
|---|---|---|
| **सोऽयं**<br>**ஸோ(அ)யம்** | = | அந்த இவன், |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | அதினுல், |
| **शोकमेव**<br>**ஶோகமேவ** | = | துன்பத்தையே, |
| **अनुभुङ्क्ते**<br>**அனுபு⁴ங்க்தே** | = | அனுபவிக்கிருன். |

ஆகையால் எவர் எல்லா வஸ்துக்களையும்விட மிகப் பிரியமென்று சொல்லப் பட்டதோ, அந்த ஆத்மா சுத்தமான ஆனந்த ஸ்வரூபர். எவன் ஒருவன் இந்த ஆத்மா வைக் காட்டிலும் வேறுன எந்தப்பொருளை பிரியமாக நினைக்கிருனே அவன் அதிலிருந்து துன்பத்தைத்தான் அனுபவிப்பான் (பிருஹதாரண்யக உபநிஷத்தில் முதலாவது அத்யாயம் 4 - வது பிராஹ்மணம் 8 - வது மந்திரத்தில் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது. **(631)**

(**அவதாரிகை**) இவ்விதம் குருவானவர் ஆத்மா ஆனந்தஸ்வரூபம் என்று நிர்வசனம் செய்ததிலிருந்து ஆனந்தம் வேறு, ஆனத்தத்தை அனுபவிக்கிறவன் வேறு, என்றிருந்தால்தானே ஆனத்தத்தை அனுபவிக்கமுடியும். கல்கண்டு வேறு அதை ருசிப்பவன் வேறு, என்றிருந்தால் தானே கல்கண்டை ருசிக்க முடியும் என்று சிஷ்யனுக்குத் தோன்றி, ஆத்மாவின் ஸ்வருபமே ஆனந்தமாயிருந்தால் ஆனந்தத் தின் அனுபவம் ஆத்மாவிற்கு எப்படி வரும். கல்கண்டு தித்திப்பாயிருக்கிறதென்றுல் அந்த ருசியை கல்கண்டே எப்படி அனுபவிக்க முடியும் என்று ஒருவினிடம் தன் ஸந்தேகத்தைத் தெரிவித்து தெளிவுபடுத்த வேண்டுமென்று பிரார்த்திக்கிருன்: -

**शिष्यः –**
**अपरः क्रियते प्रश्नो मयायं क्षम्यतां प्रभो ।**
**अज्ञवागपराधाय कल्पते न महात्मनाम् ॥ ६३२ ॥**

**ஶிஷ்ய: -**
**அபர: க்ரியதே ப்ரஶ்னோ மயாயம் க்ஷம்யதாம் ப்ரபோ⁴ ।**
**அஜ்ஞவாக³பராதா⁴ய கல்பதே ந மஹாத்மனும் ॥ 632 ॥**

| | | |
|---|---|---|
| **प्रभो**<br>**ப்ரபோ⁴** | = | ப்ரபுவே, |
| **अपरः**<br>**அபர:** | = | வேறொரு, |
| **अयं**<br>**அயம்** | = | இந்த, |

| | | |
|---|---|---|
| **प्रश्नः** ப்ரஶ்னः | = | கேள்வி, |
| **मया** மயா | = | என்னுல், |
| **क्रियते** க்ரியதே | = | செய்யப்படுகிறது, |
| **क्षम्यतां** க்ஷம்யதாம் | = | பொறுத்துக் கொள்ளவேணும், |
| **अज्ञवाक्** அஜ்ஞவாக் | = | அறியாதவனின் வார்த்தை, |
| **महात्मनाम्** மஹாத்மனும் | = | பெரியோர்கள் விஷயமான, |
| **अपराधाय** அபராதா⁴ய | = | அபராதத்தின் பொருட்டு, |
| **न कल्पते** ந கல்பதே | = | ஸமர்த்தமாகாது. |

வேறு ஒரு இந்தக் கேள்வி என்னுல் கேட்கப்படுகிறது. ஹே பிரபோ, மன்னிக்கவேண்டும். விஷயம் தெரியாதவனுடைய வார்த்தை பெரியோர்களின் அபராதத்தின் பொருட்டு ஏற்படாது. **(632)**

**आत्मान्यः सुखमन्यच्च नात्मनः सुखरूपता ।**
**आत्मनः सुखमाशास्यं यतते सकलो जनः ॥ ६३३ ॥**

**ஆத்மான்யः ஸுக²மன்யச்ச நாத்மனः ஸுக²ரூபதா ।**
**ஆத்மனः ஸுக²மாஶாஸ்யம் யததே ஸகலோ ஜனः ॥ 633 ॥**

**आत्मनः सुखरूपत्वे प्रयत्नः किमु देहिनाम् ।**
**एष मे संशयः स्वामिन् कृपयैव निरस्यताम् ॥ ६३४ ॥**

**ஆத்மனः ஸுக²ரூபத்வே ப்ரயத்னः கிமு தே³ஹினாம் ।**
**ஏஷ மே ஸம்ஶயः ஸ்வாமின் க்ருபயைவ நிரஸ்யதாம் ॥ 634 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मा** ஆத்மா | = | ஆத்மா, |
| **अन्यः** அன்யः | = | வேறு, |
| **सुखं च** ஸுக²ம் ச | = | ஸுகமும், |

| | | |
|---|---|---|
| अन्यत् | = | வேறு, |
| அன்யத் | | |
| आत्मन: | = | ஆத்மாவிற்கு, |
| ஆத்மன꞉ | | |
| सुखरूपता | = | ஸுகமாக இருக்கும் தன்மை, |
| ஸுக²ரூபதா | | |
| न | = | கிடையாது, |
| ந | | |
| आत्मन: | = | ஆத்மாவிற்கு, |
| ஆத்மன꞉ | | |
| सुखं | = | ஸுகம், |
| ஸுக²ம் | | |
| आशास्यं | = | விரும்பத்தக்கது, (அதை அடைவதற்காகவே) |
| ஆஶாஸ்யம் | | |
| सकलो जन: | = | எல்லா மனிதனும், |
| ஸகலோ ஜன꞉ | | |
| यतते | = | முயறச்சிக்கறுன், |
| யததே | | |
| आत्मन: | = | ஆத்மாவுக்கு, |
| ஆத்மன꞉ | | |
| सुखरूपत्वे | = | ஸுகஸ்வரூபத்தன்மை இருக்குமாகில், |
| ஸுக²ரூபத்வே | | |
| देहिनाम् | = | மனிதர்களுக்கு, |
| தே³ஹிநாம் | | |
| प्रयत्न: किमु | = | முயற்சி ஏன்? |
| ப்ரயத்ன꞉ கிமு | | |
| स्वामिन् | = | ஸ்வாமியே! |
| ஸ்வாமின் | | |
| मे | = | என்னுடைய, |
| மே | | |
| एष: | = | இந்த, |
| ஏஷ꞉ | | |
| संशय: | = | ஸந்தேஹம், |
| ஸம்ஶய꞉ | | |
| कृपयैव | = | தயவினுலேயே, |
| க்ருபயைவ | | |

**निरस्यताम्** = போக்கப்பட வேணும்.

**நிரஸ்யதாம்**

ஆத்மா வேறு, ஸுகம் வேறு ஆக்மா ஸுகஸ்வரூபமாயிருக்க முடியாது. ஆத்மாற்கு ஸுகம் வேண்டப்படும் பதார்த்தம். (அதற்காகவே) எல்லா ஜனங்களும் பிரயத்தினம் செய்கிறுர்கள். ஆத்மாவே ஸுக ஸ்வரூபமாயிருந்துவிட்டால் ஜீவர்களின் பிரயத்தினம் எதற்காக? ஹே ஸ்வாமின், என்னுடைய இந்த ஸம்சயம் தங்கள் கிருபையினுலேயே போககடிக்கப்படட்டும். **(633-634)**

**श्रीगुरुः -**

**आनन्दरूपमात्मानमज्ञात्वैव पृथग्जनः ।**

**बहिःसुखाय यतते न तु कश्चिद्विदन्बुधः ॥ ६३५ ॥**

**ஶ்ரீகு³ரு: -**

**ஆனந்த³ரூபமாத்மானமஜ்ஞாத்வைவ ப்ருத²க்³ஜன: ।**

**ப³ஹி:ஸுகா²ய யததே ந து கஶ்சித்³வித³ன்பு³த⁴: ॥ 635 ॥**

**आनन्दरूपं** = ஆனந்த ஸ்வரூபனுன,

**ஆனந்த³ரூபம்**

**आत्मानं** = ஆத்மாவை,

**ஆத்மானம்**

**अमज्ञात्वैव** = தெரிந்துகொள்ளாமலேயே,

**அமஜ்ஞாத்வைவ**

**पृथग्जनः** = பாமரமனிதன்

**ப்ருத²க்³ஜன:**

**बहिः** = வெளியே,

**ப³ஹி:**

**सुखाय** = ஸுகத்திற்காக,

**ஸுகா²ய**

**यतते** = முயற்சிக்கிறுன்,

**யததே**

**विदन्** = தெரிந்துகொண்ட,

**வித³ன்**

**बुधः कश्चित् तु** = புத்திசாலி ஒருவன் கூட,

**பு³த⁴: கஶ்சித் து**

**न** = முயற்சிக்கமாட்டான்.

**ந**

ஆத்மாவை ஆனந்த ஸ்வரூபனுக அறியாததினுலேயே ஸாமான்ய ஜனங்கள் வெளியில் ஸுகத்தின் பொருட்டு பிரயத்தினம் செய்கிருர்கள். விஷயம் தெரிந்த அறிவாளியாகும் பிரயத்தினம் செய்வதில்ஐல. **(635)**

**अज्ञात्वैव हि निक्षेप भिक्षामटति दुर्मतिः ।**
**स्ववेश्मनि निधि ज्ञात्वा कोनु मिक्षामटेत् सुधीः ॥ ६३६ ॥**

**அஜ்ஞாத்வைவ ஹி நிக்ஷேபம் பி⁴க்ஷாமடதி து³ர்மதிः।**
**ஸ்வவேஶ்மனி நிதி⁴ம் ஜ்ஞாத்வா கோ நு பி⁴க்ஷாமடேத்ஸுதீ⁴ः ॥ 636 ॥**

**निक्षेप** = புதையஐல,
**நிக்ஷேபம்**
**अज्ञात्वैव** = அறியாமலே தான்,
**அஜ்ஞாத்வைவ**
**दुर्मतिः** = புத்திகெட்டவன்,
**து³ர்மதிः**
**भिक्षां अटति** = பிக்ஷாடனம் செய்கிறுன்,
**பி⁴க்ஷாம் அடதி**
**स्ववेश्मनि** = தன் வீட்டில்,
**ஸ்வவேஶ்மனி**
**निधि** = புதையஐல,
**நிதி⁴ம்**
**ज्ञात्वा** = அறிந்து,
**ஜ்ஞாத்வா**
**सुधीः** = நல்ல புத்தியுள்ள,
**ஸுதீ⁴ः**
**कोनु** = எவன் தான்,
**கோ நு**
**मिक्षां अटेत्** = பிக்ஷாடனம் செய்வான்?
**மிக்ஷாம் அடேத்**

புதையலிருப்பதைத் தெரிந்து கொள்ளாமலிருப்பதினுல் தான் புத்திகெட்டு பிச்சையெடுக்க அஐலகிறுன். தன் வீட்டில் நிதி இருக்கிறதென்று தெரிந்து, நல்ல புத்தியுள்ளவன் எவனுவது பிச்சையெடுக்க அஐலவானு? **(636)**

**स्थूलं च सूक्ष्मं च वपुः स्वभावतो**
**दुःखात्मकं स्वात्मतया गृहीत्वा ।**
**विस्मृत्य च स्वं सुखरूपं आत्मनः**
**दुःखप्रदेभ्यः सुखं अज्ञ इच्छति ॥ ६३७ ॥**

**ஸ்தூ²லம் ச ஸூக்ஷ்மம் ச வபு꞉ ஸ்வபா⁴வதோ**
**து³꞉கா²த்மகம் ஸ்வாத்மதயா க்³ருஹீத்வா ।**
**விஸ்ம்ருத்ய ச ஸ்வம் ஸுக²ரூபம் ஆத்மன꞉**
**து³꞉க²ப்ரதே³ப்⁴ய꞉ ஸுக²ம் அஜ்ஞ இச்ச²தி ॥ 637 ॥**

| | | |
|---|---|---|
| **स्वभावत:** <br> **ஸ்வபா⁴வத꞉** | = | இயற்கையாகவே, |
| **दु:खात्मकं** <br> **து³꞉கா²த்மகம்** | = | துக்க ஸ்வருபமான, |
| **स्थूलं च सूक्ष्मं च वपु:** <br> **ஸ்தூ²லம் ச ஸூக்ஷ்மம் ச வபு꞉** | = | ஸ்தூல சரீரத்தையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும், |
| **स्वात्मतया** <br> **ஸ்வாத்மதயா** | = | தனது ஆத்மாவாக, |
| **गृहीत्वा** <br> **க்³ருஹீத்வா** | = | எண்ணிக்கொண்டும், |
| **सुखरूपं** <br> **ஸுக²ரூபம்** | = | ஸுகரூபமான, |
| **आत्मन:** <br> **ஆத்மன꞉** | = | ஆத்மாவின், |
| **स्वं** <br> **ஸ்வம்** | = | ஸ்வரூபத்தை, |
| **विस्मृत्य च** <br> **விஸ்ம்ருத்ய ச** | = | மறந்தும், |
| **अज्ञ:** <br> **அஜ்ஞ꞉** | = | அறிவில்லாதவன், |
| **दु:खप्रदेभ्य:** <br> **து³꞉க²ப்ரதே³ப்⁴ய꞉** | = | துக்கத்தைக் கொடுக்கும் பொருள்களிலிருந்து, |
| **सुखं** <br> **ஸுக²ம்** | = | ஸுகத்தை, |
| **इच्छति** <br> **இச்ச²தி** | = | விரும்புகிறுன். |

இயற்கையாகவே துக்க ஸ்வருபமாயிருக்கும் ஸ்தூல சரீரத்தையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும் தன் ஆத்மாவாக நினைத்துக்கொண்டு, ஸுகரூபமான ஆத்மாவின் ஸ்வரூபத்தை மறந்துவிட்டு துக்கத்தைக்கொடுக்கக்கூடிய பதார்த்தங்களிலிருந்து ஸுகத்தையடைய ஞானமில்லாதவன் விரும்புகிறுன். **(637)**

**न हि दुःखप्रदं वस्तु सुखं दातुं समर्हति ।**
**किं विषं पिबतो जन्तोरमृतत्वं प्रयच्छति ॥ ६३८ ॥**

**ந ஹி து³:க²ப்ரத³ம் வஸ்து ஸுக²ம் தா³தும் ஸமர்ஹதி ।**
**கிம் விஷம் பிப³தோ ஜந்தோரம்ருதத்வம் ப்ரயச்ச²தி ॥ 638 ॥**

| | | |
|---|---|---|
| **दुःखप्रदं** துª:க²ப்ரத³ம் | = | துக்கத்தைக் கொடுக்கிற, |
| **वस्तु** வஸ்து | = | பொருள், |
| **सुखं** ஸுக²ம் | = | ஸுகத்தை, |
| **दातुं** தா³தும் | = | கொடுப்பதற்கு, |
| **न हि समर्हति** ந ஹி ஸமர்ஹதி | = | தகுதியுள்ள தாகாதல்லவா! |
| **विषं** விஷம் | = | விஷமானது, |
| **पिबतः** பிப³த: | = | குடிக்கிற, |
| **जन्तोः** ஜந்தோ: | = | பிராணிக்கு, |
| **अमृतत्वं** அம்ருதத்வம் | = | சாகாத்தன்மையை, |
| **किं प्रयच्छति** கிம் ப்ரயச்ச²தி | = | கொடுக்கிறதா? (இல்லை.) |

துக்கத்தைக்கொடுக்கும் வஸ்து ஸுகத்தைக் கொடுக்க யோக்கியதையற்ற தல்லவா? விஷத்தை சாப்பிடும் பிராணிக்கு அந்த விஷம் சாகாத்தன்மையைக் கொடுக்குமா? **(638)**

**आत्मान्यः सुखमन्यच्चेत्येवं निश्चित्य पामरः।**
**बहिःसुखाय यतते सत्यमेव न संशयः ॥ ६३९ ॥**

**ஆத்மான்ய: ஸுக²மன்யச்சேத்யேவம் நிஶ்சித்ய பாமர:।**
**ப³ஹி:ஸுகா²ய யததே ஸத்யமேவ ந ஸம்ஶய: ॥ 639 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मा अन्यः** ஆத்மா அன்ய: | = | ஆத்மா வேறு, |

| | | |
|---|---|---|
| **सुखं च** ஸுக²ம் ச | = | ஸுகமும், |
| **अन्यत्** அன்யத் | = | வேறு, |
| **इत्येवं** இத்யேவம் | = | என்று இவ்வாறு, |
| **निश्चित्य** நிஶ்சித்ய | = | தீர்மானித்து, |
| **पामरः** பாமரः | = | பாமரன், |
| **सुखाय** ஸுகா²ய | = | ஸுகத்தின் பொருட்டு, |
| **बहिः** ப³ஹிः | = | வெளியிலே, |
| **यतते** யததே | = | முயற்சிக்கிறுன், |
| **सत्यमेव** ஸத்யமேவ | = | இது உண்மை தான், |
| **न संशयः** ந ஸம்ஶயः | = | ஸந்தேஹமில்லை. |

ஆத்மா வேறு, ஸுகம் வேறு, என்றிவ்விதம் தீர்மானித்துக் கொண்டு பாமர ஜனர் ஸுகத்திற்காக வெளியில் பிரயத்தினம் செய்கிறது (என்று நீ சொன்னது) வாஸ்தவம் தான், ஸந்தேகமில்லை. **(639)**

(**அவதாரிகை**) ஸுகஸாதனமென்று வெளியில் தேடியலைந்து விஷயங்களை அடைந்து அனுபவிக்கப்படும் ஸுகமும் வாஸ்தவத்தில் வெளிப்பதார்த்தத்தைச் சேர்ந்ததில்லை. அந்த விஷயஸுகம் ஆத்ம ஆனந்தத்தின் பிரதிபிம்பம்தான் என்பதை எடுத்துக்காட்டுகிறுர்: -

**इष्टस्य वस्तुनो ध्यानदर्शनाद्युपभुक्तिषु ।**
**प्रतीयते य आनन्दः सर्वेषामिह देहिनाम् ॥ ६४० ॥**

**இஷ்டஸ்ய வஸ்துனோ த்⁴யானத³ர்ஶநாத்³யுபபு⁴க்திஷு ।**
**ப்ரதீயதே ய ஆனந்த³ः ஸர்வேஷாமிஹ தே³ஹினும் ॥ 640 ॥**

**स वस्तुधर्मो नो यस्मात् मनस्येवोपलभ्यते ।**
**वस्तुधर्मस्य मनसि कथं स्यादुपलम्भनम् ॥ ६४१ ॥**

**ஸ வஸ்துத⁴ர்மோ நோ யஸ்மாத் மனஸ்யேவோபலப்⁴யதே ।**
**வஸ்துத⁴ர்மஸ்ய மனஸி கத²ம் ஸ்யாது³பலம்ப⁴னம் ॥ 641 ॥**

| | | |
|---|---|---|
| **इह** इஹ | = | இங்கு, |
| **सर्वेषां देहिनां** ஸர்வேஷாம் தே³ஹினும் | = | எல்லா பிராணிகளுக்கும், |
| **इष्टस्य** இஷ்டஸ்ய | = | ஆசைப்பட்ட, |
| **वस्तुनः** வஸ்துனஃ | = | பொருளின், |
| **ध्यानदर्शनाद्युपभुक्तिषु** த்⁴யானத³ர்ஶநாத்³யுபபு⁴க்திஷு | = | த்யானம், பார்த்தல் முதலிய போகங்களில், |
| **यः** ய: | = | எந்த, |
| **आनन्दः** ஆனந்த³ஃ | = | ஆநந்தம், |
| **प्रतीयते** ப்ரதீயதே | = | தோன்றுகிறதோ, |
| **सः** ஸ: | = | அது, |
| **नो वस्तुधर्मो** நோ வஸ்துத⁴ர்மோ | = | (அந்த) பொருளின் தர்மமல்ல, |
| **यस्मात्** யஸ்மாத் | = | ஏனெனில், |
| **मनस्येव** மனஸ்யேவ | = | மனதில் தானே, |
| **उपलभ्यते** உபலப்⁴யதே | = | காணப்படுகிறது, |
| **वस्तुधर्मस्य** வஸ்துத⁴ர்மஸ்ய | = | வஸ்துவின் ஸ்வபாவத்திற்கு, |
| **मनसि** மனஸி | = | மனதில், |
| **उपलम्भनं** உபலம்ப⁴னம் | = | தோன்றுதல், |
| **कथं स्यात्** கத²ம் ஸ்யாத் | = | எப்படி ஏற்படும்? |

ஆசைப்படுகிற வஸ்து ஸர்பந்தமான தியானம், தர்சனம் போகங்களில் எல்லா பிராணிகளுக்கும் இங்கே தெரிகிறதே, அந்த ஆனந்தம் அந்த வஸ்துவின் தர்ம மில்ஐல, ஏனென்றுல் அந்த ஆனந்தத்தின் உணர்ச்சி மனஸில் தான் காணப்படுகிறது. வஸ்துவின் தர்மத்திற்கு மனஸில் உணர்ச்சி எப்படி ஏற்படும்? **(640-641)**

**अन्यत्र त्वन्यधर्माणामुपलम्भो न दृश्यते ।**
**तस्मात् वस्तुधर्मोऽयमानन्दस्तु कदाचन ॥ ६४२ ॥**

**அன்யத்ர த்வன்யத⁴ர்மாணுமுபலம்போ⁴ ந த்³ருஶ்யதே ।**
**தஸ்மாத் வஸ்துத⁴ர்மோ(அ)யமானந்த³ஸ்து கதா³சன ॥ 642 ॥**

**अन्यधर्माणां** = வேறென்றின் ஸ்வபாவங்களுக்கு,
**அன்யத⁴ர்மாணும்**
**अन्यत्र** = வேறெுன்றில்,
**அன்யத்ர**
**उपलम्भः** = தோன்றுவது,
**உபலம்ப⁴:**
**न दृश्यते** = காணப்படுகிறதில்ஐல,
**ந த்³ருஶ்யதே**
**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**अयं आनन्दः** = இந்த ஆனந்தம்,
**அயம் ஆனந்த³:**
**कदाचन** = ஒருக்காலும்,
**கதா³சன**
**न वस्तुधर्मः** = வஸ்துக்களின் ஸ்வபாவமாகாது.
**ந வஸ்துத⁴ர்ம:**

ஒரு வஸ்துவின் தர்மங்களுக்கு வேறெுரு வஸ்துவில் தோற்றம் காணப்படு கிறதில்ஐல. ஆகையால் இந்த ஆனந்தம் ஒருக்காலும் வஸ்துவின் தர்மமாகாது. **(642)**

**नाप्येष धर्मो मनसोऽसत्यर्थे तद्दर्शनात् ।**
**असति व्यञ्जके व्यङ्ग्यं नोदेतीति न मन्यताम् ॥ ६४३ ॥**

**நாப்யேஷ த⁴ர்மோ மனஸோ(அ)ஸத்யர்தே² தத்³த³ர்ஶனுத் ।**
**அஸதி வ்யஞ்ஜகே வ்யங்க்³யம் நோதே³தீதி ந மன்யதாம் ॥ 643 ॥**

**सत्यर्थेऽपि च नोदेति ह्यानन्दस्तूक्तलक्षणः ।**
**सत्यपि व्यञ्जके व्यङ्ग्यानुदयो नैव संमतः ॥ ६४४ ॥**

**ஸத்யர்தே²(அ)பி ச நோதே³தி ஹ்யானந்த³ஸ்தூக்தலக்ஷண꞉ ।**
**ஸத்யபி வ்யஞ்ஜகே வ்யங்க்³யானுத³யோ நைவ ஸம்மத꞉ ॥ 644 ॥**

| | | |
|---|---|---|
| **अर्थे असति** அர்தே² அஸதி | = | பொருள் இல்லாதபொழுது, |
| **तद्दर्शनात्** தத்³த³ர்ஶநாத் | = | அது காணப்படாததால், |
| **एषः** ஏஷ꞉ | = | இது, |
| **नापि मनसो धर्मः** நாபி மனஸோ த⁴ர்ம꞉ | = | மனதின் தர்மமும் இல்லை, |
| **व्यञ्जके असति** வ்யஞ்ஜகே அஸதி | = | வெளிப்படுத்துகிற வளது இல்லாத காரணத்தால், |
| **व्यङ्ग्यं** வ்யங்க்³யம் | = | வெளிப்படுத்தப்படவேண்டிய பொருள், |
| **नोदेति** நோதே³தி | = | உண்டாகவில்லை, |
| **इति** இதி | = | என்று, |
| **न मन्यताम्** ந மன்யதாம் | = | எண்ணவேண்டம். |
| **अर्थे सत्यपि च** அர்தே² ஸத்யபி ச | = | பொருள் இருந்தும்கூட, |
| **उक्तलक्षणः** உக்தலக்ஷண꞉ | = | முன் சொல்லப்பட்ட வைபாவமுள்ள, |
| **आनन्दस्तु** ஆனந்த³ஸ்து | = | ஆனந்தமோ வெனில், |
| **न उदेति** ந உதே³தி | = | உண்டாவதில்லை, |
| **व्यञ्जके सत्यपि** வ்யஞ்ஜகே ஸத்யபி | = | வெளிப்படுத்தும் பொருள் இருந்தும் கூட, |
| **व्यङ्ग्यानुदयः** வ்யங்க்³யானுத³ய꞉ | = | வெளிப்படுத்தப்படும் பொருள் உண்டாகாமலிருப்பது, |
| **नैव संमतः** நைவ ஸம்மத꞉ | = | (ஒருவராலும்) ஒப்புக்கொள்ளப்பட்டதல்ல. |

வஸ்து இல்லாதபோது ஆனந்தம் தெரியாததினுல், இது மனஸின் தர்மமும் ஆகாது, வெளிப்படுத்திக் காட்டும் பொருள் இல்லாததினுல் காட்டப்பட வேண்டிய பதார்த்தம் தெரியவில்லையென்று நினைத்துவிடக்கூடாது. விஷயம் இருக்கிற போதுகூட முன் சொன்ன லக்ஷணத்துடன் கூடின ஆனந்தம் ஏற்படுவதில்லை. காட்டுவது இருந்தும்கூட காட்டப்படுவது தெரியவில்லையென்று ஒப்புக்கொள்ளவே முடியாது.

[ஸுக ஸாதனமாகக் கருதப்படும் விஷயத்திற்கு உதாஹரணமாக ஒரு பழத்தை எடுத்துக்கொண்டால், அது பழுத்திருக்கிறது, தித்திப்பாயிருக்கிறது, என்பது போலவுள்ள தர்மங்கள் அந்த பழத்தைச் சேர்ந்தவை. அதைப் பார்ப்பதினுல் ஏற்படும் பிரீதியோ, அதை தன்னுடையதாக ஆக்கிக்கொள்வதில் ஏற்படும் மோதமோ அதை புஜிப்பதினுல் ஏற்படும் பிரமோதமோ, இவையெல்லாம் ஆனந்தத்தின் அம்சங்களாக மனஸிலேயே தோன்றுவதால் இவை அப்பழத்தைச் சேர்ந்த தர்மங்களல்ல. இவை மனஸின் தர்மங்களாவென்று பார்ததால், அப்படியுமில்லை, ஏனென்ருல் பழமில்லா மல் மனஸ் மாத்திரம் இருக்கும்போது இந்த அனுபவம் ஏற்படுவதில்லை. ஆனந்தம் மனஸின் தர்மமதான், ஆனுல் வெளிக்காட்டுவதற்குப் பழம் இல்லாததால் வெளியில் தெரியவில்லையென்று சொல்லி விடலாமா என்று பார்த்தால், பழம் இருந்தாலும் மனஸில் ஆனந்தம் ஏற்படாமலிருப்பதையும் பார்த்திருக்கிறேம். ஆனந்த தர்மத்தை வெளிப்படுத்துவதற்கு வேண்டிய பழம் இருந்தும் ஆனந்தமேற்பட வில்லையென்பது யுத்திக்குப் பொருந்தாது.] **(643-644)**

**(அவதாரிகை)** மனஸில்தான் ஆனந்தம், அதை வெளிப்படுத்தக்கூடிய பழம் இருந்தும் வெளிப்படாமலிருப்பது துரதிருஷ்டம் (பாபம்) முதலான பிரதிபந்தங்களால் இருக்கலாம். எப்படி அக்னிக்கு எரிக்கும் சக்தி இருந்தும், எரியவேண்டிய பதார்த்தம் கூட விருந்தும், பச்சிலை, மந்திரம் முதலானவைகளால் அந்த சக்தி வெளிப்படாமல் இருந்து விடுகிறதோ, அப்படியிருக்கலாம், என்று சொல்வதற்கும் வழியில்லையெ ன்று அடுத்த சுலோகத்தில் சொல்கிருர்: -

**दुरदृष्टादिकं नात्र प्रतिबन्धः प्रकल्प्यताम् ।**
**प्रियस्य वस्तुनो लाभे दुरदृष्टं न सिध्यति ॥ ६४५ ॥**

**து³ரத்³ருஷ்டாதி³கம் நாத்ர ப்ரதிப³ந்த⁴: ப்ரகல்ப்யதாம் ।**
**ப்ரியஸ்ய வஸ்துனே லாபே⁴ து³ரத்³ருஷ்டம் ந ஸித்⁴யதி ॥ 645 ॥**

| | | |
|---|---|---|
| **अत्र** अத்ர | = | இங்கு, |
| **दुरदृष्टादिकं** து³ரத்³ருஷ்டாதி³கம் | = | துரதிருஷ்டம் முதலியவை, |
| **प्रतिबन्धः** ப்ரதிப³ந்த⁴: | = | பிரதபந்தமாக (தடை செய்பவையாக), |

**न प्रकल्प्यतां** = கல்பிக்கக்கூடாது,

**ந ப்ரகல்ப்யதாம்**

**प्रियस्य वस्तुनः लाभे** = பிரியமான வஸ்து கிடைத்திருக்கும்பொழுது,

**ப்ரியஸ்ய வஸ்துனः லாபே⁴**

**दुरदृष्टं** = துரதிருஷ்டம்,

**து³ரத்³ருஷ்டம்**

**न सिध्यति** = ஸித்திக்காது.

**ந ஸித்⁴யதி**

இவ்விஷயத்தில் துரதிருஷ்டம் முதலியதை பிரதிபந்தம் (தடை) என்று கல்பிக்கக்கூடாது. பிரியமான வஸ்து கிடைத்திருப்பதனாலேயே துரதிருஷ்டம் இருக்காது. அதாவது, துரதிருஷ்டம் இருந்ததேயானால் பிரியமான வஸ்து கிடைத்தேயிராது. **(645)**

## तस्मात् न मानसो धर्मो निर्गुणत्वात् न चात्मनः ।

**தஸ்மாத் ந மானஸோ த⁴ர்மோ நிர்கு³ணத்வாத் ந சாத்மனः ।**

**तस्मात्** = ஆகையால்,

**தஸ்மாத்**

**न मानसो धर्मः** = (ஸுகம்) மனதைச் சேர்ந்ததான தர்மமல்ல,

**ந மானஸோ த⁴ர்மः**

**निर्गुणत्वात्** = குணமில்லாத தன்மையால்,

**நிர்கு³ணத்வாத்**

**आत्मनो न च** = ஆத்மாவினுடையதுமல்ல.

**ஆத்மனோ ந ச**

ஆகையால் விஷயத்திலிருந்து கிடைக்கும் ஸுகம் மனஸின் தர்மம் இல்லை. ஆத்மா எவ்வித குணமுமற்றதால் இது ஆத்மாவின் தர்மமுமில்லை.

**(அவதாரிகை)** இவ்விதம் விஷய ஸுகம் விஷயத்தைச் சேர்ந்ததில்லை, மனஸைச்சேர்ந்ததும் இல்லை, ஆத்மாவைச் சேர்த்ததும் இல்லை, என்று சொல்லி விட்டால், அது அனுபவிக்கப்படுகிறமட்டில் என்ன காரணத்தினால் எந்தப் பிரகாரமாகத் தோன்றுகிறதென்று சொல்லவேண்டாமா என்ற கேள்வி ஏற்படுவது நியாயமானதினால், அதற்கு பதில் மேலால் சொல்கிறார்: -

## किं तु पुण्यस्य सांनिध्यात् इष्टस्यापि च वस्तुनः ॥ ६४६ ॥

**கிம் து புண்யஸ்ய ஸாம்நித்⁴யாத் இஷ்டஸ்யாபி ச வஸ்துனः ॥ 646 ॥**

**सत्वप्रधाने चित्तेऽस्मिंस्त्वात्मैव प्रतिबिम्बति ।**
**आनन्दलक्षणः स्वच्छे पयसीव सुधाकरः ॥ ६४७ ॥**

**ஸத்வப்ரதா⁴னே சித்தே(அ)ஸ்மிம்ஸ்த்வாத்மைவ ப்ரதிபி³ம்ப³தி ।**
**ஆனந்த³லக்ஷண꞉ ஸ்வச்சே² பயஸீவ ஸுதா⁴கர꞉ ॥ 647 ॥**

**किं तु** = ஆனால்,
**கிம் து**
**पुण्यस्य** = புண்யத்தினுடையவும்,
**புண்யஸ்ய**
**इष्टस्यवस्तुनध्यापि** = விரும்பிய பொருளினுடையவும்,
**இஷ்டஸ்யவஸ்துனத்⁴யாபி**
**सांनिध्यात्** = ஸாந்நிதயத்தால் (அருகில் இருப்பதால்),
**ஸாம்நித்⁴யாத்**
**सत्वप्रधाने** = ஸ்தவ குணத்தை ப்ரதானமாகக்கொண்ட,
**ஸத்வப்ரதா⁴னே**
**अस्मिन् चित्ते** = இந்த மனதில்,
**அஸ்மின் சித்தே**
**आनन्दलक्षणः** = ஆனந்த ஸ்வரூபமான,
**ஆனந்த³லக்ஷண꞉**
**आत्मैव तु** = ஆத்மாவேதான்,
**ஆத்மைவ து**
**स्वच्छे** = தெளிவான,
**ஸ்வச்சே²**
**पयसि** = தண்ணீரில்,
**பயஸி**
**सुधाकरः इव** = சந்திரன்போல,
**ஸுதா⁴கர꞉ இவ**
**प्रतिबिम्बति** = ப்ரதிபிமபிக்கிறது.
**ப்ரதிபி³ம்ப³தி**

ஆனால், புண்யம் (பலன் கொடுக்க) ஸமீபத்தில் வந்திருப்பதினாலும், விரும்பிய வஸ்துவும் கிடைத்திருப்பதினாலும், ஸத்வகுணப் பிரதானமான இந்த மனஸில், நல்ல தெளிவான ஜலத்தில் எப்படி சந்திரன் பிரதிபிம்பிக்கிறானோ அதே மாதிரியாக, ஆனந்த ஸ்வரூபனான ஆத்மா பிரதிபிம்பிக்கிறார்.

[ஆத்மாவின் ஆனந்தம் மனஸில் தோன்ற வேண்டுமானால் மனம் புண்ணியத்தினால் ஸத்வகுணம் மேலிட்டதாக இருக்கவேண்டும். அதே புண்ணியத்தினால்

விரும்பிய பதார்த்தமும் கிடைத்திருக்கவேண்டும். இவ்விதம் மனஸில் தோன்றும் ஆத்ம பிரதிபிம்பமான ஆனந்தம்தான் விஷய ஸுகம் என்று சொல்லப்படுகிறது.]

**(646-647)**

**सोऽयमाभास आनन्दश्चित्ते यः प्रतिबिम्बितः ।**
**पुण्योत्कर्षापकर्षाभ्यां भवत्युच्चावचः स्वयम् ॥ ६४८ ॥**

**ஸோ(அ)யமாபா⁴ஸ ஆனந்த³ஶ்ஸித்தே யஃ ப்ரதிபி³ம்பி³தஃ ।**
**புண்யோத்கர்ஷாபகர்ஷாப்⁴யாம் ப⁴வத்யுச்சாவசஃ ஸ்வயம் ॥ 648 ॥**

| | | |
|---|---|---|
| **यः** <br> **யஃ** | = | ஆனந்தம், |
| **चिते** <br> **சிதே** | = | மனதில், |
| **प्रतिबिम्बितः** <br> **ப்ரதிபி³ம்பி³தஃ** | = | பிரதி பிம்பித்ததோ, |
| **सोऽयं** <br> **ஸோ(அ)யம்** | = | அந்த இந்த, |
| **आभास आनन्दः** <br> **ஆபா⁴ஸ ஆனந்த³ஃ** | = | பிரதி பிரதிபிம்ப ஆனந்தம், |
| **पुण्योत्कर्षापकर्षाभ्यां** <br> **புண்யோத்கர்ஷாபகர்ஷாப்⁴யாம்** | = | புண்யத்தின் உயர்வு தாழ்வுகளால், |
| **स्वयं** <br> **ஸ்வயம்** | = | தானே, |
| **उच्चावचः** <br> **உச்சாவசஃ** | = | மேலானதாகவும் கீழானதாகவும், |
| **भवति** <br> **ப⁴வதி** | = | ஆகிறது. |

மனஸில் எந்த ஆனந்தம் பிரதிபிம்பிக்கிறதோ, அந்த பிரதிபிம்ப ஆனந்தம் புண்ணியத்தின் அதிகம் குறைவு என்ற காரணத்தினுல் தானே மேல்பட்டதாகவும் கீழ்பட்டதாகவும் ஏற்படுகிறது. **(648)**

**(அவதாரிகை)** புண்ணியத்தின் தாரதம்யத்தினுல் தான் விஷய ஸுகத்தில் தாரதம்யம் ஏற்படுகிறதென்பதை வைத்து தைத்திரீய உபநிஷத்தில் ஆனந்த தாரதம்யம் சொல்லப்பட்டிருக்கிறது என்பதையும், இந்த ஆனந்தம் புண்ணியத்தினுல் ஏற்படுவதினுல் புண்ணியம் செலவழிந்தவுடன் நாசத்தை யடைந்துவிடுமென்பதை யும் சொல்கிறுர்: -

| | | |
|---|---|---|
| **नित्यानन्दाखण्डैकरसं** | = | நித்யமாயும் ஆனந்தமாயும் பிரிவு இல்லாத |
| **நித்யானந்தா³க²ண்டை³கரஸம்** | | ஓரே ஸ்வரூபமாயும், |
| **निष्कलं** | = | அவயவங்களற்றதாயும், |
| **நிஷ்கலம்** | | |
| **अक्रियं** | = | க்ரியைகளற்றதாயும், |
| **அக்ரியம்** | | |
| **अस्तविकारम्** | = | மாறுதல் அற்றதாயும், |
| **அஸ்தவிகாரம்** | | |
| **प्रत्यगभिन्नं** | = | பிரத்யகாத்மாவைக் காட்டிலும் வேருக |
| **ப்ரத்யக³பி⁴ன்னம்** | | இல்லாததாயும், |
| **परं** | = | மேலானதாயும், |
| **பரம்** | | |
| **अव्यक्तं** | = | ஸூக்ஷ்மமாயும், |
| **அவ்யக்தம்** | | |
| **शुद्धं** | = | சுத்தமாயும், |
| **ஶுத்³த⁴ம்** | | |
| **बुद्धं** | = | புத்தமாயும் உள்ள, |
| **பு³த்³த⁴ம்** | | |
| **तत्वं** | = | தத்வமாக, |
| **தத்வம்** | | |
| **त्वम्** | = | நீ, |
| **த்வம்** | | |
| **असि** | = | இருக்கிருய். |
| **அஸி** | | |

நித்யமாய் ஆனந்தமாய் துண்டு படாமல் ஏகரஸமாய், அம்சங்களற்றதாய், கிரியை யற்றதாய், மாறுதலற்றதாய் பிரத்யகாத்மாவிலிருந்து வேறுபடாததாய். மேலானதாய், வியக்தமில்லாததாய் (ஸூக்ஷ்மமாய்) சுத்தமாய், புத்தமாய், உள்ள தத்வமாகவே நீ இருக்கிருய். **(788)**

**त्वं प्रत्यस्ताशेषविशेषं व्योमेवान्तर्बहिरप पूर्णम् ।**
**ब्रह्मानन्दं परं अद्वैतं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥ ७८९ ॥**

**த்வம் ப்ரத்யஸ்தாஶேஷவிஶேஷம் வ்யோமேவாந்தர்ப³ஹிரப பூர்ணம் ।**
**ப்³ரஹ்மானந்த³ம் பரம் அத்³வைதம் ஶுத்³த⁴ம் பு³த்³த⁴ம் தத்த்வம் அஸி த்வம்**
**॥ 789 ॥**

| | | |
|---|---|---|
| **त्वं** | = | நீ, |
| **த்வம்** | | |

**प्रत्यस्ताशेषविशेषं** = எல்லா விசேஷங்களும் நீங்கியதாயும்,

**ப்ரத்யஸ்தாஶேஷவிஶேஷம்**

**व्योमेव** = ஆகாசம்போல்,

**வ்யோமேவ**

**अन्तर्बहिरपि** = உள்ளும் வெளியும்,

**அந்தர்ப³ஹிரபி**

**पूर्णम्** = நிறைந்ததாயும்,

**பூர்ணம்**

**ब्रह्म** = மிகப் பெரியதாயும்,

**ப்³ரஹ்ம**

**आनन्दं** = ஆனந்தமாயும்,

**ஆனந்த³ம்**

**परं** = மேலானதாயும்,

**பரம்**

**अद्वैतं** = இரண்டற்றதாயும்,

**அத்³வைதம்**

**शुद्धं** = சுத்தமாயும்,

**ஶுத்³த⁴ம்**

**बुद्धं** = ஞான ஸ்வரூபமாயும் உள்ள,

**பு³த்³த⁴ம்**

**तत्त्वं** = தத்வமாக,

**தத்த்வம்**

**असि** = இருக்கிறாய்.

**அஸி**

தனித்துக் காட்டக்கூடிய எல்லா விசேஷங்களும் நீங்கியதாய் ஆகாசம்மாதிரி உள்ளேயும் வெளியிலும்கூட நிறைந்ததாய் பிரஹ்மமாய், ஆனந்தமாய், மேலான தாய், இரண்டென்ற தன்மை யற்றதாய், சுத்தமாய், புத்தமாய், உள்ள தத்வமாகவே நீ இருக்கிறாய். **(789)**

**ब्रह्मैवाहं अहं ब्रह्म निर्गुणं निर्विकल्पकम् ।**
**इत्येवाखण्डया वृत्त्या तिष्ठ ब्रह्मणि निष्क्रिये ॥ ७९० ॥**

**ப்³ரஹ்மைவாஹம் அஹம் ப்³ரஹ்ம நிர்கு³ணம் நிர்விகல்பகம் ।**
**இத்யேவாக²ண்ட³யா வ்ருத்த்யா திஷ்ட² ப்³ரஹ்மணி நிஷ்க்ரியே ॥ 790 ॥**

**ब्रह्मैव** = ப்ரஹ்மமே,

**ப்³ரஹ்மைவ**

**अहं** = நான்,

**அஹம்**

**अहं** = நான்,

**அஹம்**

**निर्गुणं** = குணங்களற்றதும்,

**நிர்கு³ணம்**

**निर्विकल्पकम्** = கல்பனைகளற்றதுமான,

**நிர்விகல்பகம்**

**ब्रह्म** = ப்ரஹ்மம்,

**ப்³ரஹ்ம**

**इति** = என்ற,

**இதி**

**अखण्डया वृत्त्यैव** = பிரிவு இல்லாமல் தொடர்ந்து வருகின்ற

**அக²ண்ட³யா வ்ருத்த்யைவ** ஒரே மனோவிருத்தியுடனேயே,

**निष्क्रिये** = க்ரியைகளற்ற,

**நிஷ்க்ரியே**

**ब्रह्मणि** = ப்ரஹ்மத்தில்,

**ப்³ரஹ்மணி**

**तिष्ठ** = நிலைத்திரு.

**திஷ்ட²**

"பிரஹ்மமே நான், நான் குணமற்றதாய் எவ்விதவிகல்பமுமற்றதாய் இருக்கும் பிரஹ்மம்" என்ற அகண்டமான மனோகிருத்தியுடன் (நடுவில் வேறு விருத்திகள் வர இடம் கொடுக்காமல் இந்த ஒரே வருத்தியே தொடர்ந்திருக்கும்படி) கிரியையற்ற பிரஹ்மத்திலேயே நிலைத்திரு. **(790)**

**अखण्डामेवैतां घटितपरमानन्दलहरीं**
**परिध्वस्तद्वैतप्रमिति अमलां वृत्ति अनिशम् ।**
**अमुञ्चानः स्वात्मनि अनुपमसुखे ब्रह्मणि परे**
**रमस्व प्रारब्धं क्षपय सुखवृत्त्या त्वं अनया ॥ ७९१ ॥**

**அக²ண்டா³மேவைதாம் க⁴டிதபரமானந்த³லஹரீம்**
**பரித்⁴வஸ்தத்³வைதப்ரமிதி அமலாம் வ்ருத்தி அநிஶம் ।**
**அமுஞ்சானঃ ஸ்வாத்மனி அனுபமஸுகே² ப்³ரஹ்மணி பரே**
**ரமஸ்வ ப்ராரப்³த⁴ம் க்ஷபய ஸுக²வ்ருத்த்யா த்வம் அனயா ॥ 791 ॥**

**घटितपरमानन्दलहरीं** = மேலான ஆனந்த அலைகளுடன் கூடியதும்,

**க⁴டிதபரமானந்த³லஹரீம்**

| | | |
|---|---|---|
| परिध्वस्तद्वैतप्रमिति<br>பரித்⁴வஸ்தத்³வைதப்ரமிதி | = | இரண்டு என்னும் தோற்றம் நீங்கியதும், |
| अमलां<br>அமலாம் | = | சுத்தமானதும், |
| अखण्डां<br>அக²ண்டா³ம் | = | பிரிவற்றதுமான, |
| एतां<br>ஏதாம் | = | இந்த, |
| वृत्ति<br>வ்ருத்தி | = | விருத்தியை, |
| अमुञ्चान एव<br>அமுஞ்சான ஏவ | = | விடாமலேயே, |
| स्वात्मनि<br>ஸ்வாத்மனி | = | தனது ஆத்மஸ்வரூபமாயும், |
| अनुपमसुखे<br>அனுபமஸுகே² | = | எல்லையற்ற ஸுக ஸ்வரூபமுமான, |
| परे ब्रह्मणि<br>பரே ப்³ரஹ்மணி | = | பரப்ரஹ்மத்தில், |
| अनिशम्<br>அநிஶம் | = | எப்பொழுதும், |
| रमस्व<br>ரமஸ்வ | = | இன்புற்று இரு, |
| त्वं<br>த்வம் | = | நீ, |
| अनया<br>அனயா | = | இந்த, |
| सुखवृत्त्या<br>ஸுக²வ்ருத்த்யா | = | ஆனந்தவிருத்தியுடனேயே, |
| प्रारब्धं<br>ப்ராரப்³த⁴ம் | = | ப்ராரப்தகர்மாவை, |
| क्षपय<br>க்ஷபய | = | முடித்துக்கொள். |

உத்தமமான ஆநந்த அலைகளுடன் கூடியதாய், இரண்டாவதென்ற எண்ணமே போனதாய் நிர்மலமாயுள்ள இந்த இடையில்லாத விருத்தியையே விடாமலேயே; தனது ஆத்மஸ்வரூபமாய், நிகரற்ற ஸுகஸ்வரூபமாய் இருக்கும் மேலான ப்ரஹ்மத்தில் எப்பொழுதும் ரமித்துக்கொண்டிரு (இந்த ஜன்மாவில் அனுபவிக்க வேண்டிய

தாக ஆரம்பிக்கப்பட்டிருக்கும்) ப்ராரப்த கர்மாவை இந்த ஆனந்தவருத்தியுடனேயே நீ தீர்த்துக்கொள். **(791)**

**ब्रह्मानन्दरसास्वादतत्परेणैव चेतसा ।**
**समाधिनिष्ठितो भूत्वा तिष्ठ विद्वन् सदा मुने ॥ ७९२ ॥**

**ப்³ரஹ்மானந்த³ரஸாஸ்வாத³தத்பரேணைவ சேதஸா ।**
**ஸமாதி⁴நிஷ்டி²தோ பூ⁴த்வா திஷ்ட² வித்³வன் ஸதா³ முனே ॥ 792 ॥**

**विद्वन्** = அறிவுள்ளவனே,
**வித்³வன்**

**मुने** = மனனம் செய்பவனே,
**முனே**

**समाधिनिष्ठितो भूत्वा** = ஸமாதியில் (வேறு மனோவிருத்திகளைத் தடுப்ப
**ஸமாதி⁴நிஷ்டி²தோ பூ⁴த்வா** தில்) நிலைபெற்றவனாக இருந்து கொண்டு,

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா³**

**ब्रह्मानन्दरसास्वादतत्परेणैव** = ப்ரஹ்மாநந்தத்தின் ரஸத்தை அனுபவிப்பதிலேயே
**चेतसा** ஈடுபட்ட மனத்துடன்,

**तिष्ठ** = இரு.
**திஷ்ட²**

ஹே வித்வன், மனனம் செய்வதில் ஈடுபட்டவனே, ஸமாதி நிஷ்டையில் இருந்து வருபவனாய்க் கொண்டு பிரஹ்மத்தினுடைய ஆனந்த ரஸத்தை ருசித்து அனுபவிப்பதிலேயே நோக்க முள்ள மனஸுடன் நீ எப்பொழுதும் இரு. **(792)**

**(அவதாரிகை)** இடையற்ற மனோவிருத்தி வேண்டுமென்றும் அதையே ஸமாதியென்ற பெயரால் குறிப்பிட்டும் குருசொன்னதால் அது விஷயமாக இன்னமும் விவரமாகத் தெரிந்து கொள்ளக் கருதி சிஷ்யன் கேட்கிறான்: -

**शिष्यः -**
**अखण्डाख्या वृत्तिरेषा वाक्यार्थश्रुतिमात्रतः।**
**श्रोतुः संजायते किं वा क्रियान्तरं अपेक्षते ॥ ७९३ ॥**

**ஶிஷ்ய: -**
**அக²ண்டா³க்²யா வ்ருத்திரேஷா வாக்யார்த²ஶ்ருதிமாத்ரத:।**
**ஶ்ரோது: ஸஞ்ஜாயதே கிம் வா க்ரியாந்தரம் அபேக்ஷதே ॥ 793 ॥**

**समाधिः कः कतिविधः तत्सिद्धेः किमु साधनम् ।**
**समाधेः अन्तरायाः के सर्वमेतत् निरूप्यताम् ॥ ७९४ ॥**

**ஸமாதி⁴ः கः கதிவித⁴ः தத்ஸித்³தே⁴ः கிமு ஸாத⁴னம் ।**
**ஸமாதே⁴ः அந்தராயாः கே ஸர்வமேதத் நிரூப்யதாம் ॥ 794 ॥**

| | | |
|---|---|---|
| **श्रोतुः**<br>**ஶ்ரோதுः** | = | கேட்கிறவனுக்கு, |
| **अखण्डाख्या**<br>**அக²ண்டா³க்²யா** | = | அகண்டம் என்று பெயருள்ள, |
| **एषा वृत्तिः**<br>**ஏஷா வ்ருத்திः** | = | இந்த வ்ருத்தியானது, |
| **वाक्यार्थश्रुतिमात्रतः**<br>**வாக்யார்த²ஶ்ருதிமாத்ரதः** | = | வாக்யத்தின் அர்த்தத்தைக் கேட்பதால் மட்டும், |
| **संजायते**<br>**ஸஞ்ஜாயதே** | = | உண்டாகிறதா? |
| **किं वा**<br>**கிம் வா** | = | அல்லது, |
| **क्रियान्तरं**<br>**க்ரியாந்தரம்** | = | வேறு கர்மாவை, |
| **अपेक्षते**<br>**அபேக்ஷதே** | = | எதிர் பார்க்கிறதா? |
| **कः**<br>**கः** | = | எது, |
| **समाधिः**<br>**ஸமாதி⁴ः** | = | ஸமாதி, |
| **कतिविधः**<br>**கதிவித⁴ः** | = | எத்தஊன விதம்? |
| **तत्सिद्धेः**<br>**தத்ஸித்³தே⁴ः** | = | அந்த ஸமாதியின் ஸித்திக்கு, |
| **किमु साधनम्**<br>**கிமு ஸாத⁴னம்** | = | எது ஸாதனம்? |
| **समाधेः**<br>**ஸமாதே⁴ः** | = | ஸமாதிக்கு, |
| **के**<br>**கே** | = | எவை, |
| **अन्तरायाः**<br>**அந்தராயாः** | = | விக்னங்கள்,? |

| | | |
|---|---|---|
| **एतत् सर्वं**<br>**ஏதத் ஸர்வம்** | = | இது எல்லாம், |
| **निरूप्यताम्**<br>**நிரூப்யதாம்** | = | நிரூபிக்கப்படவேண்டும். |

இந்த "அகண்டா" (இடையில்லாத) என்று சொல்லப்படும் விருத்தி வாக்கியத்தினுடைய அர்த்கத்தைக் கேட்டதினுலேயே கேட்பவனுக்கு உண்டாகிவிடுமா? அல்லது செய்ய வேண்டியதாக வேறு கார்யத்தை அபேக்ஷிக்கிறதா? ஸமாதி என்றுல் என்ன? அது எத்தனை விதம்? அது ஸித்திப்பதற்கு ஸாதனம் என்ன? ஸமாதிக்கு ஏற்படக்கூடிய இடைஞ்சல்கள் எதெல்லாம்? இந்த எல்லா விஷயத்தையும் நன்கு தெளிவு படுத்த வேண்டும். **(793-794)**

**(அவதாரிகை)** இக்கேள்விகளுக்கு பதில் சொல்வதற்குப் பூர்வாங்கமாக, யாருக்கு எப்பொழுது இந்த அகண்டமான வ்ருத்தி ஏற்படுமென்று சொல்லிவிட்டு, பின்னுல் விவரமாக உபதேசிக்கிறுர்: -

**श्रीगुरुः -**
**मुख्यगौणादिभेदेन विद्यन्तेऽत्राधिकारिणः।**
**तेषां प्रज्ञानुसारेण अखण्डा वृत्तिः उदेष्यति ॥ ७९५ ॥**

**ஸ்ரீகு³ரு: -**
**முக்²யகௌ³ணாதி³பே⁴தே³ன வித்³யந்தே(அ)த்ராதி⁴காரிண:।**
**தேஷாம் ப்ரஜ்ஞானுஸாரேண அக²ண்டா³ வ்ருத்தி: உதே³ஷ்யதி ॥ 795 ॥**

| | | |
|---|---|---|
| **अत्र**<br>**அத்ர** | = | இந்த விஷயத்தில், |
| **मुख्यगौणादिभेदेन**<br>**முக்²யகௌ³ணாதி³பே⁴தே³ன** | = | முக்யர், கௌணர் முதலான வித்யாஸத்துடன், |
| **अधिकारिणः**<br>**அதி⁴காரிண:** | = | (பல) அதிகாரிகள், |
| **विद्यन्ते**<br>**வித்³யந்தே** | = | உள்ளனர், |
| **तेषां**<br>**தேஷாம்** | = | அவர்களின், |
| **प्रज्ञानुसारेण**<br>**ப்ரஜ்ஞானுஸாரேண** | = | அறிவை யனுஸரித்து, |
| **अखण्डा**<br>**அக²ண்டா³** | = | அகண்டமான, |

| | | |
|---|---|---|
| **वृत्तिः** | = | விருத்தி, |
| **வ்ருத்திः** | | |
| **उदेष्यति** | = | உண்டாகும். |
| **உதே³ஷ்யதி** | | |

இவ்விஷயத்தில் முக்கியர், கௌணர் முதலான வித்யாஸத்துடன் பலவித மான அதிகாரிகள் இருக்கிறுர்கள். அவர்களுடைய அறிவுக்குத் தக்கபடி அகண்டமான வருத்தி ஏற்படுகிறது. **(795)**

**श्रद्धाभक्तिपुरःसरेण विहितेनैवेश्वरं कर्मणा**
**संतोष्यार्जिततत्प्रसाद महिमा जन्मान्तरेष्वेव यः।**
**नित्यानित्य विवेकतीव्रविरतिन्यासादिभिः साधनैः**
**युक्तः सः श्रवणे सतामं अभिमतो मुख्याधिकारी द्विजः ॥ ७९६ ॥**

**ஶ்ரத்³தா⁴ப⁴க்திபுரःஸரேண விஹிதேனைவேஶ்வரம் கர்மணா**
**ஸந்தோஷ்யார்ஜிததத்ப்ரஸாத³ மஹிமா ஜன்மாந்தரேஷ்வேவ யः।**
**நித்யாநித்ய விவேகதீவ்ரவிரதிந்யாஸாதி³பி⁴ः ஸாத⁴னைः**
**யுக்தः ஸः ஶ்ரவணே ஸதாமம் அபி⁴மதோ முக்²யாதி⁴காரீ த்³விஜः ॥ 796 ॥**

| | | |
|---|---|---|
| **यः** | = | எவன், |
| **யः** | | |
| **श्रद्धाभक्तिपुरःसरेण** | = | சிரத்தை, பக்தி இவைகளுடன் கூடியதான, |
| **ஶ்ரத்³தா⁴ப⁴க்திபுரःஸரேண** | | |
| **विहितेन** | = | சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட, |
| **விஹிதேன** | | |
| **कर्मणैव** | = | கர்மாவினுலேயே, |
| **கர்மணைவ** | | |
| **ईश्वरं** | = | ஈசுவரனை, |
| **ஈஶ்வரம்** | | |
| **संतोष्य** | = | பிரீதியடையும்படி செய்து, |
| **ஸந்தோஷ்ய** | | |
| **आर्जिततत्प्रसाद महिमा** | = | சம்பாதிக்கப்பட்ட அவருடைய அருளின் |
| **ஆர்ஜிததத்ப்ரஸாத³ மஹிமா** | | மஹிமையுடையவனுயும், |
| **जन्मान्तरेष्वेव** | = | மறுபிறப்புக்களிலேயே, |
| **ஜன்மாந்தரேஷ்வேவ** | | |
| **नित्यानित्य विवेक** | = | இது நித்யம், இது அநித்யம் என்ற விவேகம், |
| **நித்யாநித்ய விவேக** | | |

| | | |
|---|---|---|
| **तीव्रविरति**<br>**தீவ்ரவிரதி** | = | தீவ்ரமான வைராக்யம், |
| **न्यासादिभिः**<br>**ந்யாஸாதி³பி⁴:** | = | ஸந்யாஸம் முதலான, |
| **साधनैः**<br>**ஸாத⁴னை:** | = | ஸாதனங்களோடு, |
| **युक्तः**<br>**யுக்த:** | = | கூடியுள்ளானே, |
| **सः**<br>**ஸ:** | = | அந்த, |
| **द्विजः**<br>**த்³விஜ:** | = | த்விஜன், |
| **श्रवणे**<br>**ஶ்ரவணே** | = | சிரவணத்தில், |
| **मुख्याधिकारी**<br>**முக்²யாதி⁴காரீ** | = | முக்யமான அதிகாரியாக, |
| **सतां अभिमतः**<br>**ஸதாம் அபி⁴மத:** | = | ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவன். |

சிரத்தையையும் பக்தியையும் முன்னிட்டுக்கொண்டு செய்யும், சாஸ்திரத்தில் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டு இருக்கும் கர்மாவினுலேயே ஈசுவரனை ஸந்தோஷமடையச் செய்து, அவருடைய பிரஸாதத்தை ஸம்பாதித்து அந்தப் பெருமையுடன் இருப்பவனுய், வேறு பிறவிகளிலேயே நித்யம் அநித்யம் என்ற விவேகம், தீவ்ரமான வைராக்யம், ஸந்யாஸம் முதலான ஸாதனங்களுடன் சேர்ந்த வனுய் எந்தப் பிராஹ்மணன இருக்கிறனே, அவன்தான் சிரவணத்தில் முக்யமான அதிகாரியென்று ஸாதுக்களால் மதிக்கப்படுகிறன்.

[இந்த சுலோகத்தில், இதுவரை சொன்ன ஸகல ஸாதனங்களையும் ஒருங்கே சோத்துச் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. முதலில் சிரத்தையும் பக்தியும், பிறகு விஹிதகர்மானுஷ்டானம், அதனுலேயே பகவானுடைய ப்ரீதியை ஸம்பாதித்தல், இவை எல்லாம் அஸ்திவாரம். இது ஏற்படுவதற்கே பல ஜனமாக்கள் வேண்டியிருக்கும். பிறகு விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷுதையாகிய ஸாதன சதுஷ்டய ஸபத்தியிருக்க வேண்டும். இவ்வளவும் இருந்தால்தான் வேதாந்த சிரவணத்திற்கே யோக்யதை உள்ளவனுக இருக்கமுடியும். இவ்வளவு ஸாதனங்களும் ப்ராஹ்மணனிடத்தில்தான் நன்கு இருக்கக்கூடியதால் ப்ராஹ்மணனை முக்யமான அதிகாரி என்று சொல்லப்பட்டிருக்கிறது. முன் சுலோகத்தில் கண்ட கௌண அதிகாரியைப் பற்றிப் பின்னுல் 808- வது சுலோகத்தில் சொல்கிறர். மற்றவர்கள் அதிகாரியென்று பெயருக்குமாத்திரம் இருக்கலாமே தவிற அவர்களுக்கு ஞானம்

ஸித்திப்பது ஸாத்யமிலாததனுல் அவர்களைப்பற்றி எடுத்துச்சொல்வது அவசியமில்லையென்று நிறுத்திவிட்டார். **(796)**

**अध्यारोपापवादक्रममनुसरता देशिकेनात्र वेत्रा**
**वाक्यार्थे बोध्यमाने सति सपदि सतः शुद्धबुद्धेरमुष्य ।**
**नित्यानन्दाद्वितीयं निरुपमं अमलं यत् परं तत्त्वं एकं**
**तत् ब्रह्मत्राहमस्मि इत्युदयति परमाखण्डताकारवृत्तिः ॥ ७९७ ॥**

**அத்⁴யாரோ பாபவாத³க்ரமமனுஸரதா தே³ஶிகேனாத்ர வேத்ரா**
**வாக்யார்தே² போ³த்⁴யமானே ஸதி ஸபதி³ ஸதஃ ஶுத்³த⁴பு³த்³தே⁴ரமுஷ்ய ।**
**நித்யானந்தா³த்³விதீயம் நிருபமம் அமலம் யத் பரம் தத்த்வம் ஏகம்**
**தத் ப்³ரஹ்மத்ராஹமஸ்மி இத்யுத³யதி பரமாக²ண்ட³தாகாரவ்ருத்திஃ ॥797॥**

**अध्यारोपापवादक्रमं** = அத்யாரோபம், அபவாதம் என்ற முறையை,
**அத்⁴யாரோபாபவாத³க்ரமம்**

**अनुसरता** = அனுஸரிக்கிறவராயும்,
**அனுஸரதா**

**वेत्रा** = அறிந்தவராயுமுள்ள,
**வேத்ரா**

**देशिकेन** = ஆசார்யரால்,
**தே³ஶிகேன**

**अत्र** = இங்கு,
**அத்ர**

**वाक्यार्थे** = மஹா வாக்யார்த்தமானது,
**வாக்யார்தே²**

**बोध्यमाने सति** = உபதேசிக்கப் படும்பொழுது,
**போ³த்⁴யமானே ஸதி**

**शुद्धबुद्धेः** = பரிசுத்தமான புத்தியுள்ள,
**ஶுத்³த⁴பு³த்³தே⁴ঃ**

**अमुष्य सतः** = இந்த ஸாதுவுக்கு,
**அமுஷ்ய ஸதஃ**

**यत्** = எது,
**யத்**

**नित्यानन्दाद्वितीयं** = அழிவற்றதாயும் ஆனந்த ரூபமாயும் இரண்டாவது பொருளற்றதாயும்,
**நித்யானந்தா³த்³விதீயம்**

**निरुपमं** = உவமையில்லாததாயும்,
**நிருபமம்**

| | | |
|---|---|---|
| **अमलं** | = | தோஷமில்லாததாயும், |
| **அமலம்** | | |
| **परं** | = | மேலானதாயும், |
| **பரம்** | | |
| **तत्त्वं** | = | உண்மைப் பொருளாயும், |
| **தத்த்வம்** | | |
| **एकं** | = | ஒன்றுயும் உள்ளதோ. |
| **ஏகம்** | | |
| **तत्** | = | அந்த, |
| **தத்** | | |
| **ब्रह्मैव** | = | பிரஹ்மமாகவே, |
| **ப்³ரஹ்மைவ** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **अस्मि** | = | இருக்கிறேன், |
| **அஸ்மி** | | |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **परमाखण्डताकारवृत्तिः** | = | மேலான அகண்டாகார விருத்தி, |
| **பரமாக²ண்ட³தாகாரவ்ருத்திః** | | |
| **सपदि** | = | உடனே, |
| **ஸபதி³** | | |
| **उदयति** | = | உண்டாகிறது. |
| **உத³யதி** | | |

முன் சுலோகத்தில் சொன்ன எல்லா ஸாதனங்களினுலும் சுத்தமாயிருக்கும் புத்தியையுடைய இந்த ஸத்புருஷனுக்கு, இவ்விஷயத்தை அறிந்தவராய் உபதேசிக்கக்கூடியவராய் உள்ள குருவினுல் முன் வர்ணித்திருக்கிற அத்யாரோபம், அபவாதம் என்ற முறையை அநுஸரித்து வாக்யத்தின் அர்த்தம் போதிக்கப்பட்டதேயாஞல், உடனே எந்தத் தத்வமானது நித்யமாய் ஆனந்தமாய் இரண்டாவதற்றதாய் உபமானமற்றதாய் நிர்மலமாய் மேலானதாய் ஒன்றுய் இருக்கிறதோ, "அந்த ப்ரஹ்மம்தான் நான்" என்கிற வெகு உத்தமமான அகண்டஸ்வருபமான வ்ருத்தி உதயமாகும். **(797)**

**अखण्डाकारवृत्तिः सा चिदाभाससमन्विता ।**
**आत्माभिन्नं परं ब्रह्म विषयीकृत्य केवलम्**
**बाधते तद्गताज्ञानं यत् आवरणलक्षणम् ॥ ७९८ ॥**

**அக²ண்டா³காரவ்ருத்தி꞉ ஸா சிதா³பா⁴ஸஸமன்விதா ।**
**ஆத்மாபி⁴ன்னம் பரம் ப்³ரஹ்ம விஷயீக்ருத்ய கேவலம்**
**பா³த⁴தே தத்³க³தாஜ்ஞானம் யத் ஆவரணலக்ஷணம் ॥ 798 ॥**

**सा** = அந்த,
**ஸா**
**अखण्डाकारवृत्तिः** = அகண்டாகார விருத்தியானது,
**அக²ண்டா³காரவ்ருத்தி꞉**
**चिदाभाससमन्विता** = சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடியதாய்,
**சிதா³பா⁴ஸஸமன்விதா**
**आत्माभिन्नं** = ஆத்மாவைக் காட்டிலும் வேறுபடாத,
**ஆத்மாபி⁴ன்னம்**
**परं ब्रह्म केवलं** = பரப்ரஹ்மத்தை மட்டும்,
**பரம் ப்³ரஹ்ம கேவலம்**
**विषयीकृत्य** = விஷயமாகச் செய்து,
**விஷயீக்ருத்ய**
**यत्** = எது,
**யத்**
**आवरणलक्षणम्** = ஆவரண ஸ்வரூபமாக உள்ளதோ உள்ளதோ
**ஆவரணலக்ஷணம்** (அந்த),
**तद्गताज्ञानं** = அந்த சைதன்யத்திலுள்ள அக்ஞானத்தை,
**தத்³க³தாஜ்ஞானம்**
**बाधते** = பாதிக்கிறது.
**பா³த⁴தே**

அந்த அகண்டாகாரவ்ருத்தியானது சைதன்யப்ரதிபிம்பத்துடன் சேர்ந்து கொண்டு, ப்ரத்யக் ஆத்மாவிற்கு வேறுபடாத பரப்ரஹ்மத்தைமாத்திரம் விஷயமாகச் செய்துகொண்டு, எது ஆவரணஸ்வரூபமாக (மறைக்கும் தன்மை கொண்டதாக) உள்ளதோ, அந்த சைதன்யத்திலுள்ள அக்ஞானத்தைப் பாதிக்கிறது. (அடியோடு இல்லாமல் செய்துவிடுகிறது.) **(798)**

**अखण्डाकारया वृत्त्या त्वज्ञाने बाधिते सति**
**तत्कार्यं सकलं तेन समं भवति बाधितम् ॥ ७९९ ॥**

**அக²ண்டா³காரயா வ்ருத்த்யா த்வஜ்ஞானே பா³தி⁴தே ஸதி**
**தத்கார்யம் ஸகலம் தேன ஸமம் ப⁴வதி பா³தி⁴தம் ॥ 799 ॥**

**अखण्डाकारया वृत्त्या** = அகண்டாகாரவிருத்தியால்,
**அக²ண்டா³காரயா வ்ருத்த்யா**

| | | |
|---|---|---|
| **त्वज्ञाने** த்வஜ்ஞானே | = | அக்ஞானம், |
| **बाधिते सति** பா³தி⁴தே ஸதி | = | பாதிக்கப்பட்ட பொழுது, |
| **तत्कार्यं** தத்கார்யம் | = | அதனுடைய கார்யம், |
| **सकलं** ஸகலம் | = | எல்லாம், |
| **तेन समं** தேன ஸமம் | = | அதனுடன் கூட, |
| **बाधितम् भवति** பா³தி⁴தம் ப⁴வதி | = | பாதிக்கப்பட்டதாக ஆகிறது. |

அகண்டாகார வருத்தியினுல் அக்ஞானம் பாதிக்கப்படும் போதே, அதன் கார்யமான எல்லாமே அத்துடன்கூட பாதிக்கப்பட்டதாக ஆகிவிடுகிறது. **(799)**

**तन्तुदाहे तु तत्कार्यपटदाहो यथा तथा ।**
**तस्य कार्यतया चित्तववृत्तिर्भवति बाधिता ॥ ८०० ॥**

**தந்துதா³ஹே து தத்கார்யபடதா³ஹோ யதா²ததா² ।**
**தஸ்ய கார்யதயா சித்தவவ்ருத்திர்ப⁴வதி பா³தி⁴தா ॥ 800 ॥**

| | | |
|---|---|---|
| **तन्तुदाहे** தந்துதா³ஹே | = | நூல்கள் பொசுங்கினுல், |
| **यथा** யதா² | = | எப்படி, |
| **तत्कार्यपटदाहः** தத்கார்யபடதா³ஹः | = | அதன் காரியமான வஸ்திரத்தின் பொசுங்கல் ஏற்படுகிறதோ, |
| **तथा** ததா² | = | அப்படி, |
| **तस्य** தஸ்ய | = | அந்த அக்ஞானத்தின், |
| **कार्यतया** கார்யதயா | = | காரியமாயிருப்பதால், |
| **चित्तववृत्तिः** சித்தவவ்ருத்தி: | = | அகண்டாகார மனோவிருத்தியும், |
| **बाधिता भवति** பா³தி⁴தா ப⁴வதி | = | பாதிக்கப்பட்டதாக ஆகிறது. |

நூல்களை எரித்தால் அந்நூல்களின் கார்யமான வஸ்திரம் எரியப்படுகிறது எப்படியோ, அப்படியே அக்ஞானம் பாதிக்கப்பட்டபின், அதன் கார்யமாயிருப்பதனுல் அகண்டாகார மனோவிருத்தியும் பாதிக்கப்பட்டுவிடுகிறது. (800)

**उपप्रभा यथा सूर्यं प्रकाशयितु अक्षमा ।**
**तद्वदेव चिदाभासचैतन्यं वृत्तिसंस्थितम् ॥ ८०१ ॥**
**स्वप्रकाशं परं ब्रह्म प्रकाशयितुं अक्षमम् ।**

**உபப்ரபா⁴ யதா² ஸூர்யம் ப்ரகாஶயிது அக்ஷமா ।**
**தத்³வதே³வ சிதா³பா⁴ஸசைதன்யம் வ்ருத்திஸம்ஸ்தி²தம் ॥ 801 ॥**
**ஸ்வப்ரகாஶம் பரம் ப்³ரஹ்ம ப்ரகாஶயிதும் அக்ஷமம் ।**

| | | |
|---|---|---|
| **यथा** யதா² | = | எப்படி, |
| **उपप्रभा** உபப்ரபா⁴ | = | உபப்ரகாசமானது, |
| **सूर्यं** ஸூர்யம் | = | சூர்யனை, |
| **प्रकाशयितु** ப்ரகாஶயிது | = | பிரகாசப் படுத்துவதற்கு, |
| **अक्षमा** அக்ஷமா | = | சக்தியில்லாததோ, |
| **तद्वदेव** தத்³வதே³வ | = | அதுபோலவே, |
| **वृत्तिसंस्थितम्** வ்ருத்திஸம்ஸ்தி²தம் | = | அகண்டாகார விருத்தியிலிருக்கிற, |
| **चिदाभासचैतन्यं** சிதா³பா⁴ஸசைதன்யம் | = | சித்ப்ரதிபிம்பசைதன்யமானது, |
| **स्वप्रकाशं** ஸ்வப்ரகாஶம் | = | தானே பிரகாசிக்கிற, |
| **परं ब्रह्म** பரம் ப்³ரஹ்ம | = | பர பிரம்மத்தை, |
| **प्रकाशयितुं** ப்ரகாஶயிதும் | = | பிரகாசப் படுத்துவதற்கு, |
| **अक्षमं** அக்ஷமம் | = | சக்தியில்லாதது. |

உபப்ரபையானது (ஸூர்யனிடத்திலிருந்தே இரவல் வாங்கிப்பிரகாசிக்கும் அக்னி முதலியவைகளின் ஒளி) எப்படி ஸூர்யஜ்ன ப்ரகாசப்படுத்த சக்தியற்றதோ, அதைப்போலவே வ்ருத்தியில் இருக்கிற சைதன்யத்தின் ப்ரதிபிம்பமான சைதன்யம் ஸ்வயம்ப்ரகாசமாயுள்ள பரப்ரஹ்மத்தை பிரகாசப்படுத்த சக்தியற்றது. **(801)**

**प्रचण्डातपमध्यस्थदीपवत् नष्टदीधितिः ॥ ८०२ ॥**

**ப்ரசண்டா³தபமத்⁴யஸ்த²தீ³பவத் நஷ்டதீ³தி⁴திः ॥ 802 ॥**

**तत्तेजसाऽभिभूतं सत् लीनोपाधितया ततः ।**
**बिम्बभूत परब्रह्ममात्रं भवति केवलम् ॥ ८०३ ॥**

**தத்தேஜஸா(அ)பி⁴பூ⁴தம் ஸத் லீனோபாதி⁴தயா ததः ।**
**பி³ம்ப³பூ⁴த பரப்³ரஹ்மமாத்ரம் ப⁴வதி கேவலம் ॥ 803 ॥**

**प्रचण्डातपमध्यस्थ** = உக்ரமான வெய்யிலின் நடுவில் இருக்கும்,
**ப்ரசண்டா³தபமத்⁴யஸ்த²**
**दीपवत्** = தீபம்போல் (ஆபாஸ சைதன்யமானது),
**தீ³பவத்**
**तत्तेजसा** = அந்த பிம்பசைதன்ய பிரகாசத்தால்,
**தத்தேஜஸா**
**अभिभूतं सत्** = அடக்கப்பட்டதாக ஆகி,
**அபி⁴பூ⁴தம் ஸத்**
**नष्टदीधितिः** = ஒளி இழந்ததாய்,
**நஷ்டதீ³தி⁴திः**
**ततः** = பிறகு,
**ததः**
**लीनोपाधितया** = உபாதி மறைந்துபோவதால்,
**லீனோபாதி⁴தயா**
**केवलम्** = தனித்ததான,
**கேவலம்**
**बिम्बभूत परब्रह्ममात्रं** = பிம்பமான பரப்ரம்ம சைதன்யமாகவே,
**பி³ம்ப³பூ⁴த பரப்³ரஹ்மமாத்ரம்**
**भवति** = ஆகிறது.
**ப⁴வதி**

நல்ல உக்ரமான வெய்யிலின் மத்தியில் இருக்கும் தீபம் போல சித்ப்ரகாசத்தால் அடக்கப்பட்டு ஒளியை இழந்ததாக ஆகி ப்ரதிபிம்ப சைதன்யம் பின்னர் அகண்டாகார விருத்தியாகிற உபாதி மறைந்து விட்ட காரணத்தினால் தனித்திருக்கும் பிம்பமான பரப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறது. **(802-803)**

**यथाऽपनीते त्वादर्शे प्रतिबिम्बमुखं स्वयम् ।**
**मुखमात्रं भवेत् तद्वत् एतच्चोपाधिसंक्षयात् ॥ ८०४ ॥**

**யதா²(அ)பனீதே த்வாத³ர்ஶே ப்ரதிபி³ம்ப³முக²ம் ஸ்வயம் ।**
**முக²மாத்ரம் ப⁴வேத் தத்³வத் ஏதச்சோபாதி⁴ஸங்க்ஷயாத் ॥ 804 ॥**

| | | |
|---|---|---|
| **यथा** யதா | = | எப்படி, |
| **आदर्शे** ஆத³ர்ஶே | = | கண்ணாடி, |
| **अपनीते** அபனீதே | = | விலக்கப்பட்ட பொழுது, |
| **प्रतिबिम्बमुखं** ப்ரதிபி³ம்ப³முக²ம் | = | முகப்ரதிபிம்பமானது, |
| **स्वयम्** ஸ்வயம் | = | தானாகவே, |
| **मुखमात्रं** முக²மாத்ரம் | = | முகமாகவே, |
| **भवेत्** ப⁴வேத் | = | ஆகுமோ, |
| **तद्वत्** தத்³வத் | = | அதுபோல, |
| **एतच्च** ஏதச்ச | = | இந்த ஆபாஸ சைதன்யமும், |
| **उपाधिसंक्षयात्** உபாதி⁴ஸங்க்ஷயாத் | = | உபாதி அழிந்துபோவதால் (ப்ரஹ்மசைதன்யமாக ஆய்விடுகிறது) |

கண்ணாடியை எடுத்துவிட்டால் எப்படி ப்ரதிபிம்பமாய் இருந்த முகம் தானாகவே பிம்பமுகமாகவே ஆகிவிடுகிறதோ, அதுபோல இந்த சிதாபாஸனும் உபாதியாகிற விருத்திக்கு நாசம் வந்துவிட்ட காரணத்தினால் பரப்ரஹ்மமாக ஆகிவிடுகிறது. **(804)**

(**அவதாரிகை**) ஜடமான பதார்த்தங்களை அறிகிற ஞானத்திற்கும், ஸ்வயம் ப்ரகாசமான பதார்த்தத்தை அறிகிற ஞானத்திற்கும் வித்யாஸம் உண்டு என்பதை இங்கு மத்தியில் சுருக்கமாகத் தெரிவிக்கிறார்: -

**घटाज्ञाने यथा वृत्त्या व्याप्तया बाधिते सति ।**
**घटं विस्फुरयत्येष चिदाभासः स्वतेजसा ।**
**न तथा स्वप्रभे ब्रह्मणि आभास उपयुज्यते ॥ ८०५ ॥**

**க4டாஜ்ஞானே யதா2 வ்ருத்த்யா வ்யாப்தயா பா3தி4தே ஸதி ।**
**க4டம் விஸ்பு2ரயத்யேஷ சிதா3பா4ஸः ஸ்வதேஜஸா ।**
**ந ததா2 ஸ்வப்ரபே4 ப்3ரஹ்மணி ஆபா4ஸ உபயுஜ்யதே ॥ 805 ॥**

| | | |
|---|---|---|
| **यथा**<br>**யதா2** | = | எப்படி, |
| **व्याप्तया**<br>**வ்யாப்தயா** | = | (குடத்தை) வியாபித்ததான், |
| **वृत्त्या**<br>**வ்ருத்த்யா** | = | அந்தக்கரண விருத்தியால், |
| **घटाज्ञाने**<br>**க4டாஜ்ஞானே** | = | குடத்தைப் பற்றிய அக்ஞானம், |
| **बाधिते सति**<br>**பா3தி4தே ஸதி** | = | நீங்கியபொழுது, |
| **एष चिदाभासः**<br>**ஏஷ சிதா3பா4ஸः** | = | இந்த சிதாபாஸன், |
| **स्वतेजसा**<br>**ஸ்வதேஜஸா** | = | தன் பிரகாசத்தால், |
| **घटं**<br>**க4டம்** | = | குடத்தை, |
| **विस्फुरयति**<br>**விஸ்பு2ரயதி** | = | விளங்கும்படி செய்கிறதோ, |
| **तथा**<br>**ததா2** | = | அப்படி, |
| **स्वप्रभे**<br>**ஸ்வப்ரபே4** | = | ஸ்வயம் பிரகாசமான, |
| **ब्रह्मणि**<br>**ப்3ரஹ்மணி** | = | பிரஹ்மத்தில், |
| **आभासः**<br>**ஆபா4ஸ:** | = | சிதாபாஸன், |
| **न उपयुज्यते**<br>**ந உபயுஜ்யதே** | = | உபயோகப்படுவதில்லை. |

குடத்தை வ்யாபிக்கும் வருத்தியினுல் குடத்தைப்பற்றிய அக்ஞானம் பாதிக்கப்பட்டபொழுது அந்தக் குடத்தை இந்த சிதாபாஸன் தன்னுடைய ப்ரகாசத்தினுல் எப்படி ப்ரகாசிக்கும்படிச் செய்கிறுனே, அவ்விதமாக ஸ்வயர்ப்ரகாசமாயுள்ள ப்ரஹ்மத்தீனியத்தில் சிதாபாஸன் உபயோகப்படுவதில்ஐல.

[கண்ணுல் கூடத்தைப் பார்த்தும் மனம் கண்வழியாக குடமிருக்குமிடம் சென்று குடத்தின் உருவமெடுக்கிறது. இது தான் வ்ருத்தி என்பது, குடத்தை வ்யாபித்த இந்த மனே வ்ருத்தியால் குடத்தை நமக்குத் தெரியவொட்டாதபடி மூடிக் கொண்டிருந்த அக்ஞனம் நீங்குகிறது. உடனே ப்ரதிபிம்ப சைதன்யம் குடத்தை நமக்குத் தெரியும்படிச்செய்கிறது. இதுதான் கடஞானம் என்பது. இங்கு அக்ஞானத்தை நீக்குவது வ்ருத்தியின் கார்யம். குடத்தை ப்ரகாசப்படுத்துவது சைதன்யத்தின் காச்யம். இரண்டும் ஏற்பட்டால்தான் நமக்குக் குடம் தெரியும். தானே ப்ரகாசித்துக் கொண்டு இருக்கும் ப்ரஹ்மத்தில் வ்ருத்தியால் அக்ஞானத்கை நீக்கினுல் போதும். வேறெரு சைதன்யத்தைக்கொண்டு அதை விளங்கச்செய்யவேண்டிய அவசியமில்ஐல.] **(805)**

## अत एव मतं वृत्तिव्याप्यत्वं वस्तुनः सताम् ।
## न फलव्याप्यता तेन न विरोधः परस्परम् ॥ ८०६ ॥

**அத ஏவ மதம் வ்ருத்திவ்யாப்யத்வம் வஸ்துனः ஸதாம் ।**
**ந ப²லவ்யாப்யதா தேன ந விரோத⁴ः பரஸ்பரம் ॥ 806 ॥**

**अत एव** = ஆகையினுலேயே,
**அத ஏவ**

**वस्तुनः** = பிரஹ்மத்திற்கு,
**வஸ்துனः**

**वृत्तिव्याप्यत्वं** = விருத்தியால் வியாபிக்கப்படும் தன்மை,
**வ்ருத்திவ்யாப்யத்வம்**

**सतां मतं** = ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது,
**ஸதாம் மதம்**

**फलव्याप्यता** = சைதன்யத்தால் வியாபிக்கப்படும் தன்மை,
**ப²லவ்யாப்யதா**

**न** = ஓப்புக் கொள்ளப்படவில்ஐல,
**ந**

**तेन** = அதனுல்,
**தேன**

**परस्परम्** = ஒன்றுக்கொன்று,
**பரஸ்பரம்**

**न विरोधः** = விரோதமில்லை.

**ந விரோத⁴ः**

ஆகையினால்தான் வஸ்துவான ப்ரஹ்மத்திற்கு வ்ருத்தியினால் வ்யாபிக்கப் படும் தன்மை மட்டும்தான் உண்டு. சைதன்யத்தால் வ்யாபிக்கப்படும் தன்மை கிடையாது, என்பது பெரியோர்களின் அபிப்ராயம். ஆகையால் ஒன்றுக்கொன்று விரோதம் கிடையாது.

[ஒரு இருட்டான அறையில் ஒரு சாமான் இருந்தால், கதவைத்திறந்தால் மாத்திரம் போதாது, அதன் பேரில் வெளிச்சம் விழும்படிச் செய்தால்தான் அது தெரியும் அது போல் ஜடவஸதுக்களை அறிந்து கொள்வதற்கு விருத்தி, வியாப்தி, பல வியாப்தி இரண்டும் வேண்டும் அந்தக்கரண விருத்தியால் அக்ஞானத்தைப் போத்தி சைதன்யத்தால் ஜடவஸ்துவை விளங்கும்படி செய்யவேண்டும் அப்பொழுது தான் குடம் நமக்குத்தெரியவரும். ஆனால் பார்க்கவேண்டிய சாமான் எரிகிற தீபமாயிருந்துவிட்டால், கதவைத் திறப்பதே போதும், அதன் பேரில் வேறு வெளிச் சம் விழுவதற்கு அவசியமேயில்லை. அப்படி வெளிச்சம் விழுந்தாலும் அது தீபத்தைக் காட்டுவதற்கு உபயோகப் படாது. ஒரு வெளிச்சம் இன்னொரு வெளிச்சத்தின் உதவியைத் தேடாது. அப்படியேதான் ஸ்வயம் பிரகாசமான பிரஹ்மம் தான் விளங்குவதற்கு சிதாபாஸனுடைய பிரகாசத்தை அபேக்ஷிக்காது. பிரஹ்மத்தைத் தெரிய வொட்டாமல் செய்துகொண்டிருக்கிற ஆவரணம் என்கிற அக்ஞான மூடியை எடுப்பதற்கு விருத்திக் ஞானம் அவசியம். மூடியை எடுத்து விட்டால் பிரஹ்மம் தானே பிரகாசித்துக் கொண்டிருக்கிற படியால் சிதாபாஸனு டைய உதவி தேவையில்லை. அது ஸ்வயம் பிரகாசமானதினால் தானே விளங்கும். ஆகவே மனதால் பிரஹ்மத்தை அறிகிறான் என்பதற்கும் ப்ரஹ்மம் ஸ்வயம் ப்ரகாசம் ஜ்ஞேயமில்லை என்பதற்கும் விரோதமில்லை. விருத்தி வியாப்தியால் அக்ஞானம நீங்குவதைத்தான் அறிகிறான் என்று சொல்கிறோம். ஸ்வயம் ப்ரகாசமான ப்ரஹ்மத்தில் பலவ்யாப்தி யில்லாததால் ஆபாஸ சைதனியம் அதை விளங்கச் செய்யாததால் ப்ரஹ்மம் ஜ்ஞேயமல்ல என்றும் சொல்கிறார்கள்.] **(806)**

**(அவதாரிகை)** ஆவரணத்தை விலக்குவதற்கு விருத்தி வேண்டியிருப்பதினால் பிரஹ்மத்தை அறிவதற்கு புத்தி விருத்தியை கருவியாக வேதம் சொல்கிறது என்பதைத் துலக்குகிறார்: -

## श्रुत्योदितं ततो ब्रह्मज्ञेयं बुद्ध्चैव सूक्ष्मया ॥ ८०७ ॥

**ஶ்ருத்யோதி³தம் ததோ ப்³ரஹ்மஜ்ஞேயம் பு³த்³த்⁴சைவ ஸூக்ஷ்மயா ॥ 807 ॥**

**ततः** = ஆகையால்,

**தத:**

**सूक्ष्मया बुद्ध्चैव** = ஸூக்ஷ்மமான புத்தியால்தான்,

**ஸூக்ஷ்மயா பு³த்³த்⁴சைவ**

**ब्रह्म** = ப்ரஹ்மம்,

**ப்³ரஹ்ம**

**ज्ञेयं** = அறியத்தக்கது (என்று),

**ஜ்ஞேயம்**

**श्रुत्या उदितं** = சுருதியால் சொல்லப்பட்டது.

**ஶ்ருத்யா உதி³தம்**

ஆகையினல்தான் (ஸ்வயம் பிரகாசமான பிரஹ்மத்தை விளங்கவைக்க சைதன்ய வியாப்தி தேவையில்லாவிட்டாலும் ஆவரணுக்ஞானம் விலக விருத்தி வ்யாப்தி தேவையானபடியால்தான்) பிரஹ்மமானது ஸூக்ஷ்மமான புத்தியினுலே தான் அறியத்தக்கது" என்று வேத்த்தினுல் சொல்லப்பட்டிருக்கிறது.

## 'दृश्यते त्वया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः' (कठ ३-१२)

**'த்³ருஶ்யதே த்வயா பு³த்³த்⁴யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மத³ர்ஶிபி⁴:' (கட² 3-12)**

**(அவதாரிகை)** ஸூக்ஷ்மமான புத்தியென்றல், குரு உபதேசம் செய்தவுடனே யே உபதேசித்த விஷயம் அனுபவத்திற்கு வரக்கூடிய அவ்வளவு சுத்தமாயும் கூர்மையாகவும் இருக்கும் புத்தி என்று தாத்பர்யம். அவ்வித புத்தியுடன் ஜகத்தில் யாரேனும் ஒருவர் இருக்கலாம். மற்றவர்களுக்குள் புத்தியில் தாரதம்யம் ஏராளமாயிருப்பதால். உபதேசித்த விஷயம் அனுபவத்திற்கு வரவேண்டுமானல் சிரவணத்திற்குப் பிறகு மனனம், தியானம், என்கிற முறைகளை யனுஷ்டிக்க அவசிய மேற்படுகிறது. அந்த முறைகளைப் பற்றி மேலால் சொல்லுகிறார்: -

## प्रज्ञामान्द्यं भवेत् येषां तेषां न श्रुतिमात्रतः ।
## स्यात् अखण्डाकारवृत्तिः विना तु मननादिना ॥ ८०८ ॥

**ப்ரஜ்ஞாமாந்த்³யம் ப⁴வேத் யேஷாம் தேஷாம் ந ஶ்ருதிமாத்ரதः ।**
**ஸ்யாத் அக²ண்டா³காரவ்ருத்திः வினா து மனநாதி³னா ॥ 808 ॥**

**येषां** = எவர்களுக்கு,

**யேஷாம்**

**प्रज्ञामान्द्यं** = புத்தியில் மந்தத்தன்மை,

**ப்ரஜ்ஞாமாந்த்³யம்**

**भवेत्** = உள்ளதோ,

**ப⁴வேத்**

**तेषां** = அவர்களுக்கு,

**தேஷாம்**

**मननादिना विना** = மனனம் முதலியவை இல்லாமல்,

**மனநாதி³ன விஞ**

**श्रुतिमात्रतः** = சிரவணத்தால் மட்டும்,
**ஶ்ருதிமாத்ரத꞉**
**अखण्डाकारवृत्तिः** = அகண்டாகாரவிருத்தி,
**அக²ண்டா³காரவ்ருத்தி꞉**
**न स्यात्** = ஏற்படாது.
**ந ஸ்யாத்**

எவர்களுக்கு புத்தி மந்தமாயிருக்கிறதோ, அவர்களுக்கு, மனனம் முதலானது இல்லாமல், சிரவணத்திஞல் மாத்திரம் அகண்டாகார வ்ருத்தி ஏற்படாது. **(808)**

**श्रवणात् मननात् ध्यानात् तात्पर्येण निरन्तरम् ।**
**बुद्धेः सूक्ष्मत्वं मायाति ततो वस्तूपलभ्यते ॥ ८०९ ॥**

**ஶ்ரவணுத் மனஞத் த்⁴யாஞத் தாத்பர்யேண நிரந்தரம் ।**
**பு³த்³தே⁴꞉ ஸூக்ஷ்மத்வம் மாயாதி ததோ வஸ்தூபலப்⁴யதே ॥ 809 ॥**

**निरन्तरम्** = இடைவிடாமல்,
**நிரந்தரம்**
**तात्पर्येण** = ஈடுபாட்டுடன் (செய்யும்),
**தாத்பர்யேண**
**श्रवणात्** = சிரவணத்தாலும்,
**ஶ்ரவணுத்**
**मननात्** = மனனத்தாலும்,
**மனஞத்**
**ध्यानात्** = த்யானத்தாலும்,
**த்⁴யாஞத்**
**बुद्धेः** = புத்திக்கு,
**பு³த்³தே⁴꞉**
**सूक्ष्मत्वं** = ஸூக்ஷ்மதன்மை,
**ஸூக்ஷ்மத்வம்**
**मायाति** = வருகிறது.
**மாயாதி**
**ततः** = அதஞல்,
**தத꞉**
**वस्तू** = பிரஹ்ம வஸ்து,
**வஸ்தூ**
**उपलभ्यते** = அறியப்படுகிறது.
**உபலப்⁴யதே**

இடைவிடாமல் அதிலேயே ஈடுபட்டுக்கொண்டு செய்யப்படும் சிரவணத்தி ஞலும் மனனத்திஞலும் தியானத்திஞலும் புத்திக்கு ஸூக்ஷ்மத் தன்மை வருகிறது அதஞல் வஸ்து அறியப்படுகிறது. **(809)**

**मन्दप्रज्ञावतां तस्मात् करणीयं पुनः पुनः ।**
**श्रवणं मननं ध्यानं सम्यग्वस्तू पलब्धये ॥ ८१० ॥**

**மந்த³ப்ரஜ்ஞாவதாம் தஸ்மாத் கரணீயம் புனः புனः ।**
**ஶ்ரவணம் மனனம் த்⁴யானம் ஸம்யக்³வஸ்தூ பலப்³த⁴யே ॥ 810 ॥**

**तस्मात्** = ஆகையால்,
**தஸ்மாத்**
**मन्दप्रज्ञावतां** = மந்தமான புத்தி உள்ளவர்களுக்கு,
**மந்த³ப்ரஜ்ஞாவதாம்**
**सम्यग्वस्तू पलब्धये** = நன்ருக வஸ்துவை அறிவதற்காக,
**ஸம்யக்³வஸ்தூ பலப்³த⁴யே**
**श्रवणं** = சிரவணமும்,
**ஶ்ரவணம்**
**मननं** = மனனமும்,
**மனனம்**
**ध्यानं** = த்யானமும்,
**த்⁴யானம்**
**पुनः पुनः** = திருப்பித்திருப்பி,
**புனः புனः**
**करणीयं** = செய்யத்தக்கது.
**கரணீயம்**

ஆகையால் மந்தமான புத்தியுள்ளவர்களுக்கு நன்ருக வஸ்து அறிவதற்கு சிரவணம், மனனம், தியானம் இவை திரும்பத்திரும்பச் செய்தாகவேண்டும். **(810)**

**सर्ववेदान्तवाक्यानां षड्भिः लिंङ्गैः सदद्वये ।**
**परे ब्रह्मणि तात्पर्यनिश्चयं श्रवणं विदुः ॥ ८११ ॥**

**ஸர்வவேதா³ந்தவாக்யானாம் ஷட்³பி⁴ர் லிங்கை³ः ஸத³த்³வயே ।**
**பரே ப்³ரஹ்மணி தாத்பர்யநிஶ்சயம் ஶ்ரவணம் விது³ः ॥ 811 ॥**

**षड्भिः लिंङ्गैः** = ஆறு லிங்கங்களால்,
**ஷட்³பி⁴ர் லிங்கை³ः**

| | | |
|---|---|---|
| **सर्ववेदान्तवाक्यानां** | = | எல்லா உபநிஷத் வாக்யங்களுக்கும், |
| **ஸர்வவேதா³ந்தவாக்யாநாம்** | | |
| **सदद्वये** | = | முக்காலத்திலும் அழியாததும் இரண்டற்றதுமான, |
| **ஸத³த்³வயே** | | |
| **परे ब्रह्मणि** | = | பரப்ரஹ்மத்தில், |
| **பரே ப்³ரஹ்மணி** | | |
| **तात्पर्यनिश्चयं** | = | கருத்து உள்ளதாக தீர்மானிப்பதை, |
| **தாத்பர்யநிஶ்சயம்** | | |
| **श्रवणं** | = | சிரவணமாக, |
| **ஶ்ரவணம்** | | |
| **विदुः** | = | அறிகுறர்கள். |
| **விது³:** | | |

ஆறு லிங்கங்களைக்கொண்டு எல்லா உபநிஷத் வாக்யங்களுக்கும் ஸத்தாய் இரண்டற்றதாயுள்ள பரப்ரஹ்மத்தில்தான் தாத்பர்யம் என்று தீர்மானமாக அறிவதை சிரவணம் என்பார்கள். **(811)**

**श्रुतस्यैवाद्वितीयस्य वस्तुनः प्रत्यगात्मनः ।**
**वेदान्तवाक्यानुगुणयुक्तिभिस्त्वनुचिन्तनम् ॥ ८१२ ॥**

**ஶ்ருதஸ்யைவாத்³விதீயஸ்ய வஸ்துன: ப்ரத்யகா³த்மன: ।**
**வேதா³ந்தவாக்யானுகு³ணயுக்திபி⁴ஸ்த்வனுசிந்தனம் ॥ 812 ॥**

**मननं तत् श्रुतार्थस्य साक्षात्करणकारणम् ।**
**विजातीयशरीरादिप्रत्यय त्यागपूर्वकम् ॥ ८१३ ॥**

**மனனம் தத் ஶ்ருதார்த²ஸ்ய ஸாக்ஷாத்கரணகாரணம் ।**
**விஜாதீயஶரீராதி³ப்ரத்யய த்யாக³பூர்வகம் ॥ 813 ॥**

**सजातीयात्मवृत्तीनां प्रवाहकरणं यथा ।**
**तैलधारावत् अच्छिन्नवृत्त्या तत् ध्यानं इष्यते ॥ ८१४ ॥**

**ஸஜாதீயாத்மவ்ருத்தீனாம் ப்ரவாஹகரணம் யதா² ।**
**தைலதா⁴ராவத் அச்சி²ன்னவ்ருத்த்யா தத் த்⁴யானம் இஷ்யதே ॥ 814 ॥**

| | | |
|---|---|---|
| **श्रुतस्य** | = | கேட்டுத் தெரிந்துகொண்ட, |
| **ஶ்ருதஸ்ய** | | |
| **अद्वितीयस्य** | = | இரண்டற்ற, |
| **அத்³விதீயஸ்ய** | | |

| | | |
|---|---|---|
| **प्रत्यगात्मन:** | = | ப்ரத்யுகாத்மரூபமான, |
| **ப்ரத்யகா³த்மன:** | | |
| **वस्तुन एव** | = | ப்ரஹ்ம வஸ்துவையே, |
| **வஸ்துன ஏவ** | | |
| **वेदान्तवाक्यानुगुणयुक्तिभि:** | = | உபநிஷக் வாக்யங்களுக்குத் தகுந்ததான |
| **வேதா³ந்தவாக்யானுகு³ணயுக்திபி⁴:** | | யுக்திகளால், |
| **अनुचिन्तनं** | = | சிந்திப்பது (எதுவோ), |
| **அனுசிந்தனம்** | | |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **मननं** | = | மனனமாகும், |
| **மனனம்** | | |
| **विजातीय** | = | வேறு இனத்தைச் சேர்ந்த, |
| **விஜாதீய** | | |
| **शरीरादि** | = | சரீரம் முதலியலைகளின், |
| **ஶரீராதி³** | | |
| **प्रत्यय** | = | எண்ணங்களஊ, |
| **ப்ரத்யய** | | |
| **त्यागपूर्वकम्** | = | முதலில் ஒதுக்கிவிட்டு, |
| **த்யாக³பூர்வகம்** | | |
| **तैलधारावत्** | = | எண்ஊணயின் தாரைபோல, |
| **தைலதா⁴ராவத்** | | |
| **अच्छिन्नवृत्त्या** | = | எண்ணங்கள் நடுவில் அறுந்துபோகாமல், |
| **அச்சி²ன்னவ்ருத்த்யா** | | |
| **सजातीयात्मवृत्तीनां** | = | ஒரே இனமான ஆத்மாவைப் |
| **ஸஜாதீயாத்மவ்ருத்தீனும்** | | பற்றிய எண்ணங்கஊ, |
| **प्रवाहकरणं** | = | ப்ரவாஹம்போல் தொடர்ந்து செய்து |
| **ப்ரவாஹகரணம்** | | கொண்டிருப்பது (எதுவோ), |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **श्रुतार्थस्य** | = | கேட்டுத் தெரிந்துகொண்டதை, |
| **ஶ்ருதார்த²ஸ்ய** | | |
| **साक्षात्करणकारणम्** | = | நேரில் தெரிந்துகொள்வதற்கு ஸாதனமான, |
| **ஸாக்ஷாத்கரணகாரணம்** | | |
| **ध्यानं** | = | தியானமாக, |
| **த்⁴யானம்** | | |

**इष्यते** = கருதப்படுகிறது.

**இஷ்யதே**

சிரவணத்திஞல் அறிந்த இரண்டாவதற்ற ப்ரத்யகாத்ம ரூபமான ப்ரஹ்ம வஸ்துவைப்பற்றியே உபநிஷத் வாக்யங்களுக்கு அநுகணமான யுக்திகளிஞல் தொடர்ந்து சிந்தஜை செய்வது எதுவோ மனனம் ஆத்மாவைப்பற்றிய எண்ணங்களுக்கு வேறுன சரீரம் முதலியவைகஊப்பற்றிய எண்ணங்கஊ ஒதுக்கித் தள்ளிவிட்டு, நடுநடுவில்கூட அவைகளுக்குக் கொஞ்சமும் இடம் கொடுக்காமல், எண்ஊணயின் தாரைபோலும், ஜலப்ரவாஹம்போலும். ஒரேமாதிரியான ஆத்மானைப்பற்றிய எண்ணங்களே தொடர்ந்துவந்துகொண்டு இருப்பது தியானம் எனப்படும். கேட்டுப் பரோக்ஷமாகத் தெரிந்துகொண்ட விஷயத்தை பிரத்யக்ஷமாக நேரில் தெரிந்து கொள்வதற்குத் தியானம் தான் நேரிடையான ஸாதனம். ஆத்மவிஷயமான எண்ணங்கள் அடியோடு நின்றுவிடாமல் தொடர்ந்து வந்துகொண்டிருக்கவேண்டும். நடுவில் அநாத்ம எண்ணம் வரக்கூடாது. இதுவே ஆத்ம தியானம் எனப்படும். **(812-814)**

**(அவதாரிகை)** இம்மூன்றையும் எதுவரை செய்யவேண்டுமென்பதையும் குறிப்பிடுகிருர்: -

**तावत्कालं प्रयत्नेन कर्तव्यं श्रवणं सदा ।**
**प्रमाणसंशयो यावत् स्वबुद्धेः न निवर्तते ॥ ८१५ ॥**

**தாவத்காலம் ப்ரயத்னேன கர்தவ்யம் ஶ்ரவணம் ஸதா³ ।**
**ப்ரமாணஸம்ஶயோ யாவத் ஸ்வபு³த்³தே⁴꞉ ந நிவர்ததே ॥ 815 ॥**

**यावत्** = எதுவரை,

**யாவத்**

**प्रमाणसंशयः** = ப்ரமாணத்தில் ஸம்சயம்,

**ப்ரமாணஸம்ஶய꞉**

**स्वबुद्धेः** = தன் புத்தியிலிருந்து,

**ஸ்வபு³த்³தே⁴꞉**

**न निवर्तते** = நீங்கவில்ஊலயோ,

**ந நிவர்ததே**

**तावत्कालं** = அந்தக் காலம்வரை,

**தாவத்காலம்**

**सदा** = எப்பொழுதும்,

**ஸதா³**

**प्रयत्नेन** = முயற்சியோடு,

**ப்ரயத்னேன**

**श्रवणं कर्तव्यं** = சிரவணம் செய்யத்தக்கது.

**ஶ்ரவணம் கர்தவ்யம்**

எதுவரையில் பிரமாணத்தில் ஸர்சயம் தன் புத்தியிலிருந்து விலகவில்லை யோ, அதுவரை பிரயத்தினத்துடன் எப்பொழுதும் சிரவணம் செய்தாகவேண்டும்.

[அதாவது வேதாந்தத்தில் சொல்லியிருப்பது என்ன என்பதில் ஸந்தேகம் இருக்கக்கூடாது. உபநிஷத்துக்களின் கருத்து என்ன என்று தீர்மானிப்பதற்கு ஆறு லிங்கங்கள் இருக்கின்றனவென்று 811 வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. அவை யாவன: -

**उपक्रमोपसंहारी अभ्यासोऽपूर्वता फलम् ।**
**अर्थवाद - उपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये ॥**

**உபக்ரமோபஸம்ஹாரீ அப்⁴யாஸோ(அ)பூர்வதா ப²லம் ।**
**அர்த²வாத³ - உபபத்தீ ச லிங்க³ம் தாத்பர்யநிர்ணயே ॥**

(1) ஆரம்பத்திலும் முடிவிலும் ஒரே விஷயத்தை சொல்லியிருந்தால் அதில் தான் தாத்பர்யம் என்று அறிந்து கொள்ளலாம்.

(2) எந்த விஷயத்தைப் பற்றி அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறதோ அதுவும் தாத்பர்யமாகும்.

(3) வேறு பிரமாணங்களால் அறியப்படாமல் இங்கே புதிதாக சொல்லியிருந்தால் அதுவும் தாத்பரியமாகும்.

(4) எதை அறிவதினுல் விசேஷமான பிரயோஜனம் ஏற்படுவதாகச் சொல்லியி ருக்கிறதோ அதில்தான் தாத்பர்யம் இருக்கும்.

(5) எதை மிகவும் சிலாகித்திருக்கிறதோ அது தாத்பர்யம்.

(6) எதற்கு பக்கபலமாக யுக்திகள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அது தாத்பர்யம்.

தாத்பர்யத்தைக் கண்டுபிடிப்பதற்காகச் சொல்லியிருக்கும் இந்த 6 லிங்கங்க ளும் ஒன்றுக்கே இருந்தால் அதுதான் தாத்பர்யம் என்பதில் ஸந்தேஹமே இல்லை, உபநிஷத்துக்களின் வாக்யங்களை எடுத்து அலசிப்பார்த்து இந்த ஆறு அடையாளங் களும் ஜீவ - ப்ரஹ்ம ஐக்யத்திற்குத்தான் இருக்கிறதென்று பெரியோர்கள் எடுத்துக் காட்டியிருக்கிருர்கள். அவைகளை நன்கு கவனித்து உபநிஷத்துக்களின் தாத்பர்யம் என்ன என்பதை ஸந்தேஹமன்னியில் தெரிந்துகொள்ளும் வரை சிரவணம் அவசியம்.] **(815)**

**प्रमेयसंशयो यावत् तावत् तु श्रुतियुक्तिभिः ।**
**आत्मयाथार्थ्य निश्चित्यै कर्तव्यं मननं मुहुः ॥ ८१६ ॥**

**ப்ரமேயஸம்ஶயோ யாவத் தாவத் து ஶ்ருதியுக்திபி⁴: ।**
**ஆத்மயாதா²ர்த்²ய நிஶ்சித்யை கர்தவ்யம் மனனம் முஹு: ॥ 816 ॥**

| | | |
|---|---|---|
| **यावत्** யாவத் | = | எதுவரை, |
| **प्रमेयसंशयः** ப்ரமேயஸம்ஶய: | = | உபநிஷத்தில் கூறப்பட்ட விஷயத்தில் ஸந்தேஹம் உள்ளதோ, |
| **तावत्** தாவத் | = | அதுவரை, |
| **आत्मयाथार्थ्य निश्चित्यै** ஆத்மயாதா²ர்த்²ய நிஶ்சித்யை | = | ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை தீர்மானமாகத் தெரிந்துகொள்வதற்காக, |
| **श्रुतियुक्तिभिः** ஶ்ருதியுக்திபி⁴: | = | ச்ருதிக்குத் தக்க யுக்திகளால், |
| **मुहुः** முஹு: | = | அடிக்கடி, |
| **मननं कर्तव्यं** மனனம் கர்தவ்யம் | = | சிந்தனம் செய்யவேண்டும். |

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் ப்ரஹ்மசத்மைக்ய ரூபமான விஷயத்தில் எதுவரை ஸம்சயம் இருக்கிறதோ, அது வரை ஆத்மாவினுடைய வாஸ்தவமான ஸ்வரூபத்தை நிச்சயமாக அடிக்கடி ஸந்தேஹமன்னியில் தெரியவேண்டியதற்காக வேத வாக்யங்களுக்சுத்தக்க யுக்திகளைக்கொண்டு மனனம் செய்யவேண்டும்.

[சிரவணத்தினுல் வேதத்தின் தாத்பர்யம் என்ன என்பதை தீர்மானமாக அறிந்த பிறகம், உபநிஷத்தில் கூறியுள்ள விஷயம் யுக்திக்குப் பொருந்தவில்லையே, அனுபவத்திற்குப் பொருந்தவில்லையே, வேறு சிலர் சொல்வதற்கு விரோதமாய் இருக்கிறதே என்று இம்மாதிரியெல்லாம் ஸம்சயம் தோன்றிக் கொண்டிருந்தால், வேதத்தில் சொல்லியிருப்பது வாஸ்தவம் தான் என்ற நிச்சயபுத்தி ஏற்படாது. ஆகை யால் அவ்வித நிச்சயபுத்தி ஏற்படும்வரை மனனம் செய்யவேண்டும்.] **(816)**

**विपरीतात्मधीः यावत् न विनश्यति चेतसि ।**
**तावत् निरन्तरं ध्यानं कर्तव्यं मोक्षमिच्छता ॥ ८१७ ॥**

**விபரீதாத்மதீ⁴: யாவத் ந வினஶ்யதி சேதஸி ।**
**தாவத் நிரந்தரம் த்⁴யானம் கர்தவ்யம் மோக்ஷமிச்ச²தா ॥ 817 ॥**

| | | |
|---|---|---|
| **यावत्** யாவத் | = | எதுவரை, |

| | | |
|---|---|---|
| **चेतसि**<br>**சேதஸி** | = | மனதில், |
| **विपरीतात्मधी:**<br>**விபரீதாத்மதீ⁴:** | = | அநாத்மாவில் ஆத்மா என்கிற எண்ணம், |
| **न विनश्यति**<br>**ந வினஶ்யதி** | = | தொலையவில்லையோ, |
| **तावत्**<br>**தாவத்** | = | அதுவரை, |
| **मोक्षं इच्छता**<br>**மோக்ஷம் இச்ச²தா** | = | மோக்ஷத்தை விரும்புகிறவனால், |
| **निरन्तरं**<br>**நிரந்தரம்** | = | இடைவிடாமல், |
| **ध्यानं कर्तव्यं**<br>**த்⁴யானம் கர்தவ்யம்** | = | த்யானம் செய்யத்தக்கது. |

மனஸில் ஆத்மாவைத் தவிற வேறு பதார்த்தத்தில் ஆத்மா என்கிற எண்ணம் எதுவரை நாசமடையவில்லையோ, அதுவரை மோக்ஷத்தில் ஆசையுள்ளவரால் இடைவிடாது தியானம் செய்யவேண்டும்.

[வேதம் இன்னதுகான் சொல்கிறதென்பதை ஸந்தேஹம் இல்லாமல் சிரவண த்திஞல் அறிந்துகொண்டு, அது வாஸ்தவம்தான் என்று ஸந்தேஹமன்னியில் மனனத்திஞல் நிச்சயம் செய்துகொண்டாலும், அவ்விஷயம் காரணங்களிஞல் அனுபவத்திற்கு வராமல் நின்றுவிடும். ஸாதாரணமாக, பரபம் செய்ய கூடாதென்று வேதம் சொல்கிறகென்பதில் யானுக்கும் ஸந்தேஹமில்லை, அப்படியே வேதத்தில் சொல்லியபடி பாபம் செய்யக்கூடாதென்பது நியாயம்தான் என்பதிலும் யாருக்கும் ஸந்தேஹமில்லை; அப்படியிருந்தும் உலகத்தில் பலவித காரணங்களால் பாபம் செய்வதே இருந்துவருகிறது. அதுபோலவே, ஆத்மவிஷயமான சிரவண மனனங்கள் மூலமாய் ஸந்தேஹமற ஆத்மதத்வத்தைத் தெரிந்துகொண்டாலும், அநுபவத்திற்கு வருவது மிகவும் சிரமமாயிருக்கிறது. இதற்காகத்தான தியானம் செய்யவேண்டியது அவசியமாகிறது.] **(817)**

## यावत् न तर्केण निरासितोऽपि दृश्यप्रपञ्चस्त्वपरोक्षबोधात् ।
## विलीयते तावत् अमुष्य भिक्षो: ध्यानादि सम्यक् करणीयमेव ॥ ८१८ ॥

**யாவத் ந தர்கேண நிராஸிதோ(அ)பி**
**த்³ருஶ்யப்ரபஞ்சஸ்த்வபரோக்ஷபோ³தா⁴த் ।**
**விலீயதே தாவத் அமுஷ்ய பி⁴க்ஷோ:**
**த்⁴யாநாதி³ ஸம்யக் கரணீயமேவ ॥ 818 ॥**

| | | |
|---|---|---|
| यावत्<br>யாவத் | = | எதுவரை, |
| तर्केण<br>தர்கேண | = | யுக்தியால், |
| निरासितोऽपि<br>நிராஸிதோ(அ)பி | = | விலக்கப்பட்டபோதிலும், |
| दृश्यप्रपं च<br>த்³ருஶ்யப்ரபம் ச | = | காணப்படும் பிரபஞ்சமானது, |
| अपरोक्षबोधात्<br>அபரோக்ஷபோ³தா⁴த் | = | ஆத்மாவின் பிரத்யக்ஷ ஞானத்தால், |
| न विलीयते<br>ந விலீயதே | = | மறையவில்லையோ, |
| तावत्<br>தாவத் | = | அதுவரை, |
| अमुष्य भिक्षोः<br>அமுஷ்ய பி⁴க்ஷோ: | = | இந்த ஸந்நாஸிக்கு, |
| ध्यानादि<br>த்⁴யாநாதி³ | = | த்யானம் முதலானது, |
| सम्यक्<br>ஸம்யக் | = | நன்றாக, |
| करणीयमेव<br>கரணீயமேவ | = | செய்யவேண்டியதுதான். |

யுக்தியினால் இல்லையென்று தள்ளிவிட்டபோதிலும், தென்படும் பிரபஞ்சமானது ஆத்மாவின் ப்ரத்யக்ஷ ஞானத்தினால் எதுவரை நன்கு மறைய வில்லையோ, அதுவரை இந்த ஸன்னியாஸிக்கு தியானம் முதலானது நன்றாக செய்யவேண்டியதே யாகும். **(818)**

(**அவதாரிகை**) தியானம் செய்து செய்து ஆத்ம விஷயத்திலேயே மனம் நிலைத்து நின்று விடுமானால் அந்நிலையை ஸமாதி என்பார்கள். தியானத்தில் ஒரே விருத்தி திரும்பத் திரும்பச் செய்யப்பட வேண்டியிருக்கும். திரும்பத் திரும்ப செய்ய அவசியமில்லாமல் ஒரே விருத்தியே நீடித்திருந்து விடுமானால் ஸமாதியாகும். அந்த ஸமாதி நிலையையும் அதிலுள்ள அவாந்தர வித்யாஸங்களையும் மேலால் எடுத்துக்காட்டுகிறார்: -

**सविकल्पो निर्विकल्प इति द्वेधा निगद्यते ।**
**समाधिः सविकल्पस्य लक्षणं वच्मि तत् शृणु ॥ ८१९ ॥**

**ஸவிகல்போ நிர்விகல்ப இதி த்³வேதா⁴ நிக³த்³யதே ।**
**ஸமாதி⁴꞉ ஸவிகல்பஸ்ய லக்ஷணம் வச்மி தத் ஶ்ருணு ॥ 819 ॥**

| | | |
|---|---|---|
| **समाधिः** ஸமாதி⁴꞉ | = | ஸமாதியானது, |
| **सविकल्पः** ஸவிகல்ப꞉ | = | ஸவிகல்பம், |
| **निर्विकल्प इति** நிர்விகல்ப இதி | = | நிர்விகல்பம் என்று, |
| **द्वेधा** த்³வேதா⁴ | = | இரண்டுவிதமாக, |
| **निगद्यते** நிக³த்³யதே | = | சொல்லப்படுகிறது, |
| **सविकल्पस्य** ஸவிகல்பஸ்ய | = | ஸ்விகல்ப ஸமாதியின், |
| **लक्षणं** லக்ஷணம் | = | லக்ஷணத்தை, |
| **वच्मि** வச்மி | = | சொல்கிறேன், |
| **तत्** தத் | = | அதை, |
| **शृणु** ஶ்ருணு | = | கேள். |

ஸமாதி என்பது ஸவிகல்பம் என்றும் நிர்விகல்பம் என்றும் இரண்டு விதமாகச் சொல்லப்படுகிறது. ஸ்விகல்ப ஸமாதியின் லக்ஷணத்தை சொல்கிறேன், அதைக் கேள். **(819)**

**ज्ञात्राद्यविलयेनैव ज्ञेये ब्रह्मणि केवले ।**
**तदाकाराकारितया चित्तवृत्तेः अवस्थितिः ॥ ८२० ॥**

**ஜ்ஞாத்ராத்³யவிலயேனைவ ஜ்ஞேயே ப்³ரஹ்மணி கேவலே ।**
**ததா³காராகாரிதயா சித்தவ்ருத்தே꞉ அவஸ்தி²தி꞉ ॥ 820 ॥**

**सद्भिः स एव विज्ञेयः समाधिः सविकल्पकः ।**

**ஸத்³பி⁴꞉ ஸ ஏவ விஜ்ஞேய꞉ ஸமாதி⁴꞉ ஸவிகல்பக꞉ ।**

| | | |
|---|---|---|
| **ज्ञात्राद्यविलयेनैव** ஜ்ஞாத்ராத்³யவிலயேனைவ | = | அறிகிறவன் முதலியவை மறையாமலேயே, |

| | | |
|---|---|---|
| **ज्ञेये** | = | அறியத்தக்க, |
| **ஜ்ஞேயே** | | |
| **ब्रह्मणि केवले** | = | ப்ரஹ்மத்தில் மட்டும், |
| **ப்³ரஹ்மணி கேவலே** | | |
| **तदाकाराकारितया** | = | அதன் ஸ்வரூபத்தையே வடிவமாகக் |
| **ததா³காராகாரிதயா** | | கொண்டதாக, |
| **चित्तवृत्तेः** | = | மனோவிருத்தியின், |
| **சித்தவ்ருத்தே:** | | |
| **अवस्थितिः** | = | நிலை (யாதொன்று உண்டோ), |
| **அவஸ்தி²தி:** | | |
| **स एव** | = | அதுதான், |
| **ஸ ஏவ** | | |
| **सविकल्पकः समाधिः** | = | ஸவிகல்ப ஸமாதியாக, |
| **ஸவிகல்பக: ஸமாதி⁴:** | | |
| **सद्भिः** | = | ஸாதுக்களால், |
| **ஸத்³பி⁴:** | | |
| **विज्ञेयः** | = | அறியத்தக்கது. |
| **விஜ்ஞேய:** | | |

அறிகிறவன் அறியப்படும் வஸ்து, அறிவு என்னும் திரிபுடி மறையாமலே, அறியப்படும் பிரஹ்மத்தில் மாத்திரம் அதனுடைய ஸ்வரூப வடிவத்தை அடைந்த தாய் மனஸின் விருத்தி இருப்பது எதுவோ அதுதான் ஸவிகல்பக ஸமாதியென்று பெரியோர்கள் அறிகிறார்கள். **(820)**

[எந்த ஞானத்திலும் மூன்று அம்சங்கள் உண்டு. அறிகிறவன் (ஞாதா), அறிகிற கிரியை (ஞானம்), அறியப்படும் பதார்த்தம் (ஞேயம்) ஸவிகல்பக ஸமாதியில் இந்த மூன்று அம்சங்களும் அப்படியே இருக்கும். மனஸ் ஞேயமான பிரஹ்மாகாரமாய் இருந்தாலும், இம் மூன்று அம்சங்களும் மறைவதில்லை.]

**(அவதாரிகை)** இதை த்ருஷ்டாந்தம் மூலம் விளக்கிக்காட்டுகிறார்: -

**मृद एवावभानेऽपि मृण्मयद्विपभानवत् ॥ ८२१ ॥**

**ம்ருத³ ஏவாவபா⁴னே(அ)பி ம்ருண்மயத்³விபபா⁴னவத் ॥ 821 ॥**

**सन्मात्रवस्तुभानेऽपि त्रिपुटी भाति सन्मयी ।**
**समाधिः अत एवायं सविकल्प इतीर्यते ॥ ८२२ ॥**

**ஸன்மாத்ரவஸ்துபா⁴னே(அ)பி த்ரிபுடீ பா⁴தி ஸன்மயீ ।**
**ஸமாதி⁴: அத ஏவாயம் ஸவிகல்ப இதீர்யதே ॥ 822 ॥**

| | | |
|---|---|---|
| मृद एवावभानेऽपि | = | மண் தோன்றிக்கொண்டேயிருந்த போதிலும், |
| ம்ருத³ ஏவாவபா⁴னே(அ)பி | | |
| मृण्मयद्विपभानवत् | = | மண் உருவமான யானை தோன்றுவதுபோல, |
| ம்ருண்மயத்³விபபா⁴னவத் | | |
| सन्मात्रवस्तुभानेऽपि | = | ஸத்தாகவே இருக்கும் ப்ரஹ்மவஸ்து |
| ஸன்மாத்ரவஸ்துபா⁴னே(அ)பி | | தோன்றிய போதிலும், |
| सन्मयी | = | ஸத் ரூபமான, |
| ஸன்மயீ | | |
| त्रिपुटी | = | த்ரிபுடி, |
| த்ரிபுடி | | |
| भाति | = | தோன்றுகிறது, |
| பா⁴தி | | |
| अत एव | = | அதனால்தான், |
| அத ஏவ | | |
| अयं | = | இது, |
| அயம் | | |
| सविकल्प समाधिः | = | ஸவிகல்ப ஸமாதி, |
| ஸவிகல்ப ஸமாதி⁴꞉ | | |
| इति | = | என்று, |
| இதி | | |
| ईयते | = | சொல்லப்படுகிறது. |
| ஈயதே | | |

மண் நன்கு தோன்றிக்கொண்டே இருந்தபோதிலும் மண்ணால் செய்யப் பட்டிருக்கும் யானையும் தோன்றுவது போல, ஸத்தாகவேயிருக்கும் பிரஹ்மம் தோன்றினபோதிலும் ஸத்தினால் ஏற்பட்டிருக்கும் த்ரிபுடி (ஞாதா ஞானம், ஞேயம் என்ற மூன்றும்) கூடவே தோன்றுகிறது. அதனால்தான் இந்த ஸமாதி ஸவிகல்பம் என்று சொல்லப்படுகிறது.

[மண்ணால் செய்யப்பட்டிருக்கும் யானை வாஸ்தவமான யானையில்லை, மண்தான், என்ற ஞானம் வந்த பிறகும் அந்த யானையின் உருவம் எப்படி மறையாமல் தெரிந்துகொண்டே யிருக்குமோ, அப்படியே எல்லாம் பிரஹ்மம்தான், ஞாதா, ஞானம், ஞேயம் என்ற வித்யாஸம் கிடையாதென்ற நிச்சயம் வந்தபோதிலும் அவைகள் தனியாகவே தோன்றிக்கொண்டிருந்தால், அப்பொழுது அது விகல்பங்களோடு (மூவகைத் தோற்றங்களோடு) கூடியிருப்பதால் ஸவிகல்ப ஸமாதி என்று கூறப்படுகிறது.] **(821-822)**

**(அவதாரிகை)** அம் மூன்று அம்சங்களும் மறைந்து ஞேய மாத்திரமாக மனஸ் ஆகிவிட்டதேயானல், அப்பொழுது அது நிர்விகல்ப ஸமாதியாகும் என்பதை அடுத்த சுலோகத்தில் சொல்கிருர்: -

**ज्ञात्रादिभावं उत्सृज्य ज्ञेयमात्रस्थितिः द्रुढा ।**
**मनसो निर्विकल्पः स्यात् समाधिः योगसंज्ञितः ॥ ८२३ ॥**

**ஜ்ஞாத்ராதி³பா⁴வம் உத்ஸ்ருஜ்ய ஜ்ஞேயமாத்ரஸ்தி²தி: த்³ருடா⁴ ।**
**மனஸோ நிர்விகல்ப: ஸ்யாத் ஸமாதி⁴: யோக³ஸஞ்ஜ்ஞித: ॥ 823 ॥**

**ज्ञात्रादिभावं** = அறிகிறவன் முதலான ரூபமாக இருப்பதை,
**ஜ்ஞாத்ராதி³பா⁴வம்**
**उत्सृज्य** = விட்டுவிட்டு,
**உத்ஸ்ருஜ்ய**
**मनसः** = மனதிற்கு,
**மனஸ:**
**द्रुढा** = உறுதியான,
**த்³ருடா⁴**
**ज्ञेयमात्रस्थितिः** = ஞேயமாகமட்டும் இருக்கும் நிலை,
**ஜ்ஞேயமாத்ரஸ்தி²தி:**
**योगसंज्ञितः** = யோகம் என்று பெயருள்ள,
**யோக³ஸஞ்ஜ்ஞித:**
**निर्विकल्पः समाधिः स्यात्** = நிரவிகல்ப ஸமாதியாகும்.
**நிர்விகல்ப: ஸமாதி⁴: ஸ்யாத்**

ஞாதா, ஞானம், ஞேயம் என்று மூன்றுவிதமாக இருப்பதை விட்டுவிட்டு மனம் ஞேயமாக மாத்திரம் திடமாக இருப்பது நிர்விகல்ப ஸமாதியாகும். இதற்கே "யோகம்" என்று பெயர். **(823)**

**जले निक्षिप्तलवणं जलमात्रतया स्थितम् ।**
**पृथङ् न भाति किं त्वम्भ एकमेवावभासते ॥ ८२४ ॥**

**ஜலே நிக்ஷிப்தலவணம் ஜலமாத்ரதயா ஸ்தி²தம் ।**
**ப்ருத²ங் ந பா⁴தி கிம் த்வம்ப⁴ ஏகமேவாவபா⁴ஸதே ॥ 824 ॥**

**यथा तथैव सा वृत्तिर्ब्रह्ममात्रतया स्थिता ।**
**पृथङ् न भाति ब्रह्मैवाद्वितीयमवभासते ।**
**ज्ञात्रादिकल्पनाभावात् मतोऽयं निर्विकल्पकः ॥ ८२५ ॥**

**யதா2 ததை2வ ஸா வ்ருத்திர்ப்3ரஹ்மமாத்ரதயா ஸ்தி2தா ।**
**ப்ருத2ங் ந பா4தி ப்3ரஹ்மைவாத்3விதீயமவபா4ஸதே ।**
**ஜ்ஞாத்ராதி3கல்பநாபா4வாத் மதோ(அ)யம் நிர்விகல்பக: ॥ 825 ॥**

**यथा** = எப்படி,
**யதா2**
**जले** = தண்ணீரில்,
**ஜலே**
**निक्षिप्तलवणं** = போடப்பட்ட உப்பு,
**நிக்ஷிப்தலவணம்**
**जलमात्रतया** = ஜலமாக மட்டுமே,
**ஜலமாத்ரதயா**
**स्थितम्** = இருந்து கொண்டு,
**ஸ்தி2தம்**
**पृथक्** = தனியாக,
**ப்ருத2க்**
**न भाति** = தெரிகிறதில்லையோ,
**ந பா4தி**
**किंतु** = ஆனால்,
**கிந்து**
**अम्भ एकमेव** = ஜலம் ஒன்று மட்டுமே,
**அம்ப4 ஏகமேவ**
**अवभासते** = தோன்றுகிறதோ,
**அவபா4ஸதே**
**तथैव** = அப்படியே,
**ததை2வ**
**सा वृत्तिः** = அந்த மனோ விருத்தியானது,
**ஸா வ்ருத்தி:**
**ब्रह्ममात्रतया** = பிரஹ்ம ஸ்வரூபமாகவே,
**ப்3ரஹ்மமாத்ரதயா**
**स्थिता** = இருந்துகொண்டு,
**ஸ்தி2தா**
**पृथक्** = வேறாக,
**ப்ருத2க்**
**न भाति** = தோன்றுகிறதில்லை,
**ந பா4தி**

| | | |
|---|---|---|
| **अद्वितीयं ब्रह्मैव** | = | இரண்டற்றதான பிரஹ்மம்தான், |
| **அத்³விதீயம் ப்³ரஹ்மைவ** | | |
| **अवभासते** | = | தோன்றுகிறது, |
| **அவபா⁴ஸதே** | | |
| **ज्ञात्रादिकल्पनाभावात्** | = | அறிகிறவன் முதலான கல்பனைகளில்லாததால், |
| **ஜ்ஞாத்ராதி³கல்பநாபா⁴வாத்** | | |
| **अयं** | = | இந்த ஸமாதி, |
| **அயம்** | | |
| **निर्विकल्पक:** | = | நிர்விகல்பமாக, |
| **நிர்விகல்பக:** | | |
| **मत:** | = | எண்ணப்பட்டுள்ளது. |
| **மத:** | | |

ஜலத்தில் போட்ட உப்பு ஜலமாத்ரமாகலேயிருந்து கொண்டு ஜலத்தைக் காட்டிலும் வேறுகத் தெரிவதில்லை; ஆனுல் ஜலம் ஒன்றுதான் தெரிகிறது. இது எப்படியோ அதே போல மனஸின் அந்த வ்ருத்தியானது ப்ரஹ்மமாதாமாகவே இருந்துகொண்டு தனியாக ப்ரகாசிக்கிறதில்லை; இரண்டாவதற்ற ப்ரஹ்மம் தான் ப்ரகாசிக்கும். ஞாதா, ஞானம், ஞேயம் என்ற கல்பனைகள் இங்கு இல்லாததனுல் இது நிர்விகல்ப ஸமாதி என்று கருதப்படுகிறது. **(824-825)**

(**அவதாரிகை**) ஞாதா முதலான கல்பனைகள் நல்ல தூக்கத்திலும் கிடையாதே அது நிர்விகல்ப ஸமாதியாகிவிடுமா என்ற ஸந்தேஹம் தோன்றக்கூடியதால், நிர்விகல்ப ஸமாதியில் வ்ருத்தி உண்டு. அங்கு இருப்பது ஞானம், ப்ரகாசம், தூக்க த்தில் வ்ருத்தி இல்லை. அங்க இருப்பது அக்ஞானம், இருட்டு, அதை இங்கே கொண்டுவரக்கூடாது என்பதைக் குறிப்பிடுகிறுர்: -

**वृत्तेः सद्भाव बाधाभ्यां उभयोः भेद इष्यते ।**
**समाधिसुत्योः ज्ञानं चाज्ञानं सुप्त्यां तु नेष्यते ॥ ८२६ ॥**

**வ்ருத்தே: ஸத்³பா⁴வ பா³தா⁴ப்⁴யாம் உப⁴யோ: பே⁴த³ இஷ்யதே ।**
**ஸமாதி⁴ஸுத்யோ: ஜ்ஞானம் சாஜ்ஞானம் ஸுப்த்யாம் து நேஷ்யதே ॥ 826 ॥**

| | | |
|---|---|---|
| **वृत्तेः** | = | விருத்தியின், |
| **வ்ருத்தே:** | | |
| **सद्भाव बाधाभ्यां** | = | இருப்பு - பாதம் இவைகளால், |
| **ஸத்³பா⁴வ பா³தா⁴ப்⁴யாம்** | | |
| **समाधिसुत्योः उभयोः** | = | ஸமாதி தூக்கம் இரண்டிற்கும், |
| **ஸமாதி⁴ஸுத்யோ: உப⁴யோ:** | | |

| | | |
|---|---|---|
| **भेदः** | = | வேற்றுமை, |
| **பே⁴த³:** | | |
| **इष्यते** | = | கருதப்படுகிறது, ஸமாதியிலும் தூக்கத்திலும் |
| **இஷ்யதே** | | முறையே), |
| **ज्ञानं चाज्ञानं च** | = | ஞானமும் அக்ஞானமும், (உள்ளது ஆகையால்) |
| **ஜ்ஞானம் சாஜ்ஞானம் ச** | | |
| **सुप्त्यां** | = | தூக்கத்திலோவெனில், |
| **ஸுப்த்யாம்** | | |
| **नेष्यते** | = | ஸமாதி ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை. |
| **நேஷ்யதே** | | |

ஸமாதியில் ஞானம் இருப்பதால் விருத்தி உள்ளது. தூக்கத்தில் ஞானம் இல்லாமல் அக்ஞானம் இருப்பதால் விருத்தி இல்லை. ஸுஷுப்தியில் மனம் லயமடைந்து விட்டபடியால் மனோவிருத்தி ஏற்பட இடமில்லை.இவ்வாறு ஸமாதி, தூக்கம் இரண்டுக்கும் வேற்றுமை உள்ளது. ஆகையால் தூக்கத்தில் விகல்பங்கள் (கல்பனைகள்) இல்லாவிட்டாலும் தூக்கம் ஸமாதியாகாது. **(826)**

**सविकल्पो निर्विकल्पः समाधि द्वाविमौ हृदि ।**
**मुमुक्षोः यत्नतः कार्यौ विपरीतनिवृत्तये ॥ ८२७ ॥**

**ஸவிகல்போ நிர்விகல்ப: ஸமாதி⁴ த்³வாவிமௌ ஹ்ருதி³ ।**
**முமுக்ஷோ: யத்நத: கார்யௌ விபரீதநிவ்ருத்தயே ॥ 827 ॥**

| | | |
|---|---|---|
| **मुमुक्षोः** | = | மோக்ஷம் அடைய விருப்பம் உள்ளவனுக்கு, |
| **முமுக்ஷோ:** | | |
| **विपरीतनिवृत्तये** | = | விபரீதமான எண்ணங்கள் நீங்குவதற்காக, |
| **விபரீதநிவ்ருத்தயே** | | |
| **सविकल्पः** | = | ஸவிகல்பம், |
| **ஸவிகல்ப:** | | |
| **निर्विकल्पः** | = | நிர்விகல்பம் (என்ற), |
| **நிர்விகல்ப:** | | |
| **इमौ** | = | இந்த, |
| **இமௌ** | | |
| **द्वौ समाधि** | = | இரண்டு ஸமாதிகளும், |
| **த்³வௌ ஸமாதி⁴** | | |
| **हृदि** | = | மனதில், |
| **ஹ்ருதி³** | | |
| **यत्नतः** | = | முயற்சியுடன், |
| **யத்நத:** | | |

**कार्यौ** = செய்யத்தக்கவை.

**கார்யௌ**

ஸவிகல்பம் நிர்விகல்பம் என்ற இந்த இரண்டு ஸமாதிகளுமே முமுக்ஷு விஞல் மனஸில் விபரீதமான எண்ணம் போவதற்காக ப்ரயத்னப்பட்டு அவசியம் செய்யப்பட வேண்டியவை. **(827)**

**कृतेऽस्मिन् विपरीतायाः भावनायाः निवर्तनम् ।**
**ज्ञानस्य अप्रतिबद्धत्वं सदानन्दश्च सिध्यति ॥ ८२८ ॥**

**க்ருதே(அ)ஸ்மின் விபரீதாயாஃ பா⁴வஞயாஃ நிவர்தனம் ।**
**ஜ்ஞானஸ்ய அப்ரதிப³த்³த⁴த்வம் ஸதா³னந்த³ஶ்ச ஸித்⁴யதி ॥ 828 ॥**

**अस्मिन्** = இந்த ஸமாதி செய்யப்பட்ட பொழுது,

**அஸ்மின்**

**विपरीतायाः** = விபரீதமான,

**விபரீதாயாஃ**

**भावनायाः** = எண்ணத்தின்,

**பா⁴வஞயாஃ**

**निवर्तनम्** = நீக்கமும்,

**நிவர்தனம்**

**ज्ञानस्य** = ஞானத்திற்கு,

**ஜ்ஞானஸ்ய**

**अप्रतिबद्धत्वं** = தடைபடாத தன்மையும்,

**அப்ரதிப³த்³த⁴த்வம்**

**सदानन्दश्च** = ஸத்ரூபமான ஆநந்தமும்,

**ஸதா³னந்த³ஶ்ச**

**सिध्यति** = ஸித்திக்கிறது.

**ஸித்⁴யதி**

இந்த இரண்டுவித ஸமாதியும் செய்யப்பட்டதேயாஞல், விபரீதமான எண்ணம் நீங்கிவிடும். ஞானத்திற்குத் தடங்கல் இருக்காது. ப்ரஹ்மானந்தம் ஸித்திக்கும். **(828)**

**(அவதாரிகை)** பொதுவாக இரண்டுவித ஸமாதிகளின் பிரயோஜனத்தைச் சொல்லிவிட்டு அவை இரண்டையும் விஸ்தாரமாகச் சொல்ல ஆரம்பிக்கிஞர். முதலில் ஸ்விகல்ப ஸமாதி என்பது த்ருச்யாநுவித்தம், சப்தாநுவித்தம் என்று இருவகைப்படுவதில் த்ருச்யாநுவித்தத்தைப்பற்றி முதலில் 830 முதல் 865 முடிய 36 சுலோகங்களில் வர்ணிக்கிஞர்: -

**यत्र यत्र मनो याति ब्रह्मणः तत्र दर्शनात् ।**
**मनसो धारणं चैव धारणा सा परा मता ॥ ९१८ ॥**

**யத்ர யத்ர மனோ யாதி ப்³ரஹ்மண꞉ தத்ர த³ர்ஶனாத் ।**
**மனஸோ தா⁴ரணம் சைவ தா⁴ரணா ஸா பரா மதா ॥ 918 ॥**

**यत्र यत्र** = எங்கெங்கு,
**யத்ர யத்ர**
**मनः** = மனம்,
**மன꞉**
**याति** = செல்கிறதோ,
**யாதி**
**तत्र** = அங்கு,
**தத்ர**
**ब्रह्मणः** = ப்ரஹ்மத்தை,
**ப்³ரஹ்மண꞉**
**दर्शनात्** = காண்பதால்,
**த³ர்ஶனாத்**
**मनसः** = மனதை,
**மனஸ꞉**
**धारणं चैव** = நிலை நிறுத்துவதுதான்,
**தா⁴ரணம் சைவ**
**सा** = அந்த,
**ஸா**
**परा** = மேலான,
**பரா**
**धारणा** = தாரணையாக,
**தா⁴ரணா**
**मता** = கருதப்பட்டிருக்கிறது.
**மதா**

எங்கே எங்கே மனஸ் போகிறதோ அங்கேயெல்லாம் பிரஹ்மத்தை பார்ப்பதினால் ப்ரஹ்மத்தில் மனலை நிலைநிறுத்துவது மேலான **தார**ணையாக எண்ணப்படுகிறது எல்லா வஸ்துக்களையும் ப்ரஹ்மமாகப் பார்ப்பவனுக்கு எந்த விஷயத்தை நோக்கி மனம் சென்றாலும், அந்த விஷயம் ப்ரஹ்மமாகவே காண்கிறபடியால் ப்ரஹ்மத்தில் மனதின் தாரணை தானாகவே ஏற்பட்டுவிடுகிறது. **(918)**

**ब्रह्मैवास्मीति सद्वृत्त्या निरालम्बतया स्थितिः ।**
**ध्यानशब्देन विख्याता परमानन्ददायिनी ॥ ९१९ ॥**

**ப்³ரஹ்மைவாஸ்மீதி ஸத்³வ்ருத்த்யா நிராலம்ப³தயா ஸ்தி²தி꞉ ।**
**த்⁴யானஶப்³தே³ன விக்²யாதா பரமானந்த³தா³யினீ ॥ 919 ॥**

**ब्रह्मैव अस्मि इति** = ப்ரஹ்மமாகவே இருக்கிறேன் என்ற,
**ப்³ரஹ்மைவ அஸ்மி இதி**
**सद्वृत्त्या** = ஸத்ரூபமான ப்ரஹ்மாகார விருத்தியோடு,
**ஸத்³வ்ருத்த்யா**
**निरालम्बतया** = வேறு ஒன்றையும் விஷயீகரிக்காத
**நிராலம்ப³தயா** தன்மையோடு,
**स्थितिः** = இருப்பது,
**ஸ்தி²தி꞉**
**ध्यानशब्देन** = தியானம் என்ற சொல்லால்,
**த்⁴யானஶப்³தே³ன**
**विख्याता** = பிரஸித்தமாகச் சொல்லப்பட்டது. (இது)
**விக்²யாதா**
**परमानन्ददायिनी** = பேராநந்தத்தைக் கொடுக்கக் கூடியது.
**பரமானந்த³தா³யினீ**

பிரஹ்மமே நான் என்கிற நல்ல (ஸத்வஸ்துவை விஷயீகரிக்கிற) விருத்தியுடன் வேறு எவ்வித ஆலம்பனமுமில்லாமல் இருக்கும் நிலை **தியானம்** என்ற வார்த்தையினால் சொல்லப்படுகிறது. அது உத்தமமான ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியது. **(919)**

**निर्विकारतया वृत्त्याः ब्रह्माकारतया पुनः ।**
**वृत्तिविस्मरणं सम्यक् समाधिः ज्ञानसंज्ञकः ॥ ९२० ॥**

**நிர்விகாரதயா வ்ருத்த்யா꞉ ப்³ரஹ்மாகாரதயா புன꞉ ।**
**வ்ருத்திவிஸ்மரணம் ஸம்யக் ஸமாதி⁴꞉ ஜ்ஞானஸஞ்ஜ்ஞக꞉ ॥ 920 ॥**

**वृत्त्याः** = விருத்திக்கு,
**வ்ருத்த்யா꞉**
**निर्विकारतया** = மாறுதலற்ற தன்மையாலும்,
**நிர்விகாரதயா**
**ब्रह्माकारतया** = ப்ரஹ்மாகாரத் தன்மையாலும்,
**ப்³ரஹ்மாகாரதயா**

**सम्यक्** = நன்ருக,

**ஸம்யக்**

**वृत्तिविस्मरणं** = விருத்தியை மறத்தல்,

**வ்ருத்திவிஸ்மரணம்**

**ज्ञानसंज्ञकः** = ஞானம் என்ற பெயருள்ள,

**ஜ்ஞானஸஞ்ஜ்ஞகஃ**

**समाधिः** = ஸமாதியாகும்.

**ஸமாதி⁴ঃ**

விருத்தியானது எவ்வித விகாரத்தையும் (மாறுதலையும்) அடையாமல் பிரஹ்மாகாரமாக இருக்கும்போது நன்ருக விருத்தியையே மறந்துவிடுவது **ஸமாதி** யாகும். இதற்கு ஞானம் என்று பெயர். **(920)**

(**அவதாரிகை**) சிஷ்யன் ஸமாதி விஷயமாக 793, 794 சுலோகங்களில் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி வருகையில் ஸமாதியை கெடுக்கக் கூடியவை எவையென்ற கேள்வி மீதப்பட்டுவிட்டபடியால் அதையும் இப்பொழுது சொல்லி ஸ்ரீ குரு தன் ஆசீர்வாதத்துடன் உபதேசத்தை முடிக்கிருர்: -

**समाधौ क्रियमाणे तु विघ्ना ह्यायान्ति वै बलात् ।**
**अनुसन्धानराहित्यं आलस्यं भोगलालसा ॥ ९२१ ॥**

**ஸமாதௌ⁴ க்ரியமாணே து விக்⁴னா ஹ்யாயாந்தி வை ப³லாத் ।**
**அனுஸந்தா⁴னராஹித்யம் ஆலஸ்யம் போ⁴க³லாலஸா ॥ 921 ॥**

**भयं तमश्च विक्षेपः तेजस्पन्दश्च शून्यता ।**
**एवं यत् विघ्नबाहुल्यं त्याज्यं तत् ब्रह्मविज्जनैः ॥ ९२२ ॥**

**ப⁴யம் தமஶ்ச விக்ஷேபঃ தேஜஸ்பந்த³ஶ்ச ஶூன்யதா ।**
**ஏவம் யத் விக்⁴னபா³ஹுல்யம் த்யாஜ்யம் தத் ப்³ரஹ்மவிஜ்ஜனை: ॥ 922 ॥**

**समाधौ** = ஸமாதியானது,

**ஸமாதௌ⁴**

**क्रियमाणे तु** = செய்யப்படும் பொழுதோவெனில்,

**க்ரியமாணே து**

**बलात्** = பலாத்காரமாக,

**ப³லாத்**

**विघ्ना** = விக்னங்கள்,

**விக்⁴னா**

**आयान्ति** = வருகின்றன,

**ஆயாந்தி**

| | | |
|---|---|---|
| **अनुसन्धानराहित्यं**<br>**அனுஸந்தா⁴னராஹித்யம்** | = | தொடர்ச்சியான நினைவு இல்லாமை, |
| **आलस्यं**<br>**ஆலஸ்யம்** | = | சோம்பல், |
| **भोगलालसा**<br>**போ⁴க³லாலஸா** | = | விஷயஸுகானுபவத்தில் அதிக ஆசை, |
| **भयं**<br>**ப⁴யம்** | = | பயம், |
| **तमः**<br>**தம:** | = | அக்ஞானம், |
| **विक्षेपः**<br>**விக்ஷேப:** | = | விக்ஷேபம், |
| **तेजस्पन्दश्च**<br>**தேஜஸ்பந்த³ஶ்ச** | = | ஒளியின் அசைவு, |
| **शून्यता**<br>**ஶூன்யதா** | = | ஒன்றும் தோன்றுமலிருத்தல், |
| **एवं**<br>**ஏவம்** | = | இவ்விதமான, |
| **यत् विघ्नबाहुल्यं**<br>**யத் விக்⁴னபா³ஹுல்யம்** | = | எந்த அதிகமான இடைஞ்சல்களுண்டோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **ब्रह्मविज्जनैः**<br>**ப்³ரஹ்மவிஜ்ஜனை:** | = | ப்ரஹ்ம வித்தான மனிதர்களால், |
| **त्याज्यं**<br>**த்யாஜ்யம்** | = | விலக்கத்தக்கது. |

ஸமாதி செய்து கொண்டிருக்கும் போதே பலாத்காரமாய் இடையூறுகள் வந்துவிடுகின்றன தொடர்ந்து அனுஸந்தானம் செய்யாதிருத்தல், சோம்பல், விஷய போகத்தில் அதிக ஆசை பயம், இருட்டு (அக்ஞானம்) விக்ஷேபம் (தியானத்திற்கு இடைஞ்சலாக வேறு விஷயங்கள் மனதைத்தாக்குதல்) (முன் தோன்றக்கூடிய) ஒளி ஆடிக்கொண்டேயிருப்பது, வெறும் சூன்யமாயிருக்கும் தன்மை இவ்விதமாக எந்த பல விக்னங்கள் இருக்கின்றனவோ அவை பிரஹ்மத்தை யறியும் ஜனங்களால் விடத்தக்கவை. **(921-922)**

**विघ्नान् एतान् परित्यक्त्वा प्रमादरहितो वशी ।**
**समाधिनिष्ठया ब्रह्म साक्षात् भवितुं अर्हसि ॥ ९२३ ॥**

**விக்⁴னன் ஏதான் பரித்யக்த்வா ப்ரமாத³ரஹிதோ வஶீ ।**
**ஸமாதி⁴நிஷ்ட²யா ப்³ரஹ்ம ஸாக்ஷாத் ப⁴விதும் அர்ஹஸி ॥ 923 ॥**

**एतान् विघ्नान्** = இந்த இடைஞ்சல்களை,
**ஏதான் விக்⁴னன்**
**परित्यक्त्वा** = முழுவதும் விலக்கிவிட்டு,
**பரித்யக்த்வா**
**प्रमादरहितः** = கவனக்குறைவற்றவனாய்,
**ப்ரமாத³ரஹித:**
**वशी** = புலன்களை தன்வசத்தில் கொண்டவனாய்,
**வஶீ**
**समाधिनिष्ठया** = ஸமாதியில் நிலையாக இருப்பதால்,
**ஸமாதி⁴நிஷ்ட²யா**
**साक्षात्** = நேராக,
**ஸாக்ஷாத்**
**ब्रह्म** = ப்ரஹ்மமாக,
**ப்³ரஹ்ம**
**भवितुं** = ஆவதற்கு,
**ப⁴விதும்**
**अर्हसि** = தக்கவனாகிறாய்.
**அர்ஹஸி**

இந்த விக்னங்களையெல்லாம் நன்கு விலக்கிவிட்டு, கவனக்குறைவு இல்லாமல், (மனோவாக்கு காயங்களை) வசப்படுத்திக்கொண்டு, ஸமாதியில் நிலைத்திருப்பதினால் ஸாக்ஷாத்தாக பிரஹ்மமாக நீ ஆக (இருக்க) வேண்டும். **(923)**

**(அவதாரிகை)** ஸ்ரீ குருவின் உபதேசத்தைக்கேட்டு அதன்படி நடந்து ஆத்மதத்வத்தை அறிந்தவுடன் தன் நன்றியைத் தெரிவிக்க மறுபடியும் சிஷ்யன் குருவின் ஸமீபம் வருகிறான்: -

**इति गुरुवचनात् श्रुतिप्रमाणात् परं अवगम्य सतत्वं आत्मयुक्तथा ।**
**प्रशमितकरणः समाहितात्मा क्वचित् अचलाकृतिः आत्मनिष्ठितोऽभूत् ॥ ९२४ ॥**

**இதி கு³ருவசனாத் ஶ்ருதிப்ரமாணாத்**
**பரம் அவக³ம்ய ஸதத்வம் ஆத்மயுக்ததா² ।**
**ப்ரஶமிதகரண: ஸமாஹிதாத்மா**
**க்வசித் அசலாக்ருதி: ஆத்மநிஷ்டி²தோ(அ)பூ⁴த் ॥ 924 ॥**

| | | |
|---|---|---|
| **इति**<br>**இதி** | = | இவ்வாறு, |
| **गुरुवचनात्**<br>**கு³ருவசனாத்** | = | குருவின் வார்த்தையாலும், |
| **श्रुतिप्रमाणात्**<br>**ஶ்ருதிப்ரமாணாத்** | = | வேதபிரமாணத்தாலும், |
| **आत्मयुक्तथा**<br>**ஆத்மயுக்ததா²** | = | தன் யுக்தியாலும், |
| **परं**<br>**பரம்** | = | மேலான, |
| **सतत्वं**<br>**ஸதத்வம்** | = | ஆத்ம தத்வத்தை, |
| **अवगम्य**<br>**அவக³ம்ய** | = | அறிந்து, |
| **प्रशमितकरणः**<br>**ப்ரஶமிதகரணঃ** | = | புலன்களையடக்கிக்கொண்டு, |
| **समाहितात्मा**<br>**ஸமாஹிதாத்மா** | = | மனோவிருத்திகளை யடக்கியவனாய், |
| **क्वचित्**<br>**க்வசித்** | = | ஒரு இடத்தில், |
| **अचलाकृतिः**<br>**அசலாக்ருதிঃ** | = | அசைவற்ற சரீரமுள்ளவனாக (அமர்ந்து), |
| **आत्मनिष्ठितः**<br>**ஆத்மநிஷ்டி²தঃ** | = | ஆத்மஸ்வரூபத்திலேயே நிலைத்தவனாக, |
| **अभूत्**<br>**அபூ⁴த்** | = | இருந்தான். |

இவ்விதம் குருவின் உபதேசத்தினாலும் வேதமாகிற பிரமாணத்தினாலும் தன்னுடைய யுக்தியினாலும் மேலான ஆத்ம தத்வத்தை அறிந்துகொண்டு, (மனஸ் இந்திரியங்களாகிய) கரணங்களை அடக்கிக்கொண்டு, ஒரே குறியாக மனஸை வைத்துக்கொண்டு (ஸமாதி செய்துகொண்டு), அசைவற்ற சரீரத்துடன் தனிமையான ஒரு இடத்தில் இருந்துகொண்டு, ஆத்மாவிலேயே நிலைத்தவனாக சிஷ்யன் இருந்து வந்தான். **(924)**

**बहुकालं समाधाय स्वस्वरूपे तु मानसम् ।**
**उत्थाय परमानन्दात् गुरुं एत्य पुनः मुदा ।**
**प्रणाम पूर्वकं धीमान् सगद्गदं उवाच ह ॥ ९२५ ॥**

**ப³ஹுகாலம் ஸமாதா⁴ய ஸ்வஸ்வரூபே து மானஸம் ।**
**உத்தா²ய பரமானந்தா³த் கு³ரும் ஏத்ய புன: முதா³ ।**
**ப்ரணம பூர்வகம் தீ⁴மான் ஸக³த்³க³த³ம் உவாச ஹ ॥ 925 ॥**

| | | |
|---|---|---|
| **धीमान्** தீ⁴மான் | = | புத்திமானுன சிஷ்யன், |
| **बहुकालं** ப³ஹுகாலம் | = | வெகு நேரம், |
| **स्वस्वरूपे** ஸ்வஸ்வரூபே | = | தனது ஆத்ம ஸ்வரூபத்தில், |
| **मानसम्** மானஸம் | = | மனதை, |
| **समाधाय** ஸமாதா⁴ய | = | நிலைநிறுத்தி, |
| **उत्थाय** உத்தா²ய | = | எழுந்திருந்து, |
| **पुनः** புன: | = | மறுபடியும், |
| **परमानन्दात्** பரமானந்தா³த் | = | மிகுந்த ஸந்தோஷத்துடன், |
| **गुरुं** கு³ரும் | = | குருவை, |
| **एत्य** ஏத்ய | = | அடைந்து, |
| **मुदा** முதா³ | = | ஸந்தோஷத்துடன், |
| **प्रणाम पूर्वकं** ப்ரணம பூர்வகம் | = | நமஸ்கார பூர்வகமாக, |
| **सगद्गदं** ஸக³த்³க³த³ம் | = | தழதழத்த வார்த்தையுடன், |
| **उवाच** உவாச | = | சொன்னுன். |

வெகுகாலம் தன் ஸ்வரூபத்திலேயே மனஸை நன்கு நிலைத்திருக்கச்செய்து பிறகு எழுந்திருந்து மறுபடியும் பரமானந்தத்துடன் குருவை அடைந்து நமஸ்கார பூர்வகமாக தழதழத்த சொல்லுடன் அந்த புத்திமானுன சிஷ்யன் பரமானந்தத்துடன் (இவ்விதம்) சொன்னுன். **(925)**

**नमो नमस्ते गुरवे नित्यानन्द स्वरूपिणे ।**
**मुक्तसङ्गाय शान्ताय त्यक्ताहंताय ते नमः ॥ ९२६ ॥**

**நமோ நமஸ்தே கு³ரவே நித்யானந்த³ ஸ்வரூபிணே ।**
**முக்தஸங்கா³ய ஶாந்தாய த்யக்தாஹந்தாய தே நமঃ ॥ 926 ॥**

**नित्यानन्द स्वरूपिणे** = அழிவற்ற ஆநந்தஸ்வரூபியாக இருக்கும்,
**நித்யானந்த³ ஸ்வரூபிணே**
**गुरवे** = குருவான,
**கு³ரவே**
**ते** = தங்களுக்கு,
**தே**
**नमो नम:** = நமஸ்காரம், நமஸ்காரம்,
**நமோ நம:**
**मुक्तसङ्गाय** = ஸங்கத்தைவிட்டவராயும்,
**முக்தஸங்கா³ய**
**शान्ताय** = சாந்தராயும்,
**ஶாந்தாய**
**त्यक्ताहंताय** = அஹங்காரத்தை விட்டவராயும் உள்ள,
**த்யக்தாஹந்தாய**
**ते** = தங்களுக்கு,
**தே**
**नम:** = நமஸ்காரம்.
**நமः**

அழிவற்ற ஆனந்த ஸ்வரூபமாயிருக்கும் குருவான தங்களுக்கு நமஸ்காரம், நமஸ்காரம். எல்லாவித ஸங்கத்தையும் விட்டவராயும் சாந்தராயும், அஹங்காரத்தை விட்டவராயும் இருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். **(926)**

**दयाधाम्ने नमो भूम्ने महिम्न: पारमस्य ते ।**
**नैवास्ति यत्कटाक्षेण ब्रह्मैवाभवं अद्वयम् ॥ ९२७ ॥**

**த³யாதா⁴ம்னே நமோ பூ⁴ம்னே மஹிம்னঃ பாரமஸ்ய தே ।**
**நைவாஸ்தி யத்கடாக்ஷேண ப்³ரஹ்மைவாப⁴வம் அத்³வயம் ॥ 927 ॥**

**दयाधाने** = கருணைக்கு இருப்பிடமான,
**த³யாதா⁴ம்னே**
**भूम्ने** = மிகப்பெரிய ப்ரஹ்மமாக இருக்கும் (தங்களுக்கு),
**பூ⁴ம்னே**

| | | |
|---|---|---|
| **नमः** | = | நமஸ்காரம். |
| **நம:** | | |
| **यत्कटाक्षेण** | = | எந்த உங்களுடைய கடாக்ஷத்தால், |
| **யத்கடாக்ஷேண** | | |
| **अद्वयम्** | = | இரண்டற்ற, |
| **அத்³வயம்** | | |
| **ब्रह्मैव** | = | ப்ரஹ்மமாகவே, |
| **ப்³ரஹ்மைவ** | | |
| **अभवं** | = | (நான்) ஆகி விட்டேனே, |
| **அப⁴வம்** | | |
| **अस्य** | = | இந்த, |
| **அஸ்ய** | | |
| **ते** | = | உங்களுடைய, |
| **தே** | | |
| **महिम्नः** | = | மாஹாத்ம்யத்திற்கு, |
| **மஹிம்ன:** | | |
| **पारं** | = | எல்லை, |
| **பாரம்** | | |
| **नैवास्ति** | = | கிடையவே கிடையாது. |
| **நைவாஸ்தி** | | |

தயைக்கு இருப்பிடமாயும் பூமாவாயும் (மிகப்பெரிய பிரஹ்மமாக) இருக்கும் தங்களுக்கு நமஸ்காரம். எவருடைய கடாக்ஷத்தினால் நான் இரண்டற்ற பிரஹ்மமாகவே ஆகி விட்டேனே, அந்த தங்களுடைய மஹிமைக்கு எல்லையே கிடையாது.

**(927)**

## किं करोमि क्व गच्छामि किं गृह्णामि त्यजामि किम् ।
## यत् मया पूरितं विश्वं महाकल्पाम्बुना यथा ॥ ९२८ ॥

**கிம் கரோமி க்வ க³ச்சா²மி கிம் க்³ருஹ்ணாமி த்யஜாமி கிம் ।**
**யத் மயா பூரிதம் விஸ்வம் மஹாகல்பாம்பு³னா யதா² ॥ 928 ॥**

| | | |
|---|---|---|
| **यत्** | = | எதனால், |
| **யத்** | | |
| **महाकल्पाम्बुना यथा** | = | மஹாப்ரளய காலத்து ஜலத்தால்போல், |
| **மஹாகல்பாம்பு³னா யதா²** | | |
| **मया** | = | என்னால், |
| **மயா** | | |

| | | |
|---|---|---|
| **विश्वं**<br>**விஶ்வம்** | = | பிரபஞ்சம், |
| **पूरितं**<br>**பூரிதம்** | = | நிரப்பப்பட்டிருக்கிறதோ (அதனுல்), |
| **किं करोमि**<br>**கிம் கரோமி** | = | (நான்) எதைச் செய்வேன்? |
| **क्व**<br>**க்வ** | = | எங்கே, |
| **गच्छामि**<br>**க³ச்சா²மி** | = | செல்வேன்? |
| **किं**<br>**கிம்** | = | எதை, |
| **गृह्णामि**<br>**க்³ருஹ்ணமி** | = | எடுப்பேன்? |
| **किम् त्यजामि**<br>**கிம் த்யஜாமி** | = | எதை விடுவேன்? |

பிரளய காலத்து ஜலம் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருப்பதுபோல ஜகத்து முழுவதையும் ப்ரஹ்மரூபியான நான் வியாபித்திருக்கிறபடியால் நான் என்ன செய்யமுடியும்? எங்கே போவேன்? எதை எடுத்துக்கொள்வேன்? எதைத் தள்ளு வேன்? என்னைக்காட்டிலும் வேறுன இடமும் பொருளுமிருந்தால் அல்லவா நான் போகவும் காரியத்தைச் செய்யவும் எடுக்கவும் விடவும் முடியும். **(928)**

**मयि सुखबोधपयोधौ महति ब्रह्माण्ड बुद्बुदसहस्रम् ।**
**मायामयेन मरुता भूत्वा भूत्वा पुनः तिरोधत्ते ॥ ९२९ ॥**

**மயி ஸுக²போ³த⁴ பயோதௌ⁴ மஹதி ப்³ரஹ்மாண்ட³ பு³த்³பு³த³ஸஹஸ்ரம் ।**
**மாயாமயேன மருதா பூ⁴த்வா பூ⁴த்வா புனः திரோத⁴த்தே ॥ 929 ॥**

| | | |
|---|---|---|
| **महति**<br>**மஹதி** | = | பெரிய, |
| **सुखबोधपयोधौ**<br>**ஸுக²போ³த⁴ பயோதௌ⁴** | = | ஆனந்த-ஞான ஸமுத்ரமாகிய, |
| **मयि**<br>**மயி** | = | என்னிடத்தில், |
| **मायामयेन**<br>**மாயாமயேன** | = | மாயாரூபமான, |
| **मरुता**<br>**மருதா** | = | காற்றினுல், |

**ब्रह्माण्ड बुद्बुदसहस्रम्** = ஆயிரக்கணக்கான ப்ரஹ்மாண்டங்களாகிற

**ப்³ரஹ்மாண்ட³ பு³த்³பு³த³ஸஹஸ்ரம்** நீர்க்குமிழி,

**भूत्वा भूत्वा** = உண்டாகி உண்டாகி,

**பூ⁴த்வா பூ⁴த்வா**

**पुनः** = திரும்பத்திரும்ப,

**புன:**

**तिरोधत्ते** = மறைந்துவிடுகிறது.

**திரோத⁴த்தே**

பெரிய ஆனந்தக்ஞான ஸமுத்திரமாகிய என்னிடத்தில் ஆயிரக்கணக்கான பிரஹ்மாண்டங்களாகிற நீர்குமிழிகள் மாயா மயமான காற்றினுல் உண்டாகி உண்டாகி மறுபடியும் மறைகின்றன. **(929)**

**नित्यानन्दस्वरूपोऽहं आत्माहं त्वदनुग्रहात् ।**
**पूर्णोऽहं अनवद्योऽहं केवलोऽहं च सद्गुरो ॥ ९३० ॥**

**நித்யானந்த³ஸ்வரூபோ(அ)ஹம் ஆத்மாஹம் த்வத³னுக்³ரஹாத் ।**
**பூர்ணோ(அ)ஹம் அனவத்³யோ(அ)ஹம் கேவலோ(அ)ஹம் ச ஸத்³கு³ரோ ॥ 930 ॥**

**सद्गुरो** = ஸத்குருவே,

**ஸத்³கு³ரோ**

**त्वदनुग्रहात्** = உங்களுடைய அனுக்ரஹத்தால்,

**த்வத³னுக்³ரஹாத்**

**अहं** = நான்,

**அஹம்**

**नित्यानन्दस्वरूपः** = அழிவற்ற ஆனந்த ஸ்வரூபனுக இருக்கிறேன்,

**நித்யானந்த³ஸ்வரூப:**

**अहं** = நான்,

**அஹம்**

**आत्मा** = ஆத்மாவாக இருக்கிறேன்,

**ஆத்மா**

**अहं** = நான்,

**அஹம்**

**पूर्णः** = எங்கும் நிறைந்தவனுக இருக்கிறேன்,

**பூர்ண:**

**अहं** = நான்,

**அஹம்**

**अनवद्यः** = தோஷமில்லாதவனுயிருக்கிறேன்,

**அனவத்³ய:**

**अहं** = நான்,

**அஹம்**

**केवलश्च** = தனித்தவனுகவும் இருக்கிறேன்.

**கேவலஶ்ச**

ஹே ஸத்குரோ, தங்களுடைய அனுக்ரஹத்திஞல் நான் நித்யமான ஆனந்த ஸ்வரூபனுய் இருக்கிறேன். ஆத்மா நான். நிறைந்தவன் நான். தோஷமற்றவன் நான். தனியாக இருப்பவன் (ஸங்கமற்றிருப்பவன்) நான். **(930)**

## अकर्ताऽहं अभोक्ताऽहं अविकारोऽहं अक्रियः ।
## आनन्दघन एवाहं असङ्गोऽहं सदाशिवः ॥ ९३१ ॥

**அகர்தா(அ)ஹம் அபோ⁴க்தா(அ)ஹம் அவிகாரோ(அ)ஹம் அக்ரிய: ।**
**ஆனந்த³க⁴ன ஏவாஹம் அஸங்கோ³(அ)ஹம் ஸதா³ஶிவ: ॥ 931 ॥**

**अहं** = நான்,

**அஹம்**

**अकर्ता** = செய்கிறவனல்ல,

**அகர்தா**

**अहं** = நான்,

**அஹம்**

**अभोक्ता** = அனுபவிக்கிறவனல்ல,

**அபோ⁴க்தா**

**अहं** = நான்,

**அஹம்**

**अविकारः** = மாறுதலற்றவன்,

**அவிகார:**

**अक्रियः** = செய்கையில்லாதவன்,

**அக்ரிய:**

**अहं** = நான்,

**அஹம்**

**आनन्दघन एव** = ஆனந்தக்கட்டியாகவே இருக்கிறேன்,

**ஆனந்த³க⁴ன ஏவ**

**अहं** = நான்,

**அஹம்**

| | | |
|---|---|---|
| **असङ्गः**<br>**அஸங்க³:** | = | பற்றற்றவன், |
| **सदाशिवः**<br>**ஸதா³ஶிவ:** | = | எப்பொழுதும் மங்களமான ப்ரஹ்ம ஸ்வரூபம். |

செய்கிறவனல்லாதவன் நான். அனுபவிக்கிறவன் அல்லாதவன் நான். நான் விகாரம். (மாறுதல்) அற்றவன். நான் கிரியை யற்றவன், ஆனந்தகனனே நான். நான் ஸங்கமில்லாதவன், எப்பொழுதும் மங்களமாயிருப்பவன். **(931)**

## त्वत्कटाक्षवरचान्द्रचन्द्रिकापातधूतभवतापजश्रमः ।
## प्राप्तवान् अहं अखण्डवैभवानन्दं आत्मपदं अक्षयं क्षणात् ॥ ९३२ ॥

**த்வத்கடாக்ஷவரசாந்த்³ரசந்த்³ரிகா**
**பாததூ⁴தப⁴வதாபஜஶ்ரம: ।**
**ப்ராப்தவான் அஹம் அக²ண்ட³வைப⁴வானந்த³ம்**
**ஆத்மபத³ம் அக்ஷயம் க்ஷணாத் ॥ 932 ॥**

| | | |
|---|---|---|
| **त्वत्कटाक्ष**<br>**த்வத்கடாக்ஷ** | = | உங்களுடைய கடாக்ஷமாகிற, |
| **वरचान्द्रचन्द्रिका**<br>**வரசாந்த்³ரசந்த்³ரிகா** | = | சிறந்த சந்திரனின் நிலவு, |
| **पात**<br>**பாத** | = | விழுந்ததால், |
| **धूत**<br>**தூ⁴த** | = | போக்கப்பட்ட, |
| **भवतापजश्रमः**<br>**ப⁴வதாபஜஶ்ரம:** | = | ஸம்ஸாரத்தால் உண்டான தாபத்தையுடைய, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **क्षणात्**<br>**க்ஷணாத்** | = | ஒரு க்ஷணத்தில், |
| **अक्षयं**<br>**அக்ஷயம்** | = | அழிவற்ற, |
| **अखण्डवैभवानन्दं**<br>**அக²ண்ட³வைப⁴வானந்த³ம்** | = | எல்லையற்ற மஹிமையை உடைய ஆனந்த ரூபமான, |
| **आत्मपदं**<br>**ஆத்மபத³ம்** | = | ஆத்மநிலையை, |

**प्राप्तवान्** = அடைந்துவிட்டேன்.

**ப்ராப்தவான்**

தங்களுடைய கடாக்ஷமாகிற உத்தமமான சந்திர நிலா வெளிச்சம் விழுவதினால் ஸம்ஸாரதாபத்தினால் ஏற்படும் சிரமம் நீங்கினவனாக நான் ஒரு க்ஷணத்தில் எல்லையற்ற வைபவத்தோடு கூடிய ஆனந்தமாயுள்ள அக்ஷயமான ஆத்ம பதத்தை அடைந்துவிட்டேன். **(932)**

## छायया स्पृष्टं उष्णं वा शीतं वा दुष्टु सुष्टु वा ।
## न स्पृशत्येव यत्किंचित् पुरुषं तद्विलक्षणम् ॥ ९३३ ॥

**சா²யயா ஸ்ப்ருஷ்டம் உஷ்ணம் வா ஶீதம் வா து³ஷ்டு² ஸுஷ்டு² வா ।**
**ந ஸ்ப்ருஶத்யேவ யத்கிஞ்சித் புருஷம் தத்³விலக்ஷணம் ॥ 933 ॥**

**छायया** = நிழலோடு,

**சா²யயா**

**स्पृष्टं** = ஒட்டிய,

**ஸ்ப்ருஷ்டம்**

**उष्णं वा** = சூடோ,

**உஷ்ணம் வா**

**शीतं वा** = குளிர்ச்சியோ,

**ஶீதம் வா**

**दुष्टु** = கெட்டதோ,

**து³ஷ்டு²**

**सुष्टु वा** = நல்லதோ,

**ஸுஷ்டு² வா**

**यत्किंचित्** = எந்த ஒன்றும்,

**யத்கிஞ்சித்**

**तद्विलक्षणम्** = அந்த நிழலைக்காட்டிலும் வேறுபட்ட

**தத்³விலக்ஷணம்** தன்மையுள்ள,

**पुरुषं** = புருஷனை,

**புருஷம்**

**न स्पृशत्येव** = தொடுவதேயில்லை.

**ந ஸ்ப்ருஶத்யேவ**

நிழலினால் தொடப்பட்ட உஷ்ணமோ, சீதமோ, கெட்டதோ, நல்லதோ, கொஞ்சமேனும் அதற்கு வேறாயிருக்கும் புருஷனைத் தொடுவதேயில்லை. **(933)**

न साक्षिणं साक्ष्यधर्माः संस्पृशन्ति विलक्षणम्।
अविकारमुदासीनं गृहधर्माः प्रदीपवत्॥ ९३४॥

ந ஸாக்ஷிணம் ஸாக்ஷ்யத⁴ர்மாঃ ஸம்ஸ்ப்ருஶந்தி விலக்ஷணம் ।
அவிகாரமுதா³ஸீனம் க்³ருஹத⁴ர்மாঃ ப்ரதீ³பவத் ॥ 934 ॥

गृहधर्माः = வீட்டின் தன்மைகள்,
க்³ருஹத⁴ர்மாঃ

प्रदीपवत् = தீபத்தை ஒட்டாததுபோல்,
ப்ரதீ³பவத்

साक्ष्यधर्माः = பார்க்கப்படும் பொருள்களின் தன்மைகள்,
ஸாக்ஷ்யத⁴ர்மாঃ

विलक्षणम् = வேறுன ஸ்வபாவமுள்ளவனும்,
விலக்ஷணம்

अविकारं = மாறுதலற்றவனும்,
அவிகாரம்

उदासीनं = ஸ்ம்பந்தப்படாதவனுயுமுள்ள,
உதா³ஸீனம்

साक्षिणं = பார்க்கும் ஆத்மாவை,
ஸாக்ஷிணம்

न संस्पृशन्ति = தொடுகிறதில்லை.
ந ஸம்ஸ்ப்ருஶந்தி

வீட்டின் தர்மங்கள் (அதை பிரகாசிக்கச் செய்யும்) தீபத்தை எப்படி தொடாதோ, அவ்விதமே பார்க்கப்படுகிற பதார்த்தங்களின் தர்மங்கள் வேறு லக்ஷணமுடையவனுய் விகாரமற்றவனுய் உதாஸீனனுய் இருக்கும் ஸாக்ஷியைத் தொடாது. (934)

रवेर्यथा कर्मणि साक्षिभावो वह्नेर्यथा वायसि दाहकत्वम्।
रज्जोर्यथाऽऽरोपितवस्तुसङ्गः तथैव कूटस्थचिदात्मनो मे॥ ९३५॥

ரவேர் யதா² கர்மணி ஸாக்ஷிபா⁴வோ
வஹ்னேர் யதா² வாயஸி தா³ஹகத்வம் ।
ரஜ்ஜோர் யதா²(ஆ)ரோபித வஸ்து ஸங்க³ঃ
ததை²வ கூடஸ்த² சிதா³த்மனோ மே ॥ 935 ॥

यथा = எப்படி,
யதா²

रवेः = ஸூரியனுக்கு,
ரவே:

**कर्मणि** = (பிராணிகள் செய்யும்) காரியத்தில்,

**கர்மணி**

**साक्षिभाव:** = ஸாக்ஷித்தன்மையோ,

**ஸாக்ஷிபா⁴வ:**

**यथा वा** = எப்படி,

**யதா² வா**

**अयसि** = இரும்பில்,

**அயஸி**

**वह्ने:** = நெருப்பின்,

**வஹ்னே:**

**दाहकत्वम्** = சுடும் தன்மையோ,

**தா³ஹகத்வம்**

**यथा** = எப்படி,

**யதா²**

**रज्जो:** = கயிற்றிற்கு,

**ரஜ்ஜோ:**

**आरोपितवस्तुसङ्ग:** = பிராந்தியால் ஏற்பட்ட,

**ஆரோபிதவஸ்துஸங்க³:**

**वस्तुसङ्ग:** = பொருளின் ஸம்பந்தமோ,

**வஸ்து ஸங்க³:**

**तथैव** = அப்படியே,

**ததை²வ**

**कूटस्थचिदात्मन:** = கூடஸ்தனுன ஞானஸ்வரூபியான,

**கூடஸ்த²சிதா³த்மன:**

**मे** = எனக்கும்.

**மே**

ஸூர்யனுக்கு (உலகத்தில் செய்யப்படும்) கர்மாவில் எப்படி ஸாக்ஷித்தன்மையோ, இரும்பில் எப்படி அக்னியின் எரிக்கும் தன்மையோ, கயிற்றுக்கு அதில் (பிராந்தியால்) ஏற்றப்பட்டிருக்கும் வஸ்துவின் ஸங்கம் எப்படியோ, அப்படியேதான் கூடஸ்தனுய் ஞான ஸ்வரூபனுய் இருக்கும் எனக்கு. **(935)**

**(அவதாரிகை)** இவ்விதமாய் சிஷ்யன் தன் ஞான அனுபவத்தை வெளியிட்டு விட்டு மேலால் ஜீவன்முக்தி, விதேஹமுக்தி விஷயமாய் குருவினிடம் பிரச்னம் பண்ணுகிறுன்: -

**इत्युक्त्वा स गुरुं स्तुत्वा प्रश्रयेण कृतानति: ।**
**मुमुक्षो: उपकाराय प्रष्टव्यांश अपृच्छत ॥ ९३६ ॥**

**இத்யுக்த்வா ஸ கு³ரும் ஸ்துத்வா ப்ரஶ்ரயேண க்ருதானதி꞉ ।**
**முமுக்ஷோ꞉ உபகாராய ப்ரஷ்டவ்யாம்ஶ அப்ருச்ச²த ॥ 936 ॥**

| | | |
|---|---|---|
| **इति** இதி | = | இவ்வாறு, |
| **सः** ஸ꞉ | = | அந்த சிஷ்யன், |
| **उक्त्वा** உக்த்வா | = | சொல்லி, |
| **गुरुं** கு³ரும் | = | குருவை, |
| **स्तुत्वा** ஸ்துத்வா | = | ஸ்தோத்ரம் செய்து, |
| **प्रश्रयेण** ப்ரஶ்ரயேண | = | விநயத்துடன், |
| **कृतानतिः** க்ருதானதி꞉ | = | நமஸ்காரம் செய்தவனாய், |
| **मुमुक्षोः** முமுக்ஷோ꞉ | = | மோக்ஷம் அடைய விரும்புபவனின், |
| **उपकाराय** உபகாராய | = | உபகாரத்திற்காக, |
| **प्रष्टव्यांशं** ப்ரஷ்டவ்யாம்ஶம் | = | கேட்கவேண்டிய அம்சத்தை, |
| **अपृच्छत** அப்ருச்ச²த | = | கேட்டான். |

இவ்விதம் அவன் சொல்லி குருவை ஸ்துதித்துவிட்டு வணக்கத்துடன் நமஸ்கரித்து முமுக்ஷுக்களின் உபகாரத்தை யுத்தேசித்து கேட்கவேண்டிய முக்ய மான அம்சத்தைக் கேட்டான். **(936)**

**जीवन्मुक्तस्य भगवन् अनुभूतेश्च लक्षणम् ।**
**विदेहमुक्तस्य च मे कृपया ब्रूहि तत्त्वतः ॥ ९३७ ॥**

**ஜீவன்முக்தஸ்ய ப⁴க³வன் அனுபூ⁴தேஶ்வ லக்ஷணம் ।**
**விதே³ஹமுக்தஸ்ய ச மே க்ருபயா ப்³ரூஹி தத்த்வத꞉ ॥ 937 ॥**

| | | |
|---|---|---|
| **भगवन्** ப⁴க³வன் | = | பகவானே! |

**जीवन्मुक्तस्य** = ஜீவன்முக்தனுடைய,
**ஜீவன்முக்தஸ்ய**
**अनुभूतेः** = அனுபவத்தின்,
**அனுபூ⁴தே:**
**लक्षणं च** = லக்ஷணத்தையும்,
**லக்ஷணம் ச**
**विदेहमुक्तस्य च** = விதேஹமுக்தனுடைய லக்ஷணத்தையும்,
**விதே³ஹமுக்தஸ்ய ச**
**कृपया** = தயவால்,
**க்ருபயா**
**तत्त्वतः** = உள்ளபடி,
**தத்த்வத:**
**मे** = எனக்கு,
**மே**
**ब्रूहि** = சொல்லவேணும்.
**ப்³ரூஹி**

ஹே பகவன், ஜீவன் முக்தனுடைய அனுபவத்தின் லக்ஷணம், விதேஹ முக்தனுடைய லக்ஷணம், இவைகளை எனக்கு உள்ளபடி கிருபையினுல் சொல்லு ங்கள். **(937)**

**श्रीगुरुः -**
**वक्ष्ये तुभ्यं ज्ञानभूमिकाया लक्षणं आदितः।**
**ज्ञाते यस्मिन् त्वया सर्वं ज्ञातं स्यात् पृष्टं अद्य यत् ॥ ९३८ ॥**

**ஸ்ரீகு³ரு: -**
**வக்ஷ்யே துப்⁴யம் ஜ்ஞானபூ⁴மிகாயா லக்ஷணம் ஆதி³த:।**
**ஜ்ஞாதே யஸ்மின் த்வயா ஸர்வம் ஜ்ஞாதம் ஸ்யாத் ப்ருஷ்டம் அத்³ய யத்**
**॥ 938 ॥**

**अद्य** = இப்பொழுது,
**அத்³ய**
**त्वया** = உன்னுல்,
**த்வயா**
**यत्** = எது,
**யத்**
**पृष्टं** = கேட்கப்பட்டதோ,
**ப்ருஷ்டம்**

**सर्वं** = (அது) எல்லாம்,

**ஸர்வம்**

**यस्मिन्** = எது,

**யஸ்மின்**

**ज्ञाते** = அறியப்பட்டபொழுது,

**ஜ்ஞாதே**

**ज्ञात स्य त्** = அறியப்பட்டதாக ஆகுமோ (அந்த),

**ஜ்ஞாத ஸ்ய த்**

**ज्ञानभूमिकायाः** = ஞானபூமியின்,

**ஜ்ஞானபூ⁴மிகாயா:**

**लक्षणं** = லக்ஷணத்தை,

**லக்ஷணம்**

**तुभ्यं** = உனக்கு,

**துப்⁴யம்**

**आदितः** = ஆதிமுதல்,

**ஆதி³த:**

**वक्ष्ये** = சொல்லப்போகிறேன்.

**வக்ஷ்யே**

ஸ்ரீ குரு சொல்கிறார்: -

இப்பொழுது உன்னால் எது கேட்கப்பட்டிருக்கிறதோ அது எல்லாம் எதை அறிந்தால் தெரிந்ததாக ஆகுமோ, அந்த ஞான பூமிகையின் லக்ஷணத்தை முதலிலிருந்து உனக்குச் சொல்கிறேன். **(938)**

**ज्ञानभूमिः शुभेच्छा स्यात् प्रथमा समुदीरिता ।**
**विचारणा द्वितीया तु तृतीया तनुमानसी ॥ ९३९ ॥**

**ஜ்ஞானபூ⁴மி: ஶுபே⁴ச்சா² ஸ்யாத் ப்ரத²மா ஸமுதீ³ரிதா ।**
**விசாரணா த்³விதீயா து த்ருதீயா தனுமானஸீ ॥ 939 ॥**

**सत्वापत्तिः चतुर्थी स्यात् ततोऽसंसक्तिनामिका ।**
**पदार्थाभावना षष्ठी सप्तमी तुर्यगा स्मृता ॥ ९४० ॥**

**ஸத்வாபத்தி: சதுர்தீ² ஸ்யாத் ததோ(அ)ஸம்ஸக்திநாமிகா ।**
**பதா³ர்தா²பா⁴வனா ஷஷ்டீ² ஸப்தமீ துர்யகா³ ஸ்ம்ருதா ॥ 940 ॥**

**प्रथमा** = முதலாவதாக,

**ப்ரத²மா**

| | | |
|---|---|---|
| **समुदीरिता** | = | சொல்லப்பட்ட, |
| **ஸமுதீ³ரிதா** | | |
| **ज्ञानभूमिः** | = | ஞானபூமியானது, |
| **ஜ்ஞானபூ⁴மி꞉** | | |
| **शुभेच्छा स्यात्** | = | சுபேச்சையாம், |
| **ஶுபே⁴ச்சா² ஸ்யாத்** | | |
| **द्वितीया तु** | = | இரண்டாவதோவெனில், |
| **த்³விதீயா து** | | |
| **विचारणा** | = | விசாரஊண, |
| **விசாரணா** | | |
| **तृतीया** | = | மூன்றுவது, |
| **த்ருதீயா** | | |
| **तनुमानसी** | = | தனுமாநஸீ, |
| **தனுமானஸீ** | | |
| **चतुर्थी** | = | நான்காவது, |
| **சதுர்தீ²** | | |
| **सत्वापत्तिः स्यात्** | = | ஸத்வாபத்தியாகும், |
| **ஸத்வாபத்தி꞉ ஸ்யாத்** | | |
| **ततः** | = | பிறகு, (ஐந்தாவது), |
| **தத꞉** | | |
| **असंसक्तिनामिका** | = | அஸம்ஸக்தி என்ற பெயர் உள்ளது, |
| **அஸம்ஸக்திநாமிகா** | | |
| **षष्ठी** | = | ஆறுவது, |
| **ஷஷ்டீ²** | | |
| **पदार्थाभावना** | = | பதார்த்த அபாவஊன, |
| **பதா³ர்தா²பா⁴வனா** | | |
| **तुर्यगा** | = | துர்யகா, |
| **துர்யகா³** | | |
| **सप्तमी** | = | ஏழாவதாக, |
| **ஸப்தமீ** | | |
| **स्मृता** | = | கருதப்பட்டுள்ளது. |
| **ஸ்ம்ருதா** | | |

1 முதலாவதாக சொல்லப்பட்டிருக்கிற ஞானபூமி “சுபேச்சா”,
2. இரண்டாவது “விசாரணா”,
3. மூன்றுவது “தனுமானஸீ”,
4. நான்காவது “ஸத்வாபத்தி” யாகும்,

5. ஐந்தாவது “அஸம்ஸக்தி” என்ற பெயருள்ளது,
6. ஆறுவது “பதார்த்த-அபாவனு”,
7. ஏழாவது “துர்யகா” எனப்படும். **(939-940)**

**स्थितः किं मूढ एवास्मि प्रेक्ष्येऽहं शास्त्रसज्जनैः ।**
**वैराग्यपूर्व इच्छा इति शुभेच्छा चोच्यते बुधैः ॥ ९४१ ॥**

**ஸ்தி²த: கிம் மூட⁴ ஏவாஸ்மி ப்ரேக்ஷ்யே(அ)ஹம் ஶாஸ்த்ரஸஜ்ஜனை: ।**
**வைராக்³யபூர்வ இச்சா² இதி ஶுபே⁴ச்சா² சோச்யதே பு³தை⁴: ॥ 941 ॥**

| | | |
|---|---|---|
| **अहं** அஹம் | = | (நான்), |
| **किं** கிம் | = | ஏன், |
| **मूढ एव** மூட⁴ ஏவ | = | மூடனுகவே, |
| **स्थितोस्मि** ஸ்தி²தோஸ்மி | = | இருந்துகொண்டிருக்கிறேன், |
| **शास्त्रसज्जनैः** ஶாஸ்த்ரஸஜ்ஜனை: | = | சாஸ்திரங்களாலும் ஸாதுஜனங்களாலும், |
| **अहं** அஹம் | = | நான், |
| **प्रेक्ष्ये** ப்ரேக்ஷ்யே | = | (ஆத்மாவை) அறியப்போகிறேன், |
| **इति** இதி | = | என்ற, |
| **वैराग्यपूर्व** வைராக்³யபூர்வ | = | வைராக்யத்தை முன்னிட்டதான, |
| **इच्छा** இச்சா² | = | விருப்பம், |
| **शुभेच्छा च** ஶுபே⁴ச்சா² ச | = | சுபேச்சையாக, |
| **बुधैः** பு³தை⁴: | = | வித்வான்களால், |
| **उच्यते** உச்யதே | = | சொல்லப்படுகிறது. |

"நான் மூடனுகவே ஏன் இருந்துகொண்டிருக்கிறேன்? சாஸ்திரத்திஞலும் ஸாது ஜனங்களாலும் நான் ஆத்மாவை அறியப்போகிறேன்" என்று வைராக்கியத்தை முன்னிட்டு ஏற்படும் விருப்பம் **"சுபேச்சா"** என்று அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. **(941)**

**शास्त्रसज्जनसंपर्कवैराग्याभ्यासपूर्वकम् ।**
**सदाचारप्रवृत्तिर्या प्रोच्यते सा विचारणा ॥ ९४२ ॥**

**ஶாஸ்த்ர ஸஞ்ஜன ஸம்பர்க வைராக்³யாப்⁴யாஸ பூர்வகம் ।**
**ஸதா³சார ப்ரவ்ருத்திர் யா ப்ரோச்யதே ஸா விசாரணு ॥ 942 ॥**

| | | |
|---|---|---|
| **शास्त्र** ஶாஸ்த்ர | = | சாஸ்திரம், |
| **सज्जनसंपर्क** ஸஞ்ஜன ஸம்பர்க | = | ஸாது ஜனங்களின் சேர்க்கை, |
| **वैराग्य** வைராக்³ய | = | வைராக்யம், |
| **अभ्यास** அப்⁴யாஸ | = | அப்யாஸம், |
| **पूर्वकं** பூர்வகம் | = | இவைகளை முன்னிட்டு, |
| **या** யா | = | எந்த, |
| **सदाचारप्रवृत्तिः** ஸதா³சாரப்ரவ்ருத்திঃ | = | நல்ல காரியங்களில் ப்ரவிருத்தி உண்டோ, |
| **सा** ஸா | = | அது, |
| **विचारणा** விசாரணு | = | விசாரணையாக, |
| **प्रोच्यते** ப்ரோச்யதே | = | சொல்லப்படுகிறது. |

சாஸ்திரம், ஸாது ஜனங்களின் சேர்க்கை, வைராக்கியம், ஞாஞப்யாஸம், இவைகளை முன்னிட்டுக்கொண்டு நல்ல காரியத்தில் (சிரவண மனனங்களில்) பிரவிருத்தி ஏற்படுவது, **'விசாரணை'** எனப்படுகிறது. **(942)**

**विचारणाशुभेच्छाभ्यां इन्द्रियार्थेषु रक्तता ।**
**यत्र सा तनुतां एति प्रोच्यते तनुमानसी ॥ ९४३ ॥**

**விசாரணுஶுபே⁴ச்சா²ப்⁴யாம் இந்த்³ரியார்தே²ஷு ரக்ததா ।**
**யத்ர ஸா தனுதாம் ஏதி ப்ரோச்யதே தனுமானஸீ ॥ 943 ॥**

| | | |
|---|---|---|
| **विचारणा** விசாரணு | = | விசாரஊண, |
| **शुभेच्छाभ्यां** ஶுபே⁴ச்சா²ப்⁴யாம் | = | சுபேச்சை இவைகளால், |
| **इन्द्रियार्थेषु** இந்த்³ரியார்தே²ஷு | = | இந்திரியங்களுக்கு விஷயமான உலகப் பொருள்களில், |
| **रक्तता** ரக்ததா | = | ஆசை, |
| **यत्र** யத்ர | = | எங்கே, |
| **तनुतां एति** தனுதாம் ஏதி | = | மெலிந்திருக்கும் தன்மையை அடைகிறதோ, |
| **सा** ஸா | = | அது, |
| **तनुमानसी** தனுமானஸீ | = | தனுமாநஸியாக, |
| **प्रोच्यते** ப்ரோச்யதே | = | சொல்லப்படுகிறது. |

சுபேச்சையினுலும் விசாரஊணயினுலும் இந்திரியங்களுக்கு விஷயமான பதார்த்தங்களில் உள்ள பற்றுதல் குறைந்து விடுவது '**தனுமானஸீ**' எனப்படுகிறது.
**(943)**

**भूमिकात्रितयाभ्यासात् चित्तेऽर्थविरतेः वशात् ।**
**सत्त्वात्मनि स्थिते शुद्धे सत्त्वापत्तिरुदाहृता ॥ ९४४ ॥**

**பூ⁴மிகா த்ரிதயாப்⁴யாஸாத் சித்தே(அ)ர்த²விரதே: வஶாத் ।**
**ஸத்த்வாத்மனி ஸ்தி²தே ஶுத்³தே⁴ ஸத்த்வாபத்திருதா³ஹ்ருதா ॥ 944 ॥**

| | | |
|---|---|---|
| **भूमिकात्रितयाभ्यासात्** பூ⁴மிகா த்ரிதயாப்⁴யாஸாத் | = | மூன்று பூமிகைகஊள அப்யாஸம் செய்வதால், |
| **अर्थविरतेः वशात्** அர்த²விரதே: வஶாத் | = | விஷயங்களில் வைராக்யம் காரணமாக, |
| **शुद्धे** ஶுத்³தே⁴ | = | சுத்தமான, |
| **चित्ते** சித்தே | = | சித்தமானது, |

**सत्त्वात्मनि** = ஸத்வஸ்வரூபத்தில்,

**ஸத்த்வாத்மனி**

**स्थिते** = நிலைத்திருக்கும் பொழுது,

**ஸ்தி²தே**

**सत्त्वापत्तिः** = ஸத்வாபத்தியாக,

**ஸத்த்வாபத்தி:**

**उदाहृता** = சொல்லப்பட்டிருக்கிறது.

**உதா³ஹ்ருதா**

முன்சொன்ன சுபேச்சை, விசாரணை, தனுமானஸீ என்ற மூன்று பூமிகைகளையும் அப்யாஸம் செய்வதால் விஷயங்களிலுள்ள வைராக்யம் காரணமாக சுத்தமான சித்தமானது ஸத்வஸ்வரூபத்திலேயே நிற்கும்போது **'ஸத்வா-பத்தி'** என்று சொல்லப்படுகிறது. **(944)**

**दशाचतुष्टयाभ्यासात् असंसर्गफला तु या ।**
**रूढसच्च चमत्कारा प्रोक्ताऽसंसक्तिनामिका ॥ ९४५ ॥**

**த³ஶா சதுஷ்டயாப்⁴யாஸாத் அஸம்ஸர்க³ ப²லா து யா ।**
**ரூட⁴ ஸச்ச சமத்காரா ப்ரோக்தா(அ)ஸம்ஸக்தி நாமிகா ॥ 945 ॥**

**दशाचतुष्टयाभ्यासात्** = நான்கு பூமிகளையும் அப்யாஸம் செய்வதால்,

**த³ஶா சதுஷ்டயாப்⁴யாஸாத்**

**असंसर्गफला** = பற்றுதலில்லாமையைப்பலனாக உடையதும்,

**அஸம்ஸர்க³**

**रूढसच्च चमत्कारा** = ஸத்வ ப்ரகாசம் நன்கு நிலைத்துள்ளதுமான,

**ரூட⁴ ஸச்ச சமத்காரா**

**या** = எந்த நிலையுண்டோ (அது),

**யா**

**असंसक्तिनामिका** = அஸம்ஸக்தி என்ற பெயருள்ளதாக,

**அஸம்ஸக்திநாமிகா**

**प्रोक्ता** = சொல்லப்பட்டது.

**ப்ரோக்தா**

நான்கு பூமிகைகளையும் அப்யாஸம் செய்வதினால் நன்கு நிலைத்துள்ள ஸத்வப்ரகாசத்தை உடையதும் பற்றுதலில்லாமையை பலனாக உடையதும் எதுவோ, அது **'அஸம்ஸக்தி'** என்ற பெயருள்ளதாகச் சொல்லப்படுகிறது. **(945)**

**भूमिकापञ्चकाभ्यासात् स्वात्मारामतया भृशम् ।**
**आभ्यन्तराणां बाह्यानां पदार्थानां अभावनात् ॥ ९४६ ॥**

**பூ⁴மிகாபஞ்சகாப்⁴யாஸாத் ஸ்வாத்மாராமதயா ப்⁴ருஶம் ।**
**ஆப்⁴யந்தராணும் பா³ஹ்யாணும் பதா³ர்தா²ணும் அபா⁴வனுத் ॥ 946 ॥**

**परप्रयुक्तेन चिरप्रयत्नेन अवबोधनम् ।**
**पदार्थाभावना नाम षष्ठी भवति भूमिका ॥ ९४७ ॥**

**பரப்ரயுக்தேன சிரப்ரயத்னேன அவபோ³த⁴னம் ।**
**பதா³ர்தா²பா⁴வனு நாம ஷஷ்டீ² ப⁴வதி பூ⁴மிகா ॥ 947 ॥**

**भूमिकापञ्चकाभ्यासात्** = ஐந்து பூமிகைகளின் அப்யாஸத்தால்,
**பூ⁴மிகாபஞ்சகாப்⁴யாஸாத்**
**भृशम्** = நன்கு,
**ப்⁴ருஶம்**
**स्वात्मारामतया** = தன் ஆத்மஸ்வரூபத்திலேயே
**ஸ்வாத்மாராமதயா** இன்புற்றுக்கொண்டிருப்பதால்,
**आभ्यन्तराणां** = உள்ளேயும்,
**ஆப்⁴யந்தராணும்**
**बाह्यानां** = வெளியேயுமுள்ள,
**பா³ஹ்யாணும்**
**पदार्थानां** = வஸ்துக்களை,
**பதா³ர்தா²ணும்**
**अभावनात्** = நினையாததால்,
**அபா⁴வனுத்**
**परप्रयुक्तेन** = பிறரால் செய்யப்பட்ட,
**பரப்ரயுக்தேன**
**चिरप्रयत्नेन** = வெகுகால பிரயத்னத்தால்,
**சிரப்ரயத்னேன**
**अवबोधनम्** = விழித்துக்கொள்வது,
**அவபோ³த⁴னம்**
**पदार्थाभावना** = பதார்த்த அபாவனை என்ற,
**பதா³ர்தா²பா⁴வனு**
**षष्ठी भूमिका भवति** = ஆறுவது பூமிகையாகிறது.
**ஷஷ்டீ² பூ⁴மிகா ப⁴வதி**

ஐந்து பூமிகைளின் அப்யாஸத்தினுல் நன்கு தன் ஆத்மஸ்வரூபத்திலேயே ரமித்துக்கொண்டிருப்பதால் உள்ளேயுள்ளதோ வெளியேயுள்ளதோ எந்தப் பதார்த்தங் களையும் எண்ணுமலேயிருப்பதால் வேறு யாரேனும் செய்யும் வெகுகாலப் பிரயனத்தாலேயே (உலகரீதியாய்) விழித்துக் கொள்வது எதுவோ, அது **"பதார்த்த-அபாவனை"** என்ற ஆறுவது பூமிகையாகும். (இந்த நிலையை அடைந்தவன் ஆத்ம

தியானத்திலிருந்து தானுக வெளியே வரமாட்டான். பிறர் வெகுநேரம் பல முயற்சிகள் செய்தால்தான் அவனுடைய தியானத்தைக் கலைத்து அவன் மனதை வெளியுலகிற்குக் கொண்டுவர முடியும்). **(946-947)**

## षड्भूमिका चिराभ्यासात् भेदस्यानुपलम्भनात् ।
## यत् स्वभावैकनिष्ठत्वं सा ज्ञेया तुर्यगा क्षितिः ॥ ९४८ ॥

**ஷட்³பூ⁴மிகா சிராப்⁴யாஸாத் பே⁴த³ஸ்யானுபலம்ப⁴னுத் ।**
**யத் ஸ்வபா⁴வைகநிஷ்ட²த்வம் ஸா ஜ்ஞேயா துர்யகா³ க்ஷிதி꞉ ॥ 948 ॥**

| | | |
|---|---|---|
| **षड्भूमिका चिराभ्यासात्** ஷட்³பூ⁴மிகா சிராப்⁴யாஸாத் | = | ஆறு பூமிகைகளையும் வெகு காலம் அப்யாஸம் செய்வதால், |
| **भेदस्य** பே⁴த³ஸ்ய | = | வேற்றுமை, |
| **अनुपलम्भनात्** அனுபலம்ப⁴னுத் | = | தோன்றுமலிருப்பதால், |
| **यत् स्वभावैकनिष्ठत्वं** யத் ஸ்வபா⁴வைகநிஷ்ட²த்வம் | = | ஸ்வஸ்வரூபத்திலே நிலைத்திருப்பது எதுவோ, |
| **सा** ஸா | = | அது, |
| **तुर्यगा क्षितिः** துர்யகா³ க்ஷிதி꞉ | = | துர்யகை என்ற பூமிகையாக, |
| **ज्ञेया** ஜ்ஞேயா | = | அறியத்தக்கது. |

ஆறு பூமிகைகளையும் வெகுநாள் அப்யாஸம் செய்வதால் பேதமே தோன்றுமலிருந்துவிடுமாதலால் தன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருந்துவிடுவது 'துர்யகா 'பூமிகையாக அறியவேண்டும்.

இவ்வேழு பூமிகைகளில் விவேகம், வைராக்யம், சமாதி ஷட்கம் இம்மூன்று ஸாதனங்களையும் பெற்று இதனுலேற்படும் தீவ்ர முமுக்ஷை முதலாவது பூமிகையான சுபேச்சையாகும். ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியுடன் சிரவண மனனங்களைச் செய்வது விசாரணை என்ற 2 வது பூமிகை. ஸந்யாஸ தர்மானுஷ்டானத்துடன் செய்யும் சிரவண மனனங்கள்தான் ஸதாசாரம் என்பது. நிதித்யாஸனம் மூன்றுவதான தநுமானஸீ தியானத்தாலும் வெளிவிஷயங்களில் செல்லாததாலும் மனம் ஸூக்ஷ்மமாகிவிடுகிறது. ப்ரஹ்மஸாக்ஷாதகாரம் அடைந்த நிலை நான்காவதான ஸத்வாபத்தி. இவனுக்கு 'ப்ரஹ்மவித்' என்று பெயர். இவருக்கு பிரபஞ்சம் மறையாது. ஆனுல் மித்யை என்ற தீர்மானமான ஞானமிருப்பதால் அது அவரை பாதிக்காது. பிரபஞ்சம் மறைவதற்காக ஸமாதி நிலையில் இருப்பவர் தானுகவே ஸமாதி கலையக்கூடியவராய் இருப்பவர் 'ப்ரஹ்மவித்வரர்' எனப்படுகிறுர். அவர்தான்

ஐந்தாவது பூமிகையான அஸம்ஸக்தி என்று சொல்லப்படும் நிலையிலிருப்பவர். தானாக ஸமாதி கலையாமல் வேறுகாரணங்களால் கலைந்து, ப்ரபஞ்சம் தோன்றுகிறவர் 'ப்ரஹ்மவித்வரீயான்' எனப்படுகிறார். அவர் பதார்த்த - அபாவனை என்ற ஆறுவது பூமிகையில் இருப்பவர். தானாகவோ, வேறு காரணத்தாலோ ஆத்மநிஷ்டை கலையாமலிருப்பவர் 'ப்ரஹ்ம வித்வரிஷ்டர்' எனப்படுகிறார். அவர்தான் ஏழாவது 'துர்யகா' என்ற பூமிகையில் இருப்பவர். இந்த நான்குவித ப்ரஹ்ம வித்துக்களுக்கும் ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் ஏற்பட்டிருந்தபோதிலும் ஸமாதியிலுள்ள உறுதியின் தாரதம்யத்தால் அவர்களுக்குள் வித்தியாஸம் ஏற்படுகிறது. **(948)**

**(அவதாரிகை)** இங்கு கூறப்பட்ட ஆறு பூமிகைகளையும் வேறொரு விதத்தில் பத்து நிலைகளாகப் பிரித்துக்காட்டுகிறார்: -

**इदं ममेति सर्वेषु दृश्यभावेषु अभावना ।**
**जाग्रज्जाग्रत् इति प्राहुः महान्तो ब्रह्मवित्तमाः ॥ ९४९ ॥**

**இத³ம் மமேதி ஸர்வேஷு த்³ருஶ்யபா⁴வேஷு அபா⁴வனா ।**
**ஜாக்³ரஜ்ஜாக்³ரத் இதி ப்ராஹு: மஹாந்தோ ப்³ரஹ்மவித்தமா: ॥ 949 ॥**

**दृश्यभावेषु सर्वेषु** = அறியப்படும் வஸ்துக்கள் எல்லாவற்றிலும்,
**த்³ருஶ்யபா⁴வேஷு ஸர்வேஷு**
**इदं ममेति** = இது என்னுடையது என்று,
**இத³ம் மமேதி**
**अभावना** = எண்ணாமலிருப்பது,
**அபா⁴வனா**
**जाग्रज्जाग्रत् इति** = ஜாகரா வஸ்தையில் ஜாகரம், (விழித்துக்கொண்டிருக்கும் நிலை) என்று,
**ஜாக்³ரஜ்ஜாக்³ரத் இதி**
**ब्रह्मवित्तमाः** = ப்ரஹ்மத்தை அறிந்தவர்களில் சிறந்தவர்களான,
**ப்³ரஹ்மவித்தமா:**
**महान्तः** = பெரியோர்கள்,
**மஹாந்த:**
**प्राहुः** = சொல்கிறார்கள்.
**ப்ராஹு:**

அறியப்படும் எல்லா பதார்த்தங்களிலும் என்னுடையது "நான், என்னுடையது" என்று எண்ணாமலிருப்பது **"ஜாக்ரத்"** என்று ப்ரஹ்மவித் ச்ரேஷ்டர்களாகிய பெரியோர்கள் சொல்கிறார்கள். **(949)**

**विदित्वा सच्चिदानन्दमयीं दृश्यपरम्पराम् ।**
**नामरूपपरित्यागो जाग्रत्स्वप्नः समीर्यते ॥ ९५० ॥**

**விதி3த்வா ஸச்சிதா3னந்த3மயீம் த்3ருஶ்ய பரம்பராம் ।**
**நாம ரூப பரித்யாகோ3 ஜாக்3ரத் ஸ்வப்னः ஸமீர்யதே ॥ 950 ॥**

**दृश्यपरम्पराम्** = வரிசையாகத் தோன்றும் பதார்த்தங்கள்
**த்3ருஶ்ய பரம்பராம்** எல்லாவற்றையும்,
**सच्चिदानन्दमयीं** = ஸச்சிதாநந்த ப்ரஹ்ம ஸ்வரூபமாக,
**ஸச்சிதா3னந்த3மயீம்**
**विदित्वा** = அறிந்து (அந்த த்ருச்யங்களில் தோன்றும்),
**விதி3த்வா**
**नामरूपपरित्याग:** = பெயரையும் உருவத்தையும் விட்டுவிடுவது,
**நாமரூபபரித்யாக3ः**
**जाग्रत्स्वप्न:** = ஜாக்ரத் ஸ்வப்னமாக (ஜாகராவஸ்தையில்
**ஜாக்3ரத் ஸ்வப்னः** ஸ்வப்னமாக),
**समीर्यते** = சொல்லப்படுகிறது.
**ஸமீர்யதே**

திருச்யமான பதார்த்த பரம்பரையை (எல்லா பதார்த்தங்களையும்) ஸத், சித், ஆனந்தமாகவே அறிந்துகொண்டு அவைகளிலுள்ள நாமத்தையும் ரூபத்தையும் விட்டுவிடுவது "ஜாக்ரத் ஸ்வப்னம்" என்று சொல்லப்படுகிறது. **(950)**

## परिपूर्ण चिदाकाशे मयि बोधात्मतां विना ।
## न किंचित् अन्यत् अस्ति इति जाग्रत्सुप्तिः समीर्यते ॥ ९५१ ॥

**பரிபூர்ண சிதா3காஶே மயி போ3தா4த்மதாம் வினா ।**
**ந கிஞ்சித் அன்யத் அஸ்தி இதி ஜாக்3ரத் ஸுப்திः ஸமீர்யதே ॥ 951 ॥**

**परिपूर्ण चिदाकाशे** = எங்கும் நிறைந்த ஞானாகாசமாயிருக்கும்,
**பரிபூர்ண சிதா3காஶே**
**मयि** = என்னிடத்தில்,
**மயி**
**बोधात्मतां विना** = ஞான ஸ்வரூபமாயிருக்கும் தன்மையைத் தவிற,
**போ3தா4த்மதாம் வினா**
**अन्यत् किंचित्** = வேறு ஒன்றும்,
**அன்யத் கிஞ்சித்**
**नास्ति** = இல்லை,
**நாஸ்தி**
**इति** = என்ற பாவனை,
**இதி**

**जाग्रत्सुप्तिः** = ஜாக்ரத் ஸுப்தியாக (ஜாக்ரதவஸ்தையில்
**ஜாக்³ரத் ஸுப்திः** நல்ல தூக்கமாக,
**समीर्यते** = சொல்லப்படுகிறது.
**ஸமீர்யதே**

எங்கும் நிறைந்து சிதாகாசமாயிருக்கும் என்னிடத்தில் ஞானஸ்வரூபமாய் இருப்பதைத்தவிர வேறு எதுவும் கிடையாது என்பது "ஜாக்ரத் ஸுப்தி" எனப்படுகிறது. **(951)**

**मूलाज्ञानविनाशेन कारणांभासचेष्टितैः ।**
**बन्धो न मेऽतिस्वल्पोऽपि स्वप्नजाग्रत् इतीर्यते ॥ ९५२ ॥**

**மூலாஜ்ஞான விநாஶேன காரணும்பா⁴ஸ சேஷ்டிதைः ।**
**ப³ந்தோ⁴ ந மே(அ)திஸ்வல்போ(அ)பி ஸ்வப்ன ஜாக்³ரத் இதீர்யதே ॥ 952 ॥**

**मूलाज्ञानविनाशेन** = மூலாக்ஞானம் நாசமடைந்து விட்டதால்,
**மூலாஜ்ஞான விநாஶேன**
**कारणांभासचेष्टितैः** = காரணமான அக்ஞானம், சிதாபாஸன்
**காரணும்பா⁴ஸ சேஷ்டிதைः** இவர்களின் வியாபாரங்களால்,
**मे** = எனக்கு,
**மே**
**अतिस्वल्पोऽपि** = மிகக் கொஞ்சம்கூட,
**அதிஸ்வல்போ(அ)பி**
**बन्धः** = பந்தம்,
**ப³ந்த⁴ः**
**न** = இல்லை,
**ந**
**इति** = என்பது,
**இதி**
**स्वप्नजाग्रत्** = ஸ்வப்ன ஜாக்ரத்தாக (ஸ்வப்னத்தில் விழிப்பாக)
**ஸ்வப்ன ஜாக்³ரத்**
**ईर्यते** = சொல்லப்படுகிறது.
**ஈர்யதே**

எல்லாவற்றிற்கும் மூலமான அக்ஞானம் நாசமடைந்து விட்டபடியால், காரணமாயிருக்கும் அக்ஞானத்தின் சேஷ்டைகளாலோ அதில் ப்ரதிபிம்பிக்கும் சிதாபாஸனுடைய சேஷ்டைகளாலோ எனக்கு வெகு சிறிதளவுகூட பந்தம் (கட்டு) கிடையாதென்பது "**ஸ்வப்ன ஜாக்ரத்**" என்று சொல்லப்படுகிறது. **(952)**

**कारणाज्ञाननाशात् यत् द्रष्टृदर्शनदृश्यता ।**
**न कार्यं अस्ति तत्ज्ञानं स्वप्नस्वप्नः समीर्यते ॥ ९५३ ॥**

**காரணாஜ்ஞானநாஶாத் யத் த்³ரஷ்ட்ருத³ர்ஶனத்³ருஶ்யதா ।**
**ந கார்யம் அஸ்தி தத்ஜ்ஞானம் ஸ்வப்னஸ்வப்னꞏ ஸமீர்யதே ॥ 953 ॥**

| | | |
|---|---|---|
| **कारणाज्ञाननाशात्** **காரணாஜ்ஞானநாஶாத்** | = | காரணமான அக்ஞானம் நாசமாகி விட்டபடியால், |
| **द्रष्टृदर्शनदृश्यता** **த்³ரஷ்ட்ருத³ர்ஶனத்³ருஶ்யதா** | = | பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து இவைகள் ரூபமான, |
| **कार्यं** **கார்யம்** | = | காரியம், |
| **नास्ति** **நாஸ்தி** | = | இல்லை, |
| **इति यत्** **இதி யத்** | = | என்பது எதுவோ, |
| **तत्ज्ञानं** **தத்ஜ்ஞானம்** | = | அந்த ஞானம், |
| **स्वप्नस्वप्नः** **ஸ்வப்னஸ்வப்னꞏ** | = | ஸ்வப்னஸ்வப்னமாக, |
| **समीर्यते** **ஸமீர்யதே** | = | சொல்லப்படுகிறது. |

காரணமான அக்ஞானம் நாசத்தையடைந்து விட்டபடியால், அதன் காரியமான பார்க்கிறவன் பார்வை பார்க்கப்படும் வஸ்து என்ற தன்மை கிடையாது என்ற ஞானம் "ஸ்வப்ன ஸ்வப்னம்" என்று சொல்லப்படுகிறது. **(953)**

**अतिसूक्ष्मविमर्शेन स्वधीवृत्तिः अचञ्चला ।**
**विलीयते यदा बोधे स्वप्नसुप्तिः इतीर्यते ॥ ९५४ ॥**

**அதிஸூக்ஷ்மவிமர்ஶேன ஸ்வதீ⁴வ்ருத்திꞏ அசஞ்சலா ।**
**விலீயதே யதா³ போ³தே⁴ ஸ்வப்னஸுப்திꞏ இதீர்யதே ॥ 954 ॥**

| | | |
|---|---|---|
| **अतिसूक्ष्मविमर्शेन** **அதிஸூக்ஷ்மவிமர்ஶேன** | = | மிகவும் ஸூக்ஷ்மமாக விசாரம் செய்வதால், |
| **स्वधीवृत्तिः** **ஸ்வதீ⁴வ்ருத்திꞏ** | = | தன் மனோவிருத்தி, |
| **अचञ्चला** **அசஞ்சலா** | = | சலனமற்றதாகி, |

**यदा** = எப்பொழுது,

**யதா³**

**बोधे** = ஞான ஸ்வரூபத்தில்,

**போ³தே⁴**

**विलीयते** = மறைந்துவிடுகிறதோ (அப்பொழுது),

**விலீயதே**

**स्वप्नसुप्तिः इति** = ஸ்வப்னத்தில் ஸுஷுப்தி என்று,

**ஸ்வப்னஸுப்திः இதி**

**ईर्यते** = சொல்லப்படுகிறது.

**ஈர்யதே**

வெகு ஸூக்ஷ்மமாக விமர்சனம் செய்வதால் தன்னுடைய புத்திவிருத்தி அசைவற்று அறிவு ஸ்வரூபத்திலேயே எப்பொழுது அடங்கிவிடுகிறதோ அப்பொழுது "ஸ்வப்ன ஸுப்தி" எனப்படுகிறது. **(954)**

**चिन्मयाकारमतिभिः धीवृत्तिप्रसरैः गतः ।**
**आनन्दानुभवो विद्वन् सुप्तिजाग्रत् इतीर्यते ॥ ९५५ ॥**

**சின்மயாகாரமதிபி⁴ः தீ⁴வ்ருத்திப்ரஸரைः க³தः ।**
**ஆனந்தா³னுப⁴வோ வித்³வன் ஸுப்திஜாக்³ரத் இதீர்யதே ॥ 955 ॥**

**विद्वन्** = அறிவுள்ளவனே!

**வித்³வன்**

**चिन्मयाकारमतिभिः** = ஞான ஸ்வரூப வடிவத்தையே எண்ணுகின்ற,

**சின்மயாகாரமதிபி⁴ः**

**धीवृत्तिप्रसरैः** = புத்தி விருத்திகள் கிளம்புவதால்,

**தீ⁴வ்ருத்திப்ரஸரைः**

**गतः** = வருகிற,

**க³தः**

**आनन्दानुभवः** = ஆனந்தத்தின் அநுபவம்,

**ஆனந்தா³னுப⁴வः**

**सुप्तिजाग्रत् इति** = ஸுப்திஜாக்ரத் (தூக்கத்தில் விழிப்பு) என்று,

**ஸுப்திஜாக்³ரத் இதி**

**ईर्यते** = சொல்லப்படுகிறது.

**ஈர்யதே**

ஹே வித்வன், சின்மயாகாரமான எண்ணங்களுடன்கூடிய புத்திவ்ருத்தியின் வெளிக்கிளம்புவதிலிருந்து அறியப்படும் ஆனந்தத்தின் அனுபவம் "ஸுப்தி ஜாக்ரத்" எனப்படுகிறது. **(955)**

**वृत्तौ चिरानुभूतान्तरानन्दानुभवस्थितौ ।**
**समात्मतां यो यात्येष सुप्तिस्वप्न इतीर्यते ॥ ९५६ ॥**

**வ்ருத்தௌ சிரானுபூ⁴தாந்தரானந்தா³னுப⁴வஸ்தி²தௌ ।**
**ஸமாத்மதாம் யோ யாத்யேஷ ஸுப்திஸ்வப்ன இதீர்யதே ॥ 956 ॥**

| | | |
|---|---|---|
| **वृत्तौ** <br> **வ்ருத்தௌ** | = | மனோவிருத்தியானது, |
| **चिरानुभूत** <br> **சிரானுபூ⁴த** | = | வெகுகாலம் அனுபவிக்கப்பட்ட, |
| **अन्तरानन्दानुभव** <br> **அந்தரானந்தா³னுப⁴வ** | = | ஆத்மாநந்தானுபவத்தில், |
| **स्थितौ** <br> **ஸ்தி²தௌ** | = | நிலைத்திருக்கும்பொழுது, |
| **समात्मतां** <br> **ஸமாத்மதாம்** | = | ஸமமாயிருக்கும் தன்மையை, |
| **यः याति** <br> **யஃ யாதி** | = | அடைகிறது எதுவோ, |
| **एषः** <br> **ஏஷஃ** | = | இது, |
| **सुप्तिस्वप्नः** <br> **ஸுப்திஸ்வப்னஃ** | = | ஸுப்தி ஸ்வப்னம் (ஸுஷுப்தியில் ஸ்வப்னம்), |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **ईर्यते** <br> **ஈர்யதே** | = | சொல்லப்படுகிறது. |

விருத்தியானது வெகுகாலம் அனுபவிக்கப்பட்ட உள் ஆனந்தத்தின் அனுபவத்திலேயே நிலைத்திருந்து ஸமமான தன்மையை அடைவது எதுவோ அது "ஸுதுதி ஸ்வப்னம்" எனப்படுகிறது. **(956)**

**दृश्यधीष्वृत्तिरेतस्य केवली भावभावनात् ।**
**परं बोधैकतावाप्तिः सुप्तिसुप्तिः इतीर्यते ॥ ९५७ ॥**

**த்³ருஶ்யதீ⁴ஷ்வ்ருத்திரேதஸ்ய கேவலீ பா⁴வபா⁴வனாத் ।**
**பரம் போ³தை⁴கதாவாப்திஃ ஸுப்திஸுப்திஃ இதீர்யதே ॥ 957 ॥**

| | | |
|---|---|---|
| **एतस्य** <br> **ஏதஸ்ய** | = | இவனுடைய, |

**दृश्यधीश्वृत्तिः** = த்ருச்யவஸ்து விஷயமான மனோவிருத்தி,

**த்³ருஶ்யதீ⁴ஷ்வ்ருத்திः**

**केवली भावभावनात्** = தனித்திருக்கும் தன்மையின் பாவனையால்,

**கேவலீ பா⁴வபா⁴வனாத்**

**परं** = மேலான,

**பரம்**

**बोधैकतावाप्तिः** = ஞான ஸ்வரூபத்துடன் ஐக்யத்தையடைவது,

**போ³தை⁴கதாவாப்திः**

**सुप्तिसुप्तिः** = தூக்கத்தில் துக்கம்,

**ஸுப்திஸுப்திः**

**इति** = என்று,

**இதி**

**ईर्यते** = சொல்லப்படுகிறது.

**ஈர்யதே**

திருச்ய விஷயமான மனோவிருத்திகளில் திருசயங்களெல்லாம் மறைந்து தான் மட்டும் தனித்திருப்பதாக பாவனை செய்வதால் மேலான ஞானஸ்வரூபத்துடன் ஒன்றுகக்கலந்து விடுவது ஸுப்திஸுப்தியாகச் சொல்லப்படுகிறது. **(957)**

(**அவதாரிகை**) இவ்வாறு ஜாக்ரத், ஸ்வப்னம் ஸுஷுப்தி என்ற அவஸ்தை களையொட்டி ஒன்பது நிலைகளை விளக்கிவிட்டு இந்த அவஸ்தைகளுக்கு அதீதமான துரீய நிலையை 10-வது நிலையாகக் காட்டுகிறுர்: -

**परब्रह्मवत् आभाति निर्विकारा एकरूपिणी ।**
**सर्वावस्थासु धारैका तुर्याख्या परिकीर्तिता ।**
**इत्यवस्था समुल्लासं विमृशन् मुच्यते सुखी ॥ ९५८ ॥**

**பரப்³ரஹ்மவத் ஆபா⁴தி நிர்விகாரா ஏகரூபிணீ ।**
**ஸர்வாவஸ்தா²ஸு தா⁴ரைகா துர்யாக்²யா பரிகீர்திதா ।**
**இத்யவஸ்தா² ஸமுல்லாஸம் விம்ருஶன் முச்யதே ஸுகீ² ॥ 958 ॥**

**परब्रह्मवत्** = பரப்ரஹ்மம்போல்,

**பரப்³ரஹ்மவத்**

**निर्विकारा** = மாறுதலற்றதும்,

**நிர்விகாரா**

**सर्वावस्थासु** = எல்லா அவஸ்தைகளிலும்,

**ஸர்வாவஸ்தா²ஸு**

| | | |
|---|---|---|
| **एकरूपिणी**<br>**ஏகரூபிணீ** | = | ஒரே ரூபமாயும், |
| **एका धारा**<br>**ஏகா தா⁴ரா** | = | ஒரே தாரையாக (இடைவிடாததாக), |
| **आभाति**<br>**ஆபா⁴தி** | = | பிரகாசிக்கிறது (எதுவோ அது), |
| **तुर्याख्या**<br>**துர்யாக்²யா** | = | துர்யம் என்ற பெயருள்ளதாக, |
| **परिकीर्तिता**<br>**பரிகீர்திதா** | = | சொல்லப்பட்டது, |
| **इति**<br>**இதி** | = | இவ்வாறான, |
| **अवस्थासमुल्लासं**<br>**அவஸ்தா²ஸமுல்லாஸம்** | = | அவஸ்தைகளின் தோற்றத்தை, |
| **विमृशन्**<br>**விம்ருஶன்** | = | விசாரித்துக் கொண்டிருப்பவன், |
| **सुखी**<br>**ஸுகீ²** | = | ஸுகமுள்ளவனாக, |
| **मुच्यते**<br>**முச்யதே** | = | விடுபடுகிறான். |

ஒரே தாரையாக (இடைவிடாமல்) எல்லா நிலைகளிலும் ஒரே ரூபத்துடன் விகாரத்தையடையாமல் பரப்ரஹ்மத்தைப் போல் பிரகாசிக்கிற நிலை துர்யம் என்ற பெயருள்ளது. இவ்விதமாக உள்ள நிலைகளின் தோற்றங்களைப்பற்றி விமர்சனம் செய்கிறவன் ஸுகத்துடன் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான்.

[இதுவரை சொன்ன பத்துவித நிலைகளும் அனுபவத்தினாலேயே நன்கு அறிந்துகொள்ள வேண்டியதாயிருப்பதால் அவைகளை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. முடியுமென்று வைத்துக்கொண்டாலும் அந்த நிலைகளை அனுபவித்த அனுபவசாலிகள்தான் வர்ணிக்க வேண்டும். அவர்கள் வர்ணித்தாலும் அவ்வித அனுபவமில்லாதவர்களுக்கு வெறும் வார்த்தைகளாகவேதான் தோன்றும். ஆகை யால் இவ்விஷயத்தை இங்கு விஸ்தரிப்பது ஸாத்தியமுமில்லை, பிரயோஜனமும் ஏற்படாது]. **(958)**

**(அவதாரிகை)** சுபேச்சா முதலான ஏழு பூமிகைகளையே ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளாகக் காட்டுகிறார்: -

**शुभेच्छादित्रयं भूमिभेदाभेदयुतं स्मृतम् ।**
**यथावद्भेदबुद्ध्येदं जगत् जाग्रत् इतीर्यते ॥ ९५९ ॥**

**ஶுபே⁴ச்சா²தி³த்ரயம் பூ⁴மி பே⁴தா³பே⁴த³ யுதம் ஸ்ம்ருதம் ।**
**யதா²வத்³ பே⁴த³பு³த்³த்⁴யேத³ம் ஜக³த் ஜாக்³ரத் இதீர்யதே ॥ 959 ॥**

**शुभेच्छादित्रयं** = சுபேச்சை முதலான மூன்றும்,
**ஶுபே⁴ச்சா²தி³த்ரயம்**
**भूमिभेदाभेदयुतं** = வேற்றுமை, ஐக்யம் இவ்விரண்டும் கலந்த
**பூ⁴மி பே⁴தா³பே⁴த³யுதம்** பூமியாக,
**स्मृतम्** = கருதப்பட்டது,
**ஸ்ம்ருதம்**
**यथावद्भेदबुद्ध्या** = உள்ளபடியான பேதத்தையறிவதால்,
**யதா²வத்³பே⁴த³பு³த்³த்⁴யா**
**इदं जगत्** = இந்த பூமி,
**இத³ம் ஜக³த்**
**जाग्रत्** = ஜாக்ரத்,
**ஜாக்³ரத்**
**इति** = என்று,
**இதி**
**ईर्यते** = சொல்லப்படுகிறது.
**ஈர்யதே**

(ஏழு பூமிகைகளில்) சுபேச்சா முதலான மூன்றும் (சுபேச்சா, விசாரணா, தநுமா நஸீ என்பவை) பேதமும் அபேதமும் கலந்திருக்கும் பூமிகை என்று சொல்லப் பட்டிருக்கிறது. (உலகத்தில் இருக்கும்படியான பேதத்தையறிவதால் இந்த பூமிகை ஜாக்ரத் என்று சொல்லப்படுகிறது. **(959)**

**(அவதாரிகை)** ஸாதனமாயிருக்கிற முதல் மூன்று பூமிகைகளில் ஜகத்தும் வேறாகத் தோன்றிக்கொண்டிருக்கும்; அது வாஸ்தவமில்லை, ப்ரஹ்மத்தைவிட்டு வேறுபட்டதில்லையென்று அபேதமும் தோன்றிக்கொண்டேயிருக்கும். விழிப்பு நிலை யில்போல் இங்கும் வேற்றுமை தோன்றுவதால் இம்மூன்று பூமிகைகளையும் ஜாக்ரத் என்று சொல்லி அதற்குள் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று மூன்று பிரிவு கள் காட்டப்பட்டன. நான்காவதான ஸத்வாபத்தியென்ற ஸாதாரண பிரஹ்ம வித்தின் பூமிகையில் ஜகத் ஸ்வப்னம் போலவே தோன்றும். அதற்குள்ளும் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி, என்ற மூன்று நிலைகள் காட்டப்பட்டன. இவ்விஷயத்தை சுருக்கமாக அடுத்த சுலோகத்தில் குறிப்பிடுகிறார்: -

**अद्वैते स्थैर्यमायाते द्वैते च प्रशमं गते ।**
**पश्यन्ति स्वप्नवत् लोकं तुर्यभूमिसुयोगतः ॥ ९६० ॥**

**அத்³வைதே ஸ்தை²ர்யமாயாதே த்³வைதே ச ப்ரஶமம் க³தே ।**
**பஶ்யந்தி ஸ்வப்னவத் லோகம் துர்யபூ⁴மிஸுயோக³த꞉ ॥ 960 ॥**

**अद्वैते** = இரண்டற்ற (ஒன்ான) ப்ரஹ்மதத்வம்,
**அத்³வைதே**
**स्थैर्य आयाते** = (மனதில்) ஸ்திரப்பட்டு,
**ஸ்தை²ர்ய ஆயாதே**
**द्वैते च** = வேற்றுமை ஞானமும்,
**த்³வைதே ச**
**प्रशमं गते** = அடங்கினபொழுது,
**ப்ரஶமம் க³தே**
**तुर्यभूमिसुयोगतः** = நான்காவது பூமிகையுடன் நன்கு சேர்ந்திருப்பதால்,
**துர்யபூ⁴மிஸுயோக³த꞉**
**लोकं** = பிரபஞ்சத்தை,
**லோகம்**
**स्वप्नवत्** = ஸ்வப்னம்போல்,
**ஸ்வப்னவத்**
**पश्यन्ति** = பார்க்கிறார்கள்.
**பஶ்யந்தி**

அத்வைதமான பிரஹ்மத்தில் ஸ்திரமாயிருக்கும் தன்மையேற்பட்டு த்வைதமும் அடங்கினபிறகு, ஸத்வாபத்தி என்ற நான்காவது பூமிகையில் நன்கு ஸம்பந்தப் படுவதால் உலகத்தை ஸ்வப்னம்போல் பார்க்கிறார்கள். **(960)**

**(அவதாரிகை)** ஸுஷுப்திக்குள் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று சொன்ன மூன்று நிலைகளும் அஸம்ஸக்தி என்ற 5வது பூமிகையை அடைந்த ப்ரஹ்மவித்வரன், பதார்த்தாபாவனை என்ற 6வது பூமிகையையடைந்த பிரஹ்ம வித்வரீயான் இவர்களுடையது என்று சொல்கிறார்: -

**पञ्चमीं भूमिं आरुह्य सुषुप्तिपदनामिकाम् ।**
**शान्ताशेषविशेषांशः तिष्ठेत् अद्वैतमात्रके ॥ ९६१ ॥**

**பஞ்சமீம் பூ⁴மிம் ஆருஹ்ய ஸுஷுப்திபத³நாமிகாம் ।**
**ஶாந்தாஶேஷ விஶேஷாம்ஶ꞉ திஷ்டே²த் அத்³வைதமாத்ரகே ॥ 961 ॥**

**सुषुप्तिपदनामिकाम्** = ஸுஷுப்தி நிலையைக் குறிக்கிற,
**ஸுஷுப்திபத³நாமிகாம்**

**पञ्चमीं भूमिं** = அஸம்ஸக்தி என்ற 5-வது பூமிகையை,

**பஞ்சமீம் பூ⁴மிம்**

**आरुह्य** = அடைந்து,

**ஆருஹ்ய**

**शान्ताशेषविशेषांशः** = தனித்தனிச் சிறப்பு அம்சங்களெல்லாம்

**ஶாந்தாஶேஷ விஶேஷாம்ஶ:** அடங்கினவராக,

**अद्वैतमात्रके** = இரண்டற்ற ஒரே தத்வமான ப்ரஹ்மத்திலேயே,

**அத்³வைதமாத்ரகே**

**तिष्ठेत्** = இருப்பான்.

**திஷ்டே²த்**

ஸுஷுப்தி நிலை என்ற பெயருள்ள அஸம்ஸக்தி என்ற 5வது பூமிகையில் ஏறி, பாக்கியன்னியில் விசேஷாம்சங்கள் (பிரித்துக் காட்டக்கூடிய அம்சங்கள்) யாவும் சாந்தமாகி அத்வைதம் ஒன்றிலேயே இருப்பான். **(961)**

## अन्तर्मुखतया नित्यं षष्ठीं भूमिं उपाश्रितः ।
## परिश्रान्ततया गाढ निद्रालुखि लक्ष्यते ॥ ९६२ ॥

**அந்தர்முக²தயா நித்யம் ஷஷ்டீ²ம் பூ⁴மிம் உபாஶ்ரித: ।**
**பரிஶ்ராந்ததயா கா³ட⁴ நித்³ராலுகி² லக்ஷ்யதே ॥ 962 ॥**

**षष्ठीं भूमिं** = பதார்த்தபாவனை என்ற 6 வது பூமியை,

**ஷஷ்டீ²ம் பூ⁴மிம்**

**उपाश्रितः** = அடைந்தவன்,

**உபாஶ்ரித:**

**नित्यं** = எப்போதும்,

**நித்யம்**

**अन्तर्मुखतया** = உள்ளேயே மனதைச் செலுத்தினவனாக

**அந்தர்முக²தயா** இருப்பதால்,

**परिश्रान्ततया** = மிகவும் களைப்படைந்த தன்மையால்,

**பரிஶ்ராந்ததயா**

**गाढ निद्रालुखि** = நன்றாகத் தூங்க நினைப்பவன்போல்,

**கா³ட⁴ நித்³ராலுகி²**

**लक्ष्यते** = காணப்படுகிறான்.

**லக்ஷ்யதே**

6வது பூமிகையை ஆசிரவித்து எப்பொழுதும் அந்தர்முகமாகவேயிருக்கிறபடியால் மிகவும் சிரமமடைந்த காரணத்தினால் நன்கு தூங்க நினைக்கிறவன்போல் (விழித்துக்கொண்ட ஸமயத்தில்) காணப்படுவான். **(962)**

**कुर्वन् अभ्यासं एतस्यां भूम्यां सम्यक् विवासनः ।**
**तुर्यावस्थां सप्तभूमिं क्रमात् प्राप्नोति योगिराट् ॥ ९६३ ॥**

**குர்வன் அப்⁴யாஸம் ஏதஸ்யாம் பூ⁴ம்யாம் ஸம்யக் விவாஸனః ।**
**துர்யாவஸ்தா²ம் ஸப்தபூ⁴மிம் க்ரமாத் ப்ராப்னோதி யோகி³ராட் ॥ 963 ॥**

**एतस्यां भूम्यां** = இந்த 6-வது பூமிகையில்,
**ஏதஸ்யாம் பூ⁴ம்யாம்**
**सम्यक्** = நன்றாக,
**ஸம்யக்**
**अभ्यासं कुर्वन्** = அப்யாஸத்தைச் செய்துகொண்டு,
**அப்⁴யாஸம் குர்வன்**
**विवासनः** = வாஸனைகள் விலகினவனாய்,
**விவாஸனః**
**योगिराट्** = யோகிகளில் சிறந்தவன்,
**யோகி³ராட்**
**क्रमात्** = முறையாக,
**க்ரமாத்**
**सप्तभूमिं** = ஏழாவது பூமிகையான,
**ஸப்தபூ⁴மிம்**
**तुर्यावस्थां** = துர்யகா என்ற நிலையை,
**துர்யாவஸ்தா²ம்**
**प्राप्नोति** = அடைகிறான்.
**ப்ராப்னோதி**

இந்த 6-வது பூமிகையில் நன்கு அப்யாஸம் செய்கிற யோகி சிரேஷ்டர் ஸகலவித வாஸனைகளுமற்று 7வது பூமிகையான துர்யகா என்ற நிலையை (மூன்று அவஸ்தைகளையும் தாண்டின நான்காவது நிலையை) கிரமமாக அடைந்து விடுவார். **(963)**

**विदेहमुक्तिरेवात्र तुर्यातीतदशोच्यते ॥ ९६४ ॥**

**விதே³ஹமுக்திரேவாத்ர துர்யாதீதத³ஶோச்யதே ॥ 964 ॥**

**विदेहमुक्तिरेव** = விதேஹமுக்திதான்,
**விதே³ஹமுக்திரேவ**
**अत्र** = இங்கு,
**அத்ர**
**तुर्यातीतदशा** = துர்யத்தையும் தாண்டின நிலையாக,
**துர்யாதீதத³ஶா**

| | | |
|---|---|---|
| **उच्यते**<br>**உச்யதே** | = | சொல்லப்படுகிறது. |

விதேஹ முக்திதான் துர்யாதீத தசையாக, (நான்காவது நிலையையும் தாண்டின தசையாக) கூறப்படுகிறது. **(964)**

**यत्र नासत् न सच्चापि नाहं नाप्यनहंकृतिः ।**
**केवलं क्षीणमननः आस्तेऽद्वैतेऽतिनिर्भयः ॥ ९६५ ॥**

**யத்ர நாஸத் ந ஸச்சாபி நாஹம் நாப்யனஹங்க்ருதிঃ ।**
**கேவலம் க்ஷீணமனனঃ ஆஸ்தே(அ)த்³வைதே(அ)திநிர்ப⁴யঃ ॥ 965 ॥**

| | | |
|---|---|---|
| **यत्र**<br>**யத்ர** | = | எந்த நிலையில், |
| **न असत्**<br>**ந அஸத்** | = | அஸத்து இல்லையோ, |
| **न सच्चापि**<br>**ந ஸச்சாபி** | = | ஸத்தும் இல்லையோ, |
| **न अहं**<br>**ந அஹம்** | = | அஹங்காரம் இல்லையோ, |
| **नापि अनहंकृतिः**<br>**நாபி அனஹங்க்ருதிঃ** | = | அஹங்காரமில்லாத் தன்மையும் இல்லையோ, |
| **केवलं क्षीणमननः**<br>**கேவலம் க்ஷீணமனனঃ** | = | மனனம் எல்லாம் நீங்கி, |
| **अतिनिर्भयः**<br>**அதிநிர்ப⁴யঃ** | = | மிகவும் பயமற்றவனாக, |
| **अद्वैते**<br>**அத்³வைதே** | = | இரண்டற்ற ப்ரஹ்மதத்வத்தில், |
| **आस्ते**<br>**ஆஸ்தே** | = | இருக்கிறானோ. |

எந்த நிலையில் அஸத் (இல்லாதது என்பது) கிடையாதோ, ஸத் (இருக்கிறது என்பது) கூடக் கிடையாதோ, 'நான்' என்பது கிடையாதோ, "நான் இல்லை" என்பதும் கிடையாதோ, சுத்தமாய் எல்லா மனனமும் நின்றுவிட்டதாய், நன்கு பயமற்று, அத்வைதத்தில் இருக்கிறானோ (எவனிடம் காரணம், கார்யம், கர்த்ருத்வம், அகர்த்ருத்வம் ஒன்றும் தோன்றாது, மனோ வியாபாரமே இருக்காதோ அவன் விதேஹ முக்தன். **(965)**

**अन्तः शून्यो बहिः शून्यः शून्यकुम्भ इवाम्बरे ।**
**अन्तःपूर्णो बहिः पूर्णः पूर्णकुम्भ इवार्णवे ॥ ९६६ ॥**

**அந்தः ஶூன்யோ ப³ஹிः ஶூன்யः ஶூன்யகும்ப⁴ இவாம்ப³ரே ।**
**அந்தःபூர்ணோ ப³ஹிः பூர்ணः பூர்ணகும்ப⁴ இவார்ணவே ॥ 966 ॥**

**अम्बरे** = ஆகாயத்தில்,
**அம்ப³ரே**
**शून्यकुम्भ इव** = உள்ளே ஒன்றுமில்லாத குடம் போல,
**ஶூன்யகும்ப⁴ இவ**
**अन्तः शून्यः** = உள்ளே ஒன்றுமில்லாதவனையும்,
**அந்தः ஶூன்யः**
**बहिः शून्यः** = வெளியிலும் ஒன்றுமில்லாதவனையும்,
**ப³ஹிः ஶூன்யः**
**अर्णवे** = ஸமுத்ரத்தில்,
**அர்ணவே**
**पूर्णकुम्भ इव** = ஜலம் நிறைந்த குடம் போல,
**பூர்ணகும்ப⁴ இவ**
**अन्तःपूर्णः** = உள்ளே நிறைந்தவனையும்,
**அந்தःபூர்ணः**
**बहिः पूर्णः** = வெளியிலும் நிறைந்தவனையும் இருக்கிறானோ
**ப³ஹிः பூர்ணः**

ஆகாச மத்தியிலுள்ள காலியான குடம்போல உள்ளேயும் சூன்யமாகவும்; வெளியிலும் சூன்யமாகவும், ஸமுத்திரத்தின் நடுவிலுள்ள நிறைகுடம்போல, உள்ளேயும் நிறைந்தவனாகவும், வெளியிலும், நிறைந்தவனாவும் இருக்கிறானோ அது விதேஹமுக்தி. **(966)**

**(அவதாரிகை)** ஏழு பூமிகைகளில் முதல் மூன்று பூமிகைகளையும் ஜாக்ரத் என்ற முதலாவது அவஸ்தையாகவும் 4வது பூமிகையை ஸ்வப்னம் என்ற இரண்டாவது அவஸ்தையாகவும் 5, 6, பூமிகைகளை ஸுஷுப்தி என்ற மூன்றுவது அவஸ்தையாகவும் காட்டி மூன்று அவஸ்தைகளையும் தாண்டின 7வது பூமிகைக்கு துர்யகா (நான்காவது) என்றே பெயர் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு அவஸ்தையிலும் மற்ற அவஸ்தைகளின் ஸம்பந்தத்தால் (3×3=9) ஆறு பூமிகைகளிலும் ஒன்பது நிலைகளைக்காட்டி பத்தாவது நிலைக்கு துர்யம் என்றே பெயர் கொடுக்கப்பட்டது. துர்யகா என்ற ஏழாவது பூமிகையையும் (பத்தாவதான துர்ய நிலையையும்) தாண்டிச் சென்றவன் துர்யாதீதன் இவனே விதேஹமுக்தனாவான். இவ்வாறு ஜீவன் முக்தனுடைய அனுபவத்திலுள்ள தாரதம்யத்தை எடுத்துக்கூறி இவன் ஜீவித்திருக்கும் போதே தேஹ ஸம்பந்தமில்லாமலிருப்பதால் விதேஹ முக்தி நிலையையும் அடைகிறான் என்று காட்டி இந்த விதேஹ முக்தி நிலையை அடைகிறவன் துர்யகா

